# மலரும் நினைவலைகள்...



பேராயர் கால்டுவெல்

# மலரும் நினைவலைகள்...

## பேராயர் கால்டுவெல்

மொழியாக்கம்

அகப்பைக்குளம் திரு. பி. கனகராஜ் M.A., PGDTE, EME, DTME, Ph.D.,

இடையன்குடி திரு. ஜெ. ராஜகுமார் எம்.ஏ., எம்.எட்., எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.,

இடையன்குடி திருமதி. எம். கிறிஸ்டி மெர்சி ராஜகுமார் எம்.ஏ., எம்.எட்., எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.,

பதிப்பாசிரியர்

திருமதி. ஜெ. வேதமணி ஜெபமணி

இடையன்குடி – 627 651.

வெளியீடு

கால்டுவெல் பதிப்பகம்

இடையன்குடி – 627 651.

# நூல் அமைப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | மலரும் நினைவலைகள் ... |
| ஆசிரியர் | : | பேராயர் கால்டுவெல் |
| மூலம் | : | ஆங்கிலம் |
| மொழியாக்கம் | : | தமிழ் |
| பொருள் | : | தன் வரலாறு |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | 22.05.2005 |
| பதிப்புரிமை | : | பதிப்பாசிரியருக்கு |
| வெளியீடு | : | கால்டுவெல் பதிப்பகம்<br>இடையன்குடி – 627 651. |
| தாள் | : | சேஸாயி 54 ஜி.எஸ்.எம். |
| நூல் அளவு | : | 14 செ.மீ. X 21.5 செ.மீ. |
| கட்டமைப்பு | : | தையல் |
| ஒளிஅச்சுக்கோர்வை | : | ஸ்வஸ்திகா, சிவகாசி. |
| அச்சமைப்பு | : | ஹர்ஷா பிரிண்ட்ஸ், சிவகாசி. |
| கட்டமைத்தவர் &<br>வண்ணப்படஅச்சு | : | ஸ்ரீ சண்முகா பிராசஸ், சிவகாசி. |
| வண்ணப்படங்கள் | : | மைக்கா போட்டோஸ், மெய்ஞ்ஞானபுரம். |
| பக்கங்கள் | : | xxiv + 245 |
| விலை | : | ரூ.100/– |

# உள்ளடக்கம்




Bishop Dr M EZRA SARGUNAM
PRESIDENT, ECI ALL INDIA CONFERENCE

## அணிந்துரை



பிஷப் கால்டுவெல்லை அறியாத தமிழ் மக்களோ, தமிழ் மொழி அறிஞர்களோ இருக்கமாட்டார்கள் என்பது எனது துணிபு. இக்கிறிஸ்தவப் பெரியார் எழுதிய 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கண நூல்' திராவிட மொழிகளின் வளர்ச்சிக்கு இன்று வரை பெரிதும் உதவுகின்றது. இந்த நாட்டுக்கு வந்த மிஷனெரிகள் பலர், சிறப்பாக சீகன்பால், வில்லியம் கேரி, கால்டுவெல் போன்றவர்கள் நம்நாட்டவருக்கு நற்செய்தி அறிவிப்பதற்கு முன், இந்திய மொழிகளை ஆர்வமாய்க் கற்றதோடு, அம்மொழிகள் இலக்கண இலக்கிய வளர்ச்சி அடையும் வகையில் தொண்டாற்றி அவர்களுக்குப் பெருமை சேர்த்துள்ளனர்.

பேராயர் இராபர்ட் கால்டுவெல்லுக்குத் தமிழக அரசும் நெல்லைத் திருமண்டலமும் அவ்வப்போது நினைவுச்சின்னங்கள் சில எழுப்பித்தந்துள்ளன. ஆயினும் கால்டுவெல் அவர்களே தங்கள் வாழ்க்கை வரலாற்றினை "மலரும் நினைவலைகளாக..." (REMINISCENCES OF BISHOP CALDWELL) ஆங்கிலத்தில் எழுதிவைத்துப் போயிருப்பது நாம் செய்த பாக்கியமே எனலாம். அவருடைய மூத்த மருமகனான அருட்திரு. ஜே.எல். வயட் என்பவர் தொகுத்துப் பதித்துள்ள இந்நூலினை முனைவர்கள் திரு. பி.கனகராஜ், திரு.ஜெ.ராஜகுமார், திருமதி. கிறிஸ்டி மெர்சி



**Administrative Office :**
1, Second Street, Ormes Road, Kilpauk, Chennai - 600 010, India
**Phone :** 26413178, 25427574, 26430219 **Fax :** (00-91-44) 26411803 **Email :** ecindia@vsnl.com

ராஜகுமார் ஆகியோர் தமிழில் மொழியாக்கம் செய்திருப்பது பாராட்டுக்குரியது. இதனைப் படித்து இப்பெரியாரின் பாடுகள், தியாகங்கள், தன்னலமற்ற சேவை ஆகிய நற்குணங்களைத் தாங்களும் பெற்று, இந்திய நாட்டு மக்களுக்கு எப்பாடுபட்டும் சுவிசேஷத்தை அறிவிக்க அதற்கான கிரயங்களைக் கொடுத்து தியாகங்களைப் புரிய தமிழ்க்கிறிஸ்தவர்கள் முன்வருவார்கள் என நம்புகிறேன். இந்த நம்பிக்கை இம்மொழியாக்க நூலுக்கு இவ்வணிந்துரை அளிப்பதில் என்னைப் பெருமிதம் கொள்ளச் செய்கிறது. இதனைப் பதிப்பிட முன்வந்த திருமதி. வேதமணி ஜெபமணி அவர்களையும் பாராட்டுகிறேன்.

கால்டுவெல்லின் அழியா நினைவுச் சின்னமாக இடையன்குடியில் அவரே கட்டி எழுப்பிய தூய திரித்துவ ஆலயத்தின் 125ஆம் ஆண்டு நிறைவு நாளின் போது இந்நூல் வெளியிடப்படுவது அன்னாரின் புகழுக்குப் புகழ் சேர்ப்பது போல் அமைந்துள்ளது என்பதைச் சுட்டிக்காட்டிக் கிறிஸ்தவப் பெருங்குடி மக்கள் அனைவரும் இந்நூலை வாங்கிப் படித்துப் பயனடைவார்கள் என்று எண்ணுகிறேன்.

மொழியாக்கம் செய்வதில் முயற்சி மேற்கொண்ட மூன்று முனைவர்களுக்கும் எனது நல்லாசி!

சென்னை : 600 010.
18–5–2005.

பேராயர் எஸ்றா சற்குணம்.

## மதிப்புரை

**வெ.ஜாண் குசலவபாண்டி,** எம்.ஏ., எம்.எட்.,
சி2, அரசு அலுவலர் பி காலனி,
பாளையங்கோட்டை.



தமிழன்னைக்குச் செய்யும் தொண்டுகளுள் மொழியாக்கமும் ஒன்று. மொழியாக்க நூல்கள் மூலம் பிற மொழியியலார் சிந்தனைகளையும் கருத்துக்களையும் இன்ன பிறவற்றையும் பாமரர்களும் எளிதில் அறிந்திட இயலும்.

கால்டுவெல் பெருமகனார் தன்னையே முழுவதுமாகச் சமயம் மற்றும் பொதுநலத் தொண்டுகளுக்கு அர்ப்பணித்த பெரும் மேதை. அப்பெருந்தகையின் 'Reminiscences of Bishop Caldwell' என்ற நூல் 'மலரும் நினைவலைகள் ...' என்ற தலைப்பில் மொழியாக்கம் செய்யப்பட்டு வெளிவருவது குறித்து மகிழ்கிறேன்.

இந்நூலின் முதலாம் இயலில் கால்டுவெல்லின் இளமைப் பருவமும், கப்பற் பயணங்களும் படிப்பவர்களை ஈர்க்கும்படியாக உள்ளன. அவர் அருள் தொண்டராக மாற விரும்பிய வரலாறு, கடற்பயணத்தின் இன்னல்கள், கப்பலில் தமிழ் பயின்றது, கண்ட காட்சிகள் போன்ற செய்திகள் காணப்படுகின்றன. கப்பலின் வேகம் 'கடல் மைல்கள்' என்று சொல்லப்படுவதையும் கால்டுவெல் இவ்வியலில் சுட்டிக்காட்ட மறக்கவில்லை.

கால்டுவெல் சென்னை வந்தடைந்தபின் அவர் நேரில் கண்டு பேசி, உரையாடி, உடன்தங்கியிருந்த இறைப்பணியாளர்கள்

மற்றும் மனிதர்களின் தொடர்பு சுட்டப்பட்டுள்ளது. தான் அருட்பணியை வீட்டு வேலைக்காரன் மூலமே தொடங்கியதன் விளக்கம் அவர் கிறிஸ்தவ சமயத்தைப் புகுத்த கையாண்ட எளிய கருவி என்பது சிறப்புடைத்து. இது இரண்டாம் இயலின் கண்கூடு.

மூன்றாம் இயல் அன்னாரின் நீலகிரி நடைப்பயணத்தையும், நான்காம் இயல் திருநெல்வேலி நடைப்பயணத்தையும் அடக்கியது. வழிகளில் அவர் தமிழ் மக்களிடம் கற்ற பேச்சுத்தமிழ், கண்ட பண்பாடுகள், இயற்கை வளங்கள், நடைபயணத் துன்பங்கள் முதலியன சித்தரிக்கப்பட்டுள்ளன. இவற்றைப் படிப்பவரின் உள்ளம் இத்தகு மகானை வியக்காமல் இருக்காது.

இயல் ஐந்து முதல் இறுதியாக உள்ள பதினெட்டு இயல்களில் முடிய அவரது நற்செய்திப்பணிகளும், பொதுநலத் தொண்டுகளும் கிறிஸ்தவ சமய வளர்ச்சிக்கு அவர் பட்ட பாடுகளும் நூல் படைப்புகளும் அவரது திருமண வாழ்க்கை பற்றிய செய்திகளும் காணக்கிடக்கின்றன.

மனிதனாய்ப் பிறப்பது அரிது. அதிலும் பேராயர் கால்டுவெல்லைப் போல வாழுவது அரிதிலும் அரிது என்பதை இந்நூலைப் படிப்பவர் மறுக்க இயலாது. வாழ்க்கை வரலாறு நூலைப் படிப்பதன் நோக்கமே அவர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி வாழவே.

தமிழாக்கத்தில் வெளியிடப்பட்டுள்ள ‘மலரும் நினைவலைகள்...’ என்ற இந்நூல் பாமர மக்களும் படித்து கால்டுவெல் வாழ்வை அடியொற்றி வாழ வழிசெய்யும் என்பதில் ஐயமில்லை.

செய்திகள் தொடர்ச்சியாக இயல் வாரியாக அமைக்கப்பட்டுள்ளன. புகுத்தப்பட்ட நல்ல தமிழ்ச்சொற்கள் வரவேற்கத்தக்கன. எளிதில் புரிந்து கொள்ளும் வகையில்

வாக்கியங்கள் அமையப்பெற்றுள்ளன. படிப்பவர்க்கு எளிதில் பொருள் விளங்கச் சொற்பொருள் விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது இந்நூலுக்கு ஒரு தனிச்சிறப்பாகும்.

எளிய இனிய தமிழ்ச்சொற்கள் இந்நூலில் கையாளப் பட்டுள்ளமை போற்றுதற்குரியது. பின்னிணைப்புப் படங்கள் இடையன்குடி தூய திரித்துவ ஆலயத்தை நம் கண்முன் நிறுத்துகின்றன. அட்டையின் முற்பகுதியைப் பேராயர் கால்டுவெல் அழகு செய்கிறார். பின்பகுதி அருள்பாலிக்கும் தூய திரித்துவ ஆலயத்தின் விண்முட்டுக் கோபுரத்துடன் அழகுறக் காட்சியளிப்பது இந்நூலுக்கு மிகவும் மெருகூட்டுகிறது.

இந்நூலைத் தமிழாக்கம் செய்துள்ள அகப்பைக்குளம் முனைவர் திரு. பி.கனகராஜ், இடையன்குடி முனைவர் திரு. ஜெ.ராஜகுமார் அவரது துணைவியார் முனைவர் திருமதி. எம்.கிறிஸ்டி மெர்சி ராஜகுமார் ஆகியோரின் பணி பாராட்டுக்குரியதாகும்.

இந்நூலைப் பதித்து வெளியிடும் திருமதி. வேதமணி ஜெபமணி அவர்கள் இறை நல்லாசி பெற என் வாழ்த்துக்கள்.

வெ.ஜாண் குசலவப்பாண்டி.




தென்னிந்தியத் திருச்சபை - தூத்துக்குடி நாசரேத் திருமண்டலம்

**வடமேற்கு சபை மன்றம்**

அருள்திரு. **சா.சாமுவேல்**, எம்.ஏ., பி.டி.,
சபைமன்றத்தலைவர்

புதுக்கோட்டை,
தூத்துக்குடி - 628 103.
✆ 0461 - 2271350.

11-05-05

*ஆசிரியர்,*
*நற்செய்தி மலர்,*
*தூத்துக்குடி-நாசரேத் திருமண்டலம்.*

## வாழ்த்துரை



பேராயர் கால்டுவெல் ஓர் ஒப்பற்ற மிஷனெரி. சிறந்த அறிஞர். அவர் செய்த தொண்டுகள் என்றும் மறக்க முடியாதவை. மலைகள், காடுகள், தேரி, கடற்கரை என்று எல்லாவற்றையும் நன்கறிந்தவர்.

அருட்தொண்டராக அவர் ஆற்றிய தொண்டுகள் கிறித்தவப்பணி, கல்விப்பணி குறிப்பாகப் பெண்கல்வி, மரங்கள் வளர்த்தல், கைத்தொழில் கற்பித்தல் போன்றவை மிகவும் பயனுள்ளவை.

பிஷப் கால்டுவெல் ஒரு புனிதர். அவர் கட்டிய இடையன்குடி தூய திரித்துவ ஆலய ஆல்ட்டரில் அவரது கல்லறை அமைந்துள்ளது. அவரது பணிகளுடன் தொடர்புடைய எல்லா இடங்களையும் பார்த்து அறியும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது பெரும் பாக்கியம்.

அவரது வாழ்க்கை சரிதம் சிறிது காலமாகத் தமிழில் வெளிவரவில்லை என்கிற குறை 'மலரும் நினைவலைகள்...' என்ற

புத்தகம் வெளியிடப்படுவதால் நீக்கப்பட்டுள்ளது. கால்டுவெல் வாழ்க்கை வரலாற்றுப் புத்தகம் வாசிப்பவரின் வாழ்க்கையைச் சீரமைக்கும் திறனுடையது.

இப்புத்தகத்தை உருவாக்கிய திருமதி. வேதமணி ஜெபமணி அவர்களுக்கு என் பாராட்டுகள். மொழியாக்கம் செய்த முனைவர் பி. கனகராஜ், எனது நண்பர் முனைவர் ஜெ. ராஜகுமார் அவரது துணைவியார் முனைவர் எம். கிறிஸ்டி மெர்சி ராஜகுமார் ஆகியோரை வாழ்த்துகிறேன்.

பிஷப் கால்டுவெல் அவர்களின் உயரிய நோக்கங்களை இந்நூலை வாசிப்பவர்கள் பெற்றிட இந்நூலையும், இதனை வாசிப்பவர்களையும், வெளியீட்டாளர்களையும் இறைவன் ஆசீர்வதிப்பாராக.

சா.சாமுவேல்




தென்னிந்தியத் திருச்சபை - திருநெல்வேலி திருமண்டலம்

**இடையன்குடி சேகரம்**



அருள்திரு. **தா.வேதன்பு**, பி.எசி., பி.டி.,
சேகர குரு மற்றும் தாளாளர்
றி.டி.றி.ஏ. துவக்க மற்றும் நடுநிலைப்பள்ளிகள்
இடையன்குடி

**தூய திரித்துவ ஆலயம்**
இடையன்குடி - 627 651.
✆ 04637 - 271408.

தேதி : 12-05-05

## வாழ்த்துரை



பேராயர் கால்டுவெல் சரித்திர நாயகர். எல்லாத் திறமைகளும் ஒரு சேர ஒருவரில் அமைவது அரிது. அப்படியே அமைந்திடினும் அதை மக்களை மையமாக வைத்து செயல்படுத்துவது மிகவும் அரிது. ஆனால் பேராயர் ராபர்ட் கால்டுவெல் அவர்கள் மக்களையே மையமாக வைத்து தனது தாலந்துகளை இறைநாம மகிமைக்காக வெளிப் படுத்தியுள்ளார்கள். மிஷனரியாக, சமூக சேவகராக, சரித்திர ஆசிரியராக, மொழியியலாளராக, பேராயராக மற்றும் தொலைநோக்கு பார்வை கொண்ட தீர்க்கராகக் கால்டுவெல் அவர்கள் ஆற்றிய பணி அளப்பதற்கரிது. அன்னாருடைய நூல்கள் கருத்துச் செறிவு மிகுந்தவை. படிப்போருக்கு மிகப் பயன்தரக் கூடியவை.

பேராயர் கால்டுவெல் எழுதியிருந்த சுயசரிதையையும் பதிப்பு செய்து இறுதி அத்தியாயத்தையும் எழுதி கால்டுவெல் அவர்களின் மருமகன் அருள்திரு. வயட் அவர்கள் 'Remnicences of Bishop Caldwell' என்ற தலைப்பில் ஆங்கிலப் புத்தகமாக வெளியிட்டிருந்தார்கள். பேராயரின் வாழ்க்கை மற்றும் ஊழியத்தை எடுத்துரைக்கும் அதிகாரப்பூர்வமான புத்தகம் இது.

இப்புத்தகத்தை 'மலரும் நினைவலைகள்...' என்ற தலைப்பில் தமிழில் மொழியாக்கம் செய்து வெளியிடுவதைக் குறித்து மகிழ்ச்சியடைகிறேன். இப்பணியில் பெருமுயற்சி எடுத்து வெற்றி கண்ட திரு. பி. கனகராஜ் அவர்களையும் மண்ணின் மைந்தர் திரு. ஜெ. ராஜகுமார் அவர்களையும் அவரது துணைவியார் திருமதி. எம். கிறிஸ்டி மெர்சி ராஜகுமார் அவர்களையும் பாராட்டுகிறேன். இப்புத்தகத்தை வெளியிடும் கால்டுவெல் பதிப்பகத்திற்கும் பதிப்பாசிரியருக்கும் நன்றி சொல்லுகிறேன். இந்நூல் ஏராளமான மக்களை ஏற்றமிகு நிலைக்கு உயர்த்தும் ஏணியாய் அமைவதாக.

இறைவன் இயேசுவின் திருப்பணியில்

அருள்திரு. வேதன்பு

சேகரகுரு

## நன்றியுரை



இடையன்குடி தூய திரித்துவ ஆலயத்தின் 125ஆம் மங்கலப்படைப்பு நிறைவு விழா காணுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன். இந்நன்னாளில் பேரருள்திரு. இராபர்ட் கால்டுவெல் அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய 'Reminiscences of Bishop Caldwell' என்ற நூலை 'மலரும் நினைவலைகள்....' என்ற தலைப்பில் தமிழாக்கம் செய்து வெளியிட அருள் தந்த இறை இயேசுவுக்கே எல்லா துதியும் கனமும் மகிமையும் உண்டாவதாக.

இந்நூலைத் தமிழாக்கம் செய்து வெளியிட ஒப்புதல் தந்த Prof. பீட்டர், Dr. (திருமதி) ஜூலியட் ரேப்பர் ஆகியோருக்கு என் இதய நன்றிகள் பல.

அணிந்துரை தந்து சிறப்புச் செய்த பேராயர் பேரட்திரு. M. எஸ்றா சற்குணம் அவர்களுக்கு என் நன்றிகளைச் சமர்ப்பித்து மகிழ்கிறேன்.

தமிழில் மொழியாக்கம் செய்து தந்த பாளையங்கோட்டை, பேராயர் செல்வின் சமுதாயக் கல்லூரி இயக்குநர் முனைவர் திருமிகு. பி. கனகராஜ், என் மகன் திரு. ஜெ. ராஜகுமார் மற்றும் என் மருமகள் திருமதி. எம். கிறிஸ்டி மெர்சி ராஜகுமார் ஆகியோருக்கு என் நன்றிகள் உரித்தாகுக.

மதிப்புரையினை மனமுவந்து எழுதிட்ட தென்னக இசைக்குயில் இலக்கியத்தென்றல் திருமிகு. வெ. குசலவபாண்டி அவர்களுக்கு என் நன்றி.

வாழ்த்துரைகள் வழங்கிய வடமேற்குச்சபை மன்றத்தலைவர் அருள்திரு. சா.சாமுவேல் அவர்களுக்கும் இடையன்குடி சேகர ஆயர் அருள்திரு. தா.வேதஅன்பு அவர்களுக்கும் நன்றி சொல்கிறேன்.

பிழைதிருத்தங்கள் செய்துதவிய திருச்செந்தூர் ஆதித்தனார் கல்லூரி தமிழ்த்துறைப் பேராசிரியர் முனைவர் திருமிகு. பெ. சுயம்பு அவர்களுக்கு நன்றி சமர்ப்பிக்கிறேன்.

வண்ணப்படங்கள் எடுத்துத்தந்த என் மருமகன் திரு. எம். ரெத்தினராஜ் (மைக்கா) அவர்களுக்கு நன்றி.

இந்நூலை செவ்வனவே அச்சிட்டு உரிய காலத்தில் வெளியிட உதவிய சிவகாசி சுவஸ்திகா டைப்செட் உரிமையாளர் திரு. த. சுந்தர் அவர்களுக்கும், ஹர்சா அச்சக உரிமையாளர் திரு. எம். ஜெயக்குமார் அவர்களுக்கும் கட்டமைப்பு மற்றும் வண்ணப்பட அச்சு செய்து தந்த ஸ்ரீ சண்முகா பிராசஸ் உரிமையாளர் திரு. த. இறைவன் அவர்களுக்கும் நன்றிகள்.

பதிப்பாசிரியர்.



திரு. ஆ. ஜெபமணி ஆசிரியர்

## சமர்ப்பணம்

| | | | |
|---|---|---|---|
| ஆசான் | பணியில் | அகவிருள் | வீழ்த்தி |
| அருட்பணி | தன்னில் | இறையொளி | ஏற்றி |
| அன்று | எங்களைத் | துயரில் | ஆழ்த்தி |
| அயர்ந்து | உறங்கும் | என்னுயிர் | மணாளரே |
| மங்கலப் | படைப்பு | நூற்றிருபத் | தைந்தை |
| மகிழ்வுடன் | கண்டிட | இல்லை | நீங்கள் |
| மலரும் | நினைவ | லைகளைப் | படைக்கிறேன் |
| மங்கா | உங்கள் | நினைவால் | இன்று |

ஜெ. வேதமணி ஜெபமணி
பதிப்பாசிரியர்

# சொற்பொருள் விளக்கம்

| தமிழ்ச்சொல் | | பிறமொழிச்சொல் |
|---|---|---|
| அக்கறை | – | கரிசனை |
| அடக்குமுறை | – | ஆதிக்கம் |
| அரசுப்பணி | – | சிவில் சர்வீஸ் |
| அருட்பணி | – | ஊழியம் |
| அருட்பணியாளர் | – | ஊழியர், போதகர் |
| அருட்பொழிவு | – | அபிஷேகம் |
| அருளுரை | – | பிரசங்கம் |
| அருள் | – | கிருபை |
| அருள்வாக்கு | – | தீர்க்கதரிசனம் |
| அறிவிக்க | – | போதிக்க |
| அறிவு | – | புத்தி |
| அறிவுரை வழங்கல் அறிவூட்டல் | – | ஞானோபதேசம் |
| ஆர்வம் | – | உற்சாகம் |
| இணக்கமாக | – | ஆதரவாக |
| இயலாமை | – | பலவீனம் |
| இறுக்கமான | – | கடினமான |
| இறைப்பணி இயக்கம் | – | மிஷன் |
| இறைப்பணியாளர் | – | மிஷனரி |
| இறைப்பற்று | – | பக்தி |
| இறையடியவர்கள் | – | பக்திமான்கள் |
| இறைவழிபாடு | – | ஆராதனை |
| இறைவாக்கு முன் அறிவிப்பு | – | தீர்க்க தரிசனம் |
| இன்றியமையாத | – | முக்கியமான |
| உரிமை | – | அதிகாரம் |
| உறைவிடப்பள்ளி | – | போர்டிங் ஸ்கூல் |
| ஊடாடல் | – | பரிமாற்றம் |
| எடுத்துக்காட்டு | – | மாதிரி |

| தமிழ்ச்சொல் | | பிறமொழிச்சொல் |
|---|---|---|
| எண்ணம் | – | ஊகம் |
| ஏராளம் | – | அதிகம் |
| ஏற்பளிப்பு | – | அனுமதி |
| ஐயம் | – | சந்தேகம் |
| ஒப்புதல் | – | அனுமதி |
| ஒலிப்புமுறை | – | உச்சரிப்பு |
| கண்காணித்து | – | கவனித்து |
| கருத்தூன்றி | – | கவனம் செலுத்தி |
| கால்கோள் | – | அஸ்திபாரம் |
| குறிப்பெடுக்க | – | தயார் செய்ய |
| கொலுமண்டபம் | – | தர்பார் |
| சமயம் | – | மதம் |
| சார்பாளர் | – | பிரதிநிதி |
| சான்று | – | ஆதாரம் |
| சிக்கல்கள் | – | கடினம், பிரச்சினை, தர்மசங்கடம் |
| சிதைவு | – | சேதம் |
| சிலைவழிபாடு | – | விக்ரக ஆராதனை |
| சிறப்பற்ற | – | முக்கியமற்ற |
| சிறப்பான | – | பிரதான, முக்கியமான |
| சிறிய அச்சுத்தாள்கள், சிறு குறிப்புத்தாள்கள் | – | துண்டுப்பிரதிகள் |
| செயல்கள் | – | காரியங்கள் |
| செய்திகள் | – | விஷயங்கள் |
| செருக்கு | – | திமிர் |

# சொற்பொருள் விளக்கம்

| தமிழ்ச்சொல் | பிறமொழிச்சொல் |
|---|---|
| செல்வாக்கு மிகுதி | ஆக்கிரமிப்பு |
| சேகரிக்க | தயாரிக்க |
| சொல்லாட | வாதாட |
| தகுதிப்படுத்த | தயார்படுத்த |
| தலையாய | பிரதான |
| தனியாள் | சுயேட்சை |
| தன்னாளுமை | சுயேட்சை |
| திருப்பணி விடையாளர் | உபதேசியார் |
| திருமுழுக்கு | ஞானஸ்நானம் |
| தீங்கு | ஆபத்து |
| தூய திருவறை | ஆல்டர் |
| தூயவை | புனிதமானவை |
| தேவையற்ற | முக்கியமற்ற |
| தொழுகை | ஆராதனை |
| தொழுதல் | ஆராதித்தல், வணங்குதல் |
| நற்செய்திப்பணி | மிஷனரி ஊழியம் |
| நற்செய்திப் பணியாளர் | எவாஞ்சலிஸ்ட் |
| நிகழ்ச்சி | சம்பவம் |
| நினைத்ததை முடிப்பவர் | சாதனையாளர் |
| நேர்மை | நியாயம் |
| நேர்மையாளர் | நியாயமானவர் |
| பகுதிகள் | பாகங்கள் |
| படிவம் | மாதிரி |
| பணிவிலகல் | ராஜினாமா |
| பயணம் | பிரயாணம் |
| பயனற்ற | முக்கியமற்ற |
| பயன்பாடு | உபயோகம் |
| பலகணி | ஜன்னல் |
| பெருமை | மகிமை |
| பெற தெரிவிக்க | பரிமாற்றம் |
| பேராயரின் உதவியாளர் | சேப்ளான் |
| பொலிவுடன் | கெம்பீரமாக |
| பொறுமை | சகிப்பு |
| மங்கலப்படைப்பு | பிரதிஷ்டை |
| மடல்கள் | கடிதங்கள் |
| மதிப்பு | மரியாதை |
| மறைபொருள் | இரகசியம் |
| மனநிறைவு | திருப்தி |
| மனமகிழ்ச்சி | உற்சாகம் |
| மிக அழகு | பிரமாதம் |
| மிகத் தேவையான | மிக முக்கியமான |
| முதன்மையற்ற | முக்கியமற்ற |
| முதன்மையான | பிரதான |
| முறைகள் | தடவைகள் |
| முறையீடு | விண்ணப்பம் |
| வண்ணம் | நிறம் |
| வழி | தடம் |
| வழித்தோன்றல் | சந்ததி |
| வழிபாடு | பிரார்த்தனை |
| வலுவாகப்பேச | வாதாட |
| வியப்பான | விசித்திரமான |
| விழிப்புடன் | கவனத்துடன் |
| விளக்கம் | வியாக்கியானம் |
| விளக்கிக் கூற | சித்தரிக்க |
| வீதி | சாலை |
| வேண்டுதல் | ஜெபம், பிராத்தனை |

# முன்னுரை

பேராயர் கால்டுவெல்லின் மறைவுக்குப் பின், அவரது வாழ்க்கை வரலாற்று நூல் எதுவும் வெளியிடப்பட உள்ளதா? என அவரின் நண்பர்கள் பலர் கேட்கின்றனர். பேராயரின் வாழ்க்கை என்பது திருநெல்வேலித் திருச்சபையோடு தொடர்புடைய கடந்த ஐம்பது ஆண்டு வரலாறு என்றே கூறலாம்.

அது பற்றிய ஆவணங்களைச் சேகரிப்பது அரிய பணி மட்டுமன்று, அதிக நேரமும் ஆகும். எனவே பேராயர் குடும்பத்தினரின் வேண்டுகோளுக்கு இணங்கி, அவர் எழுதிய மலரும் நினைவலைகளை வெளியிடுவதே நலம் எனத் தோன்றிற்று. அவரது தொடக்கக்கால வாழ்க்கையைப் பற்றி மட்டுமே அவரது குடும்பத்தினருக்கு இது எழுதப்பட்டதால் பேராயரது 53 ஆண்டு அருட்பணி பற்றிய முழுமையான செய்திகளும் இதில் அடங்கா.

பேராயர் எழுதிய கட்டுரைகளும் உரைகளும் வெளியிடுவதற்காகவே அவரால் எழுதப்பட்டவை. எனவே பல இடங்களில் அக்கட்டுரைகளும் மற்ற இடங்களில் அவர் ஆற்றிய உரைகளும் சேர்க்கப்பட்டுள்ளன.

பேராயர் இந்தியாவுக்கு முதன்முறையாக வந்த கப்பற்பயண நாட்குறிப்புகளும் சில மடல்களும் ஸ்காட்லாந்திலிருந்து பெறப்பட்டன. இதன் சுருக்கம் ஏற்கனவே பேராயர் எழுதியுள்ள செய்திகளுக்கு மேலும் மெருகேற்றும் என நம்புகிறேன்.

இவை தவிர, பேராயரின் உடல்நலமின்மை மற்றும் மறைவு பற்றிய செய்திகளும் திருமதி. கால்டுவெல் அம்மையாருக்கு அனுப்பப்பட்ட இரங்கற் செய்திகளும் ஆறுதல் செய்திகளும் அவர் மறைவிற்குப் பின் செய்தித்தாள்களில் வந்த குறிப்புகளும் சேர்க்கப்பட்டுள்ளன.

பேராயர் அவர்கள் தம் வாழ்நாளில் பெரும்பகுதியைத் திருச்சபையை நிலைநாட்டுவதற்காகவும் அதன் வளர்ச்சிக்காகவும் செலவிட்டார்கள். இம்மலரும் நினைவலைகள் மக்களிடையே திருச்சபையைப் பற்றிய ஆர்வத்தைத் தூண்டும் என்று நம்புகிறேன்.

ஜே.எல். வயட்.

## இயல் : 1

# எனது இளமைப் பருவம்

நான் (இராபர்ட் கால்டுவெல்) 'அன்ற்ரிம்' என்ற கிராமத்தில் 1814ஆம் ஆண்டு மே திங்கள் 7ஆம் நாள் பிறந்தேன். என் வீடு 'வடக்கு அயர்லாந்து' நாட்டிலுள்ள 'கிளாடி' என்ற ஓடையின் அருகே உள்ளது. என் பெற்றோரும் மூதாதையரும் 'ஸ்காட்லாந்து' நாட்டைச் சார்ந்தவர்கள். என்னுடைய பத்தாம் வயதில் நான் என் பெற்றோருடன் 'ஸ்காட்லாந்து'க்குச் சென்றேன். அதன் விளைவாக 'ஸ்காட்லாந்து' பழக்க வழக்கங்கள் என்னை ஆட்கொண்டன. தேவைப்படும் பொழுதெல்லாம் அயர்லாந்து பிறப்பு எனக்குக் கை கொடுத்து வந்தது. பின் நாட்களில், இங்கிலாந்து நாட்டுச் சமயச் சிந்தனைகளும் தொடர்புகளும் என்னைக் கவர்ந்தன. இருப்பினும் இந்தியாவிலுள்ள எனது வீடும் இந்தியாவின் மீதுள்ள எனது பற்றும் இந்தியாவிலுள்ள ஒவ்வொரு செயலும் என்னை ஒரு இந்தியனாகவே மாற்றிவிட்டன.

ஸ்காட்லாந்துக்குக் குடிபெயர்ந்த என் குடும்பத்தினர் 'கிளாஸ்கோ' நகரில் வாழ்ந்து வந்தனர். என் 16ஆம் வயது வரை நானும் அங்கேயே இருந்தேன். அந்நாட்களில் 'கிளாஸ்கோ'வில் கிடைக்கப்பெற்ற அரிய நூல்களைக் கற்கும் வாய்ப்புக் கிட்டியது. ஓய்வு நேரங்களில் ஆங்கில இலக்கியங்களை நன்கு படித்தேன். வழிகாட்டத் தகுதியான ஆள் இல்லாததால், சிறந்த நூல்களை உரிய முறையில் படிக்க முடியவில்லை. மக்களிடையே புகழ் பெற்ற நூல்களைக் கண்டுபிடித்து அப்புகழுக்கான காரணங்கள் யாவை என அறியும் ஆவலில் அந்நூல்கள் அனைத்தையும் படித்தேன். எனினும் அந்நூல்களின் சிறப்புக்கான காரணங்களை முழுவதும் என்னால் கண்டு கொள்ள முடியவில்லை. பயனற்ற நூல்களைப் படித்து என் நேரத்தைக் கழித்தேன் என்று நான் கூற முடியாது. மாறாகப் புகழ் பெற்ற ஆனால் பயனற்ற நூல்களை மட்டுமே நான் படித்தேன் என்ற மன நிறைவு ஏற்பட்டது. இறையியல் மற்றும் சமய நூல்களைக் கற்காதது எனது படிப்பில் உள்ள மிகப்பெரிய குறை என உணர்கிறேன். எனது பெற்றோர் ஸ்காட்லாந்து 'பிரஸ்பிட்டேரியன் சபை'யைச் சார்ந்தவர்கள். அந்நாட்களில் இறையறிவு போதனையை மனப்பாடமாகக் கற்றேன். ஆயர்கள் கோவிலில் அளித்த அருட்செய்திகளையும் கேட்டேன். இந்த இரண்டையும் தவிர சமயத் தொடர்பாக எனக்கு வேறு எதுவும் தெரியாது.

கலையில் எனக்குத் திறமை இருப்பதை அறிந்த எனது அண்ணன் நான் ஒரு சிறந்த கலைஞனாக வேண்டும் என்ற நோக்கத்துடன் தான் வாழ்ந்து வந்த 'டப்லின்' நகருக்கு என்னை அழைத்துச் சென்றார். அங்குள்ள மிகச் சிறந்த கலைப்பள்ளியில் சேர்த்தார். எனது திறமை மிகுதியால் பல பரிசுகளைப் பெற்றேன். கலையை எனது முதன்மையான தொழிலாக ஏற்றுக் கொள்ள ஊக்கம் தரக்கூடாது என்ற எண்ணம் அண்ணனின் மனத்தில் தோன்றியது. கலையில் உள்ள ஈடுபாடு எனக்கு மன நிறைவையும் கொடுத்தது. 'கிளாஸ்கோ'வில் கிடைக்கப் பெற்ற நூல்கள் டப்லினில் இல்லாததால் அங்குக் கிடைத்த அறிவியல் நூல்களைப் படிக்க முற்பட்டேன். அறிவியல் நூல்கள் 'சப்' என்று இருக்கும் என்ற எனது நிலை மாறி, அவற்றைப் படிப்பதில் அதிக நாட்டம் கொண்டேன்.

எனது அண்ணன், அறிவர் உர்விக் தலைமையிலான தன்னாளுமை சபையின் உறுப்பினர். எனவே அவருடைய சிற்றாலயத்திற்குச் சென்று வந்தேன். தவிர, அயர்லாந்து திருச்சபையின் சில இறையடிவர்களுடன் பழகும் வாய்ப்புக் கிட்டியது. இங்குள்ள சமயச் சூழல் எனது ஆன்மீக வாழ்வைப் பற்றி ஆழமாகச் சிந்திக்க அடிகோலியது. ஆனால் இந்த ஆன்மீக எண்ணங்கள் மறைந்து, கலையைப் பற்றிய எண்ணங்கள் என் மனத்தை ஆட்கொள்ளத் தொடங்கின. பலவித எண்ணங்கள் மீண்டும் தலை தூக்கின. மனத்தில் குழப்பங்கள்! எனினும் எதிர்பாராத நிலையில் ஒரு நாள் குழப்பங்களும் தடைகளும் மனப்போராட்டங்களும் ஒரு முடிவுக்கு வந்தன.

என்றாவது ஒரு நாள் இறைவனுக்காக அவருடைய அருட்பணிக்காக ஒப்புக் கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் இருக்குமானால் அம்முடிவை இப்பொழுதே ஏன் எடுக்கக் கூடாது? என்ற குரல் உள் மனத்தில் தெள்ளத் தெளிவாக ஒலித்தது. இதனை அறிந்ததும் உடனே செயல்பட வேண்டும் என்ற எண்ணமும் கூடவே எழுந்தது. எழுந்தேன். திறந்த வெளிக்குச் சென்றேன். எல்லாம் புதிதாயின! புதிய கால்டுவெல்! புதிய கருத்துக்கள்! புதிய நோக்கங்கள்! புதிய வானமும் புதிய பூமியும் என் முன்னால் இருப்பது போன்ற தோற்றம்! அந்த நாள் என் சமய வாழ்க்கையில் திருப்பு முனையாக அமைந்தது. நோக்கங்களும் உணர்வுகளும் புதிய வடிவம் பெறத் தொடங்கின. அந்நோக்கங்களும் உணர்வுகளும் இந்தியாவுக்கு நான் நற்செய்திப்

பணியாளராகச் செல்ல வேண்டும் என்ற உறுதியான எண்ணமாக மாறியது.

## கிளாஸ்கோ நகரில் ...

**1833**ஆம் ஆண்டு 'கிளாஸ்கோ' நகருக்கு மீண்டும் சென்றேன். கிரவெல் யூயின்ங் (Greville Ewing) தலைமையிலான சபையில் சேர்ந்தேன். கிரவெல் கடவுள் பற்று மிகுந்தவர். கல்வியாளரும் கூட. அவரது சபை தூய திருவிருந்தில் பங்கு பெறும் அனைவரையும் உள்ளடக்கியது. அதில் பங்கு பெற்றவுடன் ஒருவர் அவரது சபையில் உறுப்பினராகிவிடலாம். அச் சபையில் அறிவர் அர்விக் (Dr. Urwick) அவர்களின் பரிந்துரையின் பேரில் சேர்ந்தேன். குறிப்பிடத்தக்க வேறு காரணம் எதுவும் இல்லை. அச்சபையில் நான் சேர்ந்ததைப் பற்றிச் சிறிதளவும் வருத்தப்படவில்லை. ஏனெனில் கிரவெல் போன்று விவிலியப் புலமை உடையவர் 'கிளாஸ்கோ' நகரில் வேறு யாருமிலர். மட்டுமன்று, அச்சபை உறுப்பினர் அனைவருக்கும் நற்செய்திப் பணி மீது அதிக அக்கறை உண்டு. முன்னேற்றத்திற்காக அங்குள்ள பல இளைஞர் இயக்கங்களில் நான் உறுப்பினரானேன். அவ்வியக்கங்களுள் ஒன்றின் உறுப்பினர்கள், நகரின் பின் தங்கிய பகுதிகளில் வாழும் கிறிஸ்தவரல்லாதவர்களை நேரில் கண்டு கலந்துரையாடுவது வழக்கம். சற்றுத் தொலைவில் உள்ள புறநகரில் ஞாயிறு வகுப்புகளை நானே நடத்தி வந்தேன்.

நற்செய்திப் பணிக்கு என்னைத் தகுதிப்படுத்த இவ்விதமான பணிகள் பெரிதும் உதவின. இப்படிப்பட்ட அடித்தளப் பணிகளைச் செய்யாமல் நான் இந்தியாவுக்குச் சென்றிருந்தால் எனது பணி அவ்வளவு சிறப்பாக அமைந்திருக்காது. அந்நாட்களில் அறிவர் சால்மார்ஸ் அவர்கள் ஆற்றிய அருளுரைகளைக் கேட்கும் வாய்ப்புக் கிட்டியது. அதற்குப் பின்பு புகழ்வாய்ந்த பலரின் அருளுரைகளைக் கேட்டிருக்கிறேன். ஆனால் கருத்துச் செறிவு, அழகிய மொழிநடை, எழுச்சி ஆகிய மூன்றும் ஒருங்கே அமையப் பெற்ற சால்மார்ஸ் அவர்களின் அருளுரைகளைப் போன்று நான் எங்கும் கேட்டதில்லை. **1834**ஆம் ஆண்டு நானும் கிளாஸ்கோவில் உள்ள எனது நண்பர் மறைந்த லியோன் (W.P.Lyon) அவர்களும் இலண்டன் இறைப்பணி இயக்கத்தில் இணைய முன் வந்தோம். (பின்பு அவர் 'பனாரஸ்' பட்டணத்திற்கு நற்செய்திப் பணியாளராகச் சென்று விட்டார்)

இலண்டன் சென்ற இருவரையும் இயக்கத்தார் ஏற்றுக் கொண்டனர். இங்கிலாந்துக்கும் இலண்டனுக்கும் முதன்முறையாகச் சென்றது ஒரு மறக்க முடியாத நிகழ்ச்சியாகும்.

நான் கற்றதும் கண்டதும் பாராட்டத் தகுந்தவையாக இருந்தாலும் இங்கிலாந்து மக்களின் சமய, அறிவியல் வாழ்க்கை குறிப்பிடத்தக்க அளவுக்கு இல்லை. இருவரும் மேற் படிப்புக்காகக் 'கிளாஸ்கோ பல்கலைக்கழக' த்திற்கு அனுப்பப்பட்டோம். வகுப்புகள் தொடங்கச் சில நாட்கள் இருந்தன. அந்நாட்களில் நற்செய்திப் பணியாளர்களுக்கான ஆயத்த வகுப்புகள் திரு. செஸில் அவர்களால் பெட்ஃபோட்ஷயரில் உள்ள 'டர்வி' (Turvey) என்ற இடத்தில் நடத்தப்பட்டன. அவ்வகுப்புக்களுக்கு நாங்கள் சென்றோம். திரு. செஸில் அவர்களின் மாசற்ற உயர்ந்த உள்ளம், இளைஞர் அனைவரின் உள்ளங்களையும் தொடக்கூடியது. எனவே அவரை என்றும் மறக்க முடியாது.

பல்கலைக் கழகத்திற்கு வந்ததும் வழக்கமாகச் செய்து வந்த இரு செயல்களை விட்டுவிட நேரிட்டது. ஒன்று, எளிய மக்களிடையே செய்து வந்த அருட்பணி. அதாவது ஞாயிறு பள்ளி. மற்றொன்று, பல்கலைக்கழக வாழ்க்கை முறை. இப்பல்கலைக்கழக வாழ்க்கை முறை நற்செய்திப் பணிக்கு என்னைத் தயார் படுத்தக் கூடிய அளவுக்கு இல்லை என்பதை உணர்ந்தேன். எனினும் தன்னாளுமை திருச்சபையின் சபைகளுக்குப் பெரும்பாலும் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் சென்று வழக்கமான அருட்பணியாளருக்குப் பதிலியாக அருளுரையாற்றி வந்தேன். இது எந்த அளவிலும் எனது படிப்பைப் பாதிக்கா வண்ணம் இருக்க நான் அதிக நேரம் உழைத்தேன். அருளுரை அளிப்பதில் முதிர்ச்சி இல்லாததால் மற்றவர்கள் எழுதிய அருளுரைக் குறிப்புகளையே பயன்படுத்தினேன்.

பல்கலைக்கழகப் படிப்புக்கு வேண்டிய அளவு முயற்சி இல்லாததால் படிப்பில் நிறைவை அடைய முடியவில்லை. அதற்கு மற்ற காரணங்களும் இருந்தன. பல்கலைக்கழகத்தில் கால் எடுத்து வைக்கும் முன்பு இலத்தீன் மொழியிலோ அல்லது கிரேக்க மொழியிலோ ஒரு சொல் கூடத் தெரியாது. இதை நான் இளம் வயதிலேயே இலக்கணப் பள்ளிகளில் கற்றிருக்க வேண்டும். அந்த அடிப்படை வாய்ப்பு இல்லாதது பெருங்குறையாகும். இதை நான் என் வாழ்நாள் முழுவதும்

உணர்ந்தேன். கடின உழைப்பின் மூலம் மட்டுமே இக்குறையைப் போக்க முடியும் என எண்ணினேன். இம் முயற்சி ஓரளவு எனது உடல்நிலையைப் பாதித்தாலும் அவ்வளவு கடினமாக எனக்குத் தோன்றவில்லை. மாறாக, அம்முயற்சியும் அயராத உழைப்பும் அதிக மகிழ்ச்சியையும் மனநிறைவையும் அளித்தன. நான் விரும்பிய முன்னேற்றம் இல்லாமல் இருந்திருக்கலாம். ஆனால் கற்றலில் எனக்கிருந்த பற்றும் நாட்கள் செல்லச் செல்லக் கற்பதில் எனக்கிருந்த ஆர்வமும் பல்கலைக்கழகத்தில் உள்ள வேறு எந்த மாணவனுக்கும் இல்லை என்பதை அறிந்து எனக்குள் மனநிறைவு அடைந்தேன். பெரும்பாலும் மாணவர்கள் அனைவரும் தங்கள் பள்ளிப்பருவத்திலேயே பழம்பெரும் இலக்கியங்களை அவைகளின் சிறப்பை அறியாமலும் சுவைக்காமலும் கற்றிருந்தனர். ஆங்கில இலக்கியத்தையும் திறனாய்வுத்திறனையும் அறியும் வரையில் பழம்பெரும் இலக்கியங்களின் சிறப்பை நானும் அறியாதவனாகவே இருந்தேன்.

ஆனால் ஆங்கில இலக்கியத்தையும் ஆய்வுத் திறனையும் நன்கு அறிந்த பின் ஒரு புதிய உலகினைக் கண்டுபிடித்தது போன்று இருந்தது. பல்கலைக் கழகத்திற்கு வரும் முன்னரே ஸ்காட்லாந்து மற்றும் இங்கிலாந்து தத்துவ அறிஞர்களின் நூல்களைப் படித்திருந்தேன். அதனால் பல்கலைக்கழகத் தத்துவ வகுப்புகள் கடினமாகத் தோன்றவில்லை. முதலாண்டு சிறப்புத் தேர்வில் இலத்தீனில் இரண்டாவது இடத்தையும் கிரேக்கத்தில் நான்காம் இடத்தையும் பெற்றேன். இரண்டாம் ஆண்டில் தத்துவத்தில் இரண்டாம் இடமும், கிரேக்க இலக்கியப் பாடத்தில் கட்டுரை எழுதியமைக்காக ஒரு பரிசும் கிடைத்தன. மூன்றாம் ஆண்டில் நன்னெறித் தத்துவத்தில் மீண்டும் இரண்டாவது இடம் எனக்குக் கிடைத்தது. கணித வகுப்புகளுக்குத் தவறாது சென்றாலும் கணிதத்தில் எனக்கு அதிக ஆர்வம் இல்லாததால் நான் அதில் சிறந்த அறிவு பெறவில்லை. இறுதியாண்டு இறுதித்தேர்வில் மனநன்னெறி அறிவியலில் முதலிடத்தைப் பெற்றமையால், சர் இராபர்ட் பீல் அவர்களின் பரிசுத் தொகையில் பாதி எனக்கு அளிக்கப்பட்டது.

கிளாஸ்கோவில் படித்துக் கொண்டிருந்த பொழுது ஒப்பு மொழியியலில் அதிக ஆர்வம் ஏற்பட்டது. நான் வளர வளர அந்த ஆர்வமும் வளர்ந்தது. இயற்கையாகவே ஒப்பு மொழியியலில் இருந்த ஆர்வம், இத்துறையில் நுண்மாண் நுழைபுலம் பெற்ற

கிரேக்கப் பேராசிரியர் டேனில் சான்ஃபோர்டு அவர்களின் சொற்பொழிவுகளைக் கேட்டதின் விளைவாக முழுவடிவும் முதிர்வும் பெற்றது. அத்துறையில் அந்நாட்களில் அவரைவிடச் சிறந்த கல்விமான் எவருமிலர். "பல இன, மொழி பேசும் மக்களிடையே வாழும் அல்லது பணியாற்றும் வாய்ப்புக் கிட்டினால் அம்மொழிகளை நான் நன்கு கற்பேன்; அம்மொழிகளைப் பேசும் மக்களுக்கும் உலகுக்கும் பயன்படும் வகையில் அவற்றின் ஒப்புமை பற்றி எழுதவும் என்னைத் தகுதிப் படுத்திக் கொள்ளுவேன்" என்று முடிவு எடுத்தது நினைவிற்கு வருகிறது. இம்முடிவே 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்ற நூலை எழுதுவதற்கு வித்தாக அமைந்தது.

அந்நாட்களில் தன்னாளுமை இறையியல் பள்ளியைச் சார்ந்த பேராசிரியர்கள் அறிவர் வார்ட்லா மற்றும் யூயிங் ஆகியவர்களிடம் இறையியலும் 'அண்டர்ஸோனியன் பல்கலைக்கழக'ப் பேராசிரியர் ஒருவரிடம் எபிரேய மொழியும் கற்றேன். இறையியலில் அருளுரையாற்றும் பயிற்சிக்குச் சிறிது நேரமும் இறையியல், விவிலிய இலக்கியம், திருச்சபை வரலாறு பற்றிய விரிவுரை வகுப்புகளுக்கு அதிக நேரமும் ஒதுக்கப்பட்டிருந்தன. திறமை மிக்க விரிவுரையாளர்களால் உரை நிகழ்த்தப்பட்டதால் மிகுந்த அக்கறையுடன் அவர்களது உரைகளைக் கேட்டறிந்தேன். எனினும், பாடப்புத்தகங்களை மையமாக வைத்து அப்பாடங்ளைக் கற்பித்திருந்தால் என்னைப் போன்றவர்களுக்கு இறையியலில் சிறந்த அடித்தளம் அமைந்திருக்கும். விரிவுரையாளர்கள் அளித்த உரைகளின் அடிப்படையிலேயே மாணவர்களின் திறன் கணிக்கப்பட்டது. எனவே வேறு எந்த அறிவுமின்றி அப்படிப்பை முடிக்க முடியும் என்ற நிலை இருந்தது.

மற்ற நூல்களைப் படிக்கச் சிறிதும் ஊக்கம் அளிக்கப்படவில்லை. இக்குறைபாட்டை இங்கிலாந்து மற்றும் சுத்தாங்கத் திருச்சபையைச் சேர்ந்த புகழ் வாய்ந்த இறையியல் வல்லுநர்கள் எழுதிய நூல்களைக் கற்றதன் மூலம் போக்கிக் கொண்டேன். 17ஆம் 18ஆம் நூற்றாண்டுகளில் சிறந்த ஆன்மீக அறிஞர்களால் எழுதப்பட்ட நூல்கள் அனைத்தையும் சற்று ஆழமாகக் கற்றேன். அவர்கள் அனைவரிலும் என்னைக் கவர்ந்தவர் ஹூக்கர் என்பவரே ஆவார். அவர் மிகச் சிறந்த சிந்தனையாளர்; எழுத்தாளர். மேலும் வாட்டர்லேண்ட் என்ற

அறிஞரிடமும் பழகும் வாய்ப்புக் கிட்டியது. இறையியலில் இவர்கள் இங்கிலாந்து திருச்சபையின் இரு பெரும் சார்பாளர்களாக அந்நாளில் திகழ்ந்தனர். இவர்களின் தாக்கத்தினால் என் மனம் 'எப்பிஸ்கோப்பல் திருச்சபை' யின் (Episcopal Church) பக்கம் திரும்பியது. பல்கலைக் கழகத்தில் முதலாமாண்டில் தொடங்கிய இத்தாக்கம் நாளடைவில் வலுப்பெற்று சுமார் நான்கு ஐந்து நாட்களில் திருச்சபை வரலாற்றை நன்கு கற்கவும் பிரிவினைகளுக்குக் காரணங்களை நன்கு உணர்ந்து கொள்ளவும் அடிகோலியது.

இந்த மாற்றத்தை அறிந்த எனது உடன் மாணவர்கள் மனத்தில் சிறிது கலக்கம் ஏற்பட்டது. அவர்களை அமைதிப்படுத்தினேன். உண்மையை அறிய முற்படும் போது உண்டாகும் இடர்ப்பாடுகள், சபைகளில் உள்ள மாறுபாடுகள் ஆகிய இவற்றின் நடுவில் நாம் எவ்வாறு பொறுமையாய் இருக்க வேண்டும் என்பதைப் பற்றி ஒரு கட்டுரையைப் படித்தேன். இதனால் நானும் எவ்வாறு அமைதி காக்க வேண்டும் என்பதைக் கற்றுக் கொண்டேன். சிக்கலானவற்றில் தெளிவு காண இன்னும் ஆய்வு தேவை என்று உணரும் போது நாம் வீணாகச் சொல்லாடுதலைத் தவிர்த்து அமைதி காப்பதே நல்லது. தன்னாளுமை திருச்சபையில் நான் ஆயராக அருட்பொழிவு பெற்ற வேளையில் அமைதி காக்க இக்கருத்து பெரிதும் உதவியாக இருந்தது.

சமயக் கோட்பாடுகள் தொடர்பாகக் கருத்து வேறுபாடுகள் ஏற்படுமாயின், பிரிவினையை விட ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொண்டு பொறுமையுடன் இருத்தலும் அமைதி காத்தலுமே நன்று. முதன்மையான கொள்கைகள், வழிபாட்டு முறை, கற்பித்தல் முறை போன்ற சிறப்பான செய்திகளை விட்டுவிடுகின்றனர். தனிப்பட்ட மற்றும் முதன்மையற்ற செயல்களுக்கு முதன்மை கொடுத்து அவற்றை ஆன்மீகமாகக் கருதுவது எல்லாச் சபைகளிலும் உள்ள குறைபாடு ஆகும். இவ்வாறான பலதரப்பட்ட பணிகள் கிறிஸ்துவப்பணியின் முன்னேற்றத்திற்கும், இறைப்பணியின் விரிவாக்கத்திற்கும் பேருதவியாக இருந்தன. ஆனாலும் சிறந்த இறைப்பற்றும் உயர்ந்த ஊக்கமும் அருள் வரங்கள் என்று நான் கருதுகிறேன். தாராள, மிதவாதப் பண்புள்ள உயர் திருச்சபையாரின் (High Churchmen) நடுவில் மிகவும் விழிப்புடன் ஆற்றப்படும் பணி மீது எனக்குத்

தனிப்பட்ட மதிப்பு உண்டு. இருப்பினும் ஆன்மீகத்தையும் ஆர்வத்தையும் புறக்கணிக்கவில்லை. பொதுவாக இவையிரண்டும் எல்லோருக்கும் தேவையான பண்புகளாகும். மற்றெல்லாவற்றிலும் மற்றவர்கள் பின்பற்றத்தக்க முறையில் இருந்தாலும் இறைப்பற்றில் உற்சாகமும், ஆர்வமும் 'கான்கிரிகேஷன் திருச்சபை' உறுப்பினர்களிடையே அரிது என எண்ணுகிறேன்.

பட்டப்படிப்பு முடிந்ததும் இலண்டனுக்குச் சென்று இந்தியப் பயணத்திற்கான ஆயத்தப் பணிகளில் ஈடுபட்டேன். தாயைப் பிரிந்த போது என் உள்ளம் உருகியது. அவர்கள் உடல்நலக்குறைவாய் படுக்கையிலே இருந்தார்கள். அவர்களது படுக்கை அருகே நான் முழங்காற்படியிட்டேன். தன் கைகளால் என்னைக் கட்டித் தழுவிக் கொண்டு முத்தமிட்டார்கள். "எவ்வகைத் தயக்கமின்றி எவ்வகை முணுமுணுப்பின்றி நான் உன்னை இறைவனிடம் ஒப்படைக்கிறேன்" என்று கூறினார்கள். "எவ்வகை முணுமுணுப்பின்றி" என்ற சொற்றொடர் மீண்டும் மீண்டும் அவர்கள் வாயிலிருந்து ஒலித்தது. எழுந்தேன்; பயணத்தைத் தொடர்ந்தேன். அதற்குப் பின் என் பெற்றோரை நான் பார்க்கவே இல்லை! வீட்டையும் நண்பர்களையும் விட்டுப் பிரிந்தாலும், இறைவனின் வழி நடத்துதலும், அக்கறையும் அவரது பணியில் ஈடுபடும் நாட்களில் என்னைத் தாங்கும் என்ற நம்பிக்கை எனக்கு இருந்தது. சென்னைக் கிளையில் என்னைப் பணியமர்த்திய இலண்டன் இறைப்பணி இயக்கம், பல வகைகளில் எனக்குப் பேருதவியாக இருந்தது.

சிறந்த ஆடைகளையும் 20 பவுண்ட் பெறுமான நூல்களையும் இவ்வியக்கத்தினர் எனக்களித்தனர். 'கிரேவ் சென்ட்' (Gravesend) என்ற இடத்தில் நான் கப்பல் ஏறும் வரை என்னுடன் வந்து என்னை அவ்வியக்கத்தின் உள்துறைச் செயலர் திரு. அருண்டேல் அவர்கள் வழியனுப்பி வைத்தார்கள். அதே வேளையில் 'கிளாஸ்கோ பல்கலைக்கழக' த்தில் பயின்ற இருவர் அவ்வியக்கத்தினரால் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டனர். அவர்களில் ஒருவர் திரு. லியோன் (Leyon). எனது கல்லூரி நண்பர். மற்றவர் திரு. இரஸ்ஸல். முன்னவர் பனாரஸ்ஸுக்கும் (காசி) பின்னவர் திருவாங்கூர் (Travancore) என்ற இடத்திற்கும் அனுப்பி வைக்கப்பட்டனர். முதன்முதலாக நாட்டையும் நண்பர்களையும் விட்டு வெப்ப மண்டலத்திலுள்ள இடத்திற்கு இறைப்பணிக்காகச் சென்றேன். என்ன நடக்கப் போகிறது என்பது தெரியாது. என்ன

பணியில் என்னுடைய ஈடுபாடு இருக்கும் அல்லது அதன் விளைவு என்னவாக இருக்கும் என்பதையும் அறியவில்லை. ஆவல், வியப்பு, நம்பிக்கை ஆகிய மூன்றும் கலந்தனவாகவே என்னுடைய உணர்வுகள் இருந்தன. இவ்வுணர்வுகளில் என்னைப் போன்ற வயதினரிடம் எதிர்பார்ப்பது போல நம்பிக்கையே விஞ்சியிருந்தது. பின்னரும் பல கடினமான, இருண்ட சூழ்நிலைகளிலும் இந்த நம்பிக்கையே விஞ்சியிருந்ததற்காக நான் இறைவனுக்கு நன்றியுடையவனாய் இருக்கிறேன்.

1837ஆம் ஆண்டு ஆகஸ்ட்த் திங்கள் 30ஆம் நாள் எனது பயணம் தொடங்கியது. நான் பயணம் செய்த கப்பலின் பெயர் 'மேரிஆன்' (Mary Ann). டார்பட் (Tarbutt) என்பவர் அக்கப்பலின் தலைவன். ஆங்கிலக் கால்வாய்ப்பகுதியில் நிலவிய மோசமான வானிலை, எதிர்க்காற்று, கனமழை ஆகியவற்றால் கரையிலிருந்து கடலின் உட்பகுதிக்குச் செல்ல சுமார் ஒரு மாதம் ஆகிவிட்டது.

துர்அதிர்ஷ்டவசமாக ஓர் இரவில் பிரேசிலில் இருந்து 'ஹவ்ரே' (Havre) என்ற இடத்திற்குச் சென்று கொண்டிருந்த பிரெஞ்சுக் கப்பல் மீது எங்கள் கப்பல் மோதியது. எங்களது கப்பல் டச்சுக்காரர்களால் உறுதியாகக் கட்டப்பட்டிருந்ததால் அக்கப்பலுக்கே பழுது அதிகம். இரு கப்பல்களிலும் விளக்குகள் இல்லை. பழுது நீக்க எங்கள் கப்பல் 'பிளிமத்' (Plymouth) துறைமுகத்திற்குச் சென்றது. அந்தக் கப்பல் ...... அந்த இடத்திலேயே மூழ்கிவிட்டது. அதிலிருந்த ஆறு மாலுமிகள் ஒரு படகில் 'ஃபால்மத்' (Falmouth) என்ற இடத்திற்குச் சென்றடைந்தனர். மற்றவர்களில் எத்தனை பேர் உயிரிழந்தனர் என்பது எனக்கு நினைவில்லை. முதற் பயணத்தின் தொடக்கத்தில் நடந்த இந்நிகழ்ச்சி சற்றுப்பயத்தை உண்டாக்கியது. இறைப்பணியாளர் என்றதால் ப்ளீமத்தில் மக்கள் அதிக ஆதரவும் பரிவும் காட்டினர். நண்பர்களோ, அறிமுகமானவர்களோ யாரும் இல்லை. எனினும் ஒரு வங்கியாளர் வீட்டில் நான் விருந்தாளியாகத் தங்கியது நன்றாக இருந்தது. அவ்வளவு நல்ல விருந்தோம்பல். தொடக்கத்தில் ஏற்பட்ட பயத்தைத் தவிர, சென்னைப் பயணம் மகிழ்ச்சியாகவே இருந்தது.

இந்த விபத்து தொடர்பாகக் கால்டுவெல் தன்னுடைய அண்ணனுக்கு எழுதிய கடிதத்திலிருந்து தொகுக்கப்பட்டுள்ள விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:–

இலண்டனிலிருந்து புறப்பட்ட திங்கட்கிழமை மாலையே 'டார்ட்மத்' (Dartmouthi) என்ற இடத்திலிருந்து கடற்பயணத்தைத் தொடங்கினோம். 'ஸ்டாட்' என்ற இடத்தைக் கடந்ததும், இவ்வளவு விரைவில் மீண்டும் திரும்பி வருவேன் என்று சிறிதும் எண்ணாமல் 'கடைசியாகக் கண்ட நிலப்பகுதி' என்று எனது ஏட்டில் குறிப்பிட்டுள்ளேன். இரவு சுமார் 11:00 மணி கடுங்காற்று வீசியது. நான் தூங்கச் சென்றுவிட்டேன். கப்பல் தலைவனின் உச்சக் குரலில் கொடுக்கப்பட்ட ஆணையும் கப்பலின் மேல்தளத்தில் போட்ட பேரொலியும் என்னை எழுப்பி விட்டன. தீங்கு நேரிடவிருக்கிறது என உணர்ந்தேன். ஏதோ ஒன்றைத் தவிர்க்க அல்லது ஒன்றிலிருந்து தப்புவிக்க கப்பல் ஒரு பக்கமாகத் தூக்கி எறியப்பட்டது. மறக்கமுடியாத ஏதோ ஒரு அதிர்ச்சியால் படுக்கையில் இருந்து துள்ளி எழுந்தேன். அது என்னவென்று எனக்குத் தெரியாவிட்டாலும் நாங்கள் பாறைகளின் நடுவிலோ அல்லது மணற்பாங்கான கரையிலோ இருக்கிறோம் என உணர்ந்தோம்.

ஒவ்வொரு நிமிடமும் எச்சரிப்பு ஒலி ஒலித்துக்கொண்டே இருந்தது. தீங்கு வரவிருக்கிறது என்பதை நான் அறிந்தேன். அதனை எதிர்கொள்ள என் மனத்தைத் தகுதிபடுத்திக் கொண்டேன்; உடையை உடுத்திக் கொண்டேன்; கப்பலின் மேல்தளத்திற்குச் சென்றேன்; அச்சமயம் எங்கள் கப்பல் மற்றொரு கப்பலில் மோதி விட்டது என அறியலானேன். அதற்கு மேல் எங்களால் ஒன்றும் சொல்ல முடியாத நிலையில் இருந்தோம். அதிக இருட்டாக இருந்ததினால் எங்கள் கப்பலுக்கு ஏற்பட்ட சிதைவைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. அடுத்தக் கப்பலுக்கு என்ன நேர்ந்தது என்பதும் தெரியவில்லை. எப்போது விடியும் என்று காத்துக் கொண்டிருந்தோம். காலையில் எங்கள் கப்பலுக்கு ஏற்பட்ட சிதைவு தெரிய வந்தது. பழுது நீக்க மிக அருகில் உள்ள துறைமுகம் செல்ல வேண்டியதாயிற்று.

இன்னும் சற்று கீழ்ப்பகுதியில் மோதல் ஏற்பட்டிருந்தால் அடுத்த கப்பலைப் போல் எங்கள் கப்பலும் மூழ்கியிருக்கும். அதிலுள்ள மாலுமிகள் சில படகுகளில் ஏறித் தப்பித்துக் கொண்டனர். அவற்றில் ஒரு படகு, தளத்தில் மோதி மூழ்கியதில் அதிலிருந்த நான்கு பேரும் உயிரிழந்தனர். அதிக இருட்டாகவும் கொந்தளிப்பாகவும் இருந்தமையால் உதவி எதுவும் பெற முடியவில்லை. பர்மா போருக்குக்காகத் தேக்கு மரத்தினால்

மிகவும் உறுதியாகக் கட்டப்பட்டிருந்ததால் எங்கள் கப்பலுக்குக் குறைவான சிதைவும் அடுத்த கப்பலுக்கு அதிகச் சிதைவும் ஏற்பட்டது. பழுது நீக்கிப் புதுப்பிக்கப்பட சுமார் இரு வாரங்கள் ஆயிற்று. அந்நாட்களில் அங்குள்ள மக்கள் காட்டிய அன்பைப் போன்று என் வாழ்க்கையில் வேறு எவரும் அன்பைச் செலுத்தவில்லை. அங்குப் போய்ச் சேர்ந்ததும் தன்னாளுமை நற்செய்திபணியார் (Independent Ministers) ஒருவரிடம் அறிமுகமானேன். அவர் என்னை அங்குள்ள மக்களிடம் அறிமுகப்படுத்தினார். அங்குள்ள செல்வமிகு வங்கியாளர் ஒருவர் வீட்டில் நான் தங்கியிருந்தேன். நேரத்தை வீணாக்க விரும்பவில்லை; அங்குச் சென்ற நான் முதல் ஒன்பது முறைகளுக்கு குறையாமல் ப்ளீமத்திலோ அல்லது டெவன்போர்ட்டிலோ (Devonport) அருளுரையாற்றினேன். பயணத்திலும் இப்படிப்பட்ட வாய்ப்பு இருக்கும் என எதிர்பார்க்கிறேன்.

என்னோடு பயணம் செய்தவர்களில் ஒருவர் சென்னை உயர்அரசுப்பணியில் (Civil Service) பணியாற்றும் திரு. C.P.ப்ரௌன் (C.P.Brown); தெலுங்கில் புலமை பெற்றவர். எனக்குத் தெலுங்கு கற்றுக் கொடுக்க முன்வந்தார். தமிழ்நாட்டில் இறைப்பணியாளராகப் பணியாற்றவிருப்பதால் தெலுங்கு மொழியைக் கற்க விருப்பமில்லை. 'சமஸ்கிருத மொழி' யிலும் நல்ல புலமை பெற்ற அவர் சமஸ்கிருதச் செய்யுள் இலக்கணத்தைப் பற்றி ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார்.

தெலுங்கிற்குப் பதிலாகச் சமஸ்கிருதத்தைக் கற்க முன்வந்தேன். நான் கற்ற சமஸ்கிருதம் அதிக அளவில் இல்லாமல் இருந்தாலும், பிற்காலத்தில் நான் மொழிப்புலமை பெற அக்கல்வி நல்ல அடித்தளமாக அமைந்தது. என்னை அறியாமலே தமிழ் ஒலிப்புமுறையில் உள்ள சிக்கல்களைப் போக்கிக் கொள்ள அம்மொழிக் கல்வி எனக்கு உதவியாய் இருந்தது. இந்திய மொழிகள் மீது அவருக்கு இருந்த ஆர்வம் என் மீது தாக்கத்தை உருவாக்கியது. நான் அவரிடமிருந்து இந்தியாவைப் பற்றி பல செய்திகளைக் கற்றுக் கொண்டேன். எனினும் அவரிடம் சற்று விழிப்புணர்வுடனே இருக்க வேண்டும் என உணரலாயினேன். ஏனெனில் அவரது அறிவு அரியது. ஆனால் அவரது மதிப்பீட்டுத் திறன் குறைவுள்ளது.

## திரு. சி.பி. ப்ரௌன் (C.P.Brown)

**(1837ஆம் ஆண்டு எழுதப்பட்ட பேராயரின் அறிக்கையின் சுருக்கம்)**

நான் 'ப்ரௌன்' (C.P. Brown) அவர்களைப் பற்றி ஏற்கனவே அடிக்கடி குறிப்பிட்டுள்ளேன். அவர்களைப் பற்றிய செய்திகளை மேலும் அறிந்தால்தான் நான் தொடர்ந்து எழுதமுடியும் என எண்ணுகிறேன். அடிஸன் அல்லது ஜாண்சன் இங்கு இருந்திருந்தால் அவரைப் பற்றி நன்கு எழுதியிருப்பர். பக்கனன் (Buchanan) எழுதிய 'கிறிஸ்தவ ஆய்வுகள்' என்ற நூலில் திரு. ப்ரௌன் மற்றும் அவரது இரு சகோதரர்களைப் பற்றிய குறிப்பு உள்ளது. அவர்களை இந்தியாவுக்கு அனுப்ப வேண்டும் என்பது அவர்களுடைய தந்தையின் விருப்பம். அருட்பணிக்கு தகுதிப்படுத்த வேண்டிய அனைத்துக் கல்வியையும் அவர்களுக்கு அளிப்பதில் அவ்வளவு அக்கறை காட்டினார். பக்கனன் அவர்களுக்கு மிகவும் உதவியாக இருப்பார் என்றும் எண்ணினார். ஆனால் காலம் வந்த போது அருட்பணி மீது நாட்டங் கொள்ளாமல் ஆட்சிப்பணி மீது நாட்டங்கொண்டதால் ஆக்ஸ்ஃபோர்டு கல்லூரிக்கு அவர்களை அனுப்பாமல் ஹைலிபரி (Haileybury) என்ற கல்லூரிக்கு அனுப்பி வைத்தார், இந்தியாவுக்குத் திரும்பியதும் தனது கடுமையான பணியிடையிலும் தனக்கு விருப்பமான பாடங்கள் அனைத்தையும் கற்கத் தொடங்கினார்.

அதிகத் திறமையும் நினைவுத் திறனும் விடாமுயற்சியும் உள்ள அவர் அறிவைப் பெருக்க வேண்டுமென்ற தனது தீராத தாகத்தால் கணினி போன்று எண்ணிலடங்கா செய்திகளைச் சேகரித்து வைத்துள்ளார்; மராத்தி, பாரசீகம், அரபி, சிரியா, எபிரேயம், இத்தாலி போன்ற மொழிகளைக் கற்றறிந்தார்; சமஸ்கிருதம், தெலுங்கு, இந்துஸ்தானி, கிரேக்கம், இலத்தீன், பிரெஞ்சு ஆகிய மொழிகளிலும் சிறந்த புலமை பெற்றிருந்தார். இந்திய இலக்கியத்தில் பல நூல்களை மொழியாக்கம் செய்துள்ளார்; பல நூல்களுக்குப் பதிப்பராகவும் பணிசெய்துள்ளார்; சமஸ்கிருதத்திலும் தெலுங்கிலும் செய்யுள் இலக்கண நூல்கள், தெலுங்கில் இலக்கண நூல், வெளியிடப்படாத தெலுங்கு அகராதி ஆகியவற்றையும் எழுதியுள்ளார். இன்னும் 40 வயதை எட்டாத இவர் கடந்த 20 ஆண்டுகளில் மாவட்ட ஆட்சித்தலைவர், நீதிபதி போன்ற பொறுப்புள்ள பணிகளை வகித்திருந்தாலும், தனது மன

உறுதியினாலும் விடாத ஆர்வத்தினாலும் இப்பெரிய இலக்கிய இலக்கண நூல்களைப் படைத்துள்ளார்.

இவருக்கு ஆங்கில இலக்கியத்திலும் குறிப்பிட்ட அளவு புலமை உண்டு. இவர் படிப்பறிவுக்கு முதன்மை கொடுப்பவர்; பட்டறிவு பற்றி கவலைப்படாதவர்; சற்று மாறுபட்ட மனிதர். இவர் ஒரு பல்கலைக் கழகத்தில் மற்றக் கல்வியாளர்களோடு கற்றிருந்தால் இவரது திறமைகளையும் குறைகளையும் மதிப்பிட்டுத் தன்னுடைய திறமைகளைப் பயனுள்ள வகையில் பயன்படுத்தியிருக்கவும் குறைகளைக் களைந்திருக்கவும் முடியும். மக்களுக்குச் சேவை செய்யும் ஒரு கருவியாக இருந்திருப்பார். பெரும்பாலும் தானாகவே படித்த படிப்பும், தன்னை விடக்குறைந்த திறமையும் படிப்பும் உள்ளவர்களிடம் பழகிய சூழலின் தாக்கத்தாலும் மின்னோக்கள் மீது ட்ரைட்டன் (Triten among the minnoros) அடக்குமுறை செலுத்தியதாலும், அவரது குறைவுகளும் இயலாமைகளும் செழித்து வளரக் காரணமாயிருந்தன. அவை அவரது மேட்டிமையான எண்ணத்திற்கு வித்தாக அமைந்தன. சில நேரங்களில் டிண்டேலின் (Tyndal) கூற்றுப்படி விஞ்சிய அறிவு மனிதனை மதிமயங்கச் செய்கிறது.

முதன் முறையாக நான் திரு. ப்ரௌன் அவர்களிடம் அறிமுகமான போது, அவர் ஒரு மிகப் பெரிய அறிஞர்; எந்தத் துறையிலும் தன்னுடைய திறமையை வெளிப்படுத்தக் கூடியவர் என்ற எண்ணம் எனக்குள் இருந்தது. தன்னம்பிக்கையும் நுண்ணறிவும் கல்விப்புலமையும் கலந்த அவரது தங்கு தடையற்ற பேச்சு 'அசரீரி வாக்கு' போன்று எனக்குத் தோன்றியது. அவரது சில கருத்துக்களில் எனக்கு உடன்பாடு இல்லாதிருந்தும் எனது மாறுபட்ட கருத்தை அவரிடம் கூற எனக்குத் துணிவில்லை.

பல சமயங்களில் இந்தியாவைப் பற்றி மேலும் அறிய வேண்டும் என்ற ஆவலினால் ஒரு முறை நானும் அவரும் கப்பலின் மேல்தளத்தில் மணிக்கணக்கில் நடந்து கொண்டே பேசிக் கொண்டிருந்தோம். அவர் இந்தியாவைப் பற்றிக் கூறிய செய்திகள் யாவும் நான் ஏற்கனவே கேட்டறிந்த செய்திகளிலிருந்து முற்றிலும் முரண்பட்டதாய் இருந்தன. அவரிடம் அது பற்றி வினவ வேண்டும் என்று எண்ணினேன். ஆனால் கேட்கக் கூடிய அளவுக்கு துணிவு எனக்கில்லை. நீராவியின் சக்தியால் உந்தப்பட்டது போன்று நடந்து கொண்டும் பேசிக்கொண்டும்

இருந்தார். மற்றவர் கருத்தைக் கேட்க வேண்டும் என்ற எண்ணம் அவரிடம் சிறிதளவும் கிடையாது. எப்பொழுது களைப்புற்று வாயை மூடுவார் என்று ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். மூர், காஸ்ல்ரீயை (Castleragh) ஒரு மேலேற்றும் நீர்க்குழாய்க்கு ஒப்பிட்டு விவரித்திருப்பது அடிக்கடி என் நினைவுக்கு வந்தது. அவரது கருத்து கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

துளை உள்ள மரமொன்று
மேலும் கீழும் பக்கமாகவும் அசிங்கமாக அசைந்து
வாயின் வழியே வெள்ள நீரை
இடைவிடாது கொப்பளித்துக் கொண்டே இருந்தது.

சற்று வேறுபாடான உவமை என்பது உண்மையாயிருப்பினும் அதின் தாக்கம் ஒன்று போலவே இருந்தது. அவரது பேச்சினால் எனது உயிர் அடிக்கடி பிரிந்து விட்டு மீண்டும் வந்தது போல் இருந்தது. தாங்க முடியாமல் கீழ்த்தளத்திற்குச் சென்றேன். அவரது உரையாடலைக் கேட்க, பொறுக்க இரும்பு போன்ற மனத்திடமும் பொறுமையும் துணிவும் வேண்டும். அவ்வளவு ஒருதலைப் பட்சமாக இருக்கும்! மற்றவர்களைப் பேசவே விடமாட்டார். இவ்வளவு பயமும் நடுக்கமும் இருந்தாலும், சில நேரங்களில் எனது எதிர்ப்பை அல்லது மாற்றுக் கருத்தைச் சொல்லத் துணிந்ததுண்டு. எவ்வளவு விழிப்புணர்வுடன் கருத்துக்களை ஒழுங்குப்படுத்தி கூற முற்பட்டாலும் தோல்வியையே தழுவமுடிந்தது என்னால்! அறிவர் ஜாண்சனைப் போன்று 'அப்படி அல்ல ஐயா' என்று சொல்வதற்குப் பதிலாக 'அல்ல' என்று மெல்லிய குரலில் கூறுவது பின்னால் வரவிருக்கும் இடிமுழக்கம் போன்ற குரலுக்கு முன்னோட்டம் போன்று இருக்கும். என்னுடைய கருத்தைத் துண்டு துண்டாக ஆக்கி விடுவார். நான் சொன்னது சரியா அல்லது தவறா என்று அவர் நினைத்துக் கூடப் பார்ப்பதில்லை. எவ்வாறு பூனை எலியைப் பிடித்து, கவ்வி, உலுக்கி துன்பப்படுத்துகிறதோ அவ்வாறு ஏதாவது பழமொழி அல்லது உருவகத்தைக் கூறி எனது கருத்தைக் கடித்து, உலுக்கி, உதறித் தள்ளிக் காலால் மிதித்துவிடுவார். எனவே அவர் சரியான 'சவ்வு' (Bore). அல்ல அல்ல. மிகவும் உயரிய 'சவ்வு' என்றால் அதில் வியப்பு ஒன்றும் இல்லை என எண்ணுகிறேன்.

அதிகம் பேசிப் பழகியவர்களுக்குக் கூட அவருடைய பேச்சைக் கேட்டுக் கொண்டிருப்பதை விடப் பெரிய துன்பம் வேறு

எதுவும் இருக்க முடியாது என்றே எண்ணுவர். அவரோடு உரையாடத் தீர்மானித்து என்னுடைய கருத்தை வலியுறுத்துவதில் உறுதியாக இருந்திருந்தால் அவ்வுரையாடல் நன்றாகவே இருந்திருக்கும் என எண்ணுகிறேன். தான் கற்றதை முன்னிறுத்துவது, கொள்கையில் விடாப்பிடியாக இருந்து சண்டையிடுவது போன்ற அவரது நடத்தைகளுக்குப் பின்னால் மறைந்து கிடந்த எண்ணற்ற நல்லியல்புகளை அந்நாட்களில் நான் அறியாதிருந்தேன்.

அவரது உணர்ச்சிவசப்பட்ட செயல்கள் அவரது பாசமுள்ள இதயத்தை அப்படியே மூடிவிட்டன. சுருங்கக் கூறின், எனது புதிய நண்பர் ஃப்ரெளன் முரண்பாடுகளின் முழு உருவம். எனவே அவரைச் சீண்ட நான் முற்படவில்லை. எனினும் அவ்வப்போது இந்தியாவைப் பற்றி அவர் கூறிய முரண்பட்ட கருத்துக்களைக் கொண்டே அவரை மடக்க வேண்டும் என்ற தீய எண்ணம் எனக்குள் இருந்தது. "பிஞ்சுக் கரங்களினால் முட்செடியைத் தொட்டால் முள் நம்மைக் குத்தும். ஆனால் இரும்புக் கரங்கொண்டு இறுகப் பிடித்தால் அம்முள்ளோ பட்டுப்போலாகி விடும்" என்ற முதுமொழி என் நினைவுக்கு வந்தது.

இந்தியாவைப் பற்றி மட்டுமல்ல ஏறத்தாழ எல்லாவற்றிலும் அவரது நிலை அவ்வாறு தான் இருந்தது. சரியான முறையில் அவரது கருத்துக்களை எதிர்ப்போமானால், அவரது மூர்க்கமும் வேகமும் படிப்படியாகக் குறைந்து அடுத்த முரண்பட்ட கருத்தைச் சொல்ல முற்படுவார். தனது கருத்தை வலியுறுத்த அவர் சற்றும் பொருந்தாத மேற்கோள்களைப் பழம்பெரும் இலக்கியங்களிலிருந்து அள்ளி வீசுவார். விளங்கிக் கொள்ளுவதிலும் சரி, விளங்கிய கருத்துக்களை நினைவில் வைத்துக் கொள்ளுவதிலும் சரி அவரைப் போன்று யாரையும் பார்க்கவும் இல்லை; கேள்விப்படவும் இல்லை. காது கொடுத்துக் கேட்க ஆட்கள் இருந்தால் போதும், கிரேக்க மற்றும் இலத்தீன் கவிஞர்களின் படைப்பினின்று மணிக்கணக்கில் மேற்கோள் காட்டுவார். ஸ்காட்லாந்து நாட்டுக் கவிதைகளைச் சொற்பிறழாமல் கூறுவார். நான் கேட்ட அல்லது கேள்விப்படாத பழங்காலத்துக் கதைப் பாடல்களையோ, கவிதைகளையோ, வரலாற்று நிகழ்ச்சிகளையோ யாரேனும் குறிப்பிட்டால் போதும், உடனே அவை யாவற்றையும் அப்படியே கூறும் திறனாற்றலும், நினைவாற்றலும் படைத்தவர். ஆனால் ஒரே ஒரு குறை உண்டு. படிப்பதிலும் மனனம் பண்ணுவதிலும்

இன்றியமையாத பகுதிகளான முத்துக்களை விட்டு விட்டு தேவையற்ற சிப்பிகளுக்கே முதலிடம் கொடுத்து விடுவார்.

சான்றாக, புகழ்மிக்க கிரேக்க துன்பியல் நாடகங்களையும் வரலாற்று நூல்களையும் விட்டுவிட்டு, அக்காலக் கவிதை, உரைநடை நூல்களின் பெயர்களையும் படைப்பாளிகளின் பெயர்களையும் மனப்பாடமாகச் சொல்லுவார். இலக்கணத்தில் பெரும்பகுதியையும், ப்ளேட்டோ தத்துவத்தைத் தழுவி எழுதப்பட்ட நூல்களையும் படித்திருக்கிறார். அதனேஸியஸ் (Athenasius) வீட்டிற்கு அடுத்த வீட்டில் வாழ்ந்திருக்கிறார். இலத்தீன் மொழியில் லிவி (Livy), டாசிட்டஸ் (Tacitus) ஆகியோரது நூல்களில் சிலவற்றைப் படித்திருக்கிறார். கவிதைகளைச் சொற்பிறழாமல் அப்படியே கூறும் திறன் படைத்தவர். மட்டுமல்லாமல், யூவினல் (Juvenal) பதிப்பித்த அனைத்து நூல்களையும், லூக்ரஷியஸ் (Lucretius) என்பவரது புதிய படைப்பையும் பிரிட்டிஷ் அருங்காட்சியகத்திற்கு அளித்துள்ளார். தவிர சமஸ்கிருத, தெலுங்கு, இலத்தீன் மொழிக் கவிதைகளை மொழியாக்கம் செய்திருக்கிறார்.

அவர் ஆங்கிலத்திலும் மற்ற மொழிகளிலும் குறிப்பிட்ட வகை நூல்களைத் தேர்ந்தெடுத்து படிக்கும் கொள்கை கொண்டவர். வரலாறு சிறிதளவும் தெரியாது. ஆனால் கவிதை, புதினம், மற்றவர்கள் நன்றாக அறியாத தெய்வீகம் ஆகிய துறைகளில் அதிக அளவு அறிவுடையவர். தெய்வீகத்தில் ஆங்கில ஆசிரியர்கள் எழுதிய நூல்களோடு, தல்மூட் (Talmud) நூல்களையும் நன்கு படித்திருக்கிறார். இரண்டாம் நிலை சீர்திருத்தவாதிகளின் நூல்களைப் பற்றி நன்றாகவும் 'ஸ்பானிய இயேசு சபை'யினரின் நூல்களைப் பற்றி மிக நன்றாகவும் அறிந்திருந்தார். சமஸ்கிருதத்தில் இந்து கொள்கைகளுக்கு முரணாக உள்ள 'தந்திரக்கொள்கை'யில் அதிகப் புலமை பெற்றிருந்தார். இக் கொள்கை பற்றிய நூல்களை மொழியாக்கம் செய்து, பொதுமக்கள் இக்கொள்கையை அறியும் பொருட்டு அந்நூல்களை வெளியிட இங்கிலாந்தில் இருக்கும் போது கட்டாயப்படுத்தப்பட்டார். காலங்காலமாய் ஏற்றுக்கொள்ளப்பட்ட இந்துத்துவத்திலும் தொன்மை வாய்ந்த சமஸ்கிருத மொழிப் புலமையிலும் அவரைவிடச் சிறந்தவர்கள் பலர் உண்டு என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும்.

ஆய்வு வன்மையையும் நினைவாற்றலையும் அவர் அதிகமாகப் பெற்றிருந்தார். எனினும், அவரது மதிப்பீடு தரக்குறைவாகவே இருந்தது என்பதை என்னால் சொல்லாமல் இருக்க முடியவில்லை. இலக்கியத்தைப் பொறுத்தவரை பென்ட்லி (Bently) வார்பட்டனைப் பற்றி (Warburton) என்ன கூறினாரோ அது இவருக்கும் பொருந்தும். "அந்த இளைஞனுக்குக் கற்றலில் அதிகப் பசி உண்டு. ஆனால் அவரது செரிக்கும் சக்தியோ மிகக் குறைவு." அவரது கல்வி ஒரு நினைவாற்றற் கடல் போன்றது; தண்ணீரில் மேலும் கீழுமாக ஆடும் சுக்கான் இல்லாத கப்பல் போன்றது; தங்கம், வெள்ளி, விலையேறப் பெற்ற கற்கள், மரம், வைக்கோல் ஆகியவற்றால் கட்டப்பட்ட கல்லறை போன்றது. அதற்கு உள்ளே புதைக்கப்பட்டுள்ளதோ அவரது மதிப்பீட்டுத் திறன்; உயிரற்ற மேற்கோள்கள். அறிவு நிறைந்த பயனற்ற கலைக்களஞ்சியம் மற்றும் பழங்கால நூல் பட்டியல் நிறைந்ததே அவரது கல்வி.

அவர் இந்தியாவைப் பற்றி அளித்த செய்திகள் எல்லாம் தொடக்கத்தில் எனக்கு வேதவாக்கு போன்றே இருந்தன. இப்போது அவர் சரியான வழிகாட்டி அல்லர் என்பதை உணருகிறேன். குறிப்பிட்ட ஒன்றில் அவரது கருத்து சரியானதா அல்லது தவறானதா என்பதை என்னால் அறிய முடியாவிட்டாலும் அவர் கருத்துக்கள் முரண்பாடானவை என்பது நன்றாகத் தெரியும். அந்தந்த நேரத்திற்குத் தகுந்தாற்போல தனது கருத்துக்களைப் பச்சோந்தி போல் மாற்றும் பண்பு அவருக்கு உண்டு. ஆரம்பக் காலத்தில் அவர் சொன்னது எல்லாம் வேதம் என்று எல்லாவற்றையும் அப்படியே ஏற்றுக் கொண்டேன். பின்னாளில் அந்நிலையை மாற்றிக் கொண்டேன்.

ஒவ்வொருவரும் தன்னை மற்றவர்கள் உயர்வாக நினைக்க வேண்டுமென விரும்புகின்றனர். அதை நிறைவேற்ற மூன்று செயல்களைப் பயன்படுத்துகின்றனர்.

அவையாவன: i) நூலறிவைக் கண்ணும் கருத்துமாகக் கடைப்பிடித்தல் ii) சமயக் கொள்கையில் உறுதிபாடு iii) மற்ற அல்லது மற்றவர் கருத்தில் உள்ள ஐயப்பாடு. இவைகளில் மூன்றாவது செயலில் சிறந்து விளங்குபவர் திரு. ப்ரௌன். உறுதியான ஒரு முடிவைப் பெறும் செயல்களிலும் அவர் கருத்து மாறானதாகவே இருக்கும். அவரது நிலை மாறுபட்டு இருப்பதில்

வியப்பு ஒன்றுமில்லை. அது போன்ற நிலையில் திறமை அடைய தானாகவே முயற்சி செய்வதும் உண்டு.

யாரும் எதையாவது கூற முடியாது. அப்படிக் கூறிவிட்டால் அவ்வளவுதான்! அக்கூற்று உண்மையானதாக அல்லது நேர்மையானதாக இருந்தாலும் அதை அவர் ஏற்றுக் கொள்ளவே மாட்டார். தனது எதிர்ப்பைத் தெரிவிக்க முதலில் 'அல்லவே அல்ல' என்று கத்திக் கொண்டு துண்டுத்துணியை நாய் கந்தலாக்கிவிடுவது போல் அக்கூற்றைச் சின்னா பின்னமாக்கிவிடுவார்.

"இக்கருத்தைக் கொண்டுள்ள நூல்கள் ஏதேனும் உண்டா? அல்லவே அல்ல. இயற்கை வரலாற்றில் இது அறிமுகப்படுத்தப் பட்டிருக்கிறதா? இல்லவே இல்லை! சொல் உருவாக்கமாவது, மொழிக் கொள்கையாவது குறிப்பிடப்பட்டுள்ளதா? அல்ல அல்ல. இந்தியக் காலநிலை மிக வெப்பமென்றும் உடல் நலத்திற்கு உகந்ததல்ல என்றும் கூறப்பட்டுள்ளதா? அல்லவே, அல்ல. எந்தப் பழம்பெரும் இலக்கியத்திலாவது ஒரு சொல்லுக்கோ அல்லது பயன்பாட்டிற்கோ பொருள் கொடுக்கப்பட்டிருக்கிறதா? இல்லவே இல்லை. இந்தியாவைப் பற்றிக் கூறப்பட்டுள்ள எந்தக் கருத்தாகிலும் தகுந்த சான்றுடன் கூறப்பட்டவையா? இல்லவே இல்லை." இவ்வாறு தனது மறுப்புக்களைப் அறிவுக்கூர்மையுடனும் சில நேரங்களில் சற்று நயத்துடனும் தெரிவிப்பார். மற்றவர்களால் உறுதியாக நம்பப்படுகிற செய்திகளை. ஒருவர் மட்டும் தனியாக நின்று எதிர்ப்பதால் அல்லது மறுப்பதால், மக்களின் சிந்தனை அவர் பக்கம் திரும்புகிறது. அவரால் அவர்கள் ஈர்க்கப்படுகிறார்கள். அவர் புகழேணியின் உச்சிக்கு சென்றுவிடுகிறார். எனினும் இவர் சமயம் தொடர்பாக எதையும் மறுப்பதுமில்லை; ஐயத்தை எழுப்புவதுமில்லை.

மற்ற செய்திகள் அனைத்திலும் ஐயக் கணைகளை அள்ளிவிடும் இவர் சமயத்துறையில் மட்டும் ஐயத்தை எழுப்பாதது சற்று வியப்பாகவே உள்ளது. அவரது நண்பர்களில் பெரும்பாலானோர் சமயப்பற்று அற்றவர்கள். அவர்கள் வழி எவ்வழியோ அவ்வழியே தன் வழி என்ற எண்ணம் அவருக்குக் கிடையாது. சர் வில்லியம் ஜோன்ஸ் என்ற அறிஞரும் சமயத்தில் உறுதியான நம்பிக்கை இல்லாதவரே. சமஸ்கிருத இலக்கியத்தைக் கற்று வந்த கோல்புருக் (Colbrooke) வில்கின்ஸ் (Wilkins),

வில்ஃபோர்டு (Wilford), வில்சன் (Wilson) போன்ற மேல்நாட்டவரை அந்தணர்கள் என்று கூறின் அது மிகையாகாது. கிறிஸ்தவம் இன்னும் ஒரு நூற்றாண்டுக்குள் அழிந்துவிடும் என்று தான் எண்ணுவதாக வில்க்கின்ஸ் (Wilkins) சிறிது காலத்திற்கு முன்பு திரு. ஃப்ரௌனிடம் கூறினார்.

ஆக்ஸ்போர்டில் சமஸ்கிருதப் பேராசிரியராக இருந்த வில்ஸன் (Wilson) அலுவலராகப் பணியாற்ற இந்தியாவுக்குச் சென்று கொண்டிருந்த ஒருவரிடம், இந்துத்துவத்திற்கு இணக்கமாகத் தனது செல்வாக்கைப் பயன்படுத்துமாறு அறிவுரை பகர்ந்துள்ளார். சமஸ்கிருதத்தில் பெரும்புலமை பெற்றவர் என்று எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட கோல்புரூக் (Colbrooke) எச்சமயத்தையும் சாராதவர். இவரது தீவிர மாணவரும் மற்ற மேற்கத்திய அந்தணரைப் போன்று சமயச் சார்பானவற்றில் தாராளக் கொள்கை உடையவராகவே இருப்பார் என்று மற்றவர்கள் எதிர்பார்த்திருப்பது இயல்பு. ஆனால் இவருக்குக் கிறிஸ்துவத்தைப் பற்றி நல்லெண்ணம் உண்டு. அதில் ஆழ்ந்த நம்பிக்கையும் கொண்டவர். இந்து சமயத்தைப் பற்றிச் சற்றுத் தாழ்வான எண்ணமும் வெறுப்பும் கொண்டவர். இது சற்று வியப்பாகவே இருக்கிறது. மட்டுமன்று. புக்கனன் (Buchanan), மார்ட்டின் (Martyn), தாம்ஸன் (Thomson) மற்றும் செரம்பூர் (Serampore) முதலிய நற்செய்திப் பணியாளர்களிடம் அவர் வைத்திருந்த நட்பு ஆழமானது.

இவ்வாறு, மிகவும் வியப்பான ஒரு மனிதரைப் பற்றி விளக்கிக் கூற முயற்சித்திருக்கிறேன். கிட்டத்தட்ட பாதிப்பகுதியைப் பற்றிச் சொல்லாமல் விட்டிருக்கிறேன். அது தவிர்க்க முடியாதது. அவரிடம் தீய குணம் மிகுந்திருந்தால் நான் அவரைப் பற்றி ஒன்றும் குறிப்பிட்டிருக்க மாட்டேன். மாறாக அவரிடம் மிகுதியாகக் காணப்பட்டவை அசைக்கமுடியாத நற்பண்பு, மற்றவர்களுக்கு உதவும் எண்ணம், மாயமற்ற நட்பு. நிறைகள் அதிகம்; குறைவுகள் குறைவு. நிறைகள் நடத்தை சார்ந்தவை; பண்பு சார்ந்தவை. குறைகள் அறிவு சார்ந்தவை. அவரைப் பற்றிய புகழாரம் அவர் மீது நமக்குள்ள மதிப்பை உய்விக்கும்; வியப்பு கொள்ளச் செய்யும். அவரைப் பற்றி மட்டுமல்ல, பயனற்ற செயல்களைப் பற்றி எழுதி இப்படி நேரத்தை வீணடித்த என்னை பற்றியும் வியப்பீர்கள். என்னைச் சுற்றி சிறப்பான சிந்தனையைத் தூண்டும், எழுச்சியூட்டும் நிகழ்வுகள்

இல்லாததே அதற்குக் காரணமாகும். நாட்கள் செல்ல செல்லப் புதியன ஒன்றும் நிகழவில்லை. பயணம் சோர்வாகவே இருந்தது. பயனற்ற பேச்சு தவிர்க்க முடியாதது. சிறிது பயனற்ற பேச்சு சில நேரங்களில் சற்று பயனுள்ளதாக மாறிவிடும். பயணிகளின் எண்ணிக்கை குறைவாக இருந்ததால் அவர்களில் யாராவது ஒருவரின் குறைகளை, வியப்பதற்குரிய தன்மைகளைப் பற்றிப் பேசாமல் இருக்க முடியாது.

திரு. ப்ரெளன் அவர்களைப் புண்படுத்தும் எண்ணத்துடன் நான் அவரைப் பற்றிக் குறிப்பிடவில்லை. அவரைப் பற்றி எழுத வேறு எதுவும் என்னைத் தடை செய்யாவிடினும் அவரது பரிவும், என் மீது அவர் காட்டின அக்கறையும் அவரைப் புண்படுத்த எப்படி அனுமதிக்கும்?

அக்காலத்தில் ‘சூயஸ்கால்வாய்’ வெட்டப்படவில்லை. எனவே இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு ஆப்பிரிக்காவின் தென்கோடியில் உள்ள ‘நன்னம்பிக்கை முனை’யைச் சுற்றித்தான் செல்லவேண்டும். பேராயரின் செய்திக் குறிப்புகளில் இருந்து எழுச்சியூட்டக் கூடிய சில செய்திகளை இங்குப் படிப்பவர்களுக்கும் வழங்கலாமென ஆசைப்படுகிறேன். வருங்காலப் பேராயரின் மனநிலையையும் அவரது உற்றுநோக்கு மற்றும் விவரிக்கும் திறன் பற்றியும் அறிய அவை உதவும் என எண்ணுகிறேன்.

‘சென்னை’யை வந்தடையுமுன் இரு செய்திகளைப் பற்றி நான் ஓரளவு அறிவேன். ஒன்று, ‘உருவ வழிபாட்டின் ஏற்றமும் முன்னேற்றமும்.’ அது பற்றி அறிய பிற நூல்கள் தவிர காட்வர்தத் (Cadworthi) எழுதிய நூலையும் படித்து வருகிறேன். ‘கிறிஸ்துவத்திற்குச் சான்றுகள்’ என்பது மன்றொன்று. இது சார்பாக ப்ளீமத்தில் (Plymouth) இருந்த போது வாங்கின பல பழைய நூல்கள் பயனுள்ளனவாய் இருக்கின்றன. விரைவில் ஒரு அருட்பணியாளராகவிருக்கும் ஒருவருக்கு இவை இரண்டுமே தேவை. கிறிஸ்துவத்தைப் பற்றி மனநிறைவு அடையும் அளவுக்கு ஏற்கனவே படித்தும் சிந்தித்தும் இருந்தாலும், எந்த இடத்திலும், எந்த நேரத்திலும் பேச அழைக்கப்பட்டால் மனநிறைவு அதிகரிக்க வேண்டுமாயின் இன்னும் அதிகமாக அலசி, ஆராய்ந்து கற்க வேண்டும். இத்துறையில் புலமை இருந்தால் எப்பொழுதும் நற்பயனைத் தரும்.

இதுவரை மற்றவர்களிடமிருந்து எனக்குக் கிடைத்த செய்திகள் தற்சமயம் ஓரளவு பயனுள்ளதாக இருக்கின்றன. என் உடன் பயணம் செய்யும் லெப்ட் பார்காய்ன் (Bargoyne) என்பவரிடம் கிறிஸ்துவ ஆதாரங்கள், தத்துவங்கள் பற்றி பலமுறை கருத்துக் கலந்துரையாடல் செய்திருக்கிறேன். இத்தகைய கருத்துக் கலந்துரையாடல்கள் வரும் நாட்களிலும் தொடரும் என எதிர்பார்க்கிறேன். காணப்படும் சான்றுகளில் மிக அதிகமாக பாராட்டப்பட்ட தீர்க்கதரிசனங்களைப் பற்றி அவர் மிகுந்த அக்கறையுடன் படித்து வருகிறார். தினமும் சில வினாக்கள் கேட்பார் அல்லது அரிய பகுதிகளைப் பற்றி விளக்கும்படி கேட்பார். சத்தியத்தை அறிய மிகவும் உண்மையுடன் முயற்சி செய்யும் மனிதர் அவர். அவருக்கு உதவி புரிய இறைவன் என்னை நன்கு பயன்படுத்துவாராக.

படிப்போடு நிறுத்திக் கொள்ளாமல், நெருங்கிய நண்பர்களுக்கு அடிக்கடி மடல்கள் எழுதுவதுண்டு. அருளுரைக்கானக் குறிப்பு எடுக்கவும், அதை நெறிப்படுத்தவும் வாரம் இருநாட்கள் செலவிட எண்ணியிருக்கிறேன். வானிலை அடிக்கடி மாறுவதாலும், அதன் விளைவாக, பாய்மரங்களை அவ்வப்போது திசைமாற்றவோ, கூட்டவோ அல்லது குறைக்கவோ வேண்டியதிருக்கிறது. எனவே கப்பல் பணியாளர்களுக்கு என்னால் நற்செய்தி அறிவிக்க முடியவில்லை.

இன்னும் பத்து நாட்களில் வணிகக் காற்று வீசும் பகுதிக்கு வந்து விடுவோம். கடல் அமைதியாய் இருக்கும். அடிக்கடி பாய்மரங்களை மாற்றவேண்டிய அச்சமயம் அவர்களுக்கு கற்பிக்கலாம் என நம்புகிறேன். அவர்களுக்கான செய்திகள் சிறப்பான முறையில் சேகரிக்கப்பட வேண்டும். செய்தி **15** நிமிடங்களுக்கு மிகாமல் கருத்துத் தெளிவாகவும் எளிய நடையிலும் தகுந்தவாறு விளக்கங்களுடன் இருந்தால் மட்டுமே அவர்கள் நற்செய்தியை உற்றுநோக்குவர்; எளிதில் புரிந்து கொள்வர். எனவே நான் மிகவும் தரமானக் குறிப்பு எடுக்க வேண்டும்.

பணியாளர்களுக்கு வசதியில்லாத ரேநத்தில் பயணிகளும் அலுவலர்களும் 'கடி' (Cuddy) என்ற இடத்தில் கூடி வழிபடுவர். ப்ளீமத்தை விட்டுக் கிளம்பிய பிறகு இரு முறைகள் இறைவழிபாட்டை நான் நடத்தியிருக்கிறேன். காலை **10:30** மணிக்கு இறைமுறையீடும் சிறு செய்தியும் உண்டு. மாலை **7:30**

மணிக்குப் பயணிகளும் அலுவலர்களும் கூடியிருக்கும் போது முற்பகுதியில் வேண்டுதலும் பின் என் செய்தியும் இடம் பெறும். செய்தியைக் கேட்போர் சிறு குழுவாக இருப்பதாலும், எல்லோரும் நன்கு அறிமுகமானவர்களாக இருப்பதாலும் செய்தியளிப்பது சிக்கலானதாக இருக்கும். அங்குமிங்குமாக முகத்தைத் திருப்பி அவர்களை நேருக்கு நேர் பார்த்துப் பேசுவது போல சமாளித்துக் கொள்வேன். காலையில் இங்கிலாந்து திருச்சபை வழிபாட்டு முறைமை பயன்படுத்தப்படுகிறது. எனினும் அவர்களின் தேவையைக் கருத்தில் கொண்டு வழிபாட்டு முறையைச் சற்று மாற்றிக் கொள்ளுவேன்.

பொதுவாக, சமயத்தில் உள்ள அடிப்படைக் கொள்கைகளை அறியாதோருக்கு, முன்பே ஒழுங்குடன் உருவாக்கப்படாத முறையீடுகள் ஏற்றதல்ல. நுட்பக்கருத்துக்கள் அடங்கிய ஒழுங்கற்ற, நீண்ட முறையீடுகளைச் சரியான பயிற்சி பெறாதவர்களும் மனமுதிர்ச்சி இல்லாதவர்களும் புரிந்து கொள்ள முடியாது. மிகவும் எளிமையான மொழியில் உருவாக்கப்பட்டு கொடுக்கப்படும் அருளுரைகளைக் கப்பல் தலைவனே புரிந்து கொள்ள முடியாத நிலையில், அவரை விட அறிவிற்குறைந்த பணியாளர்கள் எப்படிப் புரிந்து கொள்ள முடியும்? நெடுநாள் பயிற்சியினாலும் பழக்கத்தினாலும் பலர், 'லித்தானியா' வேண்டுதலில் முழு அறிவுடனும் ஈடுபாட்டுடனும் பங்கு கொள்கின்றனர். ஒருவருக்கு அவை எல்லாம் மனப்பாடமாகத் தெரியும். 'லித்தானியா'வைத் தவிர்க்கலாம் என்பதே ஓர் இங்கிலாந்து நாட்டவரின் அறிவுரை. 'லித்தானியா' ஜெனிவா சீர்திருத்தவாதிகளாலேயே அறிமுகப்படுத்தப்பட்டது. பழைய கிறிஸ்தவச் சபைகளில் அது பயன்படுத்தப் படவில்லை. சூழ்நிலைக்கேற்பத் தேவை ஏற்படின் அதைப் பயன்படுத்துவதே நன்று.

எப்போதாவது ஓரிரு நேரங்களில் பொதுவழிபாடு நடத்த நான் உரிமை கொண்டாடினும், எப்பொழுதும் அவ்வாறு செய்ய வேண்டும் என நான் நினைக்கவில்லை. அப்படி நினைப்பதும் சரியல்ல என்று நினைக்கிறேன். பசிபிக் பெருங்கடல் நற்செய்திப் பணியில் செய்யப்படுவது போன்று இங்கும் செய்ய வேண்டியதில்லை. நம் நாட்டில் (இங்கிலாந்தில்) பழங்காலத்திய சில முறைமைகளுக்கு எதிராக நடத்தப்படும் தனியாள் நுண்விசாரணைகள் பொறுத்துக் கொள்ளப் படுகின்றன. ஆனால்

புதுமைகள் தூயவை. அவற்றைத் தொடக்கூடாது. தொட்டால் சிக்கல்கள் உண்டாகும். அவைகளில் துன்பம் தரக்கூடிய சில கொள்கைகளை தீவிரமாக எதிர்க்கின்றனர். துன்பத்தையே விளைவிக்கும் அந்த கொள்கைகள் நியாயமானவை என்று கருதப்படுவதை விட தெய்வ நோக்கம் என்றே கருதப்படுகிறது. இவ்விரு குழுக்களையும் ஒப்புரவு செய்யும் முயற்சியில் எவரும் ஈடுபடுவாராயின் அவர் அந்த இரு குழுக்களின் கோபத்திற்குள்ளாவது உறுதி. தீவிரமான இவ்விரு குழுவினரின் குழுவெறி அடங்கும் வரை சட்டத்திற்குட்பட்ட பல செயல்களும் தேவையற்றன என்று கருதப்படுகிறது.

இப்போது நான் இங்கிலாந்தை விட்டு வெளியேறிவிட்டேன். ஒருவேளை அது நிரந்தரமாக இருப்பின் எனது நாட்டை மீண்டும் காணமுடியாத ஒரு சூழ்நிலை உருவாகலாம். எப்பிஸ்கோப்பலியன், பிரஸ்பிட்டேரியன் அல்லது இன்டிப்பென்டென்ஸி (Episcopalianism, Presbyterianism or Independency) ஆகிய சமய இயக்கங்களுக்கு அப்பாற்பட்ட ஓர் உறுப்பினர் என்ற முறையிலும், அருள் வழங்கும் இறைவனின் பெருமையான நற்செய்தியைப் பரப்புவதே அவ்வியக்கத்தின் நோக்கம் என்ற முறையிலும், மேலே குறிப்பிட்டவற்றில் இனி நான் எந்தக் குழுக்கும் அடிமை அல்லன் என்ற முறையிலும் மிக்க மகிழ்ச்சியடைகிறேன். அக்குழுக்கள் அவர்களுக்குள்ளே மோதட்டும். நான் இப்போது நடுநிலை வகிக்கின்றேன். என்னுடைய கொள்கைகளும் மதிப்பீட்டுத் திறனும் இப்போது இருப்பதை விட மேம்படும் வரை இந்நடுநிலையை விட்டுவிட மனதில்லை. சிறிதளவு வழி மாறியதற்காக மன்னிக்கவும்.

பயணிகளில் உறுதியான சமயப்பற்று உள்ளவர் எவரும் இலர். அதே சமயம் இறைவனுக்கு எதிரான கொள்கை உடையவரும் எவரும் இலர். இதனை எனது முந்தைய மடலில் கூறியிருக்கிறேன் என்று எண்ணுகிறேன். இந்த எனது எண்ணம் உறுதிப்படுத்தப்பட்டதை நினைத்து மகிழ்வடைகிறேன். எவ்வகை விதிவிலக்குமின்றி, எல்லோருமே சமயத்தைப் பற்றி நல்லெண்ணம் கொண்டவராகவும் நன்கு புரிந்து கொள்பவராகவும் இருக்கின்றனர். சில நேரங்களில் முதன்மையற்ற தொழில்களைப் பற்றிப் பேசுவார்கள். ஓய்வு நாளுக்கும் மற்ற நாட்களுக்குமுள்ள வேறுபாட்டைப் பொருட்படுத்துவதில்லை. அவர்களைக் கிறிஸ்துவர்களாகவே எண்ணுகிறேன். ஆனால் ஏற்கனவே

மார்ட்டின் (Martyn), பக்கனன் (Buchanan) ஆகிய இருவரும் அடிக்கடி குறிப்பிடுகிற ப்ரௌனுடைய மகனைப் பற்றி என்ன சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை. ஒருபக்கம் கேளிக்கை நிகழ்ச்சிகள், சமையல், விளையாட்டு ஆகியவை பற்றி மிகவும் நகைச்சுவையுடனும் ஆழ்ந்த ஈடுபாடுடனும் விவரிப்பதில் வல்லவர்; மறுபக்கம், அவரது இறையியல் அறிவும் இந்தியாவில் கிறிஸ்தவம் பரவ களைய வேண்டிய தடைகள் பற்றிய குறிப்பும் இறைமையில் வளர அவர் அளிக்கும் நேர்மையான கருத்துக்களும் என்னை வியப்புக்குள்ளாக்கின. அவர் மாறுபட்ட கருத்துக்கள் கொண்ட வியப்பான பண்புள்ளவர். அவரது கருத்துக்களை ஆராயவும் பலன்தரும் முறையில் அவற்றைப் பயன்படுத்தவும் முற்பட்டிருக்கிறேன்.

ஆழ்ந்த கல்வி. ஆனால் நூற்கல்விக்கு முதன்மை கொடுத்தல். அறிவுக் கூர்மை. ஆனால் சிந்தனையின்மை. கனிவான இதயம். ஆனால் கொள்கைப் பிடிவாதம் (Snappish dogmatism). உலக அறிவு. ஆனால் எதையும் எளிதில் நம்பும் தன்மை. வினாக்களுக்கு ஒரு வாக்கியத்தில் விடை அளிக்கும் அறிவு கூர்மை. ஆனால் மூன்று வாக்கியங்களைக் கருத்துக் கோர்வையுடன் இணைக்க முடியாமை; நிகழ்ச்சி வாரியாக ஒழுங்குபடுத்த முடியாமை.

இப்படிப்பட்ட செயல்களில் அவருக்கு நிகர் அவரே. இந்திய மக்களின் பழக்க வழக்கங்கள், பண்பு இலக்கியம் மற்றும் சமயம் பற்றி அவர் என்னிடம் கூறிய செய்திகளை ஒரு நூலாக எழுதலாம். அவர் கூறியவை அனைத்தும் புதியன. நூலில் எழுதத் தகுதியானவை. எனினும் நான் இந்தியா சென்றடைந்து இச்செய்திகள் எல்லாம் உண்மையானவைதானா எனக் கண்டு அறியும் வரை பொறுத்துக் கொள்ளலாம் என எண்ணுகிறேன். அவை என் மனத்தில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன. அறிவர் டஃப்பினது (Dr. Duff) திட்டத்தை அப்படியே அல்லது சிறிய மாறுதலுடன் ஏற்றுக்கொள்ளுவதே சிறந்தது எனத் தோன்றுகிறது.

நான் குறிப்பிட்டுள்ள செய்திகளிலிருந்து ஒன்றை நீங்கள் அறியலாம். நானும் அறிவேன். அது யாதெனில் நண்பர்கள் இல்லாவிடினும் பழக்கப்பட்டவர்கள் பலர் உண்டு. அப்படிப்பட்ட சூழ்நிலைகளில் பயணம் பயனுள்ள வகையில் அமைய இரண்டு செயல்கள் செய்வது மிகவும் தேவை. ஒன்று: மற்றவர்களின்

பண்பை ஆழ்ந்து அறிந்து கொள்ளுவது. இரண்டு: மற்றவர்கள் சொல்லுவதைப் பொறுமையாகக் கேட்பது.

## அக்டோபர் 4.

நேற்று மாலையில் காற்று பயணத்திற்கு ஏற்றதாக இருந்தது என்ற செய்தியைத் தவிர, நான் பயணக் குறிப்பை எழுதத் தொடங்கியதிலிருந்து குறிப்பிடத்தகுந்த அளவுக்கு ஒன்றும் நிகழவில்லை. காற்று முன்பு கொடுத்த தொல்லைக்குப் பதிலாக வேகமாகவும் ஒரே சீராகவும் முன்னாகத் தள்ளியது. இந்த நிலை தொடர்ந்தால் விரைவில் 'மதேய்ரா' (Madeira) என்ற இடத்தைக் கடந்து செல்லலாம் என்று எதிர்பார்க்கிறோம். இது நடக்குமானால் நம் நாடு (இங்கிலாந்து) நோக்கிச் செல்லும் கப்பற் பயணிகளிடமிருந்து பெறுகின்ற செய்திகளைப் பகிர்ந்து கொள்ள முயற்சிக்கலாம். இப்பொழுது வீசுகின்றபடி காற்று வீசினால் நாளை அதிகாலை மதேய்ரா சென்றடைவோம். இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி எல்லோரும் சீக்கிரமாக எழுந்திருக்க வேண்டுமென்று முடிவு செய்திருக்கிறோம். என்னைப் பொறுத்தமட்டில் கப்பலின் அசைவினால் என்னால் தூங்கவே முடியவில்லை. நேற்று இரவு சுமார் ஒரு மணிநேரம்தான் என்னால் தூங்க முடிந்தது. எனினும் அலையற்ற அமைதியான தண்ணீரில் இருப்பதுபோல் பாதுகாப்பாக இருக்கிறோம்.

வேறு குறிப்பிடத்தக்க சிறப்பான நிகழ்ச்சி எதுவும் இல்லாததால் நேற்று நடந்த ஒரு நிகழ்ச்சியைப் பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். எல்லோரும் தூங்கிக் கொண்டிருந்தனர். கப்பலில் உள்ள பாய்மரங்கள் மட்டும் அசைவாடிக் கொண்டிருந்தன. சிறுபிள்ளைகளுக்குரிய குறும்புத்தனம் என்னில் எதிர்பாராது தோன்றத் தொடங்கியது. கப்பலில் தலையாய கழியின் உச்சிக்கு ஏறிப் பார்க்க நான் ஆசைப்பட்டேன்; மெதுவாகவும் விழிப்புணர்வுடனும் ஏறத் தொடங்கினேன்; அவ்வப்போது கீழேயும் பார்த்துக் கொண்டேன். கிட்டத்தட்ட நான் ஆசைப்பட்ட இடத்திற்குச் சென்று விட்டேன். சுற்றிப் பார்த்துக் கொண்டிருக்கும்போது எதிர்பாராது இரண்டு பேர் என்மீது பாய்ந்தனர். என்ன செய்வதென்று எனக்குப் புரியவில்லை. என்னை இறுகக் கட்டினர். அவர்களிடம் பேசிப்பார்ப்பதில் பயனில்லை என்று தெரியும். ஒரு ரூபாய் கொடுத்து விடுதலை பெற்றேன்.

## அக்டோபர். 6:

எதிர்பார்த்தபடி நேற்று காலை 'மதேய்ரா' (Madeira) என்ற நகரத்தைப் பார்த்தோம். ஆனால் இரவில் அது எங்கு இருக்கிறது என்பதைக் காண முடியவில்லை. அடுத்த நாள் அதிகாலை நான் கப்பலின் மேல்தளத்திற்கு வந்த போது கப்பல் 'போர்ட்டோ–சான்ற்றோ' (Porto Santo) என்ற இடத்தை நெருங்கிக் கொண்டிருந்தது என்பதை அறிந்தேன். அங்கிருந்து 'மதேய்ரா' சுமார் 24 மைல் தொலைவில் அடிவானத்தில் உள்ள சிறுமேகம் போன்று தோன்றியது. கடற்கரைக்குப் போக வேண்டியது இல்லாதிருந்தாலும் கடற்கரைக்கு அருகில் இருக்கிறோம் என்று மகிழ்ச்சி அடைந்தேன். செய்திகளைப் பெறவும் தெரிவிக்கவும் ஏதேனும் ஆங்கிலக் கப்பல் வராதா என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். பின்பு கீழே சென்று செய்திக் குறிப்புகளை ஒரு தாள் முழுவதும் எழுதினேன்.

அது முடிந்ததும், இயற்கைக் காட்சிகளை முழு ஆர்வத்துடன் காணும் வாய்ப்புக் கிடைத்தது. என்னே அழகு! இவ்வளவு அழகான காட்சியைக் கண்டதே கிடையாது. இங்குள்ள நீரின் ஆழம், கூம்பு போன்ற சிகரங்கள், பாறைகளின் அடுக்குமுறை அமைப்பு ஆகியவற்றைக் கொண்டு இப்பகுதியில் உள்ள தீவுகள் எரிமலைகளின் விளைவாக உண்டானவை என்பதை அறியலாம்.

இப்பொழுது எரிமலை வெடிப்புகள் நின்றுவிட்டன எனத் தெரிகிறது. 'போர்ட்டோ–சான்ற்றோ' (Porto Santo) 'டெஸ்ட்ரடஸ்' (Destratas) ஆகிய இரு இடங்களும் மரஞ் செடி கொடியற்ற பாறைகளால் ஆனவை. 'போர்ட்டோ–சான்ற்றோ' வில் கன்னியாஸ்திரிகளும் குற்றவாளிகளும் குடியிருக்கின்றனர். ஆனால் 'டெஸ்ட்ரடஸி'ல் யாரும் குடியேறவில்லை. ஏனெனில் அதை அடைய வழியே கிடையாது. இருப்பினும், அந்த இடங்கள் குறிப்பாகப் 'போர்ட்டோ–சான்ற்றோ' வியக்கத்தக்க அழகாக இருக்கின்றது.

சிங்கங்களின் அழகு, தாழ்வாக இறங்கும் மேடுகளின் வளைவுகள், அதற்கப்பால் உள்ள நெடிய தரை நிலங்கள் பல்வேறு உருவத்தில் உள்ள உயரமான அடுக்குப்பாறைகள், பாறையில் அடித்துச் சிதறும் 'அட்லாண்டிக் பெருங்கடலி' ன் அலைகள்... ஆகா! என்னே அழகு!! மணிக்கு 8 கடல் மைல் வேகத்தில்

சென்ற நாங்கள் 'மதேய்ரா'வை (Madeira) நெருங்கினோம். தூரத்தில் இருந்து பார்க்கும் போது அது மற்ற தீவுக் கூட்டங்களைப் போன்று கரடு முரடாகவும் மரஞ்செடி கொடிகள் இன்றியும் காணப்பட்டது. அதைக் கடக்கும் போது வீதியான தரைநிலம் எதுவும் தென்படவில்லை. பல இடங்களில் பிளவு பட்டதும், பள்ளத்தாக்குகள் நிறைந்ததுமான ஓர் உயரமான மலை போன்றே தோன்றியது. சுற்றிலும் எரிமலைப்பாறைகளின் அடுக்குகள் காணப்பட்டன.

கோடைக்காலத்தின் தாக்கத்தினால் நிகரற்ற தோற்றம்! நிகரற்ற அழகு!! இங்கே ஒரு 'டைட்டானியன் கோட்டை' (Titanian) அங்கே நீரிலிருந்து எழும்புகின்ற ஒரு 'காத்திக்' (Gothic) பேராலயம்! பல நூறு அடிகள் உயரமுள்ள அதின் கோபுரம்! அழகிய வளைவு! அதன் வழியே பக்தர்களுக்குப் பதிலாக பாயந்து செல்லும் அட்லாண்டிக் பெருங்கடலின் அலைகள்! மற்றொரு பக்கத்தில், பாறையின் மேல் ஜெபமாலையில் உள்ள மணிகளை எண்ணிக் கொண்டிருப்பது போல் காணப்படும் ஐம்பது அடி உயரமான ஒரு முனிவரின் சிலை!. சுருங்கக் கூறின், புதிதாக வருபவரின் கண்ணுக்கும் கற்பனைக்கும் விருந்து. அதற்குப் பின்னால் செங்குத்தாகவும் சரிவாகவும் உள்ள மலைகளும் குன்றுகளும் நிறைந்து பொலிவுடன் காட்சியளிக்கும் 'மதேய்ரா' தீவு!.

மெதுவாக அத்தீவின் அருகே சென்றோம். பாறைகளைக் கடந்து சென்றபோது எங்கள் சிறிய கண்களுக்கு அரிய விருந்து கிடைத்தது போல உணர்வு ஏற்பட்டது. கடற்கரையின் தூரம் கால் மைலுக்குள் இருந்தமையாலும் வானம் மிகத் தூய்மையாக இருந்தமையாலும் வீடுகளையும் மரங்களையும் திராட்சைத் தோட்டங்களையும் மிகத் தெளிவாகப் பார்க்க முடிந்தது. இயற்கை அமைப்பைப் பொறுத்தவரை அது நம் நாட்டு மேட்டு நிலங்களைப் போலன்று. இங்கு இதயத்தைக் கொள்ளை கொள்ளும் எழில்மிகு காட்சிகளும் பயிர் நிலங்களும் வளமான வண்ண வண்ணத் தோற்றங்களும் ஏராளமாக உள்ளன. என்னுடைய எதிர்பார்ப்புக்கும் மேலான இவ்வளவு அழகிய காட்சிகள் நிறைந்த இடத்தை இதுவரை நான் பார்த்தது கிடையாது. பார்க்கப் பார்க்கப் பரவசம்! அதைக் கடந்து செல்லும் போது ஒரு உண்மையான இடத்தைக் கடக்கிறோம் என்று எண்ணாமல் ஒரு கனவு உலகத்தைக் கடந்து செல்லுகிறோம் என்ற உணர்வே ஏற்பட்டது. அடிக்கடி அங்குச் செல்பவரும் கவிஞர்களுமே அதின் சிறப்பை உணரவும்

விவரிக்கவும் முடியும். ஏனைய மனிதர்களுக்கு அது கூடாதத ஒன்று. முழுத்தீவும் ஒரு பூந்தோட்டம் போல இருக்கிறது. மக்கிய எரிமலைக் குழம்பினாலான மணற் பகுதியானதால் பூஞ்செடிகளும் பழ மரங்களும் செழித்து வளர்கின்றன. மலையில் சுமார் 1500 முதல் 2000 அடி உயரம் உள்ள பகுதிகள் திராட்சை, ஆரஞ்சு தோட்டங்களாய் நிறைந்துள்ளன. அதற்கும் மேலே 'கல்டேய்ரா (Caldeira) எரிமலைவாய்' என்ற இடத்திற்கு நேராக உள்ள குறுகிய கரையின் மேட்டுப் பகுதியில் 'ஸ்பெய்ன்' நாட்டுவகை 'செஸ்நட்' மற்றும் காட்டு மரங்கள் உள்ளன.

ஸ்காட்லாந்தில் அவ்வளவு உயரமான மலைப் பகுதிகளில் 'ஃப்பர்ன்' மற்றும் புதர் செடிகள் கூட வளராது. கரும்பச்சை நிறமான புல்வெளிகளில் உள்ள வெள்ளை நிற வீடுகள் மனத்தைக் கவர்ந்து இழுக்கின்றன. 'மதேய்ரா' என்ற சொல்லுக்குக் 'காடுகள் நிறைந்த' என்று பொருளாம். ஈடு இணையற்ற செழுமையினால் அப்பெயர் வந்திருக்கும். அது 'அட்லாண்டிக் பெருங்கடலி'ல் காணப்படும் மகிழ்ச்சித் தீவுகளில் ஒன்றாக இருக்கக் கூடும். அழகிய கடற்கரை! மிகவும் ஆழமான விரிகுடா! பல திக்குகளிலும் இருந்து அதை முத்தஞ் செய்யும் ஆழமான மலை இடுக்குகள்! காற்றுகளின் கொடூரத்திலிருந்து பாதுகாக்கப்பட்ட அடர்ந்த மரங்கள்! என்னே இக் கண்கொள்ளாக் காட்சி! எங்கள் கண்களுக்குத் தென்படுகிறது ஒரு கிராமம்! ஒரு தேவாயலம் எங்களை உற்றுப் பார்க்கின்றது! ஓரிடத்தில் தரை கடலை ஊடுருவிச் செல்லுகிறது! அதின் கரடுமுரடான விளிம்புகளில் ஆறிய எரிமலைப் பிழம்புகளின் அடுக்குகள் தெளிவாகத் தெரிகின்றன. விரிகுடாவும் ஃபன்ச்சல் (Funchal) என்ற நகரமும் எங்கள் எதிரே தெரிகின்றன. விரிகுடா பெரியது; ஆனால் ஆழமற்றது; பின்பகுதி ஏற்றமானது. கடலை ஊடுருவிச் செல்லும் நிலப்பகுதியில் உள்ள செங்குத்தான பெரும்பாறைகளே அதன் எல்லைகள். அவையே அக்குடாவிற்கான பெயர்க்காரணமாகும். ஒரு குறிப்பிட்ட பகுதியிலிருந்து காற்று வீசினாலொழிய அப்பகுதியில் நங்கூரமிடுவது பாதுகாப்பானதல்ல.

இதுவே அப்பகுதியின் சிறப்பான நகரம். கடலின் விளிம்பிலிருந்து குன்று வரை கிட்டத்தட்ட ½ மைல் தூரத்திற்கு மெதுவாக உயர்ந்து கொண்டே போகிறது. அதன் சரியான மக்கள் தொகை தெரியாது. சுமார் 30,000 இருக்கலாம். வீடுகளின் தோற்றம் பார்ப்பதற்கு நன்றாக இல்லை. ஒழுங்கற்ற முறையிலே

அவை கட்டப்பட்டிருந்தன. தெருக்களும் குறுகியவை. ஒழுங்கற்ற நிலையில் அமைக்கப்பட்டவை. கோட்டை ஓரளவு பெரிதாக இருந்தாலும் எதிர்பாராது விழுந்துவிடும் நிலையிலேயே இருந்தது. கலை இயற்கைக்கு இணையற்றதுதான். எனினும் இயற்கையின் அழகுக்கு அழகு சேர்ப்பது கலையே என்றால் அது மிகையாகாது. அந்நகரில் உள்ள வீடுகளின் வெள்ளை வண்ணச் சுவர்களும் கலைவேலைகள் நிறைந்த மாடிகளும் பச்சை நிறக் கதவுகளும் சிவப்பு வண்ணக் கூரைகளும் விண்ணுலகம் போன்ற இயற்கை அமைப்பை இன்னும் மெருகேற்றிய அழகிய விண்ணுலகம் போல மாற்றுகின்றன.

இந்த அழகிய காட்சியின் சிறப்புத் தன்மையாக விளங்குவது 'மோசா சென்ஹோரா தோ மான்ட்டி' (Mossa Senhora do Monte) என்ற கோவிலே. பசுமை நிறைந்த மரங்களுக்கு மேலே பொலிவுடன் தோன்றும் இக்கோவிலை ஒரு 'கன்னியர்மடம்' (Convent) என்றே நாங்கள் நினைத்தோம். மதேய்ராவைப் பற்றி கேப்டன் பேஸில் ஹால் (Basil Hall) எழுதிய குறிப்பின் வாயிலாகவே அது ஒரு கோவில் என்பதை அறிந்தோம். கலைத்திறனில் நாட்டம் கொண்ட உரோமன் கத்தோலிக்கர்கள் பாராட்டுக்குரியவர்கள். அவர்களுடைய கோவில்களும் கான்வென்ட் மற்றும் கட்டிடங்களும் அவைகளைக் கட்ட அவர்கள் தெரிந்தெடுத்துள்ள இடங்களும் அவர்களின் கலை உணர்வுக்குச் சாட்சிகளாக விளங்குகின்றன. இறைவனைத் தொழுது கொள்ள இயற்கையான மிகவும் அழகுவாய்ந்த இடங்களையே தேர்ந்தெடுத்துள்ளனர்.

'பஞ்சலி'ல் (Funchal) போர்த்துக்கீசியக் கப்பல்களை மட்டுமே காண முடிந்தது. நாங்கள் போய்ச்சேரும் வேளையில் 'ஆஸ்திரேலியா' வுக்குச் சென்று கொண்டிருந்த ஓர் இங்கிலாந்துக் கப்பல் அங்கு வந்தது. அதன் பின்புற மேல்தளத்தின் அலுவலகத்தில் பணிபுரிவோர் பலர் நின்று கொண்டிருந்தனர் அவர்கள் அறிவர் லாங்கின் இறைப்பணியாளர்களும் பள்ளி ஆசிரியர்களுமாய் இருக்கலாம் என்பது எனது எண்ணம். ஒயின் (Wine) வாங்குவதற்காக அங்குச் சில நாட்கள் தங்குவது போல் தோன்றியது. இங்கிலாந்து நாட்டுக் கப்பலாயிருந்தும் செய்தி பெற, தெரிவிக்க எவ்வகை உதவியும் எங்களுக்குச் செய்யவில்லை. ஆளுநர் ஏற்பளிக்காததால் ஒரு படகு கூட எங்களுக்கு அனுப்பப்படவில்லை.

எனவே நாங்கள் எங்கள் பயணத்தைத் தொடர்ந்தோம். நான் எழுதிய மடலால் பயனேதும் இல்லை. 'மதேய்ரா'வில் உள்ள திராட்சை மற்றும் ஆரஞ்சுப் பழங்களைச் சுவைத்துக் கூடப் பார்க்க ஏற்பளியாததை அவமானமாகவே கருதினோம். மட்டுமல்ல, அங்குள்ள மக்களுடன் பேசவும் இடம் தரவில்லை. அப்பகுதி மக்களுக்கும் எங்களுக்கும் இடையில் எவ்வதைத் தொடர்பும் இருக்கக் கூடாது என்பதை அறிவிக்க கோட்டையில் இருந்து ஒரு குண்டு முழங்கியது. காலரா, அம்மை போன்ற கொடிய தொற்று நோய்கள் வந்துவிடுமோ என்ற பயமும் அதற்கு மேலாகச் சீர்திருத்த சபையின் கொள்கைகள் தொற்றிக் கொள்ளும் என்ற பயமுமே அவர்களுடைய கீழான நடத்தைக்குக் காரணமாய் இருக்கும் என்று ஐயுறுகிறேன். போர்த்துக்கீசியர் அனைவரும் கத்தோலிக்கர்கள்; அறியாமையில் மூழ்கியவர்கள்; பொறுமையற்றவர்கள்; குறுகிய மனப்பான்மை உள்ளவர்கள்; மூடநம்பிக்கை உள்ளவர்கள். 'மதேய்ரா'களும் அப்படிப்பட்டவர்களே. நீதிநெறியிலும் ஒழுக்கத்திலும் மிகவும் கண்டிப்பாக உள்ள போர்த்துக்கீசியரான அவர்கள், சீர்திருத்தச் சபையாரைக் கண்டு மிகவும் பயப்படுகின்றனர்.

"என் ஆடுகளை மேய்ப்பாயாக" "அடித்துப்புசி" என்பன தூய பேதுருவுக்கு அருளப்பட்ட அருள்மொழிகள். இவை போப்புக்கு மந்தையாகிய விசுவாசிகள் மீதும் சீர்திருத்தவாதிகளின் மீதும் ஒழுக்கத்தை நிலை நாட்டும் உரிமையை அளித்திருக்கின்றன என்று பல ஆண்டுகளுக்கு முன் கார்டினல் ஒருவர் கூறியதை அப்படியே அம்மக்கள் ஏற்றுக்கொண்டுள்ளனர் என்று நினைக்கிறேன்.

அந்த மக்களிடையே வாழும் இங்கிலாந்து நாட்டு வணிகர்கள் பலர் உயர்நிலையில் வைக்கப்பட்டிருந்தாலும், மதேய்ரா மக்கள் பலர் அவர்களை ஐயத்துடனும் வெறுப்புடனும் பார்க்கின்றனர் என்பது உறுதி. இங்கிலாந்து நாட்டு மக்கள் இறைவன் மீது நம்பிக்கை இல்லாதவர்கள் என்றும் மனித ஊனை உண்ணும் அரக்கர்கள் என்றும் எண்ணுகின்றனர். இங்கிலாந்து நாட்டுக் கப்பலில் அருட்பணியாளர் இல்லாததும் இயேசு கிறிஸ்துவின் உருவம் பொறித்த சிலுவை இல்லாததும் இறைப்பற்றுள்ள கத்தோலிக்கரைப் பயப்படச் செய்கிறது. நம்மோடு உறவு கொள்ளவும் தயங்குகின்றனர்.

என்னுடன் பணயம் செய்த பயணிகளில் பலர் கரையோரத்தில் உள்ள இடங்களுக்குச் சென்றுள்ளனர். அவர்களின் கூற்றுப்படி சீர்திருத்தக் கிறிஸ்துவர்களை அம்மக்கள் விருந்தோம்ப மறுத்தாலும் கூட அவர்கள் அன்புள்ளவர்கள்; கனிவுள்ளவர்கள் என்பது தெரிகிறது.

நாங்கள் 'மதேய்ரா' வில் இறங்கியிருந்தால் இங்கிலாந்து நாட்டு மக்களை மட்டுமல்ல ஐரோப்பியர் பலரையும் பார்த்திருக்கலாம். ஏனெனில் 'மதேய்ரா' ஒயின் வணிக மையம் மட்டுமன்று. அது கொடிய நோயால் பீடிக்கப்பட்டுக் குணமடைவோர்க்கான அருமையான வாழிடமும் கூட. எவ்வாறு மனநோயாளிகளுக்குக் குற்றாலம் சிறந்த வாழிடமாகக் கருதப்படுகிறதோ, அவ்வாறே ஐரோப்பாவின் பல பகுதிகளிலும் உள்ள பிணியாளிகளுக்குச் சிறந்த வாழிடமாக 'மதேய்ரா' கருதப்படுகிறது. ஏற்கனவே அதிக நேரத்தை நாங்கள் இழந்துவிட்டதால் கரைக்குச் செல்ல வேண்டும் என்ற விருப்பம் இல்லை. எனவே அந்த இடத்தை விட்டு மெதுவாகப் பயணத்தைத் தொடர்ந்தோம். அப்பகுதியிலிருந்து சற்றுத் தொலைவு சென்றபின் வீசிய இதமான காற்று புத்துணர்வைத் தந்தது. கடற்கரை வேகமாக மறைந்தது. சிறிது நேரத்தில் வடகிழக்கு வணிகக் காற்றுப் பகுதிக்குள் நுழைந்து விட்டோம். பாய்மரங்கள் விரைப்பாக (Tense) இருந்தன. அங்குமிங்குமாக அசைந்தாலும், கப்பல் நீரைக் கிழித்துக் கொண்டு சுமார் 10 கடல்மைல் வேகத்தில் சென்று கொண்டிருந்தது. அதன் பின்னால் பல மைல் தொலைவிற்குத் தோன்றிய நீரின் வெள்ளை வண்ண நுரை என் மனத்திற்கு எழுச்சியையும் சுறுசுறுப்பையும் கொடுத்தது.

முன்பு, கடல் எல்லா ஆற்றலும் படைத்தது போலவும் நாமெல்லாம் அதற்கு உட்பட்டவர்கள் போலவும் தோன்றியது. அதனால் கடலை ஐயத்துடன் நோக்கினேன். ஆனால் இப்போது அந்த நிலை மாறிவிட்டது. கப்பலுக்கும் ஆற்றல் உண்டு என்பதை உணர்ந்தேன். நான் கப்பலுக்கு உரியவன். நான் கப்பலின் ஒரு பகுதி என்ற மேலான உணர்வும் மகிழ்வும் என் உள்ளத்தில் குடி கொண்டன.

## அக்டோபர் 12

நாங்கள் செல்லும் பகுதி வட அட்சரேகை 15.2° மேற்குத் தீர்க்க ரேகை 28°.நான் முன்பு எழுதிய குறிப்பிற்குப் பின்னால், காற்றும் வானிலையும் நன்றாகவே இருந்தன. அவை எங்களுக்கு அதிக எழுச்சியையும் நம்பிக்கையையும் கொடுத்தன. 'டெனரிஃப்' (Teneriffe) என்ற இடத்தை இன்னும் பார்க்காவிட்டாலும் 'வெர்ட் தீவுக'ளையோ அல்லது நன்னம்பிக்கைமுனையோ அல்லது வேறு ஏதாவது நிலத்தையோ இந்தியா போய்ச்சேரும் முன் பார்ப்போம் என்ற எதிர்பார்ப்பு இல்லை. எனினும் பயணத்தின் வேகமும் மகிழ்ச்சியும் அப்பின்னடைவில் இருந்து மீட்டன. கப்பற்பயணம் எனக்கு நன்கு பழகிவிட்டது. இப்பொழுது கப்பலே எனது வீடு! பயணிகளே என் குடும்பத்தினர், உறவினர்! சூழ்நிலைக்கேற்ப என்னை நான் மாற்றிக் கொண்டேன். வசதியற்றவை, சலிப்பு உண்டாக்குபவை போன்று தோன்றியவை எல்லாம் மனநிறைவை அளித்தன.

நமது இயல்பான பண்புகளான நெகிழ்வும் உறுதியானவற்றை எளிதாக்குதலும் கூட்டு வாழ்க்கையில் மகிழ்வுடன் இருக்க உதவும் கேடயமாகும். செழிப்பான கூட்டுவாழ்க்கைக்கு அவை ஊற்றாய் விளங்குகின்றன. 'மதேய்ரா' வை விட்டு கிளம்பிய நாள் முதல் ஒரு நாளைக்கு ஒரு டிகிரி வெப்பம் ஏறிக்கொண்டே இருந்தது. இப்பொழுது 80°. கிட்டத்தட்ட (பூமத்திய) நிலக்கோட்டிற்கு அருகில் உள்ளோம். குளிர்ந்த கடல்காற்று வீசாவிடில் வெப்பம் 10° கூடியிருக்கும். சென்னை இதே அட்சரேகையில் இருப்பதால், அங்கு வெப்பம் எப்படி இருக்கும் என்பதை உணர முடிகிறது. தற்சமயம் மிதமான வெப்பம் என்பதால் மனத்திற்கு இதமாக உள்ளது. 'ஸ்காட்லாந்' தில் இதே அளவு வெப்பம் இருக்கும் போது எவ்வாறு 'ரிலாக்ஸ்' பண்ணுவேனா, அவ்வாறே இந்த மாறுபட்ட சூழ்நிலையிலும் 'ரிலாக்ஸ்' பண்ணிக் கொண்டிருக்கிறேன்.

மாறிவரும் தட்பவெப்ப நிலையால் எங்களது ஆடைகளையும் மாற்றி வருகிறோம். உடல்நிலை நன்றாக இருக்கிறது. வெப்பப்பகுதிக்கு வந்ததும் பயணிகள் மூலம் கேள்விப்பட்ட பயங்கரமான பழங்கால அரக்க அரக்கிகள், வெட்ட வெட்ட வளரும் தலைகளுடைய பாம்பு, சிங்கத்தின் தலையும் வெள்ளாட்டின் உடலும் கொண்ட தீ கக்கும் விலங்கு மற்றும் மெய்சிலிர்க்க வைக்கும் பல விலங்குகளைப் பார்க்க நெஞ்சு

துடித்தது. ஏதாவது வியப்பான ஒன்று தென்படாதா என்று பார்த்தேன். அதிகப் பயன் ஏதும் இல்லை. பார்த்த இரண்டைப் பற்றி இங்குக் குறிப்பிட விரும்புகிறேன். முதலாவதாக, நான் பார்த்தது பறக்கும் மீன்கள். ஒன்றும் இரண்டுமாக ஆங்காங்கே தென்பட்ட அம்மீன்கள் பின்பு கூட்டம் கூட்டமாகக் காணப்பட்டன. கப்பல் அருகில் வந்ததும் பயந்து வலது பக்கமாகவும், இடது பக்கமாகவும் கௌதாரிகளைப் போல உயரப் பறந்தன. பறக்க முடியும் தூரம் சிறிதே. ஆனால் வேகமோ அதிகம். நீரில் மூழ்கி மூழ்கி மீண்டும் மீண்டும் பறந்து சென்ற காட்சியைக் கண்டு மகிழ்ந்தேன். தற்செயலாக இரண்டு பறக்கும் மீன்கள் மேல்தளத்தில் விழுந்தன. அவைகளின் நீளம் ஆறு அங்குலம்; நீலமும் வெள்ளையும் கலந்த வண்ணத்தில் இருந்தன; உருவம் மற்ற மீன்களைப் போல அன்று; சற்றுத் சதுரமாக இருந்தது.

அவ்வுருவம் வேகமாக நீந்துவதற்கு ஏற்றதன்று. ஆனால் அதை ஈடுகட்ட முதுகில் பலமான துடுப்புக்களைக் இறைவன் ஈந்திருக்கிறார். அவை தண்ணீரை விட்டு உயரே துள்ளவும் சிறிது. தூரம் பறக்கவும் உதவுகின்றன. பாவம் இந்த மீன்கள்! போனிட்டா அல்லது டால்ஃபின் மீன்களிடமிருந்து தங்களைக் காப்பாற்றவே இவை தண்ணீரை விட்டு உயரத் துள்ளுகின்றன. அச்சமயம் கடற்பறவைகள் அவைகளைப் பாய்ந்து பிடித்து விழுங்குகின்றன. அதிர்ஷ்டவசமாகப் பறவைகள் இல்லாவிட்டாலும் அவைகளுக்கு ஆபத்து இல்லாமல் இல்லை. ஏனெனில் போனிட்டா என்ற மீன் அவைகளுக்கு அடைக்கலம் கொடுக்கத் தங்கள் வாயைப் பிளந்து கொண்டு இருக்கின்றன. அவை இருதலைக் கொள்ளிக்கிடையே உள்ள எறும்புகள்! இரு வழக்கறிஞர்களுக்கிடையே மாட்டிக் கொண்டு விழிக்கும் கட்சிக்காரர்கள்! உண்பதற்குச் சுவையாக இருப்பதினால் அவைகளுக்குத் தீங்கு அதிகம்.

இரண்டாவதாக நான் குறிப்பிட விரும்புவது வானத்தின் ஒளியும் அதன் அழகுமே. கீழே நீலவண்ணக் கடல்! மேலே நீலவண்ண வானம்! அதன் நடுவே தலைக்கு நேராக ஒளி வீசிக் கொண்டிருக்கும் கதிரவன்! நண்பகல் வேளையில் என்னே வியப்பான காட்சி! வடக்கே உள்ள குளிர் நாடுகளில் இவ்வளவு அழகான காட்சியைக் காண வாய்ப்பே இல்லை. மாலையில் மேற்கே மாறி மாறித் தோன்றும் வண்ணங்கள்! சில நேரம் பழுப்பு! மறு நிமிடம் ஒளிரும் மஞ்சள்! அப்புறம் பழுப்பு மஞ்சள்! சிறிது நேரத்தில் இளஞ்சிவப்பு வண்ணம்! ஆகா, கண்களுக்கு அழகான

வண்ண விருந்து! இது விண்ணில். கீழே நீல வண்ணக் கடல் ஒளியைத் தன்னகத்தே கொண்டது போல பொன்னிறத்தில் ஒளிக்கிறது. இரவின் அழகு இதை விட ஒருபடி மேலேயே இருக்கிறது. வானில் முழு மதி முத்துப் போல ஒளிவீசி வலம் வருகிறது. 'ஸ்காட்லாந்'தில் பனிப்பொழிவு இருப்பதால் இது போன்ற காட்சி அரிது. அது மட்டுமா! வெப்பத்திற்கு ஈடு கொடுக்கக் குளிர்ச்சியான கடற்காற்று. இதை விட அழகிய காட்சியைக் கற்பனையிலும் கனவிலும் நாம் காண முடியாது.

நேற்று இரவு நான் படித்துக் கொண்டிருந்த போது, பணியாளர்களும் சில பயணிகளும் ஆடிப் பாடி மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கினர். நான் ஏற்கனவே குறிப்பிட்டுள்ள ஒரு ஃபிரெஞ்சு நாட்டு வீரதீரர் மாறி மாறி இசையை மீட்டிக் கொண்டிருந்தார். அவரது இசை டால்ஃபின் மீன்களைக் கவர்ந்து இழுக்கும் அளவு இனிமையாக இல்லாவிட்டாலும் ஓரளவு நன்றாகவே இருந்தது. பயணிகளும் கப்பல் அலுவலர்களும் அவரைச் சுற்றிப் பாடிக்கொண்டும் துள்ளிக்கொண்டும் இருந்தனர். மறுபுறம் கப்பற்பணியாளர்கள் உரத்த குரலில் பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் இருந்தனர். அவர்களின் கடின நடையும் உரத்த குரலும் அங்குள்ள ஆயிரக்கணக்கான கரப்பான் பூச்சிகளைப் பயமுறுத்தி விரட்டி அடிப்பதற்கு அமைந்தது போல் இருந்தது.

கப்பற்பணியாளர்களின் உரத்த ஆட்டங்களுக்கு வெறுப்பையும் எதிர்ப்பையும் காட்டவில்லை. ஏனெனில் அவர்களில் பலர் படிக்கத் தெரியாதவர்கள்; சிந்திக்கத் தெரியாதவர்கள்; பண்புள்ள கலந்துரையாடல் அவர்களுக்கு அப்பாற்பட்டது. கூச்சலிட்டு ஆடும் ஆட்டம் மட்டுமே அவர்களுக்குத் தெரியும். மனநிறைவின்மை, கடின உழைப்பு ஆகியவற்றிலிருந்து சற்று விடுபட்டு அவர்களுடைய உள்ளத்தை மகிழச்செய்வது இப்படிப் பட்ட பொழுதுபோக்குகள். சமயச்செயல்களில் அவர்கள் தடையாய் இருக்கமாட்டார்கள் என்றே தோன்றுகிறது. பயணிகளைப் பொருத்தவரைப் பண்புள்ள பொழுதுபோக்கு விளையாட்டுக்களையே விரும்புவர்.

எனவே அவர்கள் பற்றி ஒன்றும் கூற விரும்பவில்லை. ஆனால் தங்களை இறைப்பற்று மிகுந்தவர்கள் என்று நினைக்கும் மக்களின் பொழுதுபோக்கு விளையாட்டுகள் எனக்குப் பிடிக்கவில்லை. அவ்விளையாட்டுகள் பாவம் என்பதற்காக அல்ல;

வாய்ப்புக்கிடைக்கும் போது தங்களுடைய மீட்பிற்காகவும் மற்றவர்களுக்கு நன்மை செய்கிறதற்கும் அந்நேரத்தைப் பயன்படுத்தவில்லையே என்பதே என் வேதனை. ஜீவ அப்பத்தைச் சுவைத்து உண்டவர்கள் உமி போன்ற இவ்வுலக விளையாட்டுகளில் ஈடுபடலாமா? இவ்வித விளையாட்டுகள் எனக்கு மகிழ்ச்சி அளிக்கவும் இல்லை, அவைகளை நான் விரும்பியதும் இல்லை. அவைகள் அந்த மாலையின் அழகுக்கு அழகு சேர்க்கவும் இல்லை. சிறிது நேரம் கப்பலின் மேல் தளத்தில் இருந்தேன். பின்பு கப்பலின் பின்பகுதியில் உள்ள உயர்ந்த தளத்திற்குச் சென்றேன். அங்குள்ள சுக்கான்தார் மட்டுமே எனக்குத் துணை.

இந்தத் தனிமையும் அமைதியும் சுற்றிலும் ஒரு பார்வை பார்க்க நல்ல வாய்ப்பை நல்கியது. பார்த்த அனைத்துமே இருமடங்கு அழகாய்த் தோன்றின. இவ்வளவு அருமையான காட்சியை நான் இதுவரை கண்டுகளித்தது கிடையாது. முத்துப் போன்ற நிலா விண்ணில் ஒளிவீசிக் கொண்டு தவழ்ந்து வருகிறது. கடலில் பேரலைகள் இல்லை! நீரின் இரைச்சலற்ற ஏற்ற இறக்கம்! கப்பலில் கூச்சல்! ஆடல் பாடல்! கப்பலோ நீரில் வழுக்கிச் செல்வது போல் முன்னேறிச் செல்கிறது! உள்ளம் மகிழ்ச்சியால் துள்ளுகிறது! இங்கிலாந்தில் இது போன்று மாசற்ற விண்ணில் மதி தவழ்ந்து வரும்போது எவ்வாறு மகிழ்ச்சி அடைவரோ, அதே மகிழ்ச்சியே என் உள்ளத்தில் பொங்குகிறது. அங்குள்ள மக்கள் கடவுளிடம் எனக்காக மன்றாடுவார்கள் என்று நினைக்கிறேன். 'கிளாஸ்கோ'வை விட்டுப் புறப்பட்டதிலிருந்து பலர் எனக்காக மன்றாடுவர் என்ற நம்பிக்கை என்னை மகிழ்விக்கிறது; பெலன் அடையச் செய்கிறது.

பயணத்தில் நடக்கின்ற பற்பல நிகழ்ச்சிகளை நான் ஒழுங்காக எழுதி வைக்கவில்லை. நேற்றைய நிகழ்வுகளை எழுதுவதற்கு முன்பு, முன் நடந்த இரு செயல்களைக் குறிப்பிட்டாக வேண்டும். என்னைப் பொருத்தவரை அவை இரண்டும் என் வாழ்க்கையில் மறக்க முடியாதவை. ஒன்று: சென்ற சனிக்கிழமை நூல்கள் அடங்கிய பெட்டியைப் பெற நான் பட்ட பாடு.

என்னுடைய நூல்களை அடுக்கிக் கட்டும்போது அவைகளை இரண்டு பொதிகளாகக் கட்டவேண்டும் என்று திட்டமிட்டிருந்தேன். பயணத்தில் தேவைப்படாத நூல்களை ஒரு

பெட்டியிலும் பயணத்தின் போது தேவைப்படும் நூல்களை மற்றொரு பெட்டியிலும் வைக்க வேண்டும் என்பதே அத்திட்டம். நூல்களை அடுக்கி வைக்கும் பொறுப்பைத் திரு. ரஸல் ஏற்றுக் கொண்டதால் எனது பணி சற்று இலகுவானது. முதல் பெட்டியில் அதிக நூல்களை வைக்க வேண்டியதிருந்தது. திரு. ரஸல் சுமார் 6 அல்லது 7 நூல்களைத் தவிர அனைத்து நூல்களையும் ஒரே பெட்டியில் திணித்து விட்டார். மீதி நூல்கள் ஒரு சிறிய பெட்டியில் வைக்கப்பட்டிருந்தன. அச்சிறு பெட்டியை எப்போது வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளும்படியாகச் சரக்கு அறையின் பின்பகுதியில் வைக்கப்பட்டிருந்தது.

கடற்காய்ச்சலினால் பாதிக்கப்பட்டபோது அச்சமயம் என்னிடமிருந்த நூல்களையும் 'ப்ளீமத்'தில் நான் வாங்கிய நூல்களையும் வைத்து ஓரளவு சமாளித்துக் கொண்டேன். சிலவற்றை நான் படித்தேன். சிலவற்றை மற்றோருக்குப் படிக்கக் கொடுத்தேன். உடம்பு தேறிய பின்பு, திரு. ப்ரௌன் அல்லது திரு. பர்காய்ன் (Mr.Bourgoyne) ஆகியோருடன் உரையாடும் போதுதான் பெட்டிக்குள் அடைபட்டுக் கிடந்த நூல்களின் தேவை அறிந்து வருந்தினேன். அறிவு வளர்ச்சியில் போதுமான முன்னேற்றம் இல்லை. இடைப்பட்ட நாட்களில் தொய்வு ஏற்பட்டதை உணர்ந்தேன். இழந்த காலத்தைச் சரிக்கட்ட தீவிரமாக உழைக்க முடிவு செய்தேன். பெட்டியில் உள்ள நூல்களை எடுத்துத் தரக் கெஞ்சினேன்.

ஆசைப்படுவது எளிது; ஆசையை நிறைவேற்றுவது அரிது. ஒரு வாரத்திற்கு மேலாகப் பெட்டியில் உள்ள நூல்களை எடுக்க முயற்சி செய்தேன். அடிக்கடி கேட்டால், எரிச்சல் அடைவார்களோ என்ற பயத்தால் கேட்பதை நிறுத்தி விடலாமா என எண்ணினேன். அவ்வளவு பெரிய பெட்டியைச் சரக்கு அறையில் அடுக்கி வைப்பது இயலாத ஒன்று. ஆனால் ஒழுங்காக அடுக்கி வைத்த பின்பு அதை மீண்டும் எடுப்பது அதை விட முடியாத ஒன்று. சரக்கு அறைக்குப் போய்ப் பார்த்து நூல்களை எடுக்க வேண்டுகோளிட்டிருந்தேன். சென்ற சனிக்கிழமை என்னுடைய அறையைத் தூய்மை செய்து கொண்டிருந்தனர். அன்றுதான் எனக்கு ஒப்புதல் கிடைத்தது. என் அறை நண்பரும் நானும் சரக்கு அறைக்குச் சென்றோம். அய்யோ! காணவில்லை! தகுதியற்ற காலநிலை வருமுன்னே 'பிஸ்கே வளைகுடா'வில் இருக்கும் போதே, கப்பலின் அசைவினால் பொருட்களுக்குப்

பழுது ஏற்படுவதைத் தவிர்க்க மிகவும் நெருக்கமாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன.

அச்சமயம் மற்ற பொருட்களுக்குள் எனது பெட்டி மாட்டிக் கொண்டது. பொதிகளையும் பெட்டிகளையும் ஒரு மணி நேரத்திற்கு மேலாக புரட்டியும் அசைத்தும் பார்த்தோம். பயனேதும் இல்லை! இந்தியா சென்றடையும் வரை உயிர்மூச்சாகிய என் நூல்களைப் பார்க்க முடியாதோ என்ற பயத்தினாலும் நம்பிக்கையின்மையினாலும் கவலைப்பட்டுக் கொண்டிருக்கையில் இருட்டின் ஊடே பெட்டியின் ஒரு மூலை நீண்டு கொண்டிருப்பதைக் கண்டேன். ஏதோ ஒரு புதையலைக் கண்டவனைப் போல் என் உள்ளம் துள்ளியது. கடப்பாறை போன்றவற்றின் உதவியினால்தான் அப்பெட்டியை அசைக்க முடிந்தது. இறுதியாக கயிற்றைக் கட்டியே இழுக்கவேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது. என்னால் இவ்வளவு தொல்லைகள் உண்டாயிற்றே என்று வெட்கமடைந்தேன். எப்படியோ பெட்டி என் அறைக்கு வந்து விட்டது. 'சில நண்பர்களை' எடுத்து, நாங்கள் கலந்துரையாடிய செய்திக்குப் பொருத்தமான குறிப்புகள் உள்ளனவா என்று புரட்டிப்பார்த்தேன். அன்றாடம் படிப்பதற்காகவும் சில நூல்களை எடுத்துக் கொண்டேன். அப்பாடா! என் மனம் இப்போதுதான் சீரான நிலைக்கு வந்திருக்கிறது.

நூல்களைப் பெற்ற பின் மிக்க மகிழ்ச்சி. பலர் அவற்றை வாங்கிப் படித்துப் பயன் அடைந்துள்ளனர் என்பதை நினைத்து இரட்டிப்பான மகிழ்ச்சி.

திரு. ப்ரௌன் நூல்களை நன்றாக பயன்படுத்தி இருக்கிறார். அவைகளில் பல இறையியல் திறனாய்வு பற்றிய நூல்கள். அந்நூல்கள் அவரின் பாராட்டைப் பெற்றவை. மேலும், மதிப்பிற்குரிய திரு. பர்காய்னே (Mr. Burgoine) அந்நூல்களை மிகவும் நன்றாகப் பயன்படுத்தியிருக்கிறார். ஹார்ன் எழுதிய புத்தகமே தற்சமயம் அவருக்குப் பிடித்தமான நூல். விவிலியத்தைப் பற்றி ஏராளமான செய்திகளும் கிறிஸ்தவத்தைப் பற்றி ஏராளமான சான்றுகளும் அதில் உள்ளன. இதுவரை அவர் கிறிஸ்தவத்தைப் பற்றி அதிகமாகப் படித்தது கிடையாது. கிறிஸ்தவத்தைப் பற்றி இவ்வளவு அதிகமான நூல்கள் எழுதப்பட்டிருக்கின்றன என்பதும் அவருக்குத் தெரியாது. குரான் மற்றும் புராணங்களைப் போன்று விவிலியமும் சான்றுகள்

இல்லாத ஒரு நூல் என்பதும், விசுவாசிகள் தவிர மற்றவர் யாரும் அதை ஏற்றுக் கொள்ளார் என்பதும் அவர் கருத்து.

அதன் கொள்கைகளும், தத்துவங்களும் சரியாகத் தோன்றினாலும், அது தெய்வீக வெளிப்பாடு; வரலாற்றுக்கும் மனித அறிவுக்கும் ஒவ்வாது. விசுவாசிகளுக்கும் விவிலியத்தைப் பற்றிய நம்பிக்கை இருக்கிறதே தவிர வேறு எதுவும் அவர்களுக்குத் தெரியாது. அவருக்கும் விவிலியத்தை நம்பவேண்டும் என்ற ஆசை இருக்கிறது. அந்த நம்பிக்கை சான்றுகளின் அடிப்படையில் உண்டாவதென்பதும், அந்த சான்றுகள் இல்லாத காரணத்தினால் அவரது ஆசையும் ஐயத்திற்கு உட்பட்டது. போதிய அளவு இறையியல் அறிவில்லாமலும் குறிப்பிட்ட கொள்கையின்றியும் இந்தியாவுக்குச் செல்லும் பலரின் நிலை இதுதான். இந்தியாவில் முகமதியரோடும் இந்துக்களோடும் சமயத்தைப் பற்றிக் கேலி பேசிச் சிரிக்கிறார்கள். நாளடைவில் அவர்களது இந்தக் கருத்து கிறிஸ்தவத்தையும் பதம் பார்த்துவிடுகிறது.

பிரௌன் இங்கிலாந்துக்கு மறுபடியும் சென்றது அவருக்கு அதிகப் பலனைக் கொடுத்தது. அவருடைய சகோதரிகளின் சமயப்பற்று முன்பை விட சமயம் சார்ந்த செய்திகளுக்கு நேராக அவரது மனத்தைத் திருப்ப மிகவும் உதவியது. அவருக்கு 'லிவர்பூலி' ல் (Liverpool) நண்பர்கள் பலர் உள்ளனர். அங்கு 'விலையுயர்ந்த ஆரெஞ்சுமென்' என்று அழைக்கப்படும் 'ஔல்ட் மற்றும் மக்னய்ல்' (Ould and Mc Neile) ஆகியோருடன் நல்ல பழக்கம் ஏற்பட்டது. அவர்களுடைய இறை நம்பிக்கை தங்களையே ஒறுத்தல், திருத்தொண்டு பண்புகள் ஆகியன அவரை மிகவும் கவர்ந்தன. இவர்களுடைய தாக்கத்தால் அவர் மீண்டும் சிந்திக்கவும் படிக்கவும் தொடங்கினார். நான் அவரிடம் பழகத் தொடங்கிய நாட்களில் அவர் யூதருடைய வரலாறு, இறைவாக்கு சார்பான நூல்கள் ஆகியவற்றைப் படித்துக் கொண்டிருந்தார். படித்த பல செய்திகள் அவரை வியப்பில் மூழ்க வைத்தன. பெரும் பகுதி அவருக்கு விளங்கவில்லை.

சில செய்திகளை அவரால் நம்பமுடியவில்லை. எனினும் நான் கொடுத்த நூல்களை அக்கறையுடனும் கருத்துடனும் படித்தார். இதுவரை இவ்வளவு பெரிய நூல்களையோ அல்லது கருத்து ஆழமுள்ள நூல்களையோ படித்துப் பழக்கம் இல்லை. எனினும் நான் கொடுத்த நூல்களை மிகுந்த அக்கறையுடன் கண்கள் வலிக்கும் வரை படிப்பது மட்டுமின்றி , பெரிய அளவில்

குறிப்பும் எடுத்துக் கொள்கிறார். இப்பொழுது இறைவனது அரசுக்கு வெகு தொலைவில் அவர் இல்லை என்று நான் நம்புகிறேன். இந்த நம்பிக்கையை சரியான நேரத்தில் இறைவன் உறுதி செய்வார். நான் குறிப்பிட்டுள்ள மற்ற செய்திகள் எல்லாம் சென்ற ஞாயிற்றுக்கிழமை பயணிகளுடனும் பணியாளர்களுடனும் நான் கலந்துரையாடியபோது நடந்தவையே.

பயணிகளுக்குப் பலமுறை அருளுரை ஆற்றியிருந்தாலும் பணியாளர்களுக்கு அவ்வாறான வாய்ப்புகள் அளிக்காமல் இருந்தது வருத்தமே. அவர்கள் அனைவரையும் ஒன்று சேர்த்து வைப்பது இயலாத செயல் என்பது எனக்குத் தெரியும். எனினும் அது வருத்தத்தை அளிக்கிறது. கடந்த ஞாயிற்றுக்கிழமை காலநிலை ஏற்றதாக இருந்ததினால் கப்பல் தலைவன் பொது வழிபாடு நடத்த ஒப்புதல் வழங்கினார். பாய்மரங்கள் இறக்கப்பட்டன. நாற்காலிகள் போடப்பட்டன. சிறிது நேரத்தில் இறை வேண்டுதலுக்கான ஒழுங்குகள் யாவும் செய்யப்பட்டன. மணி அடித்த சிறிது நேரத்தில் ஏறத்தாழ ஐம்பது பேர் வந்துவிட்டனர். இவ்வளவு அக்கறையுடனும் கருத்துடனும் அருளுரையைக் கேட்டுக் கொண்டிருந்த மக்களை நான் இதுவரை கண்டதில்லை. கப்பல் அங்கும் இங்குமாக ஆடியதால் ஒழுங்காக உட்காருவதற்கு இயலாவிட்டாலும் மிகவும் ஆவலோடு அருளுரையைக் கேட்டனர்.

அது எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியை அளித்தது. பல நாட்களாக அருட்செய்திகளைக் கேட்காமல் இருந்திருப்பார்களோ என எண்ணத் தோன்றியது. ஆனால் எனக்கு உடல்நிலை சரியில்லை. கப்பலின் ஆட்டத்தினால் நிற்பதற்கே இயலவில்லை. எனினும் அருகில் உள்ள நண்பரை இறுகப் பிடித்துக் கொண்டு நின்றேன். எவ்வளவு பேசமுடியுமோ அவ்வளவு எளிதாகவும் ஆணித் தரமாகவும் பேசினேன். என்னால் முடிந்ததைச் செய்தேன் என்ற மனநிறைவு அடைந்தேன். செய்தியைக் கேட்டவர்கள் மனநிறைவு அடைந்தனர் என்பது எனக்கு மனநிறைவை அளித்தது. மாலையில் வழக்கம் போல் கப்பலின் ‘கடி’ என்ற இடத்தில் செய்தி கொடுத்தேன். கப்பலின் அசைவும் இரைச்சலும் அதிகமாக இருந்ததினால் கூட்டம் அதிக நேரம் நீடிக்கவில்லை. மிகுந்த இடர்ப்பாட்டுடன் மக்கள் செய்தியைக் கேட்டுக்கொண்டிருந்தனர்.

## அக்டோபர் 27

**6.20° தெற்கு அட்சரேகை 31.25° கிழக்கு தீர்க்கரேகை**

சிறிது இடைவெளிக்குப் பிறகு பயணக்கதையை மீண்டும் தொடர்கிறேன். சூரியன் தலைக்கு மேலே இருக்கிறது. பூமியின் அடுத்த அரைவட்டத்தில் நாங்கள் இருக்கிறோம். இது வெப்பமண்டலப் பகுதி. இந்தத் தட்பவெப்பநிலைக்கு ஏற்ப வாழ்க்கை முறையை மாற்றிக்கொள்ள தவறிவிட்டதாலும் மருந்து எதுவும் உட்கொள்ளாததாலும் போதிய அளவு உடற்பயிற்சி செய்யாததாலும் உடல்நிலை பாதித்துவிட்டது. சற்றுப் பலவீனமாகவும் சோர்வாகவும் இருந்தேன். வெப்ப மண்டலத்தின் தட்பவெப்பநிலைக்கு ஏற்ப என்னைத் தகுதிப்படுத்தத் தவறியதன் விளைவாகவே நான் இப்போது பாதிக்கப்படுகிறேன். எவ்வளவு அதிகமாகச் சத்துள்ள உணவை உட்கொள்கிறேனோ அவ்வளவுக்கு அவ்வளவு பலவீனமாகிக் கொண்டிருந்தேன். திங்கட்கிழமை பணியாளர்களுக்கு அருட்செய்தி அளித்த பின்பு கடல்நிலை மோசமாகி, கப்பலின் ஆட்டம் அதிகரிக்க, என் உடல்நிலையும் மோசமாகிக் காய்ச்சலில் படுத்துவிட்டேன். மிகவும் பலவீனமாகிவிட்டதால் மருத்துவர் தனது கண்காணிப்பில் இருக்கவேண்டும் என்றும் இன்னும் ஓரிரு வாரங்களில் முற்றிலும் குணமாகிவிடும் என்றும் கூறினார்.

மருத்துவரின் அறிவுரையை மீறாததால் அவர் கூறியபடி சிலநாட்களில் உடல் நலமாகிவிட்டது. எனினும் என்னால் அதிகமாகப் படிக்கவோ, எழுதவோ முடியவில்லை. அதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று இடமாற்றமாகும். பழைய அறையை விட்டு புது அறையில் தங்க வேண்டியிருந்தது. பழைய அறையை விட புதிய அறை பெரியது; வசதியானது. ஆனால் கப்பல் அசைவின் தாக்கம் இருமடங்காக இருந்ததினால் என்னால் எதுவுமே செய்ய முடியவில்லை.

இரண்டாவதாக பலவீனமும் மூச்சுத்திணறலும். கீழ் அறையில் காற்றோட்டம் அதிகமில்லாத காரணத்தால் மயக்கம் ஏற்படும் நிலையும் உருவாகிவிட்டது. அங்கு அதிக நாட்கள் இருக்க முடியவில்லை. நோயில் இருந்து முற்றிலும் குணமாகியிருந்தால் கப்பலின் அசைவு என் மீது அதிகத் தாக்கத்தை ஏற்படுத்தியிருக்காது என எண்ணுகிறேன். ஆனால் நோயினால் ஒரு நல்ல பாடம் படித்துக்கொண்டேன். இந்தியாவை

நெருங்க நெருங்க் சரியான அளவு உணவு உட்கொண்டு தேவையான அளவு மருந்தும் உபயோகப்படுத்தி என் உடம்பை நல்ல நிலையில் வைத்துக் கொள்ளக் கற்றுக்கொண்டேன். 'மதேய்ரா'வை விட்டுக் கிளம்பிய நாளிலிருந்து, எங்களது பயணத்தின் முன்னேற்றம் முன்பு இருந்ததை ஒப்பிடும் போது பரவாயில்லை என்றே சொல்ல வேண்டும். கடல் நோயால் பீடிக்கப்பட்டேன் என்பதை நினைக்கும் போது சற்று வெட்கமாகவே இருக்கிறது.

இதே காலத்தில் சில சமயங்களில் வடக்கு எல்லைப் பகுதியில் கப்பல்கள் சில மாதங்களாகப் பயணத்தைத் தொடரமுடியாமல் இருக்க நேரிடும். எங்கள் கப்பலும், கடந்த பயணத்தில் இதே இடத்தில் மூன்று வாரங்கள் நிற்க வேண்டியதாயிற்று. ஆனால் அதிர்ஷ்டவசமாக, இப்பயணத்தின் போது ஒரு நாள் கூட நிற்கவேண்டிய தேவை ஏற்படவில்லை. அதன் விளைவாகப் 'ப்ளீமத்'தில் வீணாகிய நேரத்தை இதனால் சரிக்கட்டி விட்டோம். இதுவரை குறைந்தது ஒரு நாளைக்கு 40 கடல்மைல் பயணம் செய்தோம். பொதுவாக இதை விட இரண்டு அல்லது ஐந்து மடங்குத் தொலைவு அதிகமாகவே பயணம் செய்துள்ளோம். எல்லைக் கோட்டைக் கடந்து தென்கிழக்கு வணிகக்காற்றுப் பகுதிக்குள் நுழைந்து விட்டதால் இனி பயணம் அதிவேகமாக இருக்கும்.

எல்லைக் கோட்டைத் தாண்டும் செய்தியைப் பற்றி எழுதும் முன் இதற்கு முன்பே நடந்த ஓரிரு நிகழ்வுகளை நான் குறிப்பிட வேண்டும். 13ஆம் நாள் சந்திர கிரகணம் நிகழ்ந்தது. அன்று முழு நிலா இரவு. தொடுவானத்தருகே இருண்ட மேகங்கள் தோன்றின. அதற்கு மாறுபாடாக இருந்த இந்தக் காட்சி என்னை மிகவும் கவர்ந்தது. மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். ஒரு பக்கம் அடர்ந்த மேகக்கூட்டங்கள், மறுபக்கம் இரவின் மாசற்ற ஆகாயம். அதன் நடுவே அழகிய, ஒளி வீசும் நிலா. என்னே அழகு! இதுவரை இதுபோன்ற காட்சியை நான் கண்டதில்லை. மேகங்கள் புது உருவங்களாக மாற, மாற அல்லது நிலாவின் இடம் மாற மாற நான் மீண்டும் மீண்டும் வந்து அக்காட்சியைக் கண்டு களித்தேன். மேகங்களைக் கிழித்துக் கொண்டு மேலே சென்றது நிலவு. அதன் ஒருபகுதி தட்டையாகத் தோன்றியது. இது தொடர்ந்து நடக்க, ஏறத்தாழ நிலாவின் முழுப்பகுதியும் மறைவது போல் தோன்றியது. சந்திரகிரஹணம் நிகழப்போகிறது என்பதை

உணர்ந்தேன். காலக்குறிப்பு நூலை ஆராய்ந்து கணக்கீடு செய்தோம். முழு சந்திரகிரகணம் நிகழும் என்ற கணிப்பு நிறைவேறிற்று. இரவு சுமார் 9:30 மணி அளவில் முழுநிலவும் மறைக்கப்பட்டு எங்கும் இருள் சூழ்ந்தது. மீண்டும் நிலவு தெரியும் வரை காத்திருப்பது பலனற்றது என எண்ணி நான் என் அறைக்கு ஓய்வெடுக்கச் சென்று விட்டேன். வெப்பமண்டலப் பகுதியை அடைந்ததும், ஆகாயத்தில் காணப்பட்ட வேறுபட்ட வண்ணங்கள், குறிப்பாக மாலையில் சூரியன் மறையும் போது வண்ணங்களால் அழகு பெற்று மேற்கு வானத்தின் பேரழகை வடித்திட கவிஞர்களுக்குச் சொற்களே கிடையாது; ஓவியர்களுக்குச் சரியான வண்ணமும் கிடையாது. சிறப்பாக வடக்குப் பகுதியில் குளிரை மட்டுமே கண்டு உணர்ந்துள்ள கவிஞர்களுக்கும் ஓவியர்களுக்கும் இக்காட்சியை உருவகிப்பது எட்டாக்கனி. மேகங்களின் பல்வேறு உருவங்கள் வானத்தின் அழகிற்கு அழகு சேர்த்தன. புயல் நேரங்களில் திரளான மேகக் கூட்டங்கள் வானில் தோன்றி மழையைப் பொழிந்தன. வடகிழக்கு வணிகக் காற்று காலத்திற்கும் தென்கிழக்குப் பருவக்காற்றுக் காலத்திற்கும் இடைப்பட்ட நேரத்தில் இவ்வகைப் புயல்கள் தோன்றும். அவைகளின் உதவியின்றி அந்த இடைவெளிக்காலத்தில் பயணம் செய்வது அரிது.

எனினும் சிறு சிறு புயல் காற்றின் உதவியால் கப்பல் வேகமாகவும், சில நேரங்களில் மித வேகமாகவும் முன்னேறிச் செல்கிறது. இப்படிப்பட்ட வெப்பமான பகுதியை வேகமாகக் கடந்து செல்லும்போது சுறாமீன் எங்களுக்குக் கிடைக்கவில்லை. அதைப் பார்ப்பதே அரிதாகிவிட்டது. இந்தியக் கடற்பகுதிக்குச் செல்லும் வரை சுறாமீனைப் பார்ப்பதற்குக் கூட வாய்ப்பு இருப்பதாகத் தெரியவில்லை. அதிக அளவு உணவு உட்கொள்ளும் பழக்கம் இருப்பதால் குளிரான பகுதி சுறாவுக்குப் பிடிக்காது.

கப்பலில் உள்ள பயணி ஒருவரிடம் பழகும் வாய்ப்பு கிட்டியது. அவர் எளிதில் உணர்ச்சி வசப்படுபவர். தனது உடல் நலத்தை மேம்படுத்த மேற்கிந்தியத் தீவுகளுக்குச் சென்றிருந்தவர். "சுறாமீன் உணவுக்காக உட்கொள்ளத் தகுந்ததன்று. வேறு எந்த நன்மைக்கும் அதைப் பயன்படுத்துவதில்லை. எனவே அவற்றைக் கொல்லுவது கொடுமையிலும் கொடுமை" என்று வெறித்தனமாக உரையாடினார். "அவைகள் நமக்கு எவ்வகையிலும் தொல்லை பண்ணாமல் இருக்கும் போது, அவைகளை துன்புறுத்தவோ

கொல்லவோ எவ்வகை உரிமையும் நமக்குக் கிடையாது'' என்று சீறினார். என்னைப் பொறுத்தவரை அவை வாழும் தகுதியை இழந்துவிட்டன என்றே நினைக்கிறேன். செயல் எவ்வளவு தீதோ அது போல நோக்கமும் தீதே. ஒரு முறை ஒரு சுறாமீன் மிகவும் அருகில் வந்து அதைப் பிடிக்க வேண்டும் என்று மனத்தூண்டுதல் ஏற்படும் அளவுக்கு அதே இடத்தில் நின்று கொண்டே இருக்கிறது அப்படிப்பட்ட சுறாமீன்களைப் பிடித்து விருந்துண்ண வேண்டும் என்ற ஆவல் அவனுக்கு ஏற்படுகிறது. தனது நோக்கம் நிறைவேற அவைகளைப் பிடிக்க வேண்டும் என்ற எண்ணம் உண்டாகிறது.

சுறா மீன்களைக் கொன்றால் தவறில்லை என்ற கப்பற் பணியாளர்களின் கூற்றை நான் ஏற்றுக் கொள்கிறேன். இதற்காக நாடுகள் இயற்றும் சட்டங்களுக்காக அவர்கள் காத்திருக்க வேண்டியதில்லை என்பதே என் கருத்து. தங்கள் முதல் பகைவர்களான புலிகளைப் பொருத்தமட்டில் இந்துக்கள் மதியீனமாகக் காத்திருப்பது வழக்கம். பதுங்கியிருக்கும் புலிகளை அவர்கள் ஒன்றும் செய்வதில்லை. ஆனால் யாரையாவது தாக்கினால், 'அது தவறு செய்துவிட்டது' என்று அதைத் தாக்க முற்படுவார்கள். வெப்ப மண்டலப் பகுதிக்கு வந்ததும் 'நாட்டிலஸ்' (Nautilus) அல்லது 'போர்ச்சுக்கீசியரின் யுத்தவீரர்கள்' என்று கப்பல் பயணிகளால் அழைக்கப்படும் வியப்பிற்குரிய சிப்பிமீன்கள் கூட்டங் கூட்டமாகச் செல்வதைத் தினமும் நாங்கள் காண்கிறோம். மேல் பாகத்திலுள்ள சிப்பியைப் பாய்மரம் போன்றும் இரண்டு கால்களையும் துடுப்பு போன்றும் பயன்படுத்திக் கொண்டு அழகாக நீந்திச் செல்கின்றன. மற்ற நான்கு கால்களையும் பாய்மரத்தைச் சரியான நிலையில் நிறுத்த பயன்படுத்துகின்றன. காற்று சுமாராக இருக்கும் போது அவை மகிழ்ச்சியாக இருக்கின்றன. பறவைகளைப் பற்றி அவை பயபப்டுவதில்லை.

ஏதேனும் கேடு இருப்பதாகத் தோன்றினால் பாய்மரத்தைச் சுருக்கிக் கொண்டு, தாம் பிழைக்கும் அளவு ஆழத்திற்குள் நீந்துகின்றன. இவ்வளவு சிறிய மீன்கள் எவ்வளவு அருமையாகக் கடலில் பாதுகாப்பாகச் செல்கின்றன!. கடலின் ஆழத்திற்குச் செல்பவர் கடவுளின் அரிய, பல வியத்தகுப் படைப்புகளைக் காணும் வாய்ப்பை இன்னும் அதிகமாகப் பெறுவர்.

சிலநாட்களுக்கு முன்பு ஒரு படகில் ஏறிக் கப்பலைச் சுற்றிப் பார்த்தேன். கப்பலின் பின்பகுதியில் உள்ள கம்பத்திற்குப் பதிலாகப் புதிய கம்பம் வைக்கப்பட்டுள்ளது. அது எவ்வாறு உள்ளது என்பதைத் தொலைவில் இருந்து பார்க்க மிகவும் ஆவல். பெண்கள் மற்றவர்களின் உடல்கட்டு, உடை, தோற்றம் ஆகியவற்றை அதிமாக உற்றுநோக்கி எடைபோடுவது போல கப்பலின் அமைப்பையும் தோற்றத்தையும் கணிப்பது வழக்கம். அதனால் கப்பல் ஒரு பெண் இனத்தைச் சேர்ந்ததாக நாம் கருதுகிறோம். கப்பலின் தோற்றத்தையும் அமைப்பையும் வைத்தே அதன் பணியாளர்களின் பண்பு தீர்மானிக்கப்படுவதால், கப்பலின் அமைப்புக்கும் அழகுக்கும் பணியாளர்கள் மிகுந்த அக்கறை செலுத்துவார்கள்.

நன்கு ஆராய்ந்து மனநிறைவு அடைந்த பின்பு, கப்பல் தலைவனும் சிறப்பு அலுவலரும் இரண்டு சோம்பேறிகளுக்குப் படகில் ஒரு முறை சென்று வர ஒப்புதல் வழங்கினார். அந்த இரு சோம்பேறிகளில் ஒருவர் மருத்துவர்; மற்றவர் அருட்பணியாளர். வியப்படையாதீர்! கப்பலில் இந்த இரண்டு பேரும் சோம்பேறிகள் என்றே அழைக்கப்படுபவர்! அதின்படி நாங்கள் இருவரும் படகில் ஏறினோம். ஆறு துடுப்புகளின் உதவியினால் பாய்ந்தது எங்கள் படகு. பல செய்திகள் எனக்குப் புதிதாகவே தோன்றின. கப்பலில் இருந்துப் பார்க்கும் போது நீலவண்ணமாய்த் தோன்றிய கடல் நீர் இப்போது மிகவும் கருப்பாகத் தோன்றியது. ஆழத்தை நினைத்து உள்ளம் பயத்தால் நடுங்கியது. ஒருவர் உள்ளே இறங்கினால் காலையில் இருந்து மாலை வரை இறங்கிக் கொண்டே போனாலும் தரையைத் தொட முடியாது. அவ்வளவு ஆழம்! அதே வேளையில் நீளமானதும் ஓரளவு உயரமுமான அலை ஒன்று கப்பல் பக்கம் இருந்து வந்தது. எங்கள் படகை அது கடந்த போது நாங்கள் மலையில் ஏறி இறங்குவது போன்று இருந்தது. சில நேரங்களில் குறுகிய பள்ளத்தாக்குகள் குறுக்கிடும் போது கப்பல் எங்கள் கண்களுக்குத் தென்படாது.

நாங்கள் ஓர் இடத்தின் அருகே வந்தோம். அந்த இடம் ஏறத்தாழ 'லாக் லோமாண்ட்' (Lock lomond) என்ற இடத்தின் வடபகுதியின் குறுக்கே உள்ள பகுதிபோல் இருந்தது. அந்த இடத்தில் நீரின் ஆழம் அளவிட முடியாதது. அருகில் மலைகள். எனவே நீர்ப்பகுதி மிகவும் இருண்டு காணப்பட்டது. எனினும் தனிமை எங்களுக்குப் பயங்கரமாக தோன்றவில்லை. இந்த

இடத்திலிருந்து கப்பல் பார்ப்பதற்கு வியப்பானதாகக் காட்சியளித்தது. அதன் ஏற்றத்தாழ்வையும் அசைவையும் நீரில் மெதுவாகச் செல்லுவதையும் பார்த்தால் கப்பல் தொடர்ந்து முன்னேறாமல் அதே இடத்தில் நிற்பது போன்றே தோன்றியது. அவ்வளவு அகலமான இடத்தில் கப்பல் மிகவும் சிறியதாகக் காட்சியளித்தது. பலமுள்ள காற்றும் அலைகளும் சில சமயங்களில் கப்பலைத் தாக்குவதைப் பார்க்கும் போது நான் அமைதியான இடத்தில் நம்பிக்கையுடன் இருக்கிறேன் என எண்ணினேன். ஓரளவு கப்பலின் அருகே வந்ததும், கப்பலை வட்டமிட்டோம். மிகுந்த மனநிறைவுடன் மீண்டும் கப்பலுக்குள் சென்றோம்.

அம்மாதத்தின் இருபதாம் நாள் நான் ஒரு மடல் எழுதி அதை எதிரே வந்த பிரெஞ்சு நாட்டுக் கப்பல் மூலம் அனுப்பி வைத்தேன். 'சுமத்திரா,' 'ஜாவா' இடங்களில் இருந்து புறப்பட்ட அக்கப்பல் 'மார்சேய்ல்ஸ்க்கு'ச் (Marseilles) சென்று கொண்டிருந்தது. நாங்கள் பேசிய பிரெஞ்சு அவர்கள் பேசிய ஆங்கிலத்தைப் போல மோசமாக இருந்தது. எனவே எங்களது எண்ணங்கள் அவர்களுக்குப் புரியவில்லை. அவர்களுடைய எண்ணங்கள் எங்களுக்கு ஓரளவு புரிந்தது. எனினும் நாங்கள் அனுப்பிய படகுக்காக அக்கப்பல் காத்திருந்தது. ஆடு (Sheep) என்ற ஒரு வார்த்தை மட்டும் சற்றுத் தெளிவாகக் கேட்டது. கப்பல் (Ship) என்ற சொல்லையே அவர்கள் அவ்வாறு ஷீப் (Sheep) என்று ஒலிக்கின்றனர் என்று எங்களில் சிலர் விளக்கம் அளித்தனர். ஏதோ உதவிக்கு அழைத்திருக்கலாம்.

முதலாவது சற்றுத் தொலைவில் காணப்பட்ட அக்கப்பல் எங்களுடைய கப்பலுக்கு எதிர்திக்கை நோக்கி வந்து கொண்டிருந்தது. ஏற்கனவே 'மதேய்ரா'வில் இருக்கும் போது எழுதிய மடல் முடிக்கும் தருவாயில் இருந்தது. எனினும் என் கண்களுக்கு முன்பு தோன்றிய பல உறவினர்களைப் பற்றிப் பின்குறிப்பில் எழுதி அதற்குப்பின் மடலை ஒட்ட வேண்டும் என்று நினைத்தேன். இதயம் பட பட என்று அடித்தது. நேரமே இல்லை. கப்பல் தலைவனிடம் மடலைக் கொடுத்த பின்பு திரு. அருண்டேலுக்கு (Arundel) ஒரு சிறிய குறிப்பு எழுதினேன். மேலே போய் அனுப்பியதும் படகு புறப்பட்டு விட்டது. பிரெஞ்சு கப்பல் மூலம் சுமார் 40 மடல்கள் அனுப்பப்பட்டன. அடுத்த நாள் 'லிவர்பூலு'க்கு ஒரு கப்பல் செல்லுகிறது என்ற செய்தி

எங்களுக்குத் தெரிந்திருந்தால் இவ்வளவு அதிகமான மடல்கள் பிரெஞ்சுக் கப்பல் மூலம் அனுப்பப்பட்டது தவிர்க்கப்பட்டிருக்கும்.

கடலில் இருகப்பல்கள் சந்திப்பது எளிதில் நடப்பதன்று. தரையில் பல செயல்கள் நிகழ்ந்துவிடுவதால் இப்படிப்பட்ட சந்திப்பு இன்றியமையாததாகக் கருதப்படுவதில்லை. ஆனால் கடலில் அப்படியல்ல. வாரக்கணக்கில் அல்லது மாதக்கணக்கில் கடலில் தனிமையாக இருப்பதால், வெகுதொலைவில் ஒரு கப்பல் காணப்படின், குறிப்பாக அது நம்மை நோக்கி வருவதாயிருந்தால், பயணிகளிடையே மிகுந்த மகிழ்ச்சி உண்டாகிவிடும். மடல்கள் வைத்திருப்பவர்கள் எளிதாகவும் நன்றாகவும் பார்க்கக்கூடிய இடத்திற்குச் சென்று கண்களைச் சுழித்துக் கொண்டோ அல்லது தொலைநோக்குக் கருவி மூலம் கப்பலைப் பார்த்து அதன் கொடி, வண்ணம், உருவம் ஆகியவை என்னென்ன என்பதைத் தோராயமாகச் சொல்லிக் கொண்டே இருப்பார்கள். மட்டுமன்று. வாழ்த்து மற்றும் கருத்து ஊடாடல் பற்றிய சுவையான உரையாடல்களும் தொடரும். முதன்முறையாக வீட்டுக்கு மடல் எழுதவேண்டும் என்று எண்ணியிருந்தவர்கள் கப்பலின் கீழ்ப்பகுதியில் மிகவும் விரைவாக எழுதிக் கொண்டிருப்பார்கள். விரைவாக எழுதுவதால் எழுத எண்ணியிருந்த செய்திகளில் ஏறத்தாழ பாதியை மறந்துவிடுவார்கள். எழுத்துப் பிழைகளுக்குப் பஞ்சமே இருக்காது.

பிரெஞ்சு நாட்டுக் கப்பல் மூலம் அனுப்பப்பட்ட மடல்கள் பெரும்பாலும் இப்படிப்பட்ட சூழ்நிலைகளின் பிண்ணனியில் எழுதப்பட்டதால் நான் கூறியபடியே இருக்கும். நீங்கள் அதை படித்துப் புரிந்து கொண்டால், உங்கள் விடாமுயற்சியைக் காட்டிலும் உங்கள் கூரிய அறிவுத்திறனைப் பாராட்டலாம். இதற்கிடையில் மற்றொரு கப்பல் சற்றுத் தொலைவில் தென்பட்டது. அது அமெரிக்கக் கப்பல். அது இலண்டன் துறைமுகத்திற்குச் செல்வதாயிருந்தாலும், நாங்கள் அக்கப்பலை விடச் சுற்றிச்செல்லும் பிரெஞ்சுக் கப்பல் மூலமே மடல் அனுப்பியிருப்போம். ஏனெனில் அவர்கள் தங்களைப் பற்றியும் தங்கள் பண்புகளைப் பற்றியும் பெருமை பாராட்டினாலும், அவர்களை நம்பமுடியாது. அவர்கள் மடல்களைத் திறந்துப் படிக்கின்றனர்.

சாதாரண மடல்கள் எனில் கடலுக்குள் வீசிவிடுகின்றனர். வணிகம் பற்றிய முக்கியமான மடல்களாயிருந்தால், அவற்றை

தங்கள் வணிக மேம்பாட்டுக்காகப் பயன்படுத்திக் கொள்கின்றனர். இது மெய்யா அல்லது பொய்யா என்பது தெரியாது. ஆனால் ஒன்றுமட்டும் உறுதி. மற்ற துறைகள் மூலம் அனுப்ப வசதி இல்லாவிட்டால் அமெரிக்க கப்பல் மூலமாகவே மடல்களை அனுப்புகிறோம். அன்று மாலை அமெரிக்கக் கப்பலை நாங்கள் முந்திச் சென்றோம்; மிகவும் நெருங்கி வந்தோம். அது தென்கடலில் திமிங்கலம் பிடிக்கும் கப்பல் என்று அறிந்தோம். கருத்து ஊடாடல் நடைபெற்றது.

திமிங்கலம் பிடிக்கும் கப்பலைக் கண்டது எங்களுக்குச் சற்று வியப்பாகவும் புதுமையாகவும் தோன்றியது. பொழுது அடைந்த வேளையில் காணப்பட்ட அக்கப்பலின் தோற்றமும், பணியாளர்களின் கருநிறமும் வியப்பான உடைகளும் எதைப்பற்றியும் அக்கறையோ அல்லது கவலையோ இல்லாத தோற்றமுமே வியப்பைத் தந்தன. நன்னம்பிக்கை முனைக்கு அருகில் இருந்தாலோ அல்லது புயல் வீசிக் கொண்டிருந்தாலோ அவர்கள் பறக்கும் ‘டச்சுக்காரர்கள்’ என்று நினைத்திருப்போம். ஆனால் அவர்கள் எத்தகு தீரச்செயலுக்கும் தாக்குதலுக்கும் ஆயதத்தமாக இருப்பவர் போலவே தோன்றினர். பொதுவாக, திமிங்கலம் பிடிப்போர் யாவருமே அப்பண்பு உடையவர்களாகவே இருப்பர். அவர்கள் தீய ஒழுக்கமுடையோர்; இரக்கமற்றவர்; அஞ்சா நெஞ்சர்கள்; மூடர்கள்; வீட்டை விட்டுக் கிளம்பி மூன்று நான்கு ஆண்டுகளாக அரிதான, பெருஞ்சிக்கலான செயல்களில் ஈடுபடுவதும் முரட்டு மனிதர்களுடன் அவர்கள் கொண்டுள்ள நெருங்கிய தொடர்புமே அவர்களை முரட்டுக் குணமுள்ளவர்களாக்கி உள்ளன.

சமூகத்தை இனிதாக்கும் செயல்களையும் வாழ்க்கையை தூய்மைப்படுத்தும் செயல்களையும் அவர்கள் அறிந்திலர். அவர்கள் சிறந்த எடுத்துக்காட்டாய் விளங்கும் தென்கடல் தீவினர் போலும் அல்லர்; பண்புள்ள கிறிஸ்தவ நாட்டைச் சேர்ந்தவர்கள் போலும் அல்லர். மாறாக சமுதாய நீதியை உருக்குலைக்கும் கொள்ளை நோய் போன்றவர்; அவமானத்துக்குரியவர். அருட்பணியார்களின் அரிய பணியை வீணாக்கச் செய்வது மட்டுமன்றி, அப்பணிக்கு இடையூறாகவும் உள்ளனர்.

மறுநாள், நான் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ள ‘லிவர்பூல் கப்பலை’ப் பார்த்தோம். பல மைல்களுக்கு அப்பால் வரும் வேளையிலேயே அது எங்கிருந்து வந்து கொண்டிருக்கிறது? அது

எங்கு செல்கிறது? அதில் உள்ள வணிகப் பொருள்கள் என்னென்ன? அக்கப்பலைக் கட்டியவர்கள் யார்? என்ற விவரங்களை அதன் தோற்றத்தில் இருந்து மனத்தில் நினைக்கத் தொடங்கினோம். எங்களது சிந்தனைகள் மிகவும் துல்லியமாக இருந்தன. மிகவும் பெரியதானதும் மிகவும் உறுதியாகக் கட்டப்பட்டதுமான அக்கப்பல் எங்களை நோக்கியே எழுச்சியுடன் வந்து கொண்டிருக்கும் காட்சியை மணிக்கணக்கில் பார்த்து களித்துக் கொண்டிருக்கலாம்.

என்னே அதன் எழுச்சி மிக்க தோற்றம்! அனுப்புவதற்காக இருந்த மடல்களை எடுத்துக் கொண்டு ஒருவர் படகில் சென்றார். செய்தி ஊடாடல் நடைபெற்றது. படகில் சென்றவர் திரும்பி வந்ததும், அக்கப்பலைப் பற்றிய அதிகமான செய்திகளைக் கேட்டறிந்தோம். அக்கப்பல் பம்பாயிலிருந்து வருவதாகவும் சூறாவளியினால் கரையில் ஒதுங்கிய கப்பல்களின் தலைவர்களே அதில் உள்ள பயணிகள் என்றும் பம்பாயிலும் சென்னையிலும் வாந்திபேதி நோய் பரவி உள்ளதாகவும் விரைவில் மற்றொரு இரங்கூன் போர் வரக்கூடும் என்பவையே அச்செய்திகள். அவை உண்மையாயிருப்பின் துயரச் செய்திகளே. பம்பாய் நகரத்திலிருந்து சில செய்தித்தாள்களும் கொண்டு வரப்பட்டன. அவை எங்களுக்கு நல்ல பொழுதுபோக்கு. அதன் அளவு சிறியது; சற்று முரடானது; பழுப்பு வண்ணமுடையது. எழுத்தின் அமைப்பு.....! பரிதாபம்! இது போன்ற செய்தித்தாளைப் பார்த்ததில்லை. பார்த்ததாக நினைவுமில்லை. ஆங்கிலத்தில் உள்ள அச்செய்திகள் பெரும்பாலும் விபத்துக்கள், ரூபக்கின் (Roebuck) சாரமற்ற பேச்சுக்கள், அவமானச் செயல்கள் பற்றியவையே.

தீவிரவாதமே அச்செய்தித்தாளின் அரசியலாகும். பயனற்ற செய்திகளைப் பற்றியும் வெறுப்புக்குரிய மனிதர்களைப் பற்றியும் கூறப்படும் செய்திகளில் தீவிரவாதக் கொள்கை எவ்வாறு தழைத்தோங்குகிறது என்பதை எண்ணும்போது சற்று வியப்பாகவே இருக்கிறது. அரசின் செயல்களையும் அரசு அலுவலர்களைப்பற்றியும் இதழ்களில் கருத்தாய்வு செய்யக்கூடாது. கழுத்தை நெரிக்கும் போதும் மூச்சுத் திணறல் ஏற்பட்டு மற்ற உயிரினங்கள் மரித்துப் போவது போல தீவிரவாதமும் இறந்துவிடும் என்று ஒருவர் எதிர்பார்க்கலாம். ஆனால் அது அவ்வாறு இல்லை. இரு செய்தித்தாள்களில் நாய்களின்

உரிமைக்கு ஆதரவு நல்கியே தலையங்கக் கட்டுரைகள் எழுதப்பட்டுள்ளன.

வெயில் காலத்தில் நாய்களை வெளியே விடக்கூடாது. மீறினால் அவை சுட்டுத் தள்ளப்படும் என்ற காவல்துறை அலுவலர்களின் கொடுங்கோன்மையான ஆணைகள் அக்கட்டுரைகளில் வன்மையாகக் கண்டிக்கப்பட்டிருக்கின்றன. தனது உரிமையாளரின் மடியில் இருந்து சிறிது நேரம் காற்று வாங்க வந்த ஒரு நாய் ஓய்வு பெற்ற கடைநிலைப் பணியாளரால் சுடப்பட்டு அது இரத்தவெள்ளத்தில் புரண்டு கொண்டிருக்கும் நெஞ்சைப் பிளக்கும் ஒரு படமும் அக்கட்டுரைக்குள்ளே வெளியிடப்பட்டிருந்தது. மற்றொரு செய்தித்தாளில் அருட்பணியாளர்களால் எந்தப் பயனும் இல்லை என்றும் அவர்கள் மற்றவர்களை ஆட்டிப்படைக்கும் சமயவெறியர், சோம்பேறித்தனமான ஆயர்கள் என்றும் குறிப்பிட்டதோடு எத்தீங்கும் இல்லாத குதிரைப் பந்தயத்தைக் கடிந்து கொள்ளும் பொறுமையற்ற அலுவலர்களைப் பற்றியும் களியாட்டங்கள் பற்றியும் செய்திகள் வெளியிடப்பட்டிருந்தன.

ஒக்கனல் என்பவர் தலைமை நீதிபதியாகப் பணி அமர்த்தப்பட்டுள்ளார் என்ற மிக முதன்மையான செய்தியை சுமந்து வரும் 'பைஸ்லீ' என்ற இடத்தில் உள்ள நிருபரின் மடல் வரும் வரை இதழை வெளியிடுவது நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது என்ற நான்காவது நாளேட்டில் வெளியிடப்பட்டுள்ள செய்திமூலம் ஒரு உண்மை புலனாகிறது. இங்கிலாந்து நாட்டின் ஓரிரு நாட்களே மக்கள் மனத்தில் நிலைத்திருக்கக் கூடிய சாரமற்ற செய்திகள் இந்தியாவில் எவ்வளவு சிறப்புச் செய்திகளாகக் கருதப்படுகின்றன! மட்டுமன்று.

இந்திய நாளேடுகளில் இந்தியா பற்றிய செய்திகள் அதிகம் வெளியிடப்படுவதில்லை. இங்கிலாந்து நாட்டுச் செய்திகளே முதன்மையான இடத்தைப் பிடித்துக் கொள்கின்றன. அதன் விளைவாக இந்தியாவில் வாழும் இங்கிலாந்து நாட்டினர் இந்தியரைப் பற்றி அதிகம் அறியாதிருக்கின்றனர். அவர்களைப் பற்றிய கவலையும் அவர்களுக்குக் கிடையாது. மேத்யூ ஹென்றியின் கூற்றுப்படி மனநிறைவற்ற அல்லது மகிழ்ச்சியற்ற சூழ்நிலையில் மனிதன் இருப்பதே தீவிரவாதம் வளரக் காரணம் என்று நினைப்பது தவறு; மாறாக அவனது பண்புநலன் மகிழ்வற்ற நிலைக்கு மாற்றப்படுவதே அதற்குக் காரணம்.

(இதற்கு முன்பு) நான் உங்களுக்கு எழுதிய பின்பு, கடற்பணியாளர்களுக்கு அருளுரை ஆற்றும் வாய்ப்பு எனக்குக் கிட்டவில்லை. மழை காலமானதினால் கப்பலின் மேல்தளத்தில் பொது வழிபாடும் நடத்தமுடியாத நிலை. மழை மேகங்களின் மிரட்டலினால் ஓய்வு நாளில் காலை, மாலை வழிபாடுகள் கப்பலின் உட்பகுதியிலேயே நடைபெற்றன. காலை மன்றாட்டு வேளையில் சுமார் 15 அல்லது 20 நிமிட நேரம் அருட்செய்தி அளிப்பேன். ஆனால் மாலையில் சுமார் முக்கால் மணி நேரம் அருட்செய்தியை வழங்குவேன். வருகையும் மிகவும் குறைவாகவே இருக்கும். வந்தவர்களும் செய்தியை ஆர்வத்துடனோ அல்லது கருத்தூன்றியோ கேட்பதுமில்லை. மக்கள் அருட்செய்தியைக் கண்டு கொள்வதில்லை என்ற ஹென்றி மார்ட்டினின் பட்டறிவு உண்மையிலும் உண்மை.

அவரது செய்தியில் ஒழுக்கத்திற்கும், கட்டுப்பாட்டிற்கும் அதிகஅளவு முதன்மை கொடுப்பது உண்மையாய் இருப்பினும், அவர்களுடைய அக்கறையின்மைக்கு அது உண்மையான காரணம் அன்று. அவருடைய காலத்திற்குப் பின் இந்திய மக்களிடையே ஒரு பெரிய மாற்றம். அவர் மீண்டும் உயிர் பெற்று வந்தால் அவர்களை அவரால் இனம் கண்டுகொள்ள முடியாது. நாளுக்கு நாள் மாற்றம்! சமுதாயத்தின் ஒவ்வொரு பிரிவினரிடையேயும் மாற்றம்!! இப்படிப்பட்ட திறந்த வாயிலைக் கொடுத்த, எதிர்ப்பாளர்கள் இல்லாத இந்த நிலைக்கு நான் இறைவனுக்கு மிகவும் நன்றியுள்ளவனாக இருக்க கடமைப் பட்டுள்ளேன். கப்பல் பணியாளர்களுக்கு அருளுரை வழங்க முடியாத நிலை இருந்தபடியினால் அதிகமாகச் சிறுகுறிப்புத் தாட்களை (துண்டுப் பிரதிகளை) அவர்களுக்குக் கொடுக்கத் தொடங்கினேன். அவைகளை அவர்கள் புரிந்து கொண்டனரோ இல்லையோ என்பது தெரியாது. ஆனால் ஒன்று மட்டும் உண்மை. அச்சிறுகுறிப்புத் தாள்களை அவர்கள் மிகவும் அக்கறையுடன் படித்தனர்.

வாட்டசாட்டமான முரட்டுக் குணமுள்ள அவர்கள் கப்பலின் முன்தளத்தில் அங்கும் இங்குமாக உட்கார்ந்து கொண்டு, செய்தித்தாள்களையும் இறைவனைப் பற்றிய அச்சிட்ட சிறுகுறிப்புத் தாள்களையும் சிறு புத்தகங்களையும் படித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். இது போன்று ஒவ்வொரு கப்பலிலும் நடக்கும் என்று கூற முடியாது.

கப்பல் தலைவன் பணியாளர்களை நல்ல முறையில் நடத்தும் போது தலைவனுக்கும் பணியாளருக்கும் இடையே நல்லுறவு உண்டாகிறது. அதன் விளைவாகவே இது போன்ற நல்ல செயல்கள் கப்பலில் நடைபெறுகின்றன.

கப்பலில் ஒழுங்காகவும் உறுதியாகவும் கூட்டங்கள் நடத்த முடியாமைக்குப் பல காரணங்கள் உண்டு. சான்றாக, சென்ற வாரம் ஓய்வு நாள் கூட்டத்தில் நான் அருளுரை ஆற்றிக் கொண்டிருக்கும்போது எதிர்பாராமல் புயல் கப்பலைத் தாக்கியது. கப்பல் பக்கவாட்டில் அசைந்தது. கூட்டத்தில் இருந்தவர்கள் கலைந்து அவரவர் இடங்களுக்குச் சென்றனர். விளைவு: அருளுரை இடையில் நிறுத்தப்பட வேண்டியதாயிற்று.

இப்பொழுது நிலநடுக்கோட்டைக் கடந்து செல்வது தொடர்பாகச் சில செய்திகளைக் கூற விரும்புகிறேன். குறிப்பிடத்தகுந்த அளவு மகிழ்ச்சியான நிகழ்வுகள் எதுவும் நடக்கவில்லை. எனினும் முதன்முறையாக நிலநடுக்கோட்டை கடக்கிறோம் என்ற சிறப்பான உணர்வு ஏற்படுகிறது. ஒரு மனிதனின் வாழ்வில் அது ஒரு சிறப்பான காலகட்டம் அல்லவா? 'ப்ளீமத்'திலிருந்து புறப்பட்ட நாளிலிருந்து 32 நாட்கள் கழிந்தபின் அக்டோபர் மாதம் 24 ஆம்நாள் அக்கோட்டை கடந்து சென்றோம். முன்னாட்களில் அதிக குறும்புத்தனமான விளையாட்டுகளும் கேலிச் செயல்களும் செய்வதுண்டு. கடற்கடவுள் பெயரைத் தாங்கிய நெப்டியூவும் அவரது குழுவினரும் வியக்கத்தக்க வகையில் ஆடையலங்காரம் செய்யப்பட்டு குடிவெறியாட்டத்துடன் காட்சியளிப்பர். புதிதாக வந்தவர்கள் குறிப்பிட்ட அதிகத் தொகை அவர்களுக்குக் கொடுக்காவிட்டால் அவர்கள் துன்புறுத்தப் படுவார்கள்; உதைபடவும் நேரிடும். சில கப்பல்களில் இன்னும் இந்த வழக்கம் இருந்து வருகிறது. ஆனால் நாங்கள் சென்ற கப்பலில் அப்படி எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.

அருட்பணியாளர் என்ற முறையில் எனக்கு விதிவிலக்கு அளித்திருக்கலாம். ஆனால் எங்களிடையே உள்ள சில பயணிகளும் பணியாளர்களும் இவ்வித இன்னலுக்கு உட்படுத்தப்பட்டுள்ளனர். பணியாளர்களின் வெறுப்புக்குள்ளான எவரும் இவ்வகை இன்னல்களைப் பட்டே ஆகவேண்டும். எதிர்த்தவர் பலர் தங்கள் உயிரை இழந்துள்ளனர். இவ்வகை இன்னல்களுக்கு இடம் கொடுத்தமைக்காக கப்பல் தலைவர்கள் பலர்மீது வழக்கு தொடரப்பட்டுள்ளது. இவ்வகைக் கொடூரச்

செயல்களுக்கு இடம் கொடுக்காததினால் சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்பு கப்பல் தலைவன் டார்பட்டின் (Tarbutt) பணியயாளர்கள் கலகம் பண்ணினர். சற்று தீங்கு இல்லாதவாறு அந்நிகழ்ச்சிகளைச் குறைத்தாலும் அவர்கள் மனநிறைவு அடையமாட்டார்கள்.

மாலை 8.00 மணிக்கு கடலிலிருந்து வந்த ஒரு முரட்டொலி எங்களை அதிரவைத்தது. அதற்கு மறுமொழியாக கப்பலின் பின்பக்கத்தில் இருந்து முதன்மை அலுவலரின் இடிகுரல் கேட்டது. காரணத்தை அறியாத சில பெண்கள் ஏதோ ஒரு கப்பல் நம் கப்பல் மீது மோதிவிட்டது என்று நினைத்து பயத்தில் மூழ்கினர். ஒரு வாரத்திற்கான நிகழ்ச்சிகளைப் பற்றி பேசிக்கொண்டும் அவர்களை எதிர்பார்த்துக் கொண்டிருந்த நான், என்ன ஒலி என்று கவனிக்க தொடங்கினேன். நல்லவேளையாக நான் 'கடி' என்ற கப்பற்பகுதியில் இருந்து கொண்டேன். வெளியே வந்திருந்தால், மேல்பாகத்தில் பொது உபயோகத்திற்காக வைக்கப்பட்ட வாளியில் உள்ள தண்ணீரினால் 'புத்துணர்வு' பெற்றிருப்பேன். கப்பலின் பெயர், கப்பலின் தலைவனின் பெயர், இங்கிலாந்தை விட்டுக் கிளம்பிய நேரம், சேரவேண்டிய இடம், புதிதாக வந்திருப்போர் ஆகியவை பற்றிய உரையாடல் நடைபெற்றுக் கொண்டிருந்தது. நெப்டியூனின் தூதுவரை வரவேற்கத் தயாராக இருக்க அழைக்கப்பட்டதால் உரையாடல் உடனடியாக நிறுத்தப்பட்டது. வினா தொடுத்தவர் கப்பலின் முன்பகுதியின் நுனியில் நின்றதால், அவரது குரல் அறைகுறையாக தொலைவில் இருந்து வருவது போல இருந்தது. இருபக்கத்தில் இருந்தும் மிகவும் உன்னிப்பாக கலந்துரையாடினர். மக்கள் கப்பலின் வாயிற்பகுதியில் அலைமோதினர். ஒரு மிதவையில் எரிகின்ற தார் போன்ற பொருள் கடத்தப்பட்டது. 'சீல்' வைக்கப்பட்ட ஒரு மடலை கொடுத்துவிட்டு ஒரு பணியாளர் எங்களிடமிருந்து விடைபெற்றார்.

மடல் கப்பல் தலைவனுக்கு அனுப்பப்பட்டது. நெப்டியூனுக்கு வயதாகிவிட்டதாகவும் சென்றவாரம் அதிக இடங்களுக்குச் சென்றதாலும் பிடிக்கமுடியாத அளவுக்கு எங்கள் கப்பல் மிக வேகமாகச் சென்றதாலும் எல்லோரும் நன்றாக இருக்கிறார்களா என்று தெரிந்திடவும் பெண்களுக்கு வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளவும் உடன் பணியாளர் ஒருவர் அனுப்பி வைக்கப்பட்டுள்ளார் என்று

குறிப்பிடப்பட்டிருந்தது. மடல் படிக்கப்பட்ட பொழுது புதிதாக அருகில் வந்தவர்களுக்கு நல்ல வரவேற்பு அளித்தது வாளியிலிருந்த தண்ணீர்! கப்பலின் மையப்பகுதியிலிருந்து புதிய பொறுப்பாளருக்கு உடனடி அழைப்பு வந்தது.

உடன்பணியாளர் உரத்த குரலில் அவரைப் பெயர் சொல்லி அழைத்தார். பொதுவாக கப்பலில் உள்ள அனைவருமே அவரின் ஆணைக்குக் கீழ்படிவர். ஆனால் இவர் ஒரு அறையில் வசதியாக ஒளிந்து கொண்டார். வெளியே வந்திருப்பாரேயானால் வாளியின் தண்ணீரால் நன்கு வரவேற்கப்பட்டிருப்பார். இந்தச் செயல்களில் யாருக்கும் மகிழ்ச்சியுமில்லை; பயனுமில்லை. எனினும் பணியாளர்களுக்கு நல்ல கேளிக்கை! இவர்கள் சற்று முதிர்ச்சி அடைந்தவர்களாயிருந்தும் குழந்தைகள் போடும் கூச்சலைக் கேட்டு நன்கு மகிழ்ந்தனர். நாங்கள் நிலக்கோட்டை விட்டு ஓரளவு தொலைவு கடந்துவிட்டோம் என்பதை நான் உங்களிடம் கொடுத்த வரைபடத்தில் இருந்து நீங்கள் அறிந்து கொள்ளலாம். தூய காற்று தொடர்ந்து வீசியதால் தட்பவெட்பமானி 80$^{0}$யைத் தொட்டாலும் போதுமான அளவு குளிர்ச்சியாகவே இருந்தது. நிலநடுக்கோட்டின் வடபகுதிக்கே உரித்தான புயல், மழை, புழுக்கம் இவை எதுவும் இல்லை. சென்ற மாதத்தை விட இப்போது பகல் நேரம் அதிகமாக இருக்கிறது.

பகலவன் தலைக்கு நேரே இருந்ததினால் மதியம் நிழல் விழவில்லை. ஒரு காலத்தில் இப்படி நிழல் விழாதிருந்தால் அது செய்வினை என்று நம்பப்பட்டது. என்னே பயங்கரமான எண்ணம்! என்னைப் பொறுத்தவரையில் இது மிகச்சிறந்த காலநிலை என்றே கூறலாம். இதமான, நலமானகாற்று; ஒழுங்கான வெயில்; பேரொளி; மேகமில்லாத வானம்; நீல வண்ணக் கடல்; என்னே அழகு! இந்தக் காலநிலையே நீடிக்க வேண்டும் என்பது என் அவா. ஆனால் விரைவில் இதை விட்டுக் கடந்து சென்றிடுவோம். ஏனெனில் தென்மேற்குத் திக்கை நோக்கி மிக விரைந்து பயணம் மேற்கொண்டிருந்தோம். இன்னும் ஒரு வாரத்தில் மிதவெப்ப ஆடையை அணிய வேண்டிய நிலை ஏற்படும்.

பூமியின் தென்பகுதி வடபகுதியை விட குளிராகவே இருக்கிறது. ஏனென்று அறியேன். தென்துருவத்தைச் சுற்றியுள்ள பரந்த பனிக்கட்டிப் பகுதியே இப்படிப்பட்ட தட்பவெப்பநிலைக்குக் காரணமாய் இருக்கலாம். ஆனால் இவ்வளவு பெரிய

பனிக்கட்டியுள்ள பரப்பளவு எப்படி உண்டானது என்ன காரணம் என்று யாருக்கும் தெரியாது. தென்பகுதியில் உள்ள அதிகமான கடற்பரப்பால் ஏற்பட்டிருக்கலாம் என்று சொல்லப்படுகிறது. ஆனால் குளிர்ந்த, பனிக்காலத்தில் கடல் தரைப்பகுதியை விட வெப்பமாக இருக்குமல்லவா! நாமறிந்தபடி இந்தப் பனிப்பாறைகளுக்குப் பின்புறம் 'அண்டார்ட்டிக் கண்டம்' இருக்கிறது.

## நவம்பர் 7ம் நாள்:

### மேற்குத் தீர்க்கரேகை 21° தெற்கு அட்சரேகை 19°

"மாற்றம் எல்லாவற்றையும் கடந்து செல்லும்." ஆனால் கப்பலில் எல்லாமே மாற்றந்தான். தென்கிழக்கு வணிகக் காற்றின் உதவியால் மிகவேகமாகத் தெற்கு நோக்கிச் சென்று கொண்டிருந்தோம் என்று இதற்கு முன் எழுதும்போது குறிப்பிட்டிருந்தேன். இக்காற்று தெற்கு அட்சரேகை 25° அளவுக்கு எடுத்துச் செல்லும் என்றும் அதன் காரணமாக 'டிரினிடாடை' (Trinidad) இன்னும் இரண்டு அல்லது மூன்று நாட்களில் சென்றடைவோம் என்று எதிர்பார்த்தோம். 'டிரினிடாட்' என்பது 'ஸ்பெயின் நாட்டி'ற்கு அப்பால் உள்ள ஒரு சிறிய தீவு. ஏற்கனவே இத்தீவு பற்றிய வியத்தகு செய்திகளைக் கேள்விப்பட்டிருந்ததினால் அதைக் காண மிகவும் ஆவலோடே இருந்தோம். ஆனால் ஐந்து நாட்களாகியும் அங்குச் செல்ல முடியவில்லை. அயர்லாந்து சூறாவளி வீசினால் மட்டுமே டிரினிடாடை மூன்று வாரங்களில் அல்லது ஒரு மாதத்தில் சென்றடையலாம் என்ற நிலை ஏற்பட்டுவிட்டது.

நிலநடுக்கோட்டைக் கடக்கும்போது நாம் பெற்ற சாதகமானவற்றை எல்லாம் இப்போது இழக்க நேரிடுகிறது. 'ஸ்லோ.' எனினும் நான் இதற்காகப் பெரிதும் வருந்தவில்லை. ஏனெனில் இப்போதிருக்கும் அமைதியான நிலை தட்பவெப்பத்தைப் பொருத்தவரை நிலநடுக்கோட்டின் அடுத்த பகுதியில் இருப்பதை விட வேறுபட்டதாகவே உள்ளது. காலநிலை குளிர்ச்சியாகவும் புத்துணர்ச்சியளிக்கக்கூடியதாகவும் உறுதியாகவும் உள்ளது. கடல் அமைதியாய் இருந்ததால் மாலையில் உள்ள கதிரவன் மறையும் காட்சிகள் முன்பு இருந்ததை விட மிகவும் அழகாக இருந்தன. வானம் தங்கப் பிழம்பு போலவும் பளிங்கு போன்றும் சிவந்தும் காணப்பட்டது. கடல் ஆங்காங்கே

மேடுகள் உள்ள வெள்ளிக் கேடயம் போன்று தோன்றியது. இவ்விரண்டைப் பற்றியும் போதுமான அளவு என்னால் விரித்துரைக்க இயலாது. எழுதுகோல்களுக்கும் இவ்வழகைத் தீட்டக்கூடிய ஆற்றல் கிடையாது.

சில சமயங்களில் இவ்வளவு அழகிய மாலைப் பொழுதைப் பற்றி ஈடுபாடு இல்லாதது போன்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. கதிரவன் காலையில் எழுவதைப் பார்த்த பலர் மறையும் அழகைக் காட்டிலும் எழுந்துவரும் அழகே சிறந்தது என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். இது உண்மையா இல்லையா என்பதை தீர்மானிக்க முடியாதவனாய் இருக்கிறேன். ஏனெனில் சோம்பேறித்தனம் எனது இவ்வாவலைத் தோற்கடித்து விடுகிறது. எவ்வளவோ முயன்றும் காலையில் எழுந்து கப்பலின் மேல்தளத்திற்குச் செல்ல என்னால் முடியவில்லை. அதிகாலை எழுந்திருப்பதை விட இரவு அதிக நேரம் விழித்திருப்பதையே இன்னும் என் மனம் நாடுகிறது.

சென்ற ஞாயிறு அருமையான வழிபாட்டுக் கூட்டம் கப்பலின் தளத்தில் நடைபெற்றது. கடலும் வானமும் மிகவும் அமைதியாக இருந்ததினால் பணியார்களுக்கும் அதிகப் பணி இல்லை. என் எண்ணங்கள் வீடு நோக்கிச் செல்ல ஆரம்பித்தன. ஓய்வுநாளின் அதே வேளையில் வீட்டினரும் மற்றும் பலரும் எவ்வளவு மகிழ்ச்சியுடன் இறைவனைப் போற்ற கோவிலுக்குச் செல்வர். இத்தூய நாளை இறைவனைப் போற்றுவதில், பாடுவதில் எப்படியெல்லாம் செலவிடுவர் என்பதை நினைக்கத் தொடங்கினேன்.

தகுந்த வேளைகளிலும் ஏற்ற சூழ்நிலைகளிலும் அவர்களோடு சேர்ந்து இறைவனைப் போற்றும் நல்வாய்ப்பை நான் நினைத்துப் பார்த்தேன். என்னைச் சுற்றியிருப்பவர்களுக்கு நன்மை செய்யவும் அவர்களோடு உறவாடவும் இறைவனின் நலமான அறிவுரைகளைக் கேட்கவும் எனக்குக் கொடுத்த நல்ல நேரத்திற்காகவும் இப்பொழுது நன்றியுடையவனாக இருக்கிறேன். கூட்டங்கள் களைப்பை அல்ல மகிழ்ச்சியையே அளிக்கிறது என்று பணியாளர் உணர்கின்றனர். தூய உடை அணிந்தும் இறைப்பற்றுடனும் மொத்தமாகக் கூட்டங்களுக்கு வருகின்றனர். தங்கள் வாழ்க்கையைத் தொடுவதினாலும் வாழ்க்கையோடு தொடர்பு இருப்பதினாலும் வேண்டுதலையும் அருளுரையையும் மிகவும் கூர்ந்து கேட்கின்றனர். இதனால் நானும் மிகவும் மகிழ்ச்சி

அடைகிறேன். பிற்பகல் வேளையில் நான் கொடுத்த சிறிய அச்சுத் தாட்களைப் படிப்பதைப் பார்க்கும்போது அவர்கள் பார்வையில் இருந்தும் தோற்றத்தில் இருந்தும் நல்ல பலன் இருக்கும் என்று தோன்றுகிறது. ஒரு பணியாளரிடம் நான் காணும் பண்புகள் எளிமையும் நோக்கத்தில் தெளிவும் ஆகும். அவர் தனது எண்ணங்களையே மறைக்க மாட்டார்; நினைப்பதையே செய்கிறார்; விளைவுகளைப் பற்றி கவலைப்படமாட்டார்.

இப்பண்புகளால் அவர் மற்றவர்களை விட எளிதில் மோசமான மாதிரிகளாலும் சோதனைகளாலும் கவரப்பட்டு வழிவிலகிப் போக வாய்ப்பு உள்ளது. ஆனால் அவற்றால் மற்றவர்களுக்கு எவ்வகைப் பாதிப்பும் இருக்காது. அதே வேளையில் சமயச்சார்பான செயல்களில் அவரின் முழுமையான அறிவும் உறுதியும் மற்றவர்களைக் கவர்ந்து இழுக்கும். மேலெழுந்தவாரியாகப் பார்ப்பவர்களுக்கு அவரிடம் அறநெறிக் கொள்கை எதுவும் கிடையாது என்று எண்ண இடமுண்டு. தரைப்பகுதியில் அதே சூழ்நிலையில் வாழும் மக்களை விட இதயத்தில் சிந்திக்கிற அவரிடம் அதிக நீதிநெறிக் கதைகள் உள்ளன. ஒரு வகையில் அவர் எழுச்சியும் இதயத்தில் சிந்திக்கிற உண்மையுள்ள நெறிகெட்டவர். மற்றொரு வகையில் மகிழ்ச்சியும் எழுச்சியும் உண்மையுமுள்ள கிறிஸ்தவர். கடற் பணியாளர்களுக்குச் சரியான அருளுரை இல்லை. எனவே அவர்கள் சாவைப் பற்றி நன்கு தெரிந்திருந்தும் அதைப்பற்றி ஆழ்ந்து சிந்திக்காதவர். அவர்கள் எவ்வகைக் கல்வி அறிவும் இல்லாமலேயே வாழ்வதால் சிந்தனையற்றும் கொள்கையற்றும் இருக்கின்றனர். எனவே வெளிநாட்டில் அவர்களது நெறியற்ற நடத்தையால் தாய்நாட்டிற்குக் களங்கம் ஏற்படுத்துகின்றனர்.

உள்நாட்டில் இருக்கும்போது தங்களுக்கு நன்றாகப் பழக்கப்பட்டுப்போன பெரும் புயல்களைக் காட்டிலும் கொடிய பாவங்களிலும் மதியற்ற செயல்களிலும் உழன்று தவிக்கின்றனர். இதில் வியப்பு ஒன்றுமில்லை. இளவயதிலேயே சமயத்தின் தாக்கத்திற்கு உட்பட வேண்டும். நற்செய்தியின் பட்டறிவையும் கிறிஸ்தவப் பழக்க வழக்கங்களையும் தங்களுடையதாக ஆக்கிக் கொள்ள வேண்டும். இப்படிச் செய்தால் இவ்வுலகின் இறுக்கமான வாழ்க்கைக்குள் காலடி எடுத்து வைக்கும் போது தற்சமயம் இருப்பதை விட சற்று அறிவுடனும் பொறுப்புடனும் நடந்து கொள்ளுவர்; எதிர்பாராது ஏற்படும் சாவிற்குத் தங்களை

பக்குவப்படுத்துவர்; எதிர்பாராது உண்டாகும் மேன்மைக்கும், இருக்கும் இடங்களில் தங்களை இவ்வுலக வாழ்க்கைக்கும் தகுதிப்படுத்திக் கொள்வர்; கிறிஸ்துவின் பணியாளர்களாக இருப்பார்கள் என்பதை ஓரளவு எதிர்பாகர்க்கலாம்.

மாலையில் வழக்கம் போல 'கடி' (Cuddy) என்ற கப்பற்பகுதியில் அருளுரை ஆற்றினேன். அக்கூட்டங்களுக்கு விருப்பமும் தகுதியும் உள்ள பணியாளர்களையும் அழைக்கலாம் என்று எண்ணினேன். இது தொடர்பாக கப்பல் தலைவனிடம் ஞாயிறு மாலை பேசினேன். ஆனால் அது அவ்வளவு வசதியாக இருக்காது என்ற எண்ணம் இருந்தது. கப்பலில் உள்ள 'கடி' என்ற இடம் சிறிதாய் இருப்பதே அதற்குக் காரணம் எனக் கருதப்பட்டாலும் முதன்மையான காரணம் வேறு. அது என்னவென்றால் பணியாளர்களுக்கு ஒரு நாளுக்கு ஒரு அருளுரையே போதுமானது. அதற்கு மேல் அருளுரையை அவர்கள் மீது திணிப்போமாயின் அது அவர்கள் தகுதிக்கு மிஞ்சியதாக இருப்பதால் எதிலும் அவர்களுக்கு ஈர்ப்பு இருக்காது. இந்தக் காரணம் நியாயமானது மட்டுமன்று; ஏற்றுக் கொள்ளப்படக்கூடிய ஒன்றும் கூட.

எனவே புதிதாக எதையும் அறிமுகப்படுத்தும் எண்ணத்தை முற்றிலுமாக விட்டுவிட்டேன். இரவுக்கூட்டங்களில் பங்குபெறும் அனைவருமே நன்கு கற்றவர்கள். எனவே அருளுரையை மிகவும் அக்கறையுடன் குறிப்பெடுத்துக் கொள்ள வேண்டும். குறை கூறுவார்களே என்பதற்காக அல்ல; அருளுரையின் பொருளும் நடையும் நன்றாக இருந்தால் அருளுரையை நன்கு உற்று நோக்குவர். அதன் விளைவாக அவர்கள் வாழ்க்கையில் நல்ல மாற்றத்தை எதிர்பார்க்கலாம். சான்றாக கடந்த பயணத்தின் போது இறைப்பணியாளர்கள் மூன்றுபேர் இக்கப்பலில் பயணம் செய்தனர். அதிகஅளவில் பயணிகள் இருந்தாலும் ஒருவரால் மட்டுமே கூட்டம் நடத்த முடிந்தது. இதன் விளைவாய் விரைவில் ப்ளேர் (Blair) போன்றோருக்கு விளக்கவுரை கொடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. அப்படிச் செய்யாதிருந்தால் மாலைக் கூட்டங்களை விட்டுவிட வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கும்.

மேலும் சமயத்தின் மீது நம்பிக்கை இல்லாத பலர் கப்பலில் உண்டு. எதிர்க்கவும் குறைகூறவும் எப்போது வாய்ப்புக் கிடைக்கும் என்று காத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் சண்டைப்பிரியர்கள். இறைபணியாளர்களிடம் சண்டை போட தயங்கமாட்டார்கள். அவர்களுடன் சொல்லாட இறைப் பணியாளர்கள் கட்டாயப்படுத்தப்படுவார்கள். அப்படிப் பட்டவர்களில் ஒருவர்தான் வெஸ்ட்மின்ஸ்ட்ரின் உறுப்பினருடைய சகோதரன் கேனல் இவான்ஸ் ஆவார். தனது சகோதரன் அரசியலில் விடுதலை விரும்பிபோல இவான்ஸ் சமயத்தில் தாரளமயக் கொள்கை உடையவர். ஆனால் இப்பயணத்தில் அப்படிப்பட்டவர் யாரும் இல்லை. எனக்கு முந்தினவருக்கு இருந்த விறுவிறுப்பு எனக்கு இல்லை. உண்மை. ஆனால் நான் அதை விட மிகவும் வசதியாக இருக்கிறேன். அப்படி யாராவது என் மனம் புண்படும் படி பேசுவதாய் இருந்தால் அது சமயத்தின் மீது நம்பிக்கை இல்லாதவருமில்லை அல்லது புரட்சிக்காருமில்லை. அறிவர் ப்ரௌன் மட்டுமே அப்படிப்பட்ட தொல்லை கொடுக்கக் கூடியவர்.

## இயல் : 2
# சென்னையில் நான் கண்ட மனிதர்கள்

1838ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 8ஆம் நாள் ஞாயிறு காலையில் சென்னை வந்து சேர்ந்தேன். அதற்கு முந்தின நாள் மாலை 'நகரி குன்று'களும் சோழ மண்டலக் கடற்கரையில் ஒரு கிராமத்தில் உள்ள தென்னந்தோப்பும் எங்களுக்குத் தென்பட்டன. கடற்கரையில் இருந்து சற்றுத் தொலைவில் காலைவரைக் காத்திருந்தோம். நங்கூரம் போட்டதும் 'வேப்பேரி'யில் உள்ள இலண்டன் இறைப்பணியாளர் திரு. ஸ்மித் வீட்டிற்கு அழைத்துச் செல்ல இரண்டு இளைஞர்கள் வந்தனர். சென்னைப் படகோட்டிகளால் வெளிநாட்டாருக்குக் கொடுக்கும் தொல்லைகளிலிருந்து எனக்கு விடுதலை. ஆங்கிலம் பேசும் இளைஞர்கள் வந்தது சென்னைக் கடலின் ஆபத்திலிருந்து தப்பிட பேருதவியாக இருந்தது. டேய்லர் மற்றும் ஜாண்சன் என்ற இரு இளைஞர்களும் ஸ்மித்தின் மாணவர்கள். பின்பு அவர்கள் இலண்டன் இறைப்பணி இயக்கத்தின் இறைப்பணியாளர்கள்.

நான் வந்து சேர்ந்த சில நாட்களுக்குப் பின் இவர்கள் இருவரும் தினமும் என்னிடம் கிரேக்கம், இலத்தீன் மொழிபற்றி விளக்கம் பெறத் தொடங்கினர். சில நாட்கள் சென்றபின் திரு. ட்ரூ (Drew) வீட்டிற்குச் சென்றேன். அவரும் இலண்டன் இறைப் பணியாளர் இயக்கத்தைச் சேர்ந்தவரே. ஓராண்டிற்கு மேலாக அவர் வீட்டிலே தங்கியிருந்தேன். அவர் ஒரு சிறந்த இறைப்பற்றுடையவர்; ஆர்வமிக்க இறைப்பணியாளர்; பண்பாளர்; சிறந்த தமிழ்மாணவர். அழியாப்புகழ் பெற்ற திருக்குறள் என்ற நூலை முடிக்க முடியாமற் போனாலும் அப்பதிப்பு ஐரோப்பிய தமிழறிஞர் வரிசையில் முதலாம் இடத்தைப் பெற்றுத் தந்தது. இந்த அழகிய மொழியையும் அதன் வளம் வாய்ந்த இலக்கியத்தையும் எந்த இறைப்பணியாளர் இயக்கத்தைச் சேர்ந்த இறைப்பணியாளர்களும் ஆழமாகக் கற்கவேண்டும் என்ற அக்கறை இல்லாதது எனக்கு வியப்பை அளிக்கிறது.

ஆங்கிலேயர்களில் அறிவர் போப் அதற்கு விதிவிலக்கு. தமிழில் முத்திரை பதித்த அறிவர் க்ரால் என்பவரும் மலையாளத்தில் முத்திரை பதித்த அறிவர் கூண்டர்ட் என்பவரும்

கன்னடத்தில் முத்திரை பதித்த கிட்டில் என்பவரும் ஜெர்மானியர்களே. திரு. ட்ரூ அவர்களுடன் நான் தினமும் நடத்திய கலந்துரையாடல் தமிழை நன்கு கற்க ஆக்கமும் ஊக்கமும் அளித்தது. அவரிடமிருந்து நேரடியாக எந்த உதவியையும் நான் பெறவில்லை. சமஸ்கிருதத்தை மிகவும் குறைவாகவே அவர் மதிப்பிட்டார். மொழி ஒப்பியலை அவர் அறவே வெறுத்தார்.

அந்நாட்களில் சென்னையில் உள்ள இறைப்பணியாளர் உலகத்தில் மிக இன்றியமையாதவர்களுள் ஒருவர் ஸ்காட்லாந்து பிரஸ்பிட்டிரியன் இறைப்பணியாளர் இயக்கத்தைச் சேர்ந்த ஜாண் ஆண்டர்சன். இந்து இளைஞர்களுக்கான முதல் ஆங்கிலப்பள்ளியை நிறுவிய சென்னையைச் சேர்ந்தவரும் உயர்குல மக்களிடையே கிறிஸ்தவத்தைப் பரப்ப ஆங்கிலக் கல்வியை முறையாகப் பயன்படுத்த முதலில் முயன்றவருமான அறிவர். டஃப் என்பவர் மற்றொருவர். அந்நாட்களில் ஆங்கிலக்கல்வி பற்றிக் கடும் சொல்லாடல் நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஆண்டர்சன்னும் அவரது நண்பர்களும் இறைப்பணியில் தங்கள் பாணியே உருப்படியானது என்று எண்ணினர். தாய்மொழி வழிக்கல்வி அவர்களுக்குப் பிடிக்கவில்லை. தாய்மொழி வழிக்கல்வியே சிறந்தது என்று கூறுவோர் ஆங்கிலப்பள்ளிகளின் செயல்பாடுகளைக் குறைகூறத் தொடங்கினர்.

அந்நாட்களில் மட்டுமன்று, அந்நாட்கள் முதல் எப்பொழுதுமே இருமொழி வழிகளையும் ஏற்பவன் நான். பாமர மக்களுக்கு தாய்மொழி வழிக் கல்வியும் உயர்குடி மக்களுக்கு ஆங்கில வழிக் கல்வியுமே சிறந்தது என்பது பட்டறிவு உணர்த்தும் உண்மை. ஜாண் ஆண்டர்சன்தான் அந்நாட்களில் சென்னையில் உள்ள மிகச் சிறந்த நண்பர். திறமையும் மனவலிமையும் அதிக ஈடுபாடும் உள்ள இறைப்பணியாளர்களுள் அவரும் ஒருவர். இறைப்பணியில் அவர் போன்று ஆர்வம் உள்ளவர் எவரும் இலர் என்பதில் இரண்டு கருத்துக்கள் இருக்கமுடியாது. ஆர்வம் என்பது அவரது பண்புநலன்களில் குறிப்பிடத்தகுந்தது.

அந்த ஆர்வத்தை அவர் இறைப்பணியில் மட்டும் காட்டவில்லை; மாறாக தான் செய்த, சொன்ன ஒவ்வொரு செயலிலும் அவ்வார்வத்தைக் காட்டினார். யாமறிந்திருந்த நாவன்மை உடையோர்களில் அவரும் ஒருவர். மற்றவர்களிடம்

விடைபெற்றுத் தூங்கச்செல்லும் வேளைகளிலும் மணிக்கணக்கில் தெருவில் நின்றுகொண்டு அவருடைய பேச்சுக்களை அடிக்கடி கேட்டிருக்கிறேன். அவரது சரளமான ஆர்வமுள்ள பேச்சை இரவு முழுவதும் விழித்திருந்து கேட்டிருக்கிறேன். அவரிடம் வலுவாகப்பேசிட நான் ஒருபோதும் துணிந்ததில்லை. எனினும் சில நேரங்களில் ஏற்பட்ட கடும் சொல்லாடலுக்கு என்னையே நான் குறைகூற வேண்டும். எனக்கு உடன்பாடு இல்லாத செய்திகளைப் பற்றித் தெரியாமல் ஓரிரு சொற்கள் வாய்தவறி விழுந்துவிட்டால் போதும்.... அவ்வளவுதான் அவரது மாணவர்களிடத்தில் அவர் காட்டும் பெண்ணின் மென்மையும் பாசமும் அவரது அடுத்த சிறந்த பண்புநலன்களில் அடங்கும்.

அவரிடம் படித்த இளைஞர்களில் பலர் மனமாற்றத்திற்கு இப்பண்புகளே காரணம் என்றால் அது மிகையாகாது. இது ஒரு பக்கம். மறுபக்கத்தில் அவருடைய மென்மை எதிர்ப்பைச் சந்திக்கும் போது ஆழ்ந்த உணர்வுகளாக மாறிவிடுகிறது. சென்னை மாநிலம் முழுவதும் அவரது புகழையும் செல்வாக்கையும் பறை சாற்றுவது 'ஆண்டர்சன் பள்ளியே'. இப்பள்ளியை அறியாதோர் இலர். இப்பள்ளிதான் நாளடைவில் கிறிஸ்தவக் கல்லூரியாக பிற்காலத்தில் வளர்ந்தோங்கியது.

ஒரு இறைப்பணியாளராக பலருக்கும் அறிமுகமானவராய் இருந்தாலும் அந்நாட்களில் வாழ்ந்த ஆங்கில மக்களிடையே அவருக்கு ஜாண் டக்கரைப் போல் அதிகச் செல்வாக்கு கிடையாது. ஜாண் டக்கர் C.M.S. தகவல் பரிமாற்றக் குழுவின் செயலர். ஆண்டர்சனைப் போல அமைதியானவர்; நன்கு கற்றவர்; பண்பாளர்; இறைப்பற்றுள்ளவர்; தூயவர்; புகழ்வாய்ந்த அறிஞர். சமயத்தலைவர் என்ற முறையில் சென்னையில் மட்டுமன்று சென்னை மாநிலம் முழுவதும்.... ஏன் நான் அறிந்த வரை இந்தியாவெங்கும் அவரது செல்வாக்கு மற்ற எவரையும் விட விஞ்சியதாகவே இருந்தது. அவரது C.M.S. இறைப்பணி சிற்றாலயம் உள்ள தெருவில் ஞாயிறு மாலை வேளைகளில் நிற்கும் எண்ணற்ற ஊர்திகள் சென்னையில் ஒரு கண்கொள்ளாக் காட்சி ஆகும். அச்சிற்றாலயம் இப்போது 'டக்கரின் சிற்றாலயம்' என்று அழைக்கப்படுகிறது.

அவரது செய்தியைக் கேட்க பலமுறை நான் சென்று இருக்கிறேன். அவரது அருளுரையின் கவர்ச்சி அவரது

நாவன்மையில் அல்ல. அவருடைய உண்மையிலும், ஆவிக்குரிய வாழ்விலும், கேட்கும்போது மனசாட்சியைத் தொடக்கூடிய திறமையிலுமே அடங்கியுள்ளது. தற்சமயம் யாருமே அறியாத 'கால்வினிஸ்டிக் ஹை சர்ச்மேன்' என்று அவரைப் போற்றுவதே பொருத்தமானது. எனினும் இங்கிலாந்தில் அவரது 'ஹை சர்ச்மேன்ஷிப்' முற்றிலுமாக மறைந்து விட்டது. நான் அறிந்த வரையில் இப்போது இங்கிலாந்தில் ஒரு தூய, எளிமையான 'கால்வினிஸ்டா'கவே இருக்கிறார். ஆனால் நான் குறிப்பிட்ட அந்த வேளையில் அவர் கெப்பிலின் (Keble) புதிய 'ஆக்ஸ்போர்டு பள்ளி' யைச் சேர்ந்தவராய் இருந்தார். கெப்பில் (Keble) டக்கருடைய நண்பர். இருவரும் ஒரே கல்லூரியில் படித்தனர் என்று நினைக்கிறேன். சென்னையில் தான் நிறுவிய சமயப் புத்தக்கடை மூலம், நாடுமுழுவதும் கெப்பில் எழுதிய 'கெப்பில் கிறிஸ்தவ ஆண்டு' நூலையும் அதைப்போன்ற மற்ற நூல்களையும் குவித்துவிட்டார்.

சென்யையில் நான் கண்ட சிறப்பான மனிதர் பேராயர் ஸ்பென்சர் அவர்கள். இவர் சென்னைப் பேராயர்; அண்மையில் சென்னைக்கு வந்தவர்; நல்லவர்; ஆனால் உணர்ச்சி வசப்படுபவர்; மனத்திடம் அற்றவர். இங்கிலாந்து நாட்டில் இருக்கும் வேளையில் உண்மையான பேராயர் டக்கர் தான். அவரைப் பற்றி அவரது ஆதரவாளர்கள் 'அவர் பேராயர் அல்லர்; சென்னைப் போப்' என்று அழைக்கின்றனர். தான் தவறு செய்யாதவர் என்ற எண்ணம் அவருக்கு உண்டு என்று மற்றவர்கள் எண்ணினாலும் அவர் போப் போன்று தனது உரிமையைக் காட்டியதும் இல்லை; பிடிக்காத கருத்துக்களை மற்றவர்கள் மீது திணித்ததும் இல்லை.

கிறிஸ்தவ சமயத்தின் உயிர்மீட்சிக் காலத்தில் சிறப்பு மிக்க பலர் 'ப்ளிமத் சகோதர்கள்' என்ற புது சபைப் பிரிவில் சேரவேண்டும் என்ற எண்ணத்தில் இருந்த போது அவர்களை அந்த இங்கிலாந்து திருச்சபையில் சேர்த்த பெருமை அவரையே சாரும். இந்தியாவில் அச்சபைப்பிரிவின் தலைவர் திரு. க்ரூவஸ் ஆவார். எனவே அவரது ஆதரவாளர்களும் சீடர்களும் 'க்ரூவைட்ஸ்' என அழைக்கப்பட்டனர். ஆவிக்குரிய செய்திகளில் பிரிவினையாளர்களை விட பலமடங்கு மேம்பட்டவராயிருந்தும் அவர் இங்கிலாந்து திருச்சபையின் உண்மையான, உறுதியான

உறுப்பினராகவே இருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. இந்த உறுதிப்பாடு பலரின் நன்மதிப்பைப் பெற்றது.

இந்தியாவுக்கு புறப்படும் முன் 'ப்ளீமத் சகோதர்கள்' பிரிவின் நிறுவனர்களுடன் ப்ளீமத்திலேயே பழகும் வாய்ப்புக் கிடைத்தது. எனினும் அவர்களின் போக்கு என்னைக் கவர்ந்து இழுக்கவில்லை. சென்னையை விட்டு நான் கிளம்புவதற்கு முன், பணித்தளம் புத்துயிர் பெற உதவி செய்ய கால்த்ராப் மற்றும் பிரதர்ட்டன் (Calthrop and Brotherton) என்ற இரு கேம்பிரிட்ஜ் அருட்பணியாளர்களை S.P.G. இயக்கத்தினர் அனுப்பி வைத்தனர். தென் பகுதிக்குப் போகும் வழியில் தஞ்சாவூரில் பிரதர்ட்டனைப் பார்த்தேன். ஆனால் கால்த்ராப்பைச் சென்னையிலேயே பார்த்திருக்கிறேன். திருப்பணி விடையாளர்களுக்கு பயிற்சி அளிக்க ஒரு பள்ளியை நிறுவவேண்டும் என்ற காரணத்திற்காக அவர் பணியமர்த்தப்பட்டிருக்கிறார். தகுதிவாய்ந்த அவர் அப்பணிக்கு மிகவும் பொருத்தமானவர். எனினும் இந்தியாவில் அவர் மிகவும் குறுகிய காலமே இறைப்பணி செய்தார். 'சலிவன் தோட்டம்' (Sullivan's Garden) என்ற நிறுவனத்தின் தொடக்கமே இதுதான்.

பிற்காலத்தில் திரு. சைமன்ஸ் தலைமையில் அது ஆல்போல் செழித்து உயரிய நிலையை அடைந்தது. இது S.P.G. அருட்பணிக்கு மிகவும் உதவியாக இருந்தது. க்ரே (Gray) என்பவர் C.M.S. அருட்பணிக்குப் பயன்படும் வகையில் அதுபோன்ற நிறுவனத்தை நிறுவினார். ஆனால் விரைவில் அது கைவிடப்பட்டது. அந்நாட்களில் திருநெல்வேலியில் அருட்பணியாளர்களுக்கான பயிற்சி அளிக்கப்பட்டது. அவ்வாறு பயிற்சி பெற்றவர்கள் அங்கேயே பணிக்கு அமர்த்தப்பட்டனர்.

அந்நாட்களில் சென்னையில் இருந்த இறைப்பணியாளர்களில் சிறப்பான மற்றொருவர் அறிவர் வின்ஸ்லோ. இவர் யாழ்ப்பாணத்தில் இருந்து வந்த அமெரிக்க இறைப்பணியாளர். சிறந்த தமிழ் அகராதியைத் தொகுத்துப் பதிப்பித்த பெருமை இவரையே சாரும். இவ்வறிஞர் மிகவும் திறமையுள்ளவர்; குறிப்பாக அருட்பணிகளில் சிறந்தோங்கியவர்; பலமுறை மணம் புரிந்தவர். ஆறு முறை என்று நான் நினைக்கிறேன். ஆனால் ஏழு முறை மணம் புரிந்திருக்கிறார் என்பர் பலர்.

யாழ்பாணத்திலிருந்து சென்னைக்கு வந்த மற்றொரு இறைப்பணியாளர் மருத்துவர் ஸ்கடர் ஆவார். இவர் ஒரு மருத்துவ இறைப்பணியாளர். உண்மையான அருட்பணியாளர். பல குழந்தைகளுக்கு தந்தை. இவருடைய மைந்தர்கள் அனைவருமே சிறந்த இறைப்பணியாளர்களாகத் திகழ்ந்தவர்கள். ஒரு காலத்தில் வடஆற்காடு இறைப்பணிக்குழுவின் மருத்துவப்பணி உட்பட அனைத்து அருட்பணிகளையும் இவரது மகன்களும் மருமகன்களுமே கண்காணித்து வந்தனர். பல ஆண்டுகளுக்குப் பிறகு அவர்களில் ஒருவர் என்னுடன் அருட்பணி செய்தார். மற்றவர்கள் தமிழ் விவிலியத்தின் திருத்திய பதிப்புப் பணியில் ஈடுபட்டனர். திரு. ஹன்ட் என்பவர் ஒரு அச்சாளர். சென்னையில் உள்ள அமெரிக்கன் இறைப்பணிக் குழுவில் ஆயரல்லாத அருட்பணியாளர். திருந்திய தமிழ் அச்சு எழுத்தை அறிமுகப்படுத்தியவர். அவர் அச்சிட்ட நூல்கள் மிகவும் சிறந்தவை. இந்தியாவில் அது போன்று அழகிய நூல்களை ஒருவரும் பார்த்தது இல்லை.

சென்னையில் உள்ள பேராயரின் உதவியாளர்களின் (சேப்ளான்) முதன்மை உதவி ஆயராக இருந்த ஹார்ப்பர் முதன்மையானவர். புகழ்பெற்ற ஜெர்மன் இறைப்பணியாளராகிய இரேனியஸை இங்கிலாந்து திருச்சபைக்கு எதிராக தனிச்சபை ஒன்றை நிறுவ வழிநடத்திய பெருமை இவருக்கு உண்டு. இரேனியஸின் மறைவிற்குப்பின் பிரிந்த இச்சபையும் இல்லாமல் போயிற்று. திரு. ஸ்பிரிங் என்பவர் மற்றொரு ஆயர். அவர் S.P.G. சென்னை பேராயக்குழுவின் செயலராகவும், விவிலியக்குழுவின் சென்னை கிளைச் செயலராகவும் இருந்தவர்.

அப்படிப்பட்ட இருபெரும் பணிகளை ஒருவர் வகித்தார் என்பதைக் குறுகிய மனப்பான்மை உடைய இந்நாட்களில் கனவிலும் கூட நினைத்துப் பார்க்க முடியாது. காட்டரில் (Cotterill) என்பவர் இன்னொரு ஆயர். இவர் பிற்காலத்தில் பேராயராக உயர்வு பெற்றவர். அந்நாட்களில் இவர் தீவிர நற்செய்தி மற்றும் C.M.S. அருட்பணியாளர். ஆனால் நாட்கள் ஆக ஆக அவர் உயர்திருச்சபையின் மிதவாதியாகி விட்டார். அவர் 'கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக' த்தில் கணிதப்பாடத்தில் 'ஆனர்ஸ் தேர்வி'ல் வெற்றி பெற்றவர். அவர் இந்தியாவில் நல்ல செயல்கள் ஏராளம் செய்வார் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் எதிர்பார்த்த அளவுக்கு அவர் செய்யவில்லை; குறுகிய காலத்திற்குள் நாடு

திரும்பினார். 'பிரைட்டன் கல்லூரி'யில் (Brighten College) சிறிது காலம் பணியாற்றினார். 'கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக'த்தில் 'ஆனர்ஸ்' தேர்வில் வெற்றி பெற்றவர். சீனியர் ரேங்லர் (Senior Wrangler) திருச்சபையிலோ அல்லது உலகிலுள்ள மற்ற துறைகளிலோ உயர்ந்த பணியிலிருக்க வேண்டும் என்பதற்கிணங்க, முதலாவது 'கிரஹாம்ஸ்டவுன் பேராயரா'கவும், பின்பு 'எடின்பர்க்' பேராயராகவும் பணியமர்த்தப்பட்டார். இப்பதவியில் இருக்கும் போது அவர் தனது திறமையைக் காட்டினார்.

அந்நாட்களில் சென்னையில் மிகச்சிறந்தவரும் அதிக செல்வாக்கும் உள்ள ஆயரல்லாத வணிகர் கேப்டன் சி.ஏ. ப்ரெளன் ஆவார். பின்பு அவர் 'ஜெனரலா'கப் பதவி உயர்வு பெற்றார். இவர் **1845** முதல் **1859** வரை அரசின் இராணுவச் செயலராகப் பணியாற்றியவர். அவர் வீட்டில் வெள்ளிக்கிழமை மாலை தேநீர், விவிலிய விளக்கம் மற்றும் மன்றாட்டுக் கூட்டங்கள் ஆண்டாண்டு காலமாக நடைபெற்று வந்தன. சென்னையைச் சேர்ந்த இறைப்பற்று மிக்க அனைவரும் அங்குக் கூடுவது வழக்கம். பாதுகாப்புப் பணியில் உள்ளவர்களும் 'C.M.S.'இல் உள்ளவர்களும் மட்டுமே அதில் பங்கெடுத்தனர். சமுதாயத்தில் கீழ்நிலையில் உள்ளவர்கள் அக்கூட்டங்களுக்கு அழைக்கப் படுவதில்லை. அவர்களும் அச்சிறப்புக் கூட்டங்களில் பங்குபெற வேண்டும் என்ற அக்கறையும் கொள்ளவில்லை. இக்கூட்டங்களின் கலந்துரையாடல்கள் அம்மக்கள் புதுப்பெலன் அடைய மிகவும் பயனுள்ளதாயிருந்தன. மட்டுமல்ல. உறுதியான நம்பிக்கையற்றோரும் தங்கள் உறுதியான நம்பிக்கையை அறிக்கையிடவும் இக் கூட்டங்கள் ஊக்கம் அளித்தன. எனினும் ஒரு தவறான சமயக் கொள்கைக்கு ஊக்கம் அளிப்பதாக எனக்கு தோன்றியது.

வெள்ளிக்கிழமைக் கூட்டங்களில் பங்குபெற்றவர்கள் மட்டுமே அருள்பெற்றவர்கள், மற்றவர்கள் உண்மையான கிறிஸ்தவர்கள் அல்ல என்பதே அத்தவறான கொள்கை ஆகும். முழுக்க முழுக்க நற்செய்திப்பணி பற்றிய கொள்கை மட்டுமே கற்பிக்கப்படுகிறது என்பதால் அக்கூட்டங்களுக்கு எதிர்ப்பு தெரிவிக்க இயலாது. ஏனெனில் அந்தக் காலத்தில் சமயத் தொடர்பான வேறு எந்தச் செயலும் ஏற்புடையதன்று என்ற நம்பிக்கை இருந்தது. தன்னாதிக்க கொள்கையும் தாங்கள்

மட்டுமே தூயவர்கள் என்று பாராட்டிக் கொள்வதும் எதையும் தங்கள் விருப்பப்படியே செய்வதும் அக்காலத்தில் உள்ள நற்செய்திப்பணி கற்பிக்கும் பள்ளி உறுப்பினர்களின் மிகப்பெரிய குறைபாடுகள் ஆகும். அவர்களை மாற்றுவது முடியாதது. எனினும் 'ஆக்ஸ்போர்டு பள்ளி' செல்வாக்கு (பிரபலமாக) பெறத் தொடங்கியது. இந்த பள்ளியின் (School) மூலம் வெளியிடப்பட்டுள்ள அனைத்து நூல்களையும் அதன் நோக்கத்தையும் இயக்கத்தினர் என்ன செய்ய விடுகிறார்கள் என்பதை தொடக்கத்திலிருந்தே நான் நன்கு அறிவேன். நற்செய்திப்பணி இயக்கத்தினருக்கும் ஆக்ஸ்போர்ட் இயக்கத்தினருக்கும் இடையே கொள்கை மோதல் ஏற்படும் என எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். எவரும் தங்கள் கொள்கையை விட்டுக் கொடுப்பார்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆனால் இரண்டு இயக்கங்களின் முன்னணி வீரர்களுக்கு இடையே யாரேனும் உடன்பாடு செய்வித்து இணக்கத்துடன் வாழ வழி வகுப்பர் என எதிர்பார்த்தேன்.

சென்னையில் இருக்கும் வரை தமிழை நன்கு கற்பதே எனது முதன்மையான பணி. செந்தமிழையும் தமிழ் இலக்கியத்தையும் பேச்சு மொழியையும் நன்கு கற்க வேண்டுமென்பதே எனது நோக்கம். அச்சமயம் நான் பெற்றிருந்த தமிழறிவு நான் விரும்பியபடி முழுமையாக இல்லாதிருந்தாலும் பிற்காலத்தில் எனக்கு பேருதவியாக இருந்தது. சரியான ஒலிப்புமுறையை அறிந்து கொள்ள நான் எடுத்த முயற்சிக்கு அளவே கிடையாது. சென்னையில் இருக்கும் போது பெரும்பாலும் வீட்டில் பணி பார்க்கும் தாழ்ந்தகுல மக்களிடையே எனது நற்செய்திப்பணி நடைபெற்றது.

எனக்கு முன்பிருந்த திரு. ட்ரூ அவர்கள் சென்னைப் பகுதிகளில் உள்ள உயர்ந்த குல இந்து மக்களிடையே செய்தி கொடுத்து பழக்கப்பட்டவர். நான் அவ்வாறு செய்ய முயற்சிக்கவில்லை. ஏனெனில் எனக்கு அந்த அளவு தமிழ் தெரியாது. மேலும் அப்படிப்பட்ட இறைப்பணி நோக்கமற்றதாக இருக்கும்; நிலைத்த பயனைக் கொடுக்கும் என்று எதிர்பார்க்கமுடியாது என்று நினைத்தேன். உண்மையைக் கூறுங்கால் திரு. ட்ரூ அல்லது மற்ற இறைப்பணியாளர்கள் செய்யும் இவ்வகை இறைப்பணியினால் எவ்வகைப் பயனும் இருந்ததாக நான் சென்னையில் இருந்த நாள்வரை

கேள்விப்பட்டதே இல்லை. ஆங்கிலப்பள்ளிகள் மூலமாகவே உயர்குல இந்துக்கள் நற்செய்தியைப் பெறமுடியும் என்பதில் உறுதியான நம்பிக்கை எனக்கு உள்ளது. கல்கத்தாவில் அறிவர். டஃப் அவர்களால் தொடங்கப்பட்ட ஆங்கிலப் பள்ளியையும், பின்பு மற்ற இறைப்பணியாளர்களால் இந்தியாவில் பற்பல இடங்களில் தொடங்கப்பட்ட ஆங்கிலப்பள்ளிகளையும் அதற்குச் சான்றாக எடுத்துக் கொள்ளலாம். எனக்குத் 'திறந்த வாசல்' வீட்டுப்பணியாளர்களே. இது மிக எளிமையான இறைப்பணியாகத் தோன்றினாலும் அதை நான் என் முழுபலத்தோடும் ஊக்கத்தோடும் செய்தேன். சபையை மையமாக வைத்து இறைப்பணி செய்வதே எனது திட்டம். இந்தியாவில் உள்ள எனது உதவியாளர்களின் உதவி மூலம் தனிப்பட்ட ஆட்களை சபைக்கு வரும்படி அழைப்பதுதான் என் முதல் பணி. கிறிஸ்தவ தாக்கத்தால் அவர்கள் இழுக்கப்பட்டவுடன் அவர்களுக்கு நற்செய்தி கொடுக்கப்படும். அதற்குப் பின்பு திருமுழுக்குக் கொடுக்கப்படும். தங்கள் உறவினர்களையும் நண்பர்களையும் அழைத்துவரும்படி அவர்களைை ஊக்கப்படுத்துவேன். இவ்வாறு செய்வதின் மூலம் அழைத்து வரப்பட்ட ஒவ்வொருவரின் ஆன்மாவும் மற்றவர்களுக்கு மைய ஒளியாகத் திகழும். நான் எதிர்பார்த்ததை விட இத்திட்டம் பெரு வெற்றியைக் கொடுத்தது. விரைவில் இடங்கொள்ளாத அளவுக்கு சபையினர் கூடினர்.

இத்திட்டத்தின் சிறப்பு கொள்கைகள்: முதலாவது நமது இறைப்பணிக்குச் சபையை மையமாக கொள்ளவேண்டும் என்பதும் மனமாற்றம் அடைந்த ஒவ்வொரு பேரையும் அவர்களது நண்பர்களுக்கு நற்செய்தியை அறிவிக்க அவர்களை ஊக்குவிக்க வேண்டும் என்பதும் இத்திட்டத்தின் கொள்கைகள் ஆகும். இந்தக் கொள்கைகளைத்தான் திருநெல்வேலியில் கடைபிடித்தேன். உலகத்தில் எந்தப் பகுதியிலும் இம்முறையைப் பயன்படுத்தலாம். நல்ல பலன் கிடைக்கும்.

திருநெல்வேலி இறைப்பணி இயக்க வரலாற்றில் மிகச் சிறந்தவர்களுள் அறிவர். ஜி.யு. போப்பும் ஒருவர். இவர் கல்விப்பணியில் சிறந்த தொண்டாற்றியவர். சாயர்புரம் கல்வி நிலையத்தை உருவாக்கியவர் இவரே. அறிவர். போப் வெஸ்லியன் இறைப்பணியாளர் இயக்கத்தின் சார்பாக 1839ஆம் ஆண்டு சென்னைக்கும் S.P.G. சார்பாக 1842ஆம் ஆண்டு

திருநெல்வேலிக்கும் வந்தார். நாசரேத்தின் துணைப்பகுதியான சாயர்புரத்தில் பணி செய்ய அமர்த்தப்பட்டார்.

சாயர்புரம் சென்றடைந்ததும் இரண்டு செயல்களில் தீவிரமாகச் செயல்பட்டார். அவையாவன : i) ஆற்றுக்கு வடக்கே உள்ள மாவட்டத்தின் பல பகுதிகளிலும் சபைகளையும் பள்ளிகளையும் உருவாக்குவது. ii) தான் வாழும் இடத்தில் ஒரு நிறுவனத்தை உருவாக்குவது. அதின்படி சாயர்புரத்தில் உள்ளூர்வாசிகளுக்குப் பயிற்சியும் உயர்கல்வி வழங்கும் ஒரு பள்ளியையும் உருவாக்கி அதைக் 'கல்விக்கூடம்' என்று அழைத்தார். இவர் பல துறைகளில் திறமை படைத்தவர்; நினைத்ததை முடிப்பவர்; துடிப்புள்ள ஆசிரியர். தன்னுடைய மாணவர்களுக்குச் செந்தமிழ் மட்டுமன்றி கிரேக்கம், இலத்தீன், எபிரேயம் ஆகிய மொழிகளையும் கற்றுக் கொடுத்தார். அவர் எபிரேய மொழியில் புலமை பெற்றவர்; கணிதத்தை ஆர்வமுடன் கற்பிக்கும் ஆசிரியர். அவர் மாணவர்களுக்குப் பகலில் மட்டுமல்ல தினமும் இரவில் 8:00 முதல் 11:00 மணி வரை கற்பித்தார். சேய்மூர் (Seymour) என்ற பார்வையற்ற கேம்பிரிட்ஜ் பட்டதாரி தற்கசாஸ்திரம், வரலாறு, தத்துவம் ஆகிய பாடங்களைக் கற்பித்து அறிவர் போப்புக்கு உதவினார். இறையியலில் பல பிரிவுப்பாடங்களையும் கற்பிப்பதில் போப் மிகுந்த ஆர்வம் காட்டினார். சென்னை மாநிலத்தில் உள்ள வேறு எந்தப் பல்கலைக்கழகத்தையும் விட ஒரு சிறந்த பல்கலைக்கழகமாகச் சாயர்புரத்தில் உள்ள கல்விக்கூடத்தை உருவாக்க வேண்டும் என்பது அவரது நோக்கம்.

சில சூழ்நிலைகள் ஏற்றுக்கொள்ளத்தகாதவனவாக இருந்திராவிட்டால் போப் தனது நோக்கத்தை வெற்றிகரமாக நிறைவேற்றி இருப்பார். அவற்றில் ஒன்று இடப்பொருத்தமின்மை. சாயர்புரம் தூத்துக்குடியைப் போன்று ஒரு நகரமன்று. அது ஒரு சிறிய கிராமம். மற்றொன்று அங்குள்ள பல மாணவர்களின் அறிவுக்கூர்மையின்மை ஆகும். மாணவர்களில் பெரும்பாலானோர் முன்னேற்றமடையாத இனத்தைச் சேர்ந்ததே இதற்குக் காரணம். எனவே அச்சமயம் ஒரு பல்கலைக்கழகமாக அல்ல. மாறாக ஒரு சிறந்த ஆரம்பப் பள்ளியாக்க வேண்டுமென்பதே அவரது விருப்பம். தங்கிப்படிக்கும் மாணவர்களுக்காவும் முதல்வர் மற்றும் உதவி ஆசிரியர்களுக்காகவும் அவர் கட்டிய கட்டிடங்கள் மிக அழகானவை. சுமார் ஆறு ஆண்டுகள் கழிந்தபின் போப்

சாயர்புரத்தை விட்டுச் சென்றபோது எவ்வகை உதவியும் இல்லாமல் இவ்வளவு குறுகிய காலத்தில் மிக அதிகமாகச் செய்த அவரது தொண்டுகளை வியந்து பாராட்டினர்.

அச்சமயம் இருந்த சென்னைப் பேராயச் செயற்குழு அவரிடம் பரிவுகாட்டியது. மட்டுமன்றி அவருக்கு நல்ல ஊக்கம் அளித்தது. அவரது செயல்களைக் கண்டு பொறாமைப்பட்டு அவரது திட்டங்களுக்கு முட்டுக்கட்டை போடாமல் எல்லாவகையிலும் அவருக்கு உதவியாகவே இருந்தது. ஒழுக்கம் சார்பானவற்றில் அவர் சற்றுக் கடுமையாக இருந்தது அவரது முழு வெற்றிக்குத் தடையாக ஆனது

சின்னச் சின்ன எதிர்ப்புகள் அவ்வப்போது ஏற்பட்டு இறுதியில் அவர் சாயர்புரத்தை விட்டு வெளியேறியதற்கும் அதுவே காரணம். தனது உடல்நலத்தைப் பேண இங்கிலாந்து சென்றார். மீண்டும் இந்தியாவுக்கு வந்தபோது அவர் தஞ்சாவூருக்குச் சென்றார். அங்கு அவர் ஒரு கல்லூரியை ஏற்படுத்தினார். இப்போது அது ஒரு முதல்நிலைக் கல்லூரியாகத் திகழ்கிறது. உடல்நிலை மீண்டும் பாதிக்கப்படவே அவர் உதகைமண்டலத்தில் தானாகவே ஒரு பள்ளியை நிறுவினார். அதற்குப்பின் பெங்களூரில் உள்ள 'பிஷப் கார்ட்டன் பள்ளி'யின் தலைமைப் பொறுப்பை ஏற்றார். உடல் நிலை மீண்டும் பாதிக்கப்படவே, அவர் இங்கிலாந்து செல்லவேண்டிய நிலை ஏற்பட்டது. இந்தியாவுக்குத் திரும்பி வருவதாக இல்லை. எனினும், 'ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழக'த்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியதால் இந்தியாவோடு தொடர்பு வைத்திருந்தார். அவரை அவ்வப்போது தனது தூதுவராக S.P.G. அனுப்பியது.

'சென்னைப் பல்கலைக்கழகம்' அவரை ஆட்சி மன்ற உறுப்பினராக்கிப் பெருமைப்படுத்தியது. காண்டர்பெரியின் தலைமைப் பேராயர் 'டாக்டர் ஆஃப் டிவினிட்டி' என்ற மதிப்பியல் பட்டத்தை அவருக்கு அளித்தார். S.P.G. இயக்கத்தோடு தொடர்புடைய பல இந்தியர்கள் அவருடைய முயற்சியாலும் செல்வாக்காலும் நல்ல நிலையில் இருக்கிறார்கள். அவர் பெயர் திருநெல்வேலி மக்களால் ஒரு போதும் மறக்கப்படுவதில்லை.

1815ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் முதலாம் நாள் பிறந்து, ஆக்ஸ்போர்டில் தர்க்கக் கல்லூரியில் முதுகலைப் பட்டம் பெற்ற அருட்திரு. ஆல்ஃபிரட் சைமைண்ட்ஸ் 1841இல் சென்னைக்கு

வந்து பேராயர் கார்ரியின் இடைநிலைப் பள்ளியின் முதல்வராகப் பொறுப்பேற்றார். சிறந்த ஆசிரியரான அவர் விரைவில் அப்பள்ளியை உயர்நிலைக்குக் கொண்டு வந்தார். சீக்கிரத்தில் S.P.G. யின் சென்னைத் திருமண்டலச் செயற்குழுவில் சேர்ந்தார். ஆர்ச்டீக்கன் ஓய்வு பெற்ற பின் இவர் அச்செயற்குழுவின் செயலர் ஆனார். இந்தியாவில் இருக்கும் வரை அவரே அப்பணியை வகித்தார். தன்னுடைய தொய்வில்லாத ஆர்வத்தாலும், தான் அறிமுகப்படுத்தியுள்ள அறிவுள்ள வழிகளினாலும் இயக்கத்திற்கும் இறைப்பணிக்கும் சிறந்த தொண்டுகள் புரிந்துள்ளார். தனது பதவிக்காலத்தில் இறைப்பணி செய்திடும் இடங்களை அடிக்கடி பார்வையிடுவார். மட்டுமல்ல. அங்கேயே சில நாட்கள் தங்கியிருந்து இறைப்பணி செய்யப்படும் ஒவ்வொரு இடத்தின் நிலைமைகளையும் தேவைகளையும் அறிந்து கொள்ளுவார். எனினும் சென்னை மாநிலத்தில் கல்விக்காக அவர் ஆற்றிய பணியே மக்கள் மனத்தில் நிலைத்திருந்தது.

சென்னைப் பல்கலைக்கழகத்தின் தொடக்கக் கால ஆட்சிமன்ற உறுப்பினரான இவர், மிகச்சிறந்த அறிவாளிகளில் ஒருவர்; பொதுச்சேவையில் ஆர்வம் மிக்கவர். பல்கலைக்கழக அமைப்பின் வளர்ச்சிக்கும், பல்கலைக்கழகத்தோடு இணைந்த கல்லூரிகளின் முன்னேற்றத்திற்கும் பள்ளிகளின் வளர்ச்சிக்கும் அரும்பாடுபட்டவர்; 'சலைவன்ஸ் தோட்டம்' (Sullaivan's Gardens) என்ற நிறுவனத்தை நிறுவியவர். இங்கு இறையியல் கல்வியும் பொதுக்கல்வியும் இணைந்தே கற்பிக்கப்பட்டன. அதன் விளைவுகள் இங்குப் படித்த அருட்பணியாளர் பலர். தற்சமயம் மதச்சார்பற்ற பொதுக்கல்வி முறை மற்ற கல்லூரிகளுக்கு மாற்றப்படவே, சலைவன்ஸ் கார்டன் முழுக்க முழுக்க ஒரு இறையியல் கல்லூரியாகவே ஆனது.

திரு. சைமண்ட்ஸ் கட்டுப்பாட்டில் இருந்தபோது மக்கள் மனத்தில் நீங்கா இடம் பெற்ற இது போன்ற சிறந்த கல்லூரி நாட்டில் வேறு எதுவும் கிடையாது. அவரிடம் பல நல்ல பண்புகள் உண்டு. அவர் இறைப்பணியாளர்களிடம் கொண்ட பரிவே அவைகளில் முதன்மையானது. அவர் சென்னைத் திருமண்டலச் செயற்குழுவின் செயலராக இருந்தபோது எல்லோருக்கும் பிடித்தமானவர்; கட்சிக்கொள்கைகளின் தாக்கத்தினால் அதிகமாகச் செயல்படமாட்டார். காரணம் அவரது பரந்த உள்ளம்;

எல்லோருக்கும் நண்பர். எல்லா இறைப்பணியாளர்களுமே இக்கருத்தை உடையவர்கள்.

சமுதாயத்திலும் சரி, சமயம் தொடர்பான செயலாயினும் சரி, சென்னையில் அவருக்குச் சிறந்த செல்வாக்கு உண்டு. பொதுநலத் தொண்டிற்கான எந்த இயக்கத்திலும் சிறப்பாகப் பங்காற்றுவார். சிறந்த அருட்பணியாளர்; சிறந்த பேச்சாளர்; சொல்லாடலில் மிகச்சிறந்தவர்; அருமையான செயல்வீரர். இவரது திறமைகளைக் கண்டறிந்த அன்றைய ஆளுநரான நேப்பியர் பிரபு தனது நேர்முக உதவியாளராக (சேப்ளான்) அவரைப் பணியமர்த்தினார். ஒருமுறை நலமற்று இருந்ததால் தாயகம் சென்றார்.

இறுதியாக உடல்நலமின்மையால் 1871ஆம் ஆண்டு இங்கிலாந்துக்குத் திரும்பினார். அச்சமயம் இறைப்பணியாளர்கள் அவரை உதவிச் செயலராக்க வேண்டுமென்றும், அவ்வாறு செய்தால் அவரது பழுத்த இந்தியப் பட்டறிவும் முதர்ச்சி பெற்ற எண்ணங்களும் கருத்துக்களும் பெரிதும் தொடர்ந்து பயன்படும் என்றும் தங்கள் இயக்கத்தினரை வேண்டிக் கொண்டனர். ஆனால் இந்த வேண்டுகோள் ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்பது வருத்தத்தை அளிக்கிறது. இங்கிலாந்தில் 'வால்மர் சபை' அருட்பணியாளராகப் பணியாற்றினார். எங்குச் சென்றாலும் அவருக்கு தனிமதிப்பு உண்டு. எனினும் உடல்நலக்குறை வினிமித்தம் தீவிரமாகப் பணியாற்ற முடியவில்லை. உடல்நலம் அதிகமாகப் பாதிக்கப்பட்டு 1883ஆம் ஆண்டு மறுமைக்குட் பட்டார். அவரது புகழ் அவருடைய மாணவர்களின், நண்பர்களின் மனத்தில் என்றும் நிலைத்திருக்கும்.

நான் நேரில் கண்டு பழகிய அறிவர் ஹென்றி பவர் (Henry Bower) சிறப்புக்குரியவர் ஆவார். நான் சென்னை வந்தபொழுது அவர் சென்னையில் இருந்தார். பின்பு தமிழ் விவிலிய மொழிபெயர்ப்பு மற்றும் தமிழ் ஜெபபுத்தகத்தின் கடைசி பதிப்பின் சிறப்புத் திருத்துநராகவும் பணியாற்றியுள்ளார். தமிழ்மொழியை நன்கு கற்க வேண்டும் என்ற எனது முயற்சியில் செம்மொழித்தமிழையும் பேச்சு மொழித் தமிழையும் கற்பதில் அவர் எனக்கருளிய உதவி அளவிட முடியாதது. முதலில் நான் அவரைக் கண்ட பொழுது அவர் இலண்டன் இறைப்பணி இயக்கத்தைச் சார்ந்தவராகவே இருந்தார். பின்பு இங்கிலாந்து

திருச்சபையில் இணைந்து S.P.G. இயக்கத்தின் இறைப்பணியாளராக அருட்பொழிவு செய்யப்பட்டார். தஞ்சாவூர் அருகே வேதியர்புரம் என்ற இடத்தில் ஒரு கல்லூரியை நிறுவி அதின் முதல்வராகப் பொறுப்பேற்றுக் கொண்டதே அவர் ஏற்றுக்கொண்ட முதல் பணி ஆகும்.

கல்லூரிக்காகத் தெரிந்தெடுக்கப்பட்ட இடம் அவ்வளவு பொருத்தமானதாக இல்லை. அம்மாவட்டத்தில் உள்ள இடங்கள் அடிக்கடி தண்ணீரில் மூழ்குவதால் அந்த இடம் ஈரமாகவும் சுகாதாரக் கேடுள்ளதாகவும் இருந்தது. எனவே அந்த இடம் கைவிடப்பட்டது. வேதியர் (மதப்போதகர்) என்ற சொல் பெஸ்கி திருப்பணிவிடையாளர்களுக்கு எழுதிய 'வேதியர் ஒழுக்கம்' என்ற புகழ்பெற்ற நூலிலிருந்து உதவித்திருப்பணிவிடையாளர்களுக்கென எடுக்கப்பட்டது. அமைப்பிலும் கருத்திலும் உரோமாபுரி தாக்கம் இருந்தாலும் வேத விளக்கத்தில் அவர் எழுதிய சிறந்த நூலாகவே அதை நான் கருதுகிறேன்.

ஒரு காலத்தில் பல 'புராட்டஸ்டான்ட்' இறைப்பணி இயக்கங்களில் அருளுரைக்கு உள்நாட்டு மக்களால் அதிகம் பயன்படுத்தப்பட்டது. இப்பொழுது அந்தநூல் எல்லோராலும் மறக்கப்பட்டுவிட்டது. அதற்குப் பின்பு சென்னை வேப்பேரியில் உள்ள S.P.G. இயக்கப் பொறுப்பாளராகப் பணியமர்த்தப்பட்டார். அச்சமயம் மிகவும் பயனுள்ள பல இறையியல் நூல்களை வெளியிட்டார். தரமான தமிழ் விவிலியத்தின் மொழியாக்கத்தை வெளியிட ஏற்படுத்தப்பட்ட குழுவுக்குத் தலைமைப் பொறுப்பை ஏற்றார். அந்நாள் முதல் இறுதிவரை அப்பணியிலேயே செலவிட்டார். அந்த மொழியாக்கத்தின் வரலாறு என்பது அறிவர் பவரின் வாழ்க்கை வரலாறு என்றால் மிகையாகாது.

1885ஆம் ஆண்டு பாளையங்கோட்டையில் விண்ணுலகிற்கு அழைக்கப்பட்டார். அவரது கல்லறை மிலிட்டரி லைன்ஸ் கிறிஸ்து ஆலயம் வளாகத்தில் இருக்கிறது. கல்லறைத் திருடர்களின் கண்களுக்குத் தப்பியதற்காகக் இறைவனுக்கு நன்றி. கல்வியில் புலமை வாய்ந்தவரை, நல்ல இறைப்பணியாளரை, பெருமையற்ற இறைப்பற்று மிக்கவரை கட்சிக் கொள்கையினால் சிறிதும் கரைபடாதவரை இழந்த துயரத்தில் மக்கள் மூழ்கினர். 'இறையியலில் அறிவர்' என்ற பட்டத்தை அளித்து 'காண்டர்பரியின் ஆர்ச் பிஷப்' அவரைப்

பெருமைபடுத்தினார். இப்பட்டத்தைப் பெற்ற முதல் ஐரோப்பிய ஆசிரியர் இவரே.

நான் சென்னை வரும்போது அறிவர் சார்லஸ் எக்பர்ட் கென்னற் அங்கு இல்லை. எனினும் இடையன்குடியில் எனக்கு உதவி செய்ய உதவி திருப்பணிவிடையாளராகச் சிறிது காலத்திற்குப் பின் பணியமர்ததப்பட்டதால் அவரோடு நன்கு பழகும் வாய்ப்புக் கிடைத்தது. நான் சென்னை வந்த போது அவர் கல்கத்தாவில் உள்ள பேராயர் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தார். அங்குப் பேராசிரியர் ஸ்ட்ரீட் அவர்களின் அருளுரையாலும் செல்வாக்காலும் கவரப்பட்டதின் விளைவாக 'ஹை சர்ச் ஸ்கூலி'ன் கொள்கைகளையும் பழக்க வழக்கங்களையும் அப்படியே ஏற்றுக்கொண்டது மட்டுமின்றி இறுதிவரை அவைகளில் நிலைத்திருந்தார். அவருடைய தன்மை வேறு; பவருடைய தன்மை வேறு. இருவருமே நல்ல அறிவாற்றல் பெற்றவர்கள். இருவருமே மக்களின் நன்மதிப்பைப் பெற்றவர்கள். அறிவர் பவர் இந்தியாவைப் பற்றி நன்கு கற்றறிந்தவர். ஆனால் அறிவர் கென்னற் Patristic Scholar; வழிபாட்டு முறையில் வித்தகர்; சிறந்த கொள்கை விளக்குநர்.

சலிவன் கார்டன்ஸ், சென்னையில் உள்ள S.P.G. இறையியல் கல்லூரியில் முதல்வராக ஆற்றிய பணியே அவரது வாழ்வில் சிறப்புப் பணியாகும். அவரது ஆழ்ந்த இறைப்பற்றும் தாம் உண்மை என்று நம்பியதில் உறுதியுடன் நிலைத்து நிற்கும் பண்பும் மாற்றுக் கருத்துடைய மற்றோரின் நன்மதிப்பைப் பெற்றுத் தந்தன. அவரது கருத்தை ஏற்றுக்கொண்டவர்கள் அவர்மீது அளவில்லா நன்மதிப்பும் நம்பிக்கையும் வைத்திருந்தனர். அவரது காலம் வரை 'ஹை சர்ச்'சின்' சென்னைத் திருமண்டலத்தின் தன்னிகரற்ற தலைவராகவே கருதப்பட்டார்.

அறிவர் பவருக்குப் பின் அறிவர் ஹென்னற்றிற்கு இறையியல் அறிவர் பட்டத்தை அளித்து கான்டர் பெரியின் ஆர்ச் பிஷப் அவரைப் பெருமைப் படுத்தினார். 1884ஆம் ஆண்டு இறுதியில் சென்னையில் மறுமைக்குட்பட்டார். இரண்டு பேரும் அவரவர் துறையில் மாசற்ற மணிகளே. அவர்களுக்குப் பின்னால் அவர்களிடத்தைப் பிடிக்க தங்களைப் போன்ற சிறந்த மனிதர்களை விட்டுச் செல்லவில்லையே என்பதை எண்ணும் போது சற்று வருத்தமாகவே இருக்கிறது.

சென்னையில் வாழ்ந்த மூன்றரை ஆண்டு காலமும் இறையியல் கல்வியிலேயே நேரத்தையும் சிந்தனையையும் செலுத்தினேன். இந்நாட்களில் இறையியல் இலக்கியத்தில் ஏறத்தாழ எல்லாத் துறைகளிலும் உள்ள சிறந்த நூல்களைச் சேர்த்தேன். நைசீனுக்கு முந்திய அருட்பணியாளர்கள் எழுதிய மூல நூல்கள், ஐரோப்பாக் கண்டத்தில் உள்ள சிறந்த லூத்தர் மற்றும் கால்வினசை சார்ந்தவர்களின் நூல்கள், மிகச்சிறந்த சுத்தாங்கத்தினர் கரோலினியன் கொள்கையில் எழுதிய நூல்கள் அவை.

18ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட மற்ற சிறந்த இதுவரை வெளிவந்த நூல்கள், சிறந்த திருச்சபை வரலாற்று நூல்கள், சிறந்த விவிலிய விளக்க நூல்கள் ஆகியவை அவற்றுள் அடங்கும். மற்றவர்கள் எழுதிய சில நூல்களையும் நான் அந்நாட்களில் விருப்பத்துடன் படித்தேன். கட்வாத் (Cudworth) இயக்கத்தைச் சேர்ந்த பிளேட்டானிக் சமய வல்லுநர்கள் என்று கருதப்பட்டவர்களே அவர்கள்.

அவர்களில் ஒருவர் கேம்பிரிட்ஜைச் சேர்ந்த ஜாண் ஸ்மித் ஆவார். அன்பு, மகிழ்ச்சி, சமாதானம் ஆகிய மூன்றும் எல்லாச் சிக்கல்களுக்கும், சமயச்செயல்களுக்கும் அப்பாற்பட்டவை என்ற உண்மையை நான் அவரிடமிருந்து கற்றதினால் அவருக்கு நன்றியுள்ளவனாக இருக்க வேண்டியது எனது கடமை. (இவ்வுண்மையை நான் தூய பவுல் அடியாரிடத்திலிருந்தும் நமது கடவுளிடமிருந்தும் கற்றிருப்பினும்) எனினும் கொள்கை தொடர்பான உண்மைகளையோ அல்லது அந்த உண்மைகளால் பொதியப்பட்ட மற்ற செயல்களையோ நான் புறக்கணித்தேன் என்று பொருள் அல்ல. அப்படி நான் செய்யவில்லை. நான் சேகரித்துள்ள நூல்கள் திருச்சபையைப் பற்றியும் பேராயர்களைப் பற்றியும் தூய திருவிருந்து பற்றியும் என்ன கூறுகின்றன என்பதைக் கருத்துடனும் ஆழ்ந்த சிந்தனையுடனும் படித்து ஒப்பிட்டுப் பார்த்து உண்மையைக் கண்டுகொள்ள வேண்டுமென்பதே எனது சிறந்த நோக்கமாகும். இவைகளை நன்கு கற்றபின் நான் கீழ்கண்ட முடிவுக்கு வந்துவிட்டேன். என்னதான் குறைகள் இருப்பினும் உலகில் உண்மையை நாடி அலைவோருக்கு இங்கிலாந்து திருச்சபையை விடச் சிறந்த சபை எதுவும் இல்லை.

தொடக்கக் காலத்திய தாராளமயம் மற்றும் சுதந்திரமான கருத்து ஆகிய இரண்டையும் இக்காலத்திலும் வெளிப்படுத்துவது இங்கிலாந்து திருச்சபை மட்டுமே. இங்கிலாந்து திருச்சபை செத்து விட்டது அல்லது செத்துக் கொண்டிருக்கிறது என்று பலர் நினைத்தாலும் நான் அப்படி நினைக்கவில்லை. மாறாக இங்கிலாந்து திருச்சபையில் முழுவதுமாக என்னை இணைத்துக் கொள்ள முடிவு செய்துள்ளேன். அப்போஸ்தலர் காலத்திலிருந்து இங்கிலாந்து திருச்சபை பரம்பரைச் சொத்தாகப் பெற்றது உறுதியான நம்பிக்கையும் மும்முனை அருட்பணியுமே. மேலும் அவ்வப்போது ஏற்படும் எண்ணற்ற உயிர்மீட்சிகளையும் சீர்திருத்தங்களையும் ஏற்றுக்கொள்ளவும் தாங்கிக் கொள்ளவும் வலிமை பெற்ற திருச்சபை இங்கிலாந்து திருச்சபை ஒன்றே.

இங்கிலாந்து திருச்சபையில் இணைந்ததும் அதன் இறைப்பணியாளர் இயக்கமான S.P.G. யில் சேரத் தீர்மானித்தேன். அச்சமயம் மிகவும் பழமையான அவ்விறைப்பணியாளர் இயக்கம் கிட்டத்தட்ட மூழ்கிவிட்ட நிலையில் இருந்தது. எனினும் இப்பொழுது நிலைத்து நிற்கும் பன்முகப் பழம்பெரு கிறிஸ்தவத் திருச்சபைகளுள் எவ்வாறு இங்கிலாந்து திருச்சபை சிறந்ததாக நான் கருதுகிறேனோ அவ்வாறே சிறந்த அமைப்பும் கொள்கைகளும் கொண்ட S.P.G. இயக்கம் பன்முக இங்கிலாந்து திருச்சபையின் சிறந்த சார்பாளர் என்றே கருதுகிறேன்.

மற்றவை இதை விட மிகச் சிறந்ததாக இருந்தாலும் அவைகள் தங்களுக்கென தனிக் கொள்கைகளையும் தத்துவங்களையும் வைத்துக் கொண்டு, திருச்சபைக்குள் இன்னொரு திருச்சபையை ஏற்படுத்த நினைப்பதால் அவ்வியக்கங்களில் சேர எனக்கு விருப்பமில்லை. அவ்வியக்கத்தில் உயிர் இருப்பதற்கான அறிகுறிகள் எதுவும் இல்லாதிருந்தாலும், எவ்வாறு இங்கிலாந்து திருச்சபை உயிர்மீட்சி அடையும் என்று எண்ணினேனோ, அவ்வாறே S.P.G. இயக்கமும் உயிர்மீட்சி பெற வாய்ப்பு உள்ளது என உறுதியாக நான் நம்பினேன்.

இந்த இரண்டு நம்பிக்கைகளிலும் நான் ஏமாற்றம் அடையவில்லை. இவைகள் இரண்டிலும் ஏற்பட்ட உயிர்மீட்சி நான் எதிர்பார்த்ததை விட அதிக எழுப்புதலாக இருந்தது. எனது வழியைப் பின்பற்றி இங்கிலாந்து திருச்சபையில் சேர நான்

ஒருபோதும் முயற்சிக்காவிட்டாலும் எனது முடிவு இலண்டன் இறைப்பணியாளர் இயக்கத்திலும் வெஸ்லியன் இறைப்பணியாளர் இயக்கத்திலும் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது. ஏனெனில் முதலாவது குறிப்பிட்டுள்ள இயக்கத்தைச் சேர்ந்த நான்கு இறைப்பணியாளர்கள் அல்லது உதவி இறைப்பணியாளர்கள் அறிவர் பவர் தலைமையிலும் இரண்டாவது குறிப்பிட்டுள்ள இயக்கத்தைச் சேர்ந்த ஆறு இறைப்பணியாளர்கள் அறிவர் போப் தலைமையிலும் விரைவில் இங்கிலாந்து திருச்சபையில் இணைந்துள்ளனர்.

குறிப்பு:– இங்கிலாந்து திருச்சபையில் சேர்ந்தது எதிர்பார்த்தபடி வருங்காலப் பேராயரின் வாழ்க்கையில் ஒரு சிறந்த நிகழ்ச்சி ஆகும். தனது வாழ்க்கைக் குறிப்பால் எழுதப்பட்டதை விட அதிகச் செய்திகள் தனது நண்பர்களுக்கு எழுதிய மடல்களில் அடங்கியுள்ளன. தனது சகோதரிக்கு எழுதிய மடல்களில் இருந்து சில பகுதிகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**சென்னை. பிப்ரவரி 28, 1841**

"உனது முந்திய மடலின் செய்தி மிகுந்த வியப்பை அளிக்கிறது. நான் இங்கிலாந்து திருச்சபையில் சேர்ந்துவிட்டேன் என்று யார் பரப்பினார்? அச்செய்தி கிளாஸ்கோவில் இருந்து இதுவரை இங்கு வந்து சேரவில்லை. அச்செய்திக்கு எவ்வகைச் சான்றும் இல்லை. நான் வீட்டில் இருக்கும்போது இருந்த நிலையை விட வேறு எந்த மாற்றமும் நிகழவில்லை. பழைய கத்தோலிக்கக் கிறிஸ்துவத்தில் இருக்க வேண்டுமென்பதே என் உள்ளான ஆசை. இங்கிலாந்து திருச்சபையும் அதே கொள்கைகளைக் கடைபிடித்ததினால் அதைப் போற்றினேன். அதுதான் என்னுடைய நிலை. சுதந்திர திருச்சபை (Independent Church) மற்றும் தீவிர சீர்திருத்தவாதிகளின் அருளுரையில் தாழ்மை, தன்கட்டுப்பாடு, உண்மையான அன்பு ஆகியவற்றில் குறைபட்டிருப்பதை எண்ணினேன். இன்னும் அவ்வாறே எண்ணுகிறேன்.

இறைவனுடைய வாக்கியங்களை மிகவும் உன்னிப்பாகப் படித்ததினாலும், மூன்று ஆண்டுகளாக பழங்கால அருளுரையாளர்களைப் பற்றிப் படித்ததினாலும் நான் ஏற்கனவே

ஐயுற்ற ஒரு உண்மை, இதுவரை நான் பெற்ற பயிற்சி யாவும் ஒருதலைப்பட்சமானது; தேசியக் கண்ணோட்டத்தை நோக்கமாகக் கொண்டது உறுதி செய்யப்பட்டது. கிளாஸ்கோவை விட்டு புறப்பட்டபோது நான் எந்தச் சுதந்திரத் திருச்சபைக்கும் கட்டுப்பட்டவன் அல்லன். எனவே என் மனசாட்சிப்படி நினைக்கவும் செய்யவும் எனக்கு முழுஉரிமை உண்டு. தூயவர்கள் நம்பிக்கையைப் பற்றி எவ்வாறு நன்றாகப் புரிந்து கொண்டார்களோ, அப்படிப்பட்ட திறனை இறைவனின் அருளால் நான் பெறும் மட்டும் எவ்வளவு அதிகமாக நான் படிக்கிறேனோ அந்த அளவுக்கு நான் விழிப்பாக இருந்து எனது கருத்துக்களை மனத்திற்குள்ளே வைத்துக் கொள்ளுவது தேவை என எண்ணினேன். அதன்படி, எந்த அருளுரையிலும் எனது கருத்துக்களை அறிமுகப்படுத்தவும் இல்லை, குறிப்பிடவும் இல்லை.

மிகவும் நெருங்கிய நண்பர்களிடம் மட்டுமே எனது கருத்துக்களைப் பகிர்ந்துள்ளேன். திரு. ட்ரூ என்பவருக்குப் பின் வந்தவர். அசெம்பிளி இறைப்பணி இயக்கத்தைச் சேர்ந்தவர். எனது நெருங்கிய நண்பர். நான் சுந்திரச்சபையைச் சேர்ந்தவன் அல்லன் என்பது அவருக்குக் கூடத்தெரியாது. இங்கிலாந்து திருச்சபையைச் சேர்ந்த உறுப்பினர்கள் எவருக்கும் நான் அவர்கள் பக்கம் இருப்பது தெரியாது.

நான் இங்கிலாந்து திருச்சபையில் சேரப்போகிறேனா இல்லையா என்பதையும் நான் யாரிடமும் சொல்லமுடியாத நிலையில் உள்ளேன். அப்படி இருக்கையில் நான் ஏற்கனவே சேர்ந்து விட்டேன் என்று யார் உன்னிடம் கூறினார் என்பது பெரிய வியப்பை அளிக்கிறது. இதுபற்றி நான் உன்னிடம் நேரடியாகப் பேசினால் உனது கருத்து என்னுடைய கருத்துக்கு ஒத்ததாய் இருக்கும் என்று நான் உறுதியாக நம்பினாலும், இதைப் பற்றி நான் மடல் எதுவும் எழுதவில்லை. காரணம், இப்படிப்பட்ட செய்திகளைப் பற்றி மடல் எழுதினாலும் பயனுள்ளதாக இருக்காது என்பது உறுதியாகத் தெரியும். ஏனெனில் மடல் எழுதப் போதிய நேரம் எனக்குக் கிடைப்பதில்லை. அது மட்டுமன்று. எதிர்ப்பாளர்களின் எண்ணங்களும் வெறுப்புணர்வுகளும் உன்னைச் சூழ்ந்துள்ளன என்பதை நான் அறிவேன்.

ஸ்காட்லாந்து நாட்டு மக்களும் இறைப்பணியாளர்களும் தங்களுக்குப் புதுமுறையான வழிபாடு வேண்டும் என்பதில் உறுதியாய் இருக்கின்றனர். பணிப்பழு அதிகமாக இருப்பதால் எனது பணி பற்றியும், நாம் இருவரும் ஒருமித்த கருத்து கொண்டுள்ள செய்திகளைப் பற்றியுமே மடல்களில் எழுதுகிறேன். திருச்சபை தொடர்பான சிக்கலான செயல்களில் மனத்தைச் செலுத்தி குழப்பம் அடைய வேண்டாம். வெகுகாலமாக நன்றாகப் படித்ததும், சரியாகக் கண்டறிந்தும் இன்னும் ஒரு முடிவுக்கு வர முடியாமல் இருப்பவர் சிந்திக்காமல் செயலாற்ற மாட்டார் என்பதை நம்பு. திருச்சபையைப் பற்றி நீ எழுதிய மடல் ஒரு இக்கட்டான நிலையில் இருக்கும் போது என் கைக்கு வந்து சேர்ந்தது.

அச்சமயம் 'கடப்பா' என்ற இடத்திலிருந்து 15 மைல் தொலைவில் இருந்தேன். அது பாறைகள் நிறைந்த காட்டுப்பகுதி. பொழுதடைந்த நேரம். கொண்டு சென்ற உணவுப்பொருட்கள் எல்லாம் தீர்ந்துவிட்டதால் வயிறு காலியாக இருந்தது. அந்தப் பசியான வேளையில் ஒரு மனிதன் ஒரு கூடை நிறைய ரொட்டிகளையும் உனது மடலையும் கொண்டு வந்தான். எங்கள் பல்லக்கை இறக்கி வைத்து விட்டு ஒரு 'டார்ச்லைட்' டின் ஒளியில் உனது மடலைப் படித்தேன். பிஸ்கட்டுகளை உண்டு தண்ணீரைக் குடித்தேன். மடலுக்குப் பதிலாக நீ நேரில் இங்கு வந்திருந்தால், திருச்சபை ஒழுங்கு பற்றிய எனது கருத்து உனக்கு இந்த அளவுக்கு அதிர்ச்சி அளித்திருக்காது. நேரமின்மையால் விரைந்து மடலை முடிக்கிறேன். இம்மடல் உனக்கு மனநிறைவை அளிக்கும் என நம்புகிறேன்.

இதே கருத்தைப் பற்றிய அவரது அடுத்த மடல் சென்னையில் இருந்து 1841ஆம் ஆண்டு ஜுன்மாதம் 23ஆம் நாள் எழுதப்பட்டது. அண்மையில் இறையடி சேர்ந்த தனது தாயாரைப் பற்றிப் பாசமிகு சொற்களால் குறிப்பிட்டு விட்டுத் தொடர்ந்து எழுதுகிறதாவது .....

உனக்குப் பிடித்தமான, பயனுள்ள செய்திகளைப் பற்றி விரைவில் எழுதமுடியும் என நம்புகிறேன். ஆனால் தற்சமயம் எனது பணி பற்றி நான் எடுத்த முடிவின் விளக்கத்தை மட்டும் எழுதுகிறேன். இலண்டன் இயக்கத்தோடு இருந்த எனது தொடர்பை இந்த மாதத்தோடு முடித்துக் கொள்வதாக அறிவித்துவிட்டேன். பல ஆண்டுகளாக இறைவனிடம் வேண்டிய

பின்பும் நன்றாக ஆராய்ந்து கண்டறிந்த பின்பும் சற்று வேதனையுடனும் எடுத்த முடிவு என்பதை நீ நம்புவாய் என எண்ணுகிறேன். எனது முடிவைப் பற்றி முன்பே எழுதவேண்டும் என எண்ணினேன். முடியவில்லை. காரணம், பருவகாலம் தொடங்க விருப்பதால் மடலை வழக்கமாக அனுப்பும் நாளுக்கு முன்பே அனுப்பி விட்டார்கள். இது எனக்குத் தெரியாமல் போய் விட்டது. இந்த இடைவெளிக்காக வருந்துகிறேன். நான் ஏன் இந்த முடிவை எடுத்தேன் என்று நீ புரிந்து கொள்வதற்கான சிலவற்றை மட்டும் இம் மடலில் குறிப்பிடுகிறேன். இந்த எனது முடிவு சிக்கல்களையும் பிரிவினையையும் மன வேதனையையும் ஏற்படுத்தும் என்பது எனக்குத் தெரியும். இவ்விதக் குழப்பங்களைத் தவிர்க்க எவ்விதத் தியாகமும் செய்யத் தயாராக இருக்கிறேன்.

இலண்டன் இயக்கத்தின் அடிப்படைக் கொள்கையை நீ அறிவாய். அதனால்தான் பல உணர்வுகளையும் எண்ணங்களையும் கொண்ட கிறிஸ்தவர்கள் அவ்வியக்கத்திற்கு ஒத்துழைப்பு நல்க முன் வந்தனர். அந்தக் கொள்கை இப்பொழுது பெயரளவிலேயே உள்ளது. அவரவர் தங்கள் உணர்வுகளைத் தங்களுக்குள் வைத்துக் கொண்டாலே, நடைமுறையில் இந்த ஒத்துழைப்பு ஏற்றதாகும் என்பது என்னுடைய ஆய்வின் உண்மை. ஆனால் நிலைமை அப்படி இல்லாததினால் நான் என் மனச்சாட்சிப்படி இந்த இயக்கத்தை விட்டுச் செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. நான் நம்புவதைச் செம்மையாகவும் அமைதியாகவும் செயல்படுத்தக் கூடிய இன்னொரு இயக்கத்தை நாடுவது நல்லது என உணர்த்தப்பட்டேன். சென்ற ஆண்டு நிகழ்வுகள் அதற்கு மேலும் வலுசேர்க்கும் வகையில் அமைந்துள்ளன. அவை என்னவென்னில் இறைவன் எனது பணியை நான் எதிர்பார்த்ததற்கும் அதிகமாக ஆசீர்வதித்திருக்கிறார். வருத்தத்தோடும் பயத்தோடும் தொடங்கப்பட்ட என் பணி மகிழ்ச்சியைக் கொடுக்கத் தொடங்கியிருக்கிறது. அறுவடை மிகுதி என்று நான் கூறவில்லை.

இந்தியாவின் இந்தப் பகுதியில் மற்ற இறைப்பணியாளர்களை விட எனது பணிக்கு அதிக வரவேற்பும் ஊக்கமும் கிடைத்திருக்கிறது. மனமாற்றமடைந்த வயது வந்தோர் 25 பேருக்குத் திருமுழுக்குக் கொடுத்திருக்கிறேன். ஞானோபதேச வினா விடையில் தேர்ச்சி பெற்றோர் ஏராளம். திருவிருந்தில் பங்கு

பெறுவோர் எண்ணிக்கை இரண்டு மடங்காக கூடியிருக்கிறது. பெருமைக்காக நான் கூறவில்லை. இறைவனின் வாக்கினால் மட்டுமே இது நிறைவேறியது. எனினும் இதுவரை நான் இணைந்துள்ள கிறிஸ்தவம் இங்கிலாந்துக்குப் பொருந்துமோ அல்லது பொருந்தாதோ என்பதை நான் கூற இயலாது. ஆனால் இந்தியாவுக்கு அந்த அமைப்புப் பொருந்தாது என்பதை உறுதியாகக் கூறமுடியும். அப்படி என்னால் ஏற்றுக் கொள்ளமுடியாத அமைப்பின் முறைப்படி மனமாற்றமடையச் செய்வதும் மனமாற்றம் அடைந்தோரைச் சேர்ப்பதும் சரியா?

"இறைவனின் பெரிதான இரக்கத்தினால் இந்த நாட்டில் (இந்தியாவில்) நான் விதைக்கும் விதைகள் அதிகப் பலனைக் கொடுக்கும் என்ற நம்பிக்கையே." சிந்தனைச்சிதைவையும் எரிச்சலையும் கொடுக்காத இயக்கத்தில் காலந்தாழ்த்தாது சேர்ந்து பணியாற்ற வேண்டும் என்ற எனது முடிவு மற்றொரு காரணம். இறுதியான காரணம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது. இலண்டன் இறைப்பணி இயக்கத்தின் இந்தியப் பணித்தளங்கள் அனைத்தும் பெரிய நகரங்களிலேயும் ஐரோப்பிய குடியிருப்புபகுதிகளிலுமே உருவாக்கப் பட்டுள்ளன.

திருவிதாங்கூர் பகுதியில் உள்ள பணித்தளங்கள் இதற்கு விதிவிலக்கு. அப்பகுதிகளில் இறைப்பணிக்குப் பொருளுதவி தேவை என்றாலும் அங்குள்ள இறைபணியாளரின் வாழ்க்கை முறை, பெருமை, ஐரோப்பியர்களைச் சூழந்துள்ள தீய பழக்கவழக்கங்கள் ஆகியன இறைப் பணியைப் பெரிதும் பாதிக்கின்றன. அதே நேரத்தில் புகழ்பெற்ற இறைப்பணியில் மிக அதிக விளைச்சலைக் கண்ட ஜெர்மானிய இறைப்பணியாளர்கள் கிராமங்களிலே வாழ்ந்தனர்; கிராம மக்கள் போல் வாழ்ந்தனர். அவர்களது மாசற்ற வாழ்வே இறைப்பணியில் அவர்களுடைய வெற்றியின் மறைபொருள். 30 ஆண்டுகளில் திருநெல்வேலி கிஷ்ணாகர், இலண்டன் இயக்கத்தின் திருவிதாங்கூர் ஆகிய பகுதிகளில் இறைப்பணி வெற்றிக்குக் காரணம். அவை கிராமப்பகுதிகள் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

இந்தியாவிற்கு வந்த நாள் முதல் ஒர் உண்மையான இறைப்பணியாளனாக இந்த நாட்டில் பணிபுரிய என்னைத் தகுதி செய்து கொண்டிருக்கிறேன். நன்கு கேட்டறிந்த பின் ஒரு நல்ல இடத்தைத் தெரிந்தெடுத்திருக்கிறேன். இலண்டன் இறைப்பணி இயக்கத்தை விட்டு விலகுகிறனே். ஆனால் இங்கிலாந்து

திருச்சபையோடு இணையவில்லை. இன்னும் நன்கு கற்று ஆராய எனது மனம் சற்று சுதந்திரமாக இருக்கவேண்டுமென விரும்புகிறேன். எனவே எக்கருத்தையும் ஏற்றுக்கொள்ளவில்லை; எந்த உறுதிமொழியையும் கொடுக்கவும் இல்லை.

இப்பொழுது இங்கிலாந்து திருச்சபையின் பணித்தளத்தில் பணிசெய்ய செல்கிறேன். அதனால் நான் வருங்காலத்தில் இங்கிலாந்து திருச்சபைக்குக் கட்டுப்பட்டவன் அல்லன் என்பதையும் தெரிவிக்க விரும்புகிறேன். வெளிப்படையாகவும் தனியாகவும் அருளுரை வழங்குவேன். இருப்பினும் பணித்தளத்தின் நிர்வாகத்திற்கு நான் கட்டுப்பட்டவன் அல்லன். இங்கிலாந்து நாட்டில் இங்கிலாந்து திருச்சபையில் இப்படிப்பட்ட ஒரு நிலை கிடையாது. ஆனால் இந்தியாவில் உள்ள திருச்சபை இறைப்பணி இயக்க அமைப்பு, இங்கிலாந்து திருச்சபை போல் இல்லாமல் லூத்தரன் திருச்சபை அமைப்பு போன்று உள்ளது.

இறை நம்பிக்கை உடையவர்களுக்குக் கற்றுக் கொடுக்கப்படும் ஞானோபதேச வினாவிடையும் லூத்தரன் முறைப்படியே அளிக்கப்படுகிறது. 'வெளிநாடுகளில் நற்செய்தி பரப்புவதற்கான இயக்கம்' (SPG in Foreign Ports) என்பதே அந்த இறைப்பணி இயக்கத்ததின் பெயர். தற்கால இறைப்பணி இயக்கங்கள் தொடங்குவதற்கு நூறு ஆண்டுகளுக்கு முன்பே இவ்வியக்கம் ஏற்படுத்தப்பட்டது. இரேனியஸைத் தவிர ஸ்வார்ட்ஸ், கெரிக்கே போன்ற அனைத்து இறைப்பணியாளர்களையும் இங்குள்ள கிறிஸ்தவர்கள் நன்கு அறிவர். 'திருச்சபை மிஷன்' என்று இந்நிறுவனம் அழைக்கப்படுகிறது. வழிபாட்டு முறைகள் வரையறுக்கப்பட்ட இங்கிலாந்து திருச்சபையின் முறையில் நடைபெறுகின்றன.

இங்கிலாந்து திருச்சபை பணித்தளத்தில் பணி செய்வது என்ற நோக்கமும் அதனால் இங்கிலாந்து திருச்சபைக்கு வருங்காலத்தில் கட்டுப்பட்டவன் என்ற எண்ணமும் நிறைவேற்றப்படவில்லை. அவரது அடுத்த மடல் டிசம்பர் மாதம் 9ஆம் நாள் பாளையங்கோட்டை அருகே உள்ள இடத்திலிருந்து எழுதப்பட்டது. தனது நீலகிரிப் பயணத்தைப் பற்றி இதில் விளக்குகிறார். இரண்டு மாதங்கள் அங்குத் தங்கியிருந்தார். பேராயர் ஸ்பென்னர் அவர்களால் அருட்பொழிவு பெற்றார். அவர் கூறுகிறதாவது:—

"சென்னையை விட்டுப் புறப்பட்டு சுமார் நான்கு மாதப் பயணத்திற்குப் "பின் மூன்று வாரங்களுக்கு முன்பு பாளையங்கோட்டை வந்து சேர்ந்தேன். எனக்காகக் காத்துக்கொண்டிருந்த உன் மடலைக் கண்டேன். எனக்கென புது இடம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. பணியைத் தொடங்கிவிட்டேன். நான் எதிர்பார்த்ததற்கு மேலான மகிழ்ச்சியையும் ஊக்கத்தையும் அளிக்கிறது இப்பணி. சென்னையை விட்டுப் புறப்படுகையில், குறிப்பிட்ட காலம் வரை அருட்பொழிவு பெறாமல் இருக்க வேண்டும் என்று எண்ணினேன். வழியில் சென்னைப் பேராயரை நேரில் போய் பார்த்தேன். அவரோடு ஒருமாதம் தங்கியிருந்தேன். இருவருடைய கருத்துக்களும் உணர்வுகளும் ஒன்று போலவே இருந்தன. அதன் பிறகு என் மூல எண்ணத்தை மாற்றிக் கொள்ள முடிவு செய்தேன். அதன்படி பேராயருடன் தங்கி இருந்த பொழுதே அருட்பொழிவு பெற்றேன். இப்பொழுது நான் தெரிந்து கொண்ட இடத்தில் பணி செய்து கொண்டிருக்கிறேன்.

சென்னையிலிருந்து எனது பயணம் வேகமாக இருந்தது என்று கூற முடியாது. பெரும்பாலும் நடைதான். இதனால் வழியில் உள்ள பணித்தளங்களையும் இறைப்பணியாளர்களைப் பார்க்கவும் கிராமங்களையும் அங்குள்ள மக்களையும் பற்றி ஓரளவு தெரிந்து கொள்வும் வாய்ப்புக் கிட்டியது. கடற்கரை வழியாக தரங்கம்பாடிக்குச் சென்றேன். பின்பு பேராயர் தங்கியிருந்த நீலகிரிக்கு மேற்கு நோக்கிச் சென்றேன். அதற்குப் பின், தென்கிழக்காக எனது பணித்தளத்திற்குச் (இடையன்குடிபகுதி) சென்றேன். அந்த இடம் கன்னியாகுமரியிலிருந்து வடகிழக்காக 30மைல் தொலைவில் உள்ளது. இந்த வழித்தடம் இந்துக்கள் வாழும் பழங்கால இடங்களையும் ஸ்வார்ட்ஸ் மற்றும் சென்ற நூற்றாண்டில் புகழ்பெற்ற இறைப்பணியாளர்கள் பணிசெய்த இடங்களையும் பார்க்க வாய்ப்பளித்தது. மிகவும் பயனுள்ளதாய் அமைந்தது அப்பயணம். குளுகுளு நீலகிரியில் இருந்த இரண்டு மாதங்களும் மிகவும் நன்றாக இருந்தது. நீலகிரி மலைகள் 8000 முதல் 9000 அடி உயரமானவை. ஓய்வு பெற்ற மற்றும் எந்தப் பணியையும் செய்ய முடியாத சுமார் 300 ஐரோப்பியர்கள் அங்கு வாழ்ந்தனர்.

சில நேரங்களில் இங்குள்ள குளிர் இங்கிலாந்து நாட்டில் உள்ள குளிருக்கு இணையாகவே இருந்தது. அங்கு இருந்த அந்நாட்களில் சமவெளியில் இங்கு வந்து குடியேறியவர்களுக்காக

ஒரு பணித்தளத்தைத் தொடங்கினேன். அருட்பொழிவு பெறவே நான் நீலகிரிக்குச் சென்றதைப் பற்றி நீ ஏற்கனவே கேள்விப்பட்டிருக்கலாம். பலருடைய எண்ணமும் இதுவே என்பதை நான் அறிவேன். இலண்டன் இறைப்பணி இயக்கத்தை விட்டு இக்காரணத்திற்காகத்தான் நான் நீங்கிவிட்டேன் என்ற செய்தியும் பரப்பிவிடப்பட்டது. உண்மை அதுவல்ல. பேராயரைப் பார்த்துவிட்டுச் சில நாட்களில் திரும்பி விட வேண்டும் என்ற நோக்கத்துடன், மலையின் அடிவாரப் பகுதியிலேயே எனது பெட்டிகளை வைத்து விட்டு மலைக்குச் சென்றேன். இதிலிருந்து என்ன புரிகிறது? சில செய்திகளைப் பற்றி நான் எழுதுவதற்கு முன்பே கேள்விப்பட்டிருப்பாய். உண்மை என்னவெனில் என்னுடைய செயல்களைப் பற்றி நான் அறியும் முன்னரே பிறர் அறிந்து கொள்வதாகத் தெரிகிறது.

சான்றாக, எனது திருமணம் நான் மலையில் இருக்கும் போதே ஒழுங்கு செய்யப்பட்டு எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டுவிட்டன. இச்செய்தியைக் கதாநாயகனாகிய எனக்கல்லவா முதலில் தெரிவித்திருக்க வேண்டும். மற்றவர் ஏற்கனவே அறிந்தும் நான் இறுதியில்தான் தெரிந்து கொண்டேன். இதுபோலவே எனது மற்றக் கருத்துக்களும் நான் அறியும் முன்பே மற்றவர் அறிந்துவிடுவர். என்னை அறியாதவர் இருவரே இங்கு உள்ளனர். எனவே, என்னைப் பற்றி என்ன சொல்லப்பட்டாலும், பெரும்பாலும் அவை அறியாமையினால் சொல்லப்படுபவையே. எனது ஒதுங்கிய வாழ்க்கையைப் போல் வேறு எந்த இறைப்பணியாளரும் வாழ்ந்தது கிடையாது. இருப்பினும், பழிச்சொற்களிலிருந்து நான் தப்ப முடியவில்லை. என்னைப் பொறுத்தவரை மற்றவர்கள் என்னைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதைப்பற்றி நான் கவலைப்படுவதில்லை. இறைவன் ஒருவரே என்னைச் சீர்தூக்கி அறிபவர். பரத்துக்கு எதிராகவும் மனிதருக்கு எதிராகவும் நான் எதுவும் செய்யாததினால் என் மனம் மாசற்ற வெற்றிடமாய் இருக்கிறது. இக்காரணத்தால் உலகம் தரக்கூடாத சமாதானத்தினால் இறைவன் இருதயத்தை நிரப்புகிறார்.

இங்கிலாந்து திருச்சபையில் சேரவேண்டுமென்ற விருப்பத்திற்கான முதல் காரணம் மனச்சாட்சியின் சமாதானமே. முன்பு செய்யப்பட்ட அல்லது சொல்லப்பட்ட காரணங்களோ அல்லது மனமாற்றம் செய்வதில் காட்டும் தீவிரமோ அல்ல.

வெகுகாலமாக விரும்பிய அமைப்பில் இணைந்துவிட்டதால் இனி ஒழுங்காகவும் அமைதியாகவும் செயல்பட முடியும். நான் விரும்புவதைப் பற்றி இனி சொல்லாட வேண்டியதும் இல்லை; புதிதாக அறிமுகப்படுத்த வேண்டிய தேவையும் இல்லை. கீழான செயல்களில் என் மனம் ஈடுபாடு கொள்ளாமல் அமைதியாக உள்ளது. அமைதியான வேளையில் இறைவனோடு நடப்பதும், நல்ல அமைப்பை உடைய திருச்சபையில் அமைதியாகக் இறைவனுக்கு அருட்பணி செய்வதும், சுற்றி அலைந்து திரிகிற ஆடுகளைக் கிறிஸ்துவின் மந்தையில் சேர்க்கும் பணியில் செலவு பண்ணவும் செலவு பண்ணப்படவுமே விரும்புகிறேன்; அதற்காகவே வாழ்கிறேன். சூழ்நிலைக்காரணிகள் என் வாழ்வில் தாக்கத்தை ஏற்படுத்த முயன்ற வேளைகளில், இறையருளால் என் மனம் விரும்பியபடி, ஒரு நல்ல அமைப்பில் சேர எண்ணம் கொண்டுள்ளேன். நான் விரும்பிய மன அமைதியை நான் நுகர்ந்து கொண்டிருக்கிறேன்.

இங்கு வந்த நாள் முதல் தினமும் உர்க்கப் பாடியும் இருதயத்தில் இசையை மீட்டியும் இறைவனைப் போற்றி வருகிறேன். உலகம் என்னை எப்படி அழைத்தாலும் சரி. உலகத்திற்கும் எனக்குமிடையில் கிறிஸ்துவின் சிலுவையை நிறுத்தியிருப்பதால், சிலுவை மேலேயே என் முழு எண்ணமும் உள்ளது. அவர் ஒருவனைத் தவிர வேறு யாரையும் நிறைவடையச் செய்ய நான் விரும்பவில்லை. அவர் எதை விரும்புகிறார் என்பது எனக்குத் தெரியும். அதை நிறைவேற்றுவதில்தான் விரித்துச் சொல்ல முடியாத மகிழ்ச்சியும் மேன்மையும் உள்ளது என்பதை நான் அறிவேன். ஐரோப்பிய இறைப்பணி இயக்கத்தையும், கிறிஸ்தவ நண்பர்கள் வட்டத்தை விட்டு வெகு தொலைவில் இருக்கிறானே என்று இரக்கப்படுவதற்குப் பதிலாக, கிறிஸ்தவக் கொள்கைகளுக்கு எதிரான தாக்கத்தினால் சிக்கித் தவிக்கும் ஐரோப்பிய மற்றும் கிறிஸ்தவ மக்களுக்காக இரக்கப்பட்டு அவர்களுக்கு நான் பாரத்தோடு வேண்டுகிறேன்.

## இயல் : 3

# 1841இல் நெடிய பயணம்

### சென்னையிலிருந்து திருநெல்வேலி வரை

S.P.G இயக்கத்தில் சேருவதென்று முடிவெடுத்ததும், எந்தப் பணித்தளத்தில் பணிசெய்தால் நல்ல பலன் கிடைக்கும் என்பதை அறிய முற்பட்டேன். கேட்டறிந்த செய்திகளை ஆராயுங்கால் திருநெல்வேலியைத் தெரிந்தெடுப்பதே சிறந்தது என்று தோன்றியது. அதற்கு மூன்று சிறப்புக் காரணங்கள் உண்டு. ஒன்று, திருநெல்வேலியில் உள்ள S.P.G இறைப்பணியாளர்களின் தலைவர் திருகேமரருடன் நடந்த கலந்துரையாடல். இரண்டு, திருநெல்வேலியில் C.M.S இயக்கத்தில் இறைப்பணியாளராகப் பணியாற்றிய இரேனியஸ் ஆற்றிய பணியின் விளைவாகப் பெற்ற மிக அதிக விளைச்சலின் தாக்கம். இரேனியஸ் பிரிந்து சென்று பலம் வாய்ந்த ஒரு பிரிவை உருவாக்கினார் ஆனால் அண்மையில் அவர் இறந்துவிட்டார்.

அவரது இறப்பிற்குப் பின் சாப்டர், முல்லர் போன்ற அவரது தொண்டர்கள் மீண்டும் C.M.S. இல் இணைந்தனர். இலெக்லர் (Lechler) போன்ற மற்றோர் அம்மாவட்டத்தை விட்டு மற்ற இடங்களுக்குச் சென்று விட்டனர். இறுதியாக, அங்குள்ள மக்களின், குறிப்பாக கிறிஸ்தவர்களின் பண்புநலனைப் பற்றிப் பலரும் சொன்ன கருத்துக்கள் ஏற்படுத்திய பெருந்தாக்கமே திருநெல்வேலிப் பகுதியை நான் தெரிந்துகொள்ள ஏதுவாய் இருந்தது. அறிவார்ந்த மக்கள் உள்ள சென்னைச் சூழல் எனக்குப் பிடிக்கவில்லை. கள்ளங்கபடற்ற கற்பித்தலுக்கும் வழிநடத்துதலுக்கும் ஏற்ற மக்களே என்னை அதிகம் கவர்ந்தனர். அப்படிப்பட்ட மக்களை எல்லாத் துறைகளிலும் முன்னேற்றமடையச் செய்ய முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருந்தது.

**1841**ஆம் ஆண்டு ஜூலை மாதத் தொடக்கத்தில் சென்னையைவிட்டுப் புறப்பட்டேன். சென்னைப் பேராயரைப்பார்த்து, அருட்பொழிவு பெறும் நோக்குடன் தெற்கே செல்லும் வழியில் நீலகிரிக்குச் செல்ல நினைத்தேன். நடைப்பயணத்தைத் தொடங்கினேன். ஒரு பணியாளும் சில கூலிகளும் என்னோடு

வந்தனர். மிகவும் பழங்காலத்திய வாகன வசதியே உண்டு. எனினும் நான் அதைப் பற்றி வருந்தவில்லை. நான் நன்றாக நடக்கக்கூடியவன். கிடைக்கக்கூடிய வசதியில் நிறைவு அடைபவன். கிராமப் பகுதிக்குச் சென்று, அங்குள்ள மக்களைப்பற்றியும் அவர்களின் எண்ணங்களைப் பற்றியும் பழக்கவழக்கங்களைப்பற்றியும் அறிந்து கொள்ள வேண்டு மென்பதும், அவர்களோடு நன்றாகப் பேசவேண்டுமென்பதுவுமே எனது அவா. பல்லக்கிலோ அல்லது வண்டியிலோ பயணம் செய்தால் அப்படிப்பட்ட வாய்ப்புக் கிடைக்காது. காலையிலும் மாலையிலும் நடந்து ஆங்காங்கேயுள்ள அங்குள்ள ஒய்விடங்களிலே தங்கினேன். களைப்படைய வில்லை. வெயிலும் பாதிப்பை ஏற்படுத்தவில்லை.

வழி மணற்பாங்காக இருந்ததால் சப்பாத்தையும் காலுறையையும் கழற்றி விட்டு, வெறுங்காலால் நடந்து பார்த்தேன். வெறுங்காலால் நடந்தால் சீக்கிரமாக அப்பகுதியைக் கடக்கலாம் என்று நினைத்தேன்; ஆனால் வெயில் ஏறியதும் மணல் சூடாகியதால். காலில் கொப்புளங்கள் உண்டாயின. அவை குணமாகும் வரை அந்த இடங்களிலே ஒய்வு எடுக்க வேண்டியதாயிற்று. அதன் பிறகு வசதியைப் பெறுவதில் அதிக விழிப்புடன் இருந்து கொண்டேன். பாண்டிச்சேரி சென்றதும் அங்கிருந்து நீலகிரி வரை வண்டியிலே சென்றேன். தாழ்ந்த சாலை என்று அக்காலத்தில் அழைக்கப்பட்ட கடற்கரை அருகே உள்ள சாலை வழியாகப் பயணம் செய்தேன்.

பாண்டிச்சேரியில் S.P.G. இறைப்பணியாளரும் அச்சமயம் பேராயர் ஸ்பென்சர் அவர்களின் இறைப்பணி உதவியாளருமான (சேப்ளான்) திரு. ஜோன்ஸ் வீட்டில் சில நாட்கள் தங்கியிருந்தேன். அவர் மிகுந்த திறமை வாய்ந்தவர்; புது இயக்கத்தைச் சேர்ந்தவர்; அவ்வியக்கத்தைச் சேர்ந்தவர்களில் நான் கண்ட முதலாவது சிறந்த திருச்சபைப்பணியாளர். தரங்கம்பாடிக்கும் சென்றேன். அங்குத் தமிழ்நாட்டில் புதிய லூத்தரன் அருட்பணி இயக்கத்தைத் தொடங்கிய திரு. கோர்ட்ஸ் (Mr. cordes) வீட்டில் சில நாட்கள் தங்கியிருந்தேன். சென்னைக்கு முதலாவது வந்தபோது அவர் எனது விருந்தாளி. அவர் தொடங்கவிருந்த பணி மிகவும் ஆக்கப்பூர்வமானது என எண்ணினேன். தரங்கம்பாடி பணிக்கு மீண்டும் உயிர்கொடுக்கும் எண்ணம் பாராட்டத்தக்க முயற்சி ஆகும். ஆனால் அவரும் அவரது நண்பர்களும் தஞ்சாவூரிலும்

மற்ற இடங்களிலும் உள்ள S.P.G. சபையைச் சேர்ந்தவர்களை லூத்திரன் சபையில் சேர்க்க முயற்சிப்பர் என்ற எண்ணம் என் மனத்தில் தோன்றவில்லை.

தரங்கம்பாடி அச்சமயம் டென்மார்க் நாட்டினர் வசம் இருந்தது. டென்மார்க் ஆளுநர் வீட்டில்தான் அன்று எனது காலை உணவு. ஞாயிற்றுக்கிழமை பழைய கோவிலில் நடந்த வழிபாட்டில் கலந்து கொண்டேன். டென்மார்க்கின் கடைசி இறைப்பணி உதவியாளராக இருந்த திரு. நட்சன் (Knudsen) டேனிஷ் மொழியில் வழிபாட்டை நடத்தினார். அவர் மேற்பார்வையில் இருந்த தமிழ்ச் (பணித்தளம்) சபை புதிதாக வந்த இறைப்பணியாளரிடம் ஒப்படைக்கப்பட்டது. தென்னிந்தியாவின் இறைப்பணித்தளம் எருசலேம் என்று அழைக்கப்படும் தரங்கம்பாடியில் பழங்கால வாழ்வியல் அறிகுறிசள் இருப்பதாகத் தெரியவில்லை. கும்பகோணத்தில் திரு. வாலண்டைன் கூம்ஸ் வீட்டில் தங்கினேன். அவர் ஒரு S.P.G. இறைப்பணியாளர். அவர் கல்கத்தாவில் உள்ள பேராயர் கல்லூரியின் முன்னாள் மாணவர்; உயர்ந்த பண்புள்ள குடும்பத்தைச் சேர்ந்தவர். அறிஞர் பவர் மற்றும் அறிவர் கென்னற் ஆகியோரை உருவாக்கிய பெருமை அவரையே சாரும்.

போகும் வழிகளில் உள்ள இந்து வழிபாட்டுத் தலங்களைப் பார்வையிட்டேன். சிதம்பரத்தில் உள்ள மிகவும் தூயதாகக் கூறப்படும் சிவன் கோவிலும் தென்னிந்தியாவிலேயே மிகவும் புகழ் வாய்ந்த தஞ்சைப் பெரியகோவிலும் அவைகளில் மிகவும் சிறப்பு வாய்ந்தவை. இந்து சமயத்தைப்பற்றியும் பழங்காலச் சின்னங்களைப் பற்றியும் பற்றி நான் ஏற்கனவே நன்கு அறிந்திருந்ததினால் அவைகளைப் பற்றி நன்கு அறிந்து கொள்ளவும் பாராட்டவும் முடிந்தது. மேலும் அங்குள்ள பிரதர்ட்டன் போன்ற இறைப்பணியாளர்களின் உதவியும் கிடைத்தது. முதன்முதலாக ஓர் இந்து அரண்மனையைத் தஞ்சாவூரில் பார்த்தேன். பல கட்டிடங்கள் நாயக்கர்களால் அறிமுகப்படுத்தப்பட்ட அரேபிய அல்லது காத்திக் (ஜெர்மானிய) கலை நுட்பத்துடன் கட்டப்பட்டிருந்தன. மீண்டும் ஒருமுறை தஞ்சாவூருக்குச் சென்ற போது மன்னர் அரசவையில் இருப்பதைப் பார்த்தேன். அவரே மராட்டியக் குலத்தைச் சேர்ந்த இறுதி மன்னரும், தஞ்சாவூரை ஆண்ட கடைசி மன்னரும் ஆவார்.

தஞ்சாவூரில் ஜாண் காஸ்பர் கோலாஃப் அவர்களை நேரில்காணும் வாய்ப்புக் கிடைத்து அவர் ஸ்வார்ட்ஸின் மாணவர். அவருக்குப் பின் அவரது பணியைத் தொடர்ந்து செய்தவர். 1881இல் இறந்துபோன கிறிஸ்டியன் கோலாஃப்பின் தந்தை, கிறிஸ்தவ அறிவு இயக்கத்தின் (Christian Knowledge Society) கடைசி இறைப்பணியாளர். அவர் இறக்கும் வரை அவ்வியக்கம் அவருக்கு உதவித் தொகை வழங்கி வந்தது. பின்னர் அவ்வியக்கம் S.P.G.யின் கண்காணிப்பிற்குள் வந்தது. கோலாஃப் முதியவர்; மதிப்புக்குரியவர்; கபடற்றவர்; பணிவுள்ளவர்; அன்புள்ளவர்; இறைப்பற்றுடையவர்; தன்னலமற்றவர். இங்கு ஒரு கிராமத்தில் உள்ள கிறிஸ்தவர்கள் கூட்டத்தில் பேசும்போது கேட்டிருக்கிறேன்.

ஆவியில் நிறைந்த அவர் செய்தியைக் கேட்டு அசந்துவிட்டேன். எனினும் அவரிடம் மேலாண்மைத் திறமை உண்டு என்று கூறமுடியாது. அதனால், அவரது பணித்தளத்தில் உள்ள கிறிஸ்தவர்கள் தங்கள் மனம் போன போக்கிலே செயல்களைச் செய்து வந்தனர். கொடுப்பதற்கு அவர்கள் கற்றுக் கொள்ளவில்லை. ஆனால் பெறுவது தங்கள் உரிமை என்று ஒவ்வொரு செயலிலும் எண்ணியதால், பலர் தீங்குகளுக்குட் பட்டனர். இதனால் பிற்காலத்தில், தஞ்சாவூர் பணித்தளத்தின் நற்பெயருக்குக் களங்கம் ஏற்பட்டது.

அந்நாட்களில், இங்கிலாந்தில் இருந்து சிறிது காலத்திற்கு முன்பு இறைப்பணியாளராக வந்த பிரதர்ட்டனிடம் தஞ்சாவூரில் இருக்கும்போது நல்ல பழக்கம் ஏற்பட்டது. தன்னுடன் வந்த தனது நண்பன் கால்த்தோர்ப்பைப் (Cathorp calthrop) போன்று இவரும் கேம்பிரிட்ஜ் மாணவரே; எபிரேய மொழியில் தேர்ச்சி பெற்றவர்; தமிழில் புலமை பெறவேண்டும் என்ற ஆர்வம் மிக்கவர்; நீதிநெறி மற்றும் சமயக் குணநலன்களில் கோலாஃப்பைப் போன்றவர். ஒருவரைப்பற்றி நான் கூறிய அனைத்தும் மற்றவருக்கும் பொருந்தும். ஆனால் பிரதர்ட்டன் உயர்ந்த பண்புள்ளவர்; சிறந்த ஆசிரியர்; சிறந்த அருளுரையாளர்; சமுதாயத்தில் அதிக செல்வாக்கு உள்ளவர். மூத்த கோலாஃப், பிரதர்ட்டன், இளைய கோலாஃப் ஆகிய மூவரும் தந்திரத்தால் மற்றவர்களை ஏமாற்றாத இஸ்ரவேலர்கள். அப்படிப்பட்ட பண்புள்ளோரைக் காண்பது இந்நாட்களில் அரிது. அந்த இனம் அழிந்துவருகிறது.

மேலும் தஞ்சாவூரில் புகழ்பெற்ற 'தஞ்சாவூர்க்கவிஞரை' நேரில் கண்டேன். திறமையும் சிறந்த கவிப்புலமையும் பெற்றவர். ஈடுஇணையற்ற பல பாடல்களை இயற்றியவர். அவரின் பெரும்பாலான பாடல்கள் தமிழ் கூறும் நல்லுலகத்தில் வாழும் கிறிஸ்தவர்கள் மனத்தில் நீங்காத இடம் பெற்றிருக்கும். இவ்வளவு திறமைகள் இருந்தும், அவரது நியாயமற்ற எதிர்பார்ப்பும், வேடிக்கையான மனோபாவமும் இறைப்பணியாளர்களுக்கு உதவியாக இருப்பதற்குப் பதிலாக தொல்லையாக இருப்பதாகவே நான் அறிந்தேன். எவ்வளவு பலவீனங்கள் இருந்தாலும் அவைகள் அனைத்தும் அவரது மறைவோடு மறைந்துவிட்டன. ஆனால் அவர் புனைந்த கருத்தாழமிக்கப் பாடல்கள் இன்றும் நிலைத்திருக்கின்றன; என்றும் நிலைக்கும்.

திருச்சிராப்பள்ளியில் இளைய கோலாஃப்புடன் தங்கியிருந்தேன். அங்குள்ள பணித்தளம், கோட்டை மற்றும் கோவில்கள் ஆகியவற்றைக் காண்பித்தார். காவேரி ஆற்றில் வெள்ளம். அந்நாளில் பாலம் இல்லாததினால் கூடை போன்ற வடிவமுள்ள படகில் அதைக் கடந்தேன். திருரங்கத்தில் உள்ள பெரிய கோவிலைப் பார்த்தேன். தென் இந்தியாவின் அழகுவாய்ந்த கோவில் என்று அதைக்கூற முடியாது. எனினும் பரப்பளவில் அது பெரிய கோவில் என்று சொல்லலாம். அந்நாட்களில் திருச்சிப்பணித்தளத்தில் லூத்தரன்களின் செல்வாக்கு அதிகம் இல்லாததால் சபை பெரிதாகவும் வளமை பெற்றும் இருந்தது. கோலாஃப் முதன் முதலில் திருநெல்வேலியில் உள்ள முதலூரில் ஓராண்டுக் காலம் பணியாற்றியிருந்ததால், அவரிடம் எனது எதிர்காலப்பணி தொடர்பாகச் சில விளக்கங்களைக் கேட்டறிந்தேன்.

அதற்குப்பின்பு, வேறு எங்கும் தங்காமல் நேராக மலை அடிவாரத்தில் உள்ள மேட்டுப் பாளையத்திற்குச் சென்றேன். அங்கிருந்து, மறுநாள் காலை, பேராயர் ஸ்பென்சர் இருப்பிடமான கோத்தகிரிக்கு நடந்து சென்றேன். பாசத்துடன் என்னை அவர் வரவேற்றார். எனினும் விருந்தினர்களால் அவரது வீடு நிறைந்திருந்ததால், திரு. ஹிக்கி (Hickey) என்ற S.P.G. இறைப்பணியாளர் வீட்டில் தங்கினேன். அப்பொழுது அவர் பேராயரின் தனிச்செயலாளராகப் பணிபுரிந்து வந்தார். ஹிக்கி ஓர் ஐரோப்பிய ஆசிரியர்; அறிவாளி; அன்புள்ளம் கொண்டவர்; எனினும் நடைமுறை செயல்களுக்கு ஒத்துவராதவர். பின்பு அவர்

சென்னைப் பணித்தளத்திற்கு அனுப்பப்பட்டார். அவரது நோக்கங்களும் திட்டங்களும் நல்லவையாக இருந்தாலும், குறிப்பிடத்தகுந்தபடி அவரால் எதுவும் செய்யும் முன்பே அவர் மறுமைக்குட்பட்டார். சில நாட்கள் கோத்தகிரியிலும், சில நாட்கள் உதகமண்டலத்திலுமாக, நீலகிரியில் ஒரு மாதத்திற்கும் அதிகமாக தங்கியிருந்தேன்.

செப்டம்பர் மாதம் 19ஆம் நாள் உதகமண்டலத்திலுள்ள தூய ஸ்தேவான் கோவிலில் பேராயர் அவர்களால் உதவி குருவாக அருட்பொழிவு பெற்றேன். ஏற்கனவே பல ஆண்டுகள் இறைப்பணியில் பட்டறிவு உண்டு. ஆதிகாலத்திலிருந்தே திருச்சபையால் அளிக்கப்பட்ட அதிகாரம் பெற்ற பேராயரால் இவ்வாறாக முறைப்படி மூன்றாம் நிலை அருட்பணிக்கு அனுமதிக்கப்பட்டேன்.

மிகவும் ஆர்வமுள்ள பேராயர்களுள் பேராயர் ஸ்பென்சரும் ஒருவர்; அருட்பணியில் மிகவும் விருப்பம் உள்ளவர். எனினும் இந்தியாவில் மக்களிடையே அவ்வளவு செல்வாக்கு இல்லை. ஆயர்களின் நம்பிக்கையைப் பெறப் பெரிதும் தவறிவிட்டார். பொதுவாக அவர் நாணயமற்றவர் என்றே கருதப்பட்டார். ஒரு பேராயருக்கு அவரது பேராயத்தில் இதைவிட இழுக்கான நிலை இருக்கமுடியாது. எனினும் நான் அவரிடம் மிகவும் நெருங்கிப் பழகியவன். இந்தியாவில் வேறு எவரிடமும் நான் அந்த அளவு நெருங்கிப் பழகியது இல்லை.

அவரது இறைப்பணி உதவியாளராகப் பல ஆண்டுகள் பணியாற்றியுள்ளேன். அவர் நாணயத்தைப் பற்றி ஐயப்பட வேண்டாம் என்பதை மற்றவர்களிடம் கூறி வந்திருக்கிறேன். அவரைப்பற்றிய இந்தத் தவறான எண்ணத்திற்குச் சூழ்நிலைகளும் சரியாக அவரைப் புரிந்து கொள்ளாததுமே காரணங்களாகும். ஐரோப்பிய நாடுகளில் வளர்ந்ததால் அமைதியையும் பெருந்தன்மையையும் அவரிடம் காணலாம். பாமர மக்களால் புரிந்து கொள்ள முடியாத அளவுக்கு உயரிய பண்புகள் அவரிடம் காணப்பட்டதே இந்தத் தவறான எண்ணத்திற்குக் காரணம். பேராயராகப் பணியமர்த்தப்படுமுன் இறையியலைவிட மற்றவற்றில் அவரது நாட்டம் ஓங்கி நின்றது.

இவர் மார்ல்பரோ டியூக்கின் குடும்பத்தைச் சேர்ந்தவர் அப்பொழுது கட்டுப்பாட்டுக் கழகத்தின் (Board Control) தலைவராக

இருந்த தனது மனைவியின் சகோதரர் சர் ஜாண் காம் ஹாப்ஹவுஸின் (Sir John cam Hobhouse) செல்வாக்கின் மூலமே அவருக்கு இந்தப் பணி கிடைத்தது. இந்தியாவிலோ அல்லது மற்ற குடியிருப்புகளிலோ செய்யப்பட்ட குடும்பப் பணி அமர்வுகளில் இதுவே கடைசி பணி அமர்வு ஆகும். அவரது உடல் நலமும் நன்றாக இல்லை. இந்தியாவுக்கு வரும் வழியில், செங்கடலில் திறந்த படகில் சில நாட்களைக் கழிக்க வேண்டியதிருந்தது. வெப்பம் அவரைத் தாக்கவே மிகவும் தளர்ச்சி அடைந்துவிட்டார்.

தனது அன்றாட பணிகளைக்கூட செய்ய முடியவில்லை. இப்படிப்பட்ட பல செயல்கள் அவர்மீது தவறான எண்ணத்தை உருவாக்கிவிட்டன. அவைகளோடு இன்னொரு தவறும் நடந்துவிட்டது. அது யாதெனில் சமய உலகில் அவர் ஆக்ஸ்போர்ட் இயக்கத்தைச் சேர்ந்தவர். அது சக்திவாய்ந்த இயக்கமானது. அவர் பல சாதனைகள் புரிந்தவர்; பெரும்பாலன புதிய மொழிகளில் புலமை பெற்றவர்; அருமையான பேச்சாளர். அவரது செய்தியில் அழகு நடை உண்டு. திரு.ஜோன்ஸ் மறைந்தபின் ஓரிரு ஆண்டுகள் அவர் என்னை இறைப்பணி உதவியாளராக்கினார். எனவேதான் அவர் செல்லுமிடமெல்லாம் நானும் செல்லவேண்டியதாயிற்று. மற்ற பணித்தளங்களைப் பற்றி அறிய நல்ல வாய்ப்பு கிடைத்தது. அதை நான் நல்லமுறையில் பயன்படுத்திக்கொண்டேன்.

## இயல் : 4

# நீலகிரியிலிருந்து திருநெல்வேலிக்கு நடைப்பயணம்

மழைக்காலம். சாலைகள் இல்லாத இடங்களில் வண்டியில் செல்ல முடியாது. எனவே நீலகிரியில் இருந்து திருநெல்வேலிக்குக் குதிரையில் செல்லலாம் என்ற எண்ணத்துடன் ஒரு குதிரை வாங்கினேன். உதக மண்டலத்திற்கும் கோத்தகிரிக்கும் இடையில் ஓர் இறக்கத்தில் குதிரை விழுந்துவிட்டது. மூட்டுகளிலும் மூக்கிலும் சரியான அடி. எனவே, மீண்டும் நடந்து செல்லத் தீர்மானித்தேன். சேணத்தை எடுத்துக்கொண்டு குதிரையை மட்டும் கோயம்புத்தூரில் விற்றுவிட்டேன். வழியில் மற்றொரு குதிரை வாங்கினால் அச்சேணத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாம் அல்லவா! குதிரை கிடைக்கவில்லை. நன்றாக நடந்து பழக்கம் ஆகிவிட்டதால் கோயம்புத்தூர், மதுரை, திருநெல்வேலி ஆகிய மூன்று மாவட்டங்கள் வழியாக இடையன்குடிக்கு நடந்து செல்ல முடிவு செய்தேன். ஞாயிற்றுக்கிழமைகளிலும் முக்கியமான இடங்களிலும் ஓரிரு நாட்கள் ஓய்வு எடுத்துக்கொண்டேன். ஒரு நாளுக்கு சராசரியாக 17 மைல்கள் நடந்தேன். சில நேரங்களில் சூரியனின் வெப்பத்தால் பாதிக்கப்பட்டேன். ஆனால் களைப்படையவில்லை.

மதுரை, திருநெல்வேலியில் உள்ள கரிசல் பகுதிகளைக் கடக்கும்போது மீண்டும் காலணிகளைக் கழற்றிவிட்டு வெறுங்காலால் நடந்தேன். அந்நாட்களில் சாலை வசதிகள் கிடையாது. தரை ஈரமாக இருக்கும்போது கால்கள் சேற்றுக்குள் மூழ்கினாற்போலக் கரிசல் மண்ணுக்குள் இறங்கின. ஒவ்வொரு அடியையும் மெதுவாகவே எடுத்து வைத்தேன். இந்த இயற்கைக் காலணிகள் இருக்கும்போது, செயற்கைக் காலணி எதற்கு? ஆனால் ஒரு பக்கம் சற்று வசதிக் குறைவு. கரிசல்மண்ணாலான காலணிகளுடன் செல்லும்போது வழியில் உள்ள கிராம மக்கள் என்னைப் பார்த்து மிகவும் இரக்கப்பட்டனர். "பாவம்! இந்த வெள்ளைக்காரர் தரித்திரர் போலிருக்கு. நடந்து போறாரு" இந்தக் கோலத்தில் இருந்ததினால் ஒரு இடத்தில் பயணிகள் விடுதியில் தங்க எனக்கு இடம் தரவில்லை. "இந்த மாளிகை மேற்குடி மக்களுக்கானது. உங்களைப் போன்ற ஏழைகளுக்கு அன்று" என்று சொல்லிவிட்டனர். என்னை ஒரு ஏழை அல்லது தரித்திரன்

என்று நினைத்துவிட்டனர். இந்த எண்ணம் தவறானது என்பதை எனது பணியாளையும் பொருட்களையும் பார்த்த பின்னரே உணர்ந்தனர்.

நீலகிரியை விட்டு வந்ததும் கோயம்புத்தூரில் லூயி குடும்பத்தினருடன் ஓரிரு நாட்கள் தங்கினேன். பின்பு திண்டுக்கல் நோக்கிப் புறப்பட்டேன். திண்டுக்கல்லுக்கு முன்பாக பழங்காநத்தம் என்ற இடத்தில் இரவு நேரத்தைக் கழிக்க வேண்டியதிருந்தது. தங்குவதற்கோ இடமில்லை. அங்குள்ள உதவி மாவட்ட ஆட்சியர் இறந்து விட்டதால், அவரது வீடு நீதிமன்ற ஆணைப்படி 'சீல்' வைக்கப்பட்டிருந்தது. அரசு செலவில் கட்டப்பட்ட சத்திரத்திலும் எனக்கு இடம் தர மறுத்துவிட்டனர். ஏனெனில் அது அந்தணர்கள் பயன்படுத்திக் கொள்வதற்காக மட்டும் கட்டப்பட்டுள்ளதாம். ஒரு கொட்டகையைக் காட்டி அதில் தங்கும்படி சொன்னார்கள். அது ஆதிதிராவிடர்களுக்காகவும் உடல் நலமற்ற ஐரோப்பியர் களுக்காகவும் கட்டப்பட்டது. அவர்கள் சொன்னதில் தவறேதும் இல்லை. நான் ஐரோப்பியன் அல்லவா! பாவம் அந்தக் கொட்டகை! ஒழுகும் கூரை! கதவுகளுமில்லை! பலகணிக் கதவுகளும் இல்லை! மாடுகளின் புகலிடமாகவே பயன்படுத்தப்படுகிறது. சிறிது நேரத்திற்குப்பிறகு உதவி ஆளுநர் வீட்டின் முன்பகுதியில் தங்குவதற்கு ஒப்புதல் கிடைத்தது.

நான் அடுத்து தங்கிய இடம் திண்டுக்கல். திரு. லாரன்ஸ் என்ற அமெரிக்க இறைப்பணியாளர் ஒரு பணித்தளத்தைத் தொடங்கி ஒரு கோவிலையும் கட்டியுள்ளார். S.P.G. இயக்கத்தாரும் ஒரு கோவிலைக் கட்டியிருக்கின்றனர். ஒரு சிறு சபை உண்டு. திருப்பணிவிடையாளரே அச்சபையைக் கண்காணித்து வருகிறார். ஞாயிற்றுக்கிழமை தொழுகையில் நான் அருளுரை ஆற்றினேன். அமெரிக்கன் கோவிலில் கூட்டம் அதிகம். நெற்றியில் பொட்டிட்ட கிறிஸ்தவரல்லாத பள்ளி மாணவர்களே அங்குக் கூடியிருந்தனர். அவர்களை அங்கு அழைத்து வந்தவர்களும் கிறிஸ்தவரல்லாத தலைவர்களே.

திண்டுக்கல்லுக்கும் மதுரைக்கும் இடையே உள்ள அம்மைநாயக்கனூர் என்ற ஊரில் ஒரு நாள் தங்கினேன். இப்பொழுது அந்த ஊரில் முக்கியமான இரயில் நிலையம் இருக்கிறது (கொடைரோடு). அந்தகிருந்தே பயணிகள் பழனி மலைக்குச் செல்கின்றனர். பொதுப்பணித்துறைத் தலைமைப்பொறியாளர் லெப்டினன்ட் [இப்போது கேனல் (Colonel)] ஹார்ல்லியை நேரில் காணும் நற்பேறு பெற்றேன். அவரே இரு தென்மாவட்டங்களுக்கும் திருவிதாங்கூர் ஆகிய பகுதிக்கும்

பொறுப்பானவர்; அப்பகுதி மக்களின் நன்மதிப்பைப் பெற்றவர்; அவர் போன்ற இறை நம்பிக்கை கொண்டவரை இந்திய அரசுப்பணி எதிலும் காண முடியாது. அதற்கருகில் தனியாக உள்ள சமவெளிப் பகுதியில் ஹிக்கி (Hickey), பெத்தேல் என்று அழைக்கப்படும் ஒரு பணித்தளத்தை நிறுவியுள்ளார்.

சில நாட்களில் மதுரைக்கு வந்து சேர்ந்தேன். வைகையில் வெள்ளம் கரை புரண்டோடியது. மனிதர்கள் சிலர் என்னைத் தங்கள் தோள்களில் சுமந்து சென்று ஆற்றைக் கடந்தனர். வழக்கத்தைவிட வெள்ளம் சற்று அதிகம். சில இடங்களில் தண்ணீர் அம்மனிதர்களின் தோள் அளவுக்கு இருந்தது. அச்சமயம் திரு. பிளாக்பர்ன் மதுரை மாவட்ட ஆட்சியராக இருந்தார்; மக்களின் நன்மதிப்பைப் பெற்றவர்; ஆனால் பணத்தை செலவு செய்வதில் திறமையற்றவர்; தாராளமாகக் கொடுப்பவர். என்னைச் சுமந்து சென்ற மனிதர்களுக்கு அவர்கள் எதிர்பார்த்ததை விட அதிகமாகப் பணம் கொடுக்கவே, அவர்கள் என்னை 'பிளாக்பர்னின் தம்பி' எனப் பாராட்டினர்.

மதுரையில் S.P.G. இறைப்பணியாளர் திரு. ஹப்பர்ட் (Hubbard) வீட்டில் தங்கியிருந்தேன்; பாளையங்கோட்டையில் பணிசெய்ய அமர்த்தப்படுமுன் சிறிது காலம் மதுரை இறைப்பணி இயக்கத்தில் பணியாற்ற அமர்த்தப்பட்டார். ஹப்பர்ட் நல்லவர்; திறமையுள்ளவர்; பணியில் மிகுந்த ஆர்வமுள்ளவர்; மக்களிடம் செல்வாக்கு உள்ளவர். எனினும் நடைமுறைக்கு ஒவ்வாத செயல்கள் பற்றி கனவு காண்பவர் என்ற பெயர் பெற்றவர். நானும் அதே கருத்தை உடையவன். அமெரிக்க இறைப்பணி இயக்கத்திற்கு முன்னால் அவரது செல்வாக்கு சிறிது சிறிதாகக் குறையத் தொடங்கியது.

அவருக்குப்பின் மதுரை இறைப்பணி இயக்கத்திற்கு வந்தவர் ஹிக்கி. அவர் ஒரு கிழக்கிந்தியன். இவர் ஹப்பர்டைவிடச் செல்வாக்கு குறைந்தவர். இறுதியாக, இராமநாதபுரத்தைத் தவிர மற்ற இறைப்பணி இயக்கத்தில் உள்ள எல்லா இடங்களும் இறைப்பணி இயக்கத்தினிடம் ஒப்படைக்கப்பட்டன. மதுரையில் இருக்கும்போது ஆங்கிலத்திலும் தமிழிலும் அருளுரை ஆற்றினேன். எனது தமிழ் ஒலிப்புமுறையை ஹப்பர்ட் மிகவும் பாராட்டினார். ஆனால் எனது அருளுரை இங்குள்ள திருப்பணிவிடையாளரின் அருளுரையைப் போல் உள்ளதாகக் குறை கூறினார்.

இலங்கையில் உள்ள யாழ்ப்பாணத்தில் அமெரிக்க இறைப்பணி இயக்கம் உண்டு. அது மதுரையில் ஒரு கிளையைத் தொடங்கியது. விரைவில் சுதந்திர இறைப்பணி இயக்கமாக மாறும் அளவுக்கு வளர்ச்சி பெற்றது. யாழ்ப்பாண இறைப்பணி இயக்கம் போல முதன்மையான இறைப்பணி இயக்கமாக மாறிவிட்டது. திருவாளர்கள் ட்வைட்டும் (Dwight) வார்டும் (Ward) அந்நாட்களில் மதுரையில் அமெரிக்க இறைப்பணியாளர்களாகப் பணியாற்றினர். ஆங்கிலக் கல்வியில் அவர்கள் அதிக அக்கறை செலுத்தினர். சில ஆண்டுகளுக்குப் பின்பு அமெரிக்காவில் உள்ள தாய்ச்சங்கம் ஆங்கிலக்கல்விக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும் என்று கூறாதிருந்தால், S.P.G. இறைப்பணியாளர் தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளிப் பகுதிகளில் எந்த அளவுக்கு ஆங்கிலக்கல்விச் சேவை செய்தனரோ, அந்த அளவுக்கு அந்த இருவரும் மதுரைப் பகுதிக்குச் சேவை செய்திருப்பார்கள்.

அச்சமயத்தில் ஆங்கிலக்கல்விக்கு எதிரான கொள்கை இறைப்பணி இயக்கத்திலிருந்து இன்னொரு இறைப்பணி இயக்கத்திற்கு வேகமாகப் பரவியது. S.P.G. மட்டும் தனது ஆங்கிலக் கொள்கையை விட்டுவிடவில்லை. அதன் விளைவாக மதுரைப் பகுதியில் உள்ள உயர்கல்வி நிறுவனங்கள் அனைத்தும் கிறிஸ்தவரல்லாதோர் கையிலேயே உள்ளது. அமெரிக்க இறைப்பணியாளர்கள் தங்களது இந்தக் கொள்கை மாற்றத்திற்காக வருந்த நேரிட்டது.

திருநெல்வேலியிலிருந்து வந்திருந்த சாணார் கிறிஸ்தவர்களை மதுரையில்தான் நான் முதன்முதலாகப் பார்த்தேன். என்னைப் பார்க்க ஒரு குழுவினர் ஹப்பர்ட் வீட்டிற்கு வந்தனர். பின்பு பல குழுக்கள் அடிக்கடி என்னை அங்கு வந்து பார்த்தனர். அவர்களுடைய நீண்ட காதுகள், நீண்ட கடுக்கன்கள், பெண்களைப் போல நீண்ட கொண்டை, அவர்கள் எனக்களித்த பனங்கற்கண்டு, இருகரங்களையும் கூப்பி நளினமாக வணக்கம் செலுத்திய முறை ஆகியவற்றைக் கண்டு வியந்துவிட்டேன். மட்டுமல்ல, அவர்களது அடக்கமான, ஒடுக்கமான பேச்சும் என்னைக் கவர்ந்தன.

ஏனெனில் இதுவரை வடக்கே உள்ளவர்களின் கனிவற்ற, முரட்டுத்தனமான பேச்சில் பழக்கப்பட்ட எனக்கு இவர்களின் பணிவான, கனிவான பேச்சு முற்றிலும் மாறுபட்டிருந்தது. இந்த அடையாளங்கள் அனைத்தும் இந்த இன மக்களுக்கு நல்ல எதிர்காலம் உண்டு என்பதைக் காட்டுவதாகவே எனக்குத்

தோன்றியது. மேலும் இவர்கள் முன்னேறக் கூடியவர்கள், செயல்திறன் கொண்டவர்கள் என்ற எண்ணமும் என் மனத்தில் தோன்றியது. அவர்களது ஒளிமயமான எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கை வீண்போகவில்லை; அது நிறைவேறிவிட்டது.

மதுரையில் பார்க்க வேண்டிய இடங்களாகக் கோவில்கள், அரண்மனைகள், புனிதக்குளங்கள் ஆகியவற்றைப் பார்த்தபின், பயணத்தின் இறுதிபகுதியைத் தொடங்கினேன். மதுரையிலிருந்து தெற்கு நோக்கி வந்து திருமங்கலத்தில் உள்ள அமெரிக்கன் இறைப்பணியாளர் அறிவர் டிரேசி (Tracy) அவர்கள் வீட்டில் ஒருநாள் தங்கினேன். மதுரை இறைப்பணி இயக்கத்தில் பணிபுரியும் அருட்பணியாளர்களின் கல்விக்காக அவர் பசுமலையில் ஒரு இறையியல் கல்விநிலையத்தை நிறுவினார். அறிவர் டிரேசி தமிழிலும் கிரேக்கத்திலும் புலமை வாய்ந்தவர். தமிழ் விவிலியத்தைத் திருத்தும் பணியில் தொடக்க முதல் இறுதிவரை உதவினார். அதற்குப் பின்பும் பல அரிதான செயல்களைச் செய்துள்ளார். பின்பு, பாளையங்கோட்டைக்குப் போய்ச் சேரும்வரை நான் எங்கும் தங்கவில்லை.

தாமிரபரணி ஆற்றின் வடக்குக்கரையில் உள்ள தோட்டத்தில் காலை உணவை உண்டேன். (திரு. லாசன் தாமிரபரணி ஆற்றை ஓர் அழகிய ஓடை என்றே புகழ்கிறார்.) தண்ணீர் அதிகமில்லாததால் அழகிய 'சுலோச்சனா முதலியார்' பாலத்தின் வழியாக ஆற்றைக் கடக்காமல், காலணிகளைக் கழற்றிவிட்டு குறுக்கே நடந்தேன். அழகான ஆற்றங்கரையையும் பாசன வசதி பெறும் அருகில் உள்ள இடங்களையும் பார்த்து வியந்தேன். அவ்வளவு அழகான இடம்!

பாளையங்கோட்டைக்கும் தாமிரபரணி ஆற்றங்கரைக்கும் இடையில் உள்ள இடத்தைப்போல அழகிய இடத்தை இந்தியச்சமவெளிப் பகுதியில் நான் எங்கும் கண்டதில்லை என்று அன்று நினைத்தேன்; இன்றும் அவ்வாறே நினைக்கிறேன். இருமருங்கிலும் உயர்ந்த மரங்களுடைய வீதியைக் கடந்து கோவில் இறைப்பணியாளர் திரு. பெற்றிற் (Pettitt) அவர்கள் வீட்டிற்குச் சென்றேன். அவருடைய வீடு கோட்டை அருகே இருந்தது. (பாளையங்கோட்டையில் அன்று இருந்த கோட்டை இன்று இல்லை) பயணத்தின் களைப்பு அவ்வளவு அதிகம் இல்லை. வானம்பாடி பறவையைப் போல புத்துணர்ச்சியுடன் திருநெல்வேலி வந்து சேர்ந்தேன்.

## இயல் : 5
# திருநெல்வேலி மண்ணில் மன்னவன் பணி

பாளையங்கோட்டையில் சில நாட்கள் தங்கிவிட்டு நாசரேத், முதலூர் வழியாக இடையன்குடிக்குப் புறப்பட்டேன். வழியில் உள்ள இந்த இரு இடங்களும் S.P.G. பணித்தளங்கள். ஐரோப்பிய இறைப்பணியாளர்களுள் திரு.கேமரர் நாசரேத்திலும் திரு. ஹேயன் (Heyne) முதலூரிலும் தங்கியிருந்து பணிபுரிந்தனர். இரு ஊர்களிலும் கிறிஸ்தவர்களே வாழ்ந்தனர். கிறிஸ்தவச் சட்டத்திற்குட்பட்டு வாழும் கிறிஸ்தவர்களை மட்டுமே கொண்ட முதல் கிராமங்கள் இவை. அடுத்த ஞாயிறு (நவம்பர் 28, 1841) வருகை (அட்வெந்து) நாட்களில் முதலாம் ஞாயிறு. முதல் முறையாக நாசரேத்திலுள்ள கோவிலில் நான் தமிழில் அருளுரை ஆற்றினேன். “இரவு போயிற்று; பகல் சமீபமாயிற்று” என்பது எனது அருளுரையின் தலைப்பு.

பொதுவாகத் திருநெல்வேலியிலும் குறிப்பாக நாசரேத் சுற்று வட்டாரத்தில் உள்ள கிராமங்களிலும் கிறிஸ்தவ வளர்ச்சியைப் பற்றி கண்டவைகளிலிருந்தும் கேட்டவைகளிலிருந்தும் நான் கொண்ட கருத்து என்னவென்றால், இரவு உண்மையிலேயே கடந்து விட்டது. பகல் சமீபமாயிற்று. திருநெல்வேலிப்பகுதியில் கிறிஸ்தவம் வியக்கத்தக்க அளவு வளர்ச்சி கண்டிருந்தது. நான் மேற்கோள் காட்டிய வாக்கியத்தின் குறிக்கோள் ஓரளவு நிறைவேறிற்று. எனினும் முழுமையாக நிறைவேறுவதற்குச் செல்லவேண்டிய தூரம் அதிகம். பகலுக்கு விட்டுக் கொடுக்க இரவு இன்னும் தயங்கிக் கொண்டே இருக்கிறது. அந்நாளைப் பார்க்கும் வரை நான் உயிருடன் இருப்பேனோ அல்லது இருக்கமாட்டேனோ அதை நான் அறியேன். ஆனால் இரவு விரைவில் கடந்துபோகும். பகல் விரைவில் தொடர்ந்து வரும் என நான் உறுதியாக நம்புகிறேன்.

அடுத்த ஞாயிறன்று நான் முதலூரில் இருந்தேன். சில நாட்கள் சென்ற பின்பு இடையன்குடிக்குப் புறப்பட்டேன். மணற்பாங்கான இடமாதலால் பத்து மைல்களே நடக்க முடிந்தது. கால்கள் ஆழமாகப் பதிந்தன. இதுவரை நடந்த பகுதிகளில்

இதுவே மிகவும் கடினமானப் பகுதி. வழித்தடங்கள் இல்லாததால் திசைமாறிப் போய்விட்டேன். இடையன்குடிக்குப் போய்ச் சேரும்போது இரவாகிவிட்டது. கடவுளின் சித்தப்படி, நீண்டகால மகிழ்ச்சியாகப் பணிசெய்ய வேண்டிய இடம் அது. எதிர்பார்த்த அளவுக்கு நான் களைப்படையவில்லை. இதுவரை இறைவன் எனக்கு அருளிய நன்மைகளுக்காகவும் அவரது இரக்கங்களுக்காகவும் நன்றியுள்ள இருதயத்தோடும், இனிவரும் நாட்களில் அவரது சத்தத்தைக் கேட்டு அவரது எண்ணப்படி பணிகளைச் செய்யவேண்டும் என்ற விருப்பத்தோடும் நான் குடியிருக்கவுள்ள புது வீட்டிற்குள் புகுந்தேன்.

1841ஆம் ஆண்டு இறுதியில் எனது பணியைத் தொடங்கினேன். 1842ஆம் ஆண்டு இறுதிக்குள் திருநெல்வேலியில் உள்ள எல்லாப் பணித்தளங்களையும் காண இறைவன் அருள் செய்தார். தமிழ் நன்றாகத் தெரிந்ததினால் மக்களின் கருத்துக்களை அவர்கள் மூலமாகவே அறிந்து கொண்டேன். கிறிஸ்தவத்தைப் பரப்பவும் பணித்தளங்களை நன்றாக நிர்வாகம் செய்யவும் மக்களை முன்னேற்றவும் என்னென்ன வழிமுறைகளைக் கையாளவேண்டும் என்று எனக்குள் சிந்தித்தேன்.

நான் வாழ்ந்த கிராமத்தின் பெயர் இடையன்குடி. முற்காலத்தில் அவ்விடத்தில் இடையர்கள் வாழ்ந்திருக்கின்றனர். அதனாலே அவ்வூர் அவ்வாறு அழைக்கப்படலாயிற்று. மிகவும் பொருத்தமான பெயர். நான் ஓர் ஆயன். வனாந்தரத்தில் சுற்றித்திரியும் ஆடுகளைக் கிறிஸ்துவின் மந்தைக்குள் கொண்டு வருவதற்கே இங்கே வந்துள்ளேன். அதை ஒரு எடுத்துக்காட்டான கிறிஸ்தவக் கிராமமாக மாற்றுவதே என் விருப்பம். முன் மாதிரியான சபையையும், பள்ளிகளையும் நிறுவனங்களையும் நிறுவினால் மட்டுமே இது நிறைவேறும். பின்பு அந்த ஊரை மையமாகக் கொண்டு சுற்றியுள்ள கிராமங்களில் நற்செய்தியை அறிவித்துச் சபைகளையும் பள்ளிகளையும் நிறுவுவதும், அங்கிருந்து மேலும் அதற்கு அப்பாலுள்ள கிராமங்களில் அதன் தாக்கத்தை ஏற்படுத்துவதுமே எனது முதன்மையானக் குறிக்கோள்.

இடையன்குடியும் அதைச் சார்ந்த கிராமங்களும் முன்பு முதலூர் சபையுடன் இணைந்திருந்தன. நான் வந்த பின்பு ஒரு புதிய மறை மாவட்டம் உருவாக்கப்பட்டு, அதற்குத் தலைமை

இடமாக இடையன்குடி செயல்பட்டது. எனது பொறுப்பில் ஒப்படைத்த சபைகளில் இடையன்குடியே மிகப் பெரிய சபை. அதனாலேயே நான் தங்குமிடமாக அதைத் தெரிந்தெடுத்தேன். எங்குப் பார்த்தாலும் பனைமரங்கள், மணல் மேடுகள். நாட்கள் செல்லச் செல்ல, என் மனத்தில் இப்படி ஒரு எண்ணம் அடிக்கடி தோன்றியது. மக்கள் அதிகமாக வாழும் இடத்தில் நான் குடியிருக்காமல் பரந்த வெளியில் குடியிருந்திருந்தால் இதை விட நன்றாக இருந்திருக்கும். சமூக, சுற்றுப்புறங்களினால் எனக்கு ஏற்பட்ட தொல்லைகள் சற்றுக்குறைவாக இருந்திருக்கும்.

அந்த ஊர் இடையர்களால் உருவாக்கப்பட்டிருந்தாலும், நான் அங்கு வரும்போது இடையர் ஒருவர் கூட கிடையாது. தங்க ஆசாரிமார், சாயங்காய்ச்சுவோர், எண்ணெய்ச் செட்டியார், வண்ணார் போன்ற பல தொழில்புரிவோர் அங்கு வாழ்ந்தனர். ஆனால் பெரும்பாலனோர் சாணார் இனத்தினர். அங்குள்ள கிறிஸ்தவர் அனைவரும் சாணார்களே. அங்குள்ள 500 சாணார்களில் 300 பேர் கிறிஸ்தவர்கள்; 200 பேர் இந்துக்கள். சிறுபான்மையோரான இந்துக்கள் தங்களை உயர்ந்த குடியைச் சேர்ந்தவர்கள் என்று எண்ணினர்.

இவர்கள் ஐரோப்பியர்களின் வருகைக்கு முன்பே கிறிஸ்தவர்களாயிருந்து பின் மாற்றம் அடைந்தவர்கள். தாங்கள் முன்பு கிறிஸ்தவர்களாயிருந்திருந்தும், கிறிஸ்தவத்தையும், கிறிஸ்தவ வாழ்க்கை முறையையும் வன்மையாக எதிர்த்தவர்கள். தங்கள் நடுவில் ஐரோப்பியர் வாழ்வதை அவர்கள் விரும்பவில்லை. அவர்கள் மீதுள்ள வெறுப்பினால் தாங்களாகவே ஊரைவிட்டு வெளியேறினர். அவர்கள் ஊரை விட்டு வெளியேறிய பின்பே அவ்வூருக்கும் மக்களுக்கும் நன்மையானவற்றைச் செய்ய முடிந்தது. அத்தகைய மக்கள் சுற்றியுள்ள கிராமங்களில் குறிப்பாக, கடற்கரையோரமுள்ள கிராமங்களில் அதிக எண்ணிக்கையில் வாழ்ந்து வந்தனர்.

அந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் கிறிஸ்தவ சமயத்தைத் தழுவி, பின்பு 1810 முதல் 1812 வரை ஏற்பட்ட கொள்ளை நோயின் போது இந்து சமயத்திற்கு மாறிய மக்களின் சந்ததியினரே அவர்கள். கோலாஃப் மற்றும் முந்தைய இறைப்பணியாளர்கள் அவர்களின் ஊருக்குச் சென்றது போன்ற செயல்களை நினைவில் வைத்துள்ளனர். கிறிஸ்தவர்கள் அல்லாதவர்களைச் சமாளிப்பதை விட ஏற்கனவே

கிறிஸ்தவர்களாக இருந்து பின்பு இந்துவாக மாறிய நாடான் அல்லது நிலச்சுவான்தார் என்று தங்களை அழைத்துக்கொள்ளும் மக்களைச் சமாளிப்பதே மிகவும் சிக்கலாக இருந்தது. விரைவில் இடையன்குடியில் உள்ள எல்லாச் சாணார் இனமக்களும் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டனர். நான் நிறுவிய பள்ளிகள் மூலம் நற்செய்தி சுற்றுப்புறக் கிராமங்கள் அனைத்திலும் மிக வேகமாகப் பரவத் தொடங்கியது.

நான் வந்தபொழுது C.M.S. இயக்கத்தைச் சேர்ந்த சுவிசேஷபுரம் பணித்தளப் பகுதிக்குட்பட்ட பல சபைகள், பள்ளிகள் ஆகியவையும், இடையன்குடிப் பணித்தளப் பகுதிகளுக்குள் அங்கும் இங்குமாகக் கலந்து இருந்தன. அதுபோல இடையன்குடியைச் சேர்ந்த சபைகள் சுவிசேஷபுரம் பணித்தள எல்லைக்குள் இருந்தன. அவைகளுக்கு எல்லைக் கோடு வரையறுக்கப்படவேண்டும் என்பது எனது முதன்மை பணிகளுள் ஒன்றாகக் கருதித் தீவிரமாக அப்பணியில் ஈடுபட்டேன்.

இருதரப்பினரின் ஒப்புதலின் பேரில் உருவாக்கப்பட்ட அந்த எல்லை உடன்பாட்டு தொடர்புள்ள உயர் அலுவலர்கள் ஒப்புதல் அளித்தனர். குறுகிய மனப்பான்மையுடன் பணியாற்றி வந்த இரு இயக்கத்தினரின் குறுகிய எண்ணங்களுக்கு இந்த எல்லை உடன்பாடு நல்ல அடித்தளமிட்டது. அந்த உடன்பாட்டின்படி சமாரியா, பெத்லகேம், கீரைக்காரன்தட்டு ஆகிய கிராமங்கள் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டன. அவைகளுக்குப் பதிலாக ஆனைகுடி, புதூர், பெட்டைக்குளம் ஆகிய கிராமங்கள் எங்களுக்குத் தரப்பட்டன. பணித்தளத்தின் ஒவ்வொரு துறையின் பணியையும் திறமையுடனும் ஐயங்களும் பயங்களுமின்றி நிறைவேற்றவும் இந்த ஏற்பாடு மிகவும் பயனுள்ளதாக இருந்தது. பணியின் நல்ல தாக்கங்களினால் எல்லையின் இருபுறங்களிலும் உள்ள மக்களுக்கு அதிகப் பயன்கள் கிடைத்தன.

அந்நாட்களில் இடையன்குடியின் வெளித்தோற்றம் நன்றாக இல்லை. கிராமத்தின் நடுப்பகுதியில் ஒரு பெரிய சதுக்கம் இருந்தது. வரிசையாக இருந்த வளர்ந்தோங்கிய புளியமரங்கள் அச்சதுக்கத்தின் அழகுக்கு அழகு சேர்த்தன. ஓர் ஓரத்தில் ஒரு சிறிய கோவிலும், அதின் அருகில் சிறிய மாளிகை ஒன்றும் இருந்தன. வெளியிலிருந்து வரும் இறைப்பணியாளர்கள் தங்குவதற்காக மாளிகைக்கு அருகில் ஓர் அறை

கட்டப்பட்டிருந்தது. கிராமத்தின் எஞ்சிய பகுதிகள் அனைத்தும் ஒழுங்கின்றியே காணப்பட்டன. தெரு என்று அழைக்கும் அளவுக்கு ஒன்றும் கிடையாது. அங்குமிங்கும் செல்லும் நெளிந்த சந்துக்களே இருந்தன. பெரும்பாலான வீடுகள் பனை ஓலையினால் வேயப்பட்ட கூரையுள்ள குடிசைகள். எந்த வீட்டிலும் வராந்தா கிடையாது.

தேரியின் சரிவுப்பகுதியில் இடையன்குடி கிராமம் அமைந்துள்ளது. கருஞ்சிவப்பு மண்ணுக்கும் கரும்பச்சைநிற இலைகளுடைய மரங்களுக்கும் இடையே விழும் பிரகாசமான சூரிய ஒளி... ஆகா! என்னே அழகுக் காட்சி! திருநெல்வேலியின் தென்கிழக்குப் பகுதியில் காணப்படும் சிவந்த மணலைப் போல் சிவப்பான மணலை வேறு எங்கும் காணமுடியாது. வியன்னாவில் நடந்த பொருட்காட்சிக்கு இங்குள்ள மணலையும் திருநெல்வேலியின் மற்ற பகுதிகளில் காணப்பட்ட மணலையும் நான் அனுப்பி வைத்தேன். இடையன்குடிப் பகுதியில் காணப்படும் சிவந்த மணலுக்கு நிகரான சிவந்த மணல் வேறு எந்த இடத்திலும் இல்லை என்ற செய்தியை அவர்கள் எனக்கு அனுப்பி வைத்தனர். மற்ற பகுதிகளை விட இந்தச் சிவந்த மணல் பகுதியில் பனை மரங்கள் செழித்து வளர்கின்றன. அம்மரங்களில் இருந்து பெறப்படும் பதநீரைக் காய்ச்சி கருப்புக்கட்டி உற்பத்தி செய்யப்படுகிறது. கருப்புக்கட்டியிலிருந்து கிடைக்கும் வருமானம் மக்களின் பொருளாதார நிலையை மேம்படுத்தி அவர்களின் வாழ்க்கையை வளம் பெறச் செய்கிறது.

அங்குள்ள மக்களில் பெரும்பாலானோர் பனைத்தொழில் செய்பவர்கள். சற்று வசதியுள்ளவர்கள் பணி செய்வதற்கு ஆட்களை அமர்த்துகின்றனர். பொதிமாடுகளில் கருப்புக்கட்டியை ஏற்றி திருவிதாங்கூர் வரை சென்று வணிகம் செய்கின்றனர். சிலர் பயிர்த்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். வாழை அதிகமாகப் பயிரிடப்படுகிறது. கிணற்றுப்பாசனம் மூலம் பயிரிடுபவர்களுக்கு அதிக வரி விதிக்கப்படுவதால் விவசாயிகள் பெரும் இன்னலுக்குட்பட்டனர். பின்பு மற்ற நிலங்களைப் போல இந்த விளைநிலத்திற்கும் வரி குறைக்கப்பட்டதால், இங்குமட்டுமல்ல, அண்டைப் பகுதிகளிலும் வாழைப்பயிரிடும் தொழில் முதன்மைத் தொழிலாகவும் அதிக வருமானம் கொடுக்கக்கூடிய தொழிலாகவும் மாறியது. திருநெல்வேலியில் உள்ள நகரங்களுக்கு வாழைப்பழங்களும் வாழைஇலைகளும் இங்கிருந்தே

அனுப்பப்பட்டன. செல்வந்தர்கள் தட்டிற்குப் பதிலாக வாழை இலையையே பயன்படுத்தினர்.

குறிப்பு:- தனது சகோதரிக்கு கால்டுவெல் எழுதிய மடலின் சுருக்கம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது. திருநெல்வேலிப் பகுதியில் உள்ள பணித்தளங்களில் தொடக்கக்காலத்தில் செய்யப்பட்ட இறைப்பணிகளைப்பற்றி வருங்காலப் பேராயர் மனத்தில் உள்ள எண்ணங்களை இதன் மூலம் அறியலாம்.

எனது புதிய பணியிடத்தைப் பற்றி உனக்கு எழுதலாம் என்று நினைக்கிறேன். திருநெல்வேலிக்கு வருமுன்னரே இந்தியாவில் உள்ள பெரும்பாலான இடங்களைப் பார்த்துள்ளேன். அவை உனக்கு ஊக்கமளிப்பதாக இல்லை. திருநெல்வேலியை இந்தியப் பணித்தளங்களின் தோட்டம் என அழைக்கலாம். நம் நாட்டில் உள்ளது போல் திருநெல்வேலிப் பகுதியில் கிறிஸ்தவர்கள் அதிகம். எனவே இப்பகுதியைக் கிறிஸ்தவப்பகுதி என்று அழைப்பதில் தவறில்லை. முதலாவது வந்து இறங்கியதும் சுற்றியுள்ள இடங்களைத் திரும்பிப் பார்த்தேன். எனது திறமைக்கு மேற்பட்டது என எண்ணினேன். மாலை நேரம். நடக்கத் தொடங்குகிறேன். சுமார் 30 மைல் தொலைவு எங்குச் சென்றாலும் நான் காண்கிற காட்சிகள்: ஒவ்வொரு கிராமத்திலும் பாழடைந்த இந்துக்கோவில். புதிய கிறிஸ்தவக் கோவில். புதிய பள்ளி. புன்னகை பூத்த முகங்களுடன் திரளான மக்கள் என்னைச் சுற்றி வந்து 'தோத்திரம்' என்று சொல்லித் தங்கள் மரியாதையைத் தெரிவிக்கின்றனர்.

பகலவன் மறைகிறான். இருள் சூழத் தொடங்குகிறது. கோவில்களில் உண்மையான தெய்வத்தைப் போற்றிப் பாடும் பாடல்களின் ஒலி என் செவிகளில் எட்டுகின்றது. இந்த நல்ல வாய்ப்பை நான் இதற்கு முன்பு எங்கும் பெற்றதில்லை. இதுவரை புறசமயத்தார் வாழும் இடங்களையே பார்த்த எனக்கு இந்த இடம் விண்ணுலகத்தில் நடந்து செல்வது போன்று உள்ளது. இதுவரை நான் கண்டவை யாவும் வெளிப்புறத் தோற்றமே. உண்மைதான். எனினும், அறுவடைப் பணியில் ஊக்கமளிப்பதற்கும் சீயோன் குமாரத்தியின் உள்ளமும் அழகாக இருக்க வேண்டும் என்று வேண்டுவதற்கு மனமகிழ்ச்சி அளிக்கும் வகையில் அவ்வளவு அழகாக இருக்கிறது அந்த வெளிப்புறத்தோற்றம்! இங்கிலாந்து திருச்சபையைச் சேர்ந்த 11 இறைப்பணியாளர்கள் இங்கு

பணிபுரிகிறோம். ஒவ்வொருவருக்கும் ஒரு சேகரம் ஒதுக்கப்பட்டுள்ளது. அவற்றில் சில மிகப்பெரியவை. பக்கத்தில் உள்ள ஒரு இறைப்பணியாளர்க்கு 50 சபைகளைக் கண்காணிக்கும் பொறுப்பு உண்டு. மிகவும் சிறிய சேகரத்தில் 13 சபைகளைக் கண்காணிக்கும் பொறுப்பு உண்டு.

ஒவ்வொரு சபையிலும் ஓர் ஆசிரியர் திருப்பணிவிடையாளராகப் பணியாற்றுகிறார். காலாகாலங்களில் தேவையான இறைசெய்தி அளிக்கப்படுகிறது. அருட்பணியாளரால் கண்காணிக்கப்பட்டும் வருகிறார். திருநெல்வேலியில் உள்ள சபைகளில் தொடக்க காலந்தொட்டே ஒவ்வொரு நாள் காலையிலும் மாலையிலும் இறைவழிபாடுகள் நடைபெறுகின்றன. அவ்வழிபாடுகளில் ஞாயிறன்று கலந்துகொள்ளுவோரில் சுமார் மூன்றில் இரண்டு பங்கு மக்கள் ஏனைய நாட்களில் கலந்து கொள்ளுகிறார்கள். திருப்பணிவிடையாளர் தன்னால் இயன்றவரை அவர்களுக்கு இறைச்செய்தி வழங்குகிறார். இறைப்பணியாளர் தனது இருப்பிடத்தில் உள்ள கோவிலில் இறைவழிபாடு நடத்துகிறார். ஒவ்வொரு நாளும் ஏதாவது ஒரு சபையைப் பார்வையிடுகிறார். இந்த அன்றாடப் பணியுடன் கிறிஸ்தவரல்லாதவர் நடுவிலும் பணி நடைபெறுகிறது.

சென்ற ஆறுமாதங்களில் கிறிஸ்தவரல்லாதோர் சுமார் 5000 பேர் தங்கள் தெய்வமாகிய சிலைகளை விட்டுவிட்டு இயேசுவின் மந்தையில் இணைய வந்துள்ளனர். அவர்களில் 400 பேர் என் சேகரத்தைச் சேர்ந்தவர்கள். இப்பகுதிகளில் நற்செய்தி இவ்வளவு வேகமாகப் பரவுவதைக் கண்ட கிறிஸ்தவரல்லாதோர் கடுஞ்சினங்கொண்டு அதிகத் தொல்லை கொடுக்கத் தொடங்கினர். நான் வருவதற்குச் சிறிது காலத்திற்கு முன்பு அவர்களில் பலர் குழுக்களாகச் சேர்ந்து ஊர் ஊராக அலைந்து திரிந்து புதிதாகக் கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டவர்களைத் தாக்கியும் வீட்டைக் கொள்ளையடித்தும் இறைப்பணியாளர்களைக் கலக்கம் அடையச் செய்தனர். இப்பொழுது ஓரளவு அமைதி திரும்பியுள்ளது. எனினும் நீதிபதிகள் நடுநிலைமை வகிப்பதால் எதிர்ப்பாளர்கள் மேலும் வலுவடைந்ததுடன் பகைமையும் வளர்ந்து கொண்டே இருந்தது.

நான் வாழும் இடத்தை இந்திய வரைபடத்தில் நீ பார்க்க முடியாது. அது கடற்கரையிலிருந்து 3 மைல் தொலைவில் உள்ளது. கன்னியாகுமரியிலிருந்து 30 மைல்; பாளையங்

கோட்டையிலிருந்து தென்கிழக்காக 35 அல்லது 40 மைல். இப்பொழுது நான் இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்து விடலாம். நான்தான் தெற்குக் கடைசியில் உள்ள இறைப்பணியாளர். மலையாள எல்லையில் இருக்கும் கிளாஸ்கோவைச் சேர்ந்த திரு. ரஸ்ஸல் என்பவரே எனக்கு மிக அருகில் உள்ள இறைப்பணியாளர். இந்தியாவின் தெற்குக் கோடியில் கிளாஸ்கோவைச் சேர்ந்த நாங்கள் இருவரும் காவலாளிகள் போன்று நின்று கொண்டிருக்கிறோம். இங்குள்ள காலநிலை இச்சமயம் சென்னையை விடக் குளிர்ச்சியாக உள்ளது. எங்குப் பார்த்தாலும் ஒரே மணல்! பனைமரங்களைத் தவிர மற்ற தாவரங்களைப் பார்ப்பது அரிது. அப்பனை மரங்களிலிருந்து பதநீர் எடுக்கின்றனர். பதநீரிலிருந்து கருப்புக்கட்டி கற்கண்டு போன்ற பொருட்கள் தயாரிக்கப்படுகின்றன. சபையார் என்னைப் பார்க்க வருகையில் கருப்புக்கட்டியையும் வாழைப்பழங்களையும் கொண்டு வருகின்றனர்.

இந்தப்பகுதியில் எனக்கு மிக அருகில் உள்ள இறைப்பணியாளர் 6 மைல் தொலைவிலும் மற்றவர்கள் 10, 17, 20 மைல் தொலைவிலும் இருக்கின்றனர். என்னுடன் பணியாற்ற இன்னொரு இறைப்பணியாளர் வரவிருக்கிறார். அவர் வெஸ்லியன் இயக்கத்திலிருந்து பிரிந்து சென்றவர். சென்னையில் இருக்கும்போது திருச்சபைக் கொள்கைகளைக் கடுமையாக எதிர்த்தவர். அவரது விருப்பத்தின்படி என்னுடன் பணியாற்றப் பேராயர் அவரை பணித்திருக்கிறார். கட்சியில் நான் ஒரு தீவிரவாதியாக இருந்தால், திருச்சபையில் இணைய முன்வரும் மக்களைப்பற்றி மிகவும் மகிழ்வேன். இவ்வகை மாற்றம் இந்நாட்டில் உள்ள அமெரிக்கர்களிடையேயும், இலண்டன் இறைப்பணியாளர் களிடையேயும், வெஸ்லியன்களிடையேயும் அதிகம் காணப்படுகிறது. அவர்களில் பலர் அதைப்பற்றி வெளிப்படையாக "உங்களைப் போலவே நாங்களும் திருச்சபையில் இணைந்து பணியாற்ற விரும்புகிறோம்" என்று கூறியிருக்கின்றனர். அவர்களில் மூன்று நான்குபேர் என்னைப் பின்பற்றிவிட்டனர்.

இங்குள்ள சுற்றுப்புறச் சூழ்நிலைகளைக் காணுங்கால், இந்த மக்கள் நாகரீகத்தில் மேம்பட்டவர்களாயிருப்பார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. அவர்கள் கைகளினால் பணி செய்து படிக்கப்பட்டவர்கள். மூளையினால் அல்ல. பலர் இருகைகளையும் கால்களையும் பயன்படுத்தி பனைமரத்தில் ஏறுகின்றனர்.

அவர்களுக்கு ஒய்வுமில்லை; அறிவைப் பயன்படுத்தும் எண்ணமுமில்லை; வாய்ப்புமில்லை. பெயரளவில் அங்குப் பல ஆண்டுகளாக ஒரு பள்ளி இருந்திருக்கிறது. நான் அங்குச் செல்வதற்குச் சிறிது காலத்திற்கு முன்பு, எனக்கு முன்னால் பணி செய்த முதலூர் ஹேய்ன் அவர்களின் உதவியினால் அது புத்துயிர் பெற்றது. வருங்கால மக்களுக்கு அது பெரும் ஆசீர்வாதமாக இருக்கும் என்று எதிர்பார்க்கலாம். ஒரே ஒருவருக்கு மட்டும் வாசிக்கமுடியும் என்று நினைக்கிறேன்.

ஐரோப்பிய இறைப்பணியாளர்கள் வாழும் இடங்களைத் தவிர, திருநெல்வேலியில் வேறு எங்கும் பெண் கல்வியைப் பற்றி நினைத்துப்பார்க்கவே முடியாது. பெண்களுக்கு படிக்கவும், எழுதவும் கற்றுக்கொள்ள முடியாது என்ற எண்ணம் பொதுவாக அங்கு உண்டு. அப்படி அது நிறைவேறினும் பெண்கள் கற்பது முறையல்ல என்ற எண்ணமும் உண்டு. அரசகுமாரிகளும் நடனக்காரிகளின் பெண்பிள்ளைகளுமே கற்கத்தகுந்தவர் என்று ஒருவர் என்னிடம் ஒரு முறை கூறினார். ஆண்கள் பள்ளிக்குப் புத்துயிர் கொடுத்ததுடன், பெண்களுக்கான பள்ளி ஒன்றையும் அங்கு நிறுவினேன். சிலநாட்கள் சென்ற பின்பு இடையன்குடிக்கு ஒரு இஸ்லாமிய உதவி நீதிபதி வந்தார். கல்வி கற்பது தேவையற்றது என்ற பொதுவான கருத்தையே அவர் அச்சமயம் வலியுறுத்தினார். "இந்தப் பையன்கள் படிப்பதினால் பயனேது? பனை ஏறுவதற்கா? இந்தப் பெண்கள் ஏன் படிக்க வேண்டும்? நூல் சுற்றுவதற்கா?" என வினவினார்.

இடையன்குடி மக்கள் கல்வியிலும் பண்பாட்டிலும் மிகவும் பின் தங்கிய நிலையில் உள்ளார்கள் என்று எண்ணுவது தவறு. இந்த இனமக்கள் வாழும் எல்லாக் கிராமங்களிலும் தங்களை உயர்ந்தவர்கள் என்று சொல்லிக்கொள்ளும் மக்கள் வாழும் கிராமங்களிலும் இதே நிலைதான். இங்கிருந்து சில மைல்களுக்கப்பால் குட்டம் என்ற ஊர் இருந்தது. சாணார்களுள் உயர்ந்தவர்கள் என்று தங்களைக் கூறிக் கொள்ளும் மக்கள் அங்கு வாழ்ந்தனர். இடையன்குடியில் வாழ்ந்த சாணார்களுக்கும் குட்டத்தில் வாழ்ந்த சாணார்களுக்கும் இடையே ஒரு வேறுபாடு காணப்பட்டது. இடையன்குடி மக்கள் ஏழைகள். குட்டம் மக்கள் செல்வந்தர்கள். அவ்வளவுதான். நாகரிகத்திலோ அல்லது பண்பிலோ எந்த வேறுபாடும் கிடையாது. இப்பொழுது கூடச் செல்வந்தர்களாக இல்லாவிட்டாலும் கிறிஸ்தவக் கல்வி பெற்றதினால் இடையன்குடி மக்கள் நாகரிகத்திலும் பண்பிலும்

பக்கத்தில் உள்ள கிராம மக்களை விடப் பல மடங்கு உயர்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர்.

முதலூரிலும் நாசரேத்திலும் ஐரோப்பிய இறைப்பணியாளர்கள் தங்கியிருந்து தொண்டுகள் செய்வதின் விளைவாக அங்குள்ள மக்கள் இடையன்குடி மக்களைக் காட்டிலும் சற்று முன்னேற்ற மடைந்திருந்தனர். எனினும் இறைப்பணியாளர்கள் தவிர, மற்ற உயர்நிலை திருப்பணிவிடை யாளர்களும் பள்ளி ஆசிரியர்களும் தஞ்சாவூரிலிருந்து வந்தவர்களே. ஆய்வு செய்யும் இறைப்பணியாளர்களாக பணி அமர்த்தப்படும் அளவுக்குப் பல ஆண்டுகளாகத் திருநெல்வேலியில் உள்ளவர்கள் தேர்ச்சி பெறவில்லை. அப்பணியில் முதலாவது வேளாளர்களே அமர்த்தப்பட்டனர். கிறிஸ்தவரல்லாதோர் திருமண்டலப் பள்ளிகளில் ஆசிரியர்களாகப் பணி அமர்த்தப்பட்டனர். அப்படிப்பட்டவர்கள் மனமாற்றமடைந்து கிறிஸ்தவத்தைத் தழுவினர். பல ஆண்டுகளாக சாணார் கிறிஸ்தவர் எவரும் ஆய்வு செய்யும் திருப்பணிவிடையாளராகவோ அல்லது பள்ளி ஆசிரியராகவோ பணி அமர்த்தப்படவில்லை.

பிற்காலத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சியை இங்குக் குறிப்பிடுவது மிகவும் பொருத்தமாக இருக்கும் என எண்ணுகிறேன். திருநெல்வேலிக்கு வந்த 8 ஆண்டுகளுக்குப் பிறகு 1849இல் நான் பணியாற்றும் இடத்தில் உள்ள மக்களைப் பற்றி 'திருநெல்வேலிச் சாணார்கள்' என்ற தலைப்பில் ஒரு சிறு புத்தகத்தை எழுதினேன். அதில் அம்மக்களிடையே இருந்து வந்த பேய் வணக்கத்தைப்பற்றி விளக்கினேன். அப்பழக்கம் எவ்வாறு அவர்களுடைய அறிவு, நீதிநெறி, சமயம் தொடர்பான செயல்களைப் பாதிக்கிறது என்பதைப் பற்றி எழுதுவதே அச்சிறு நூல் எழுதுவதின் முதல் நோக்கம். அச்சமயம் இந்து சாதியேணியில் சாணர்கள் எந்த இடத்தில் இருக்கின்றனர் என்பதைத் தற்செயலாகக் குறிப்பிட்டிருந்தேன். அந்தச் செய்தி அறிவிற்சிறந்த இந்துக்களாலும் சாணார் இனமக்களாலும் கொடுக்கப்பட்டவை. சாணார்களை நான் நேரில் பார்த்தவாறே விவரித்ததின் நோக்கம் என்னவென்றால் அவர்கள் மீது அன்பை ஏற்படுத்தி அவர்களின் கல்விக்காகவும் மேம்பாட்டுக்காகவும் இங்கிலாந்து நாட்டு நண்பர்களிடமிருந்து நிதி திரட்டுவதற்கே அல்லாமல் வேறு எதற்குமில்லை. அந்த நோக்கம் கிட்டதட்ட நிறைவேறிவிட்டது.

முதன்முதலில் நான் அவர்களை நேரில் கண்ட போது இருந்த நிலையைவிட பெருமளவில் அவர்களுடைய சமூகநிலை திருவாங்கூர்ப் பகுதியிலும் திருநெல்வேலிப் பகுதியிலும் உயர்ந்திருக்கிறது என்பதை யாரும் மறுக்க இயலாது. முற்றிலும் எதிர்பாராத ஒன்று நடந்துவிட்டது. இச்சிறு நூலை நான் எழுதும்போதும் அதற்குப்பின் பல ஆண்டுகள் சென்றபின்பும் கூட அந்நூலைப் படித்துப் புரிந்துகொள்ளும் அளவுக்கு அவர்கள் ஆங்கில அறிவு பெறவில்லை. இருபது ஆண்டுகள் கழிந்த பின்பு ஆங்கிலம் படித்த சில சாணார்கள் அதைப் படித்து சமுதாய மக்களில் சாணார்களின் இடம் குறித்து நான் குறிப்பிட்டது பற்றித் தங்களது மனநிறைவற்ற நிலையைத் தெரிவித்துள்ளனர்.

ஐரோப்பிய இறைப்பணியாளர்களின் எதிர்பாராத முயற்சியால்தான் சாணார்கள் சமூகத்தில் உயர்தரத்தைப் பெற்றுள்ளனர். இதை அறியாத இளைஞர் சிலர் தாங்கள் ஏற்கனவே உயர்ந்த இனத்தைச் சேர்ந்தவர்கள் என்றும், அரசர்களின் குமாரர்கள் என்றும், அந்தணர்களுக்கு அடுத்த நிலையில் உள்ளவர்கள் என்றும் கூறுகிறார்கள். மட்டுமின்றி, என்னை அவர்களுடைய நண்பனாகக் கருதாமல், தங்கள் இனத்தின் பகைவர் என்ற பழியைப் பரப்பி வருகின்றனர். தாங்கள் ஏறிவந்த ஏணியையே உதறித் தள்ளிவிட்டனர். இவர்களில் சிலர் 1881இல் பணித்தளங்களுக்குச் சென்று, அப்பாவி மக்களை எனக்கு எதிராகத் தூண்டிவிட்டு நான் இங்குத் திரும்பி வரக்கூடாது என்று விண்ணப்பம் கொடுத்திருந்தனர்.

இச்சிறு நூல் அவர்களுக்கு மனநிறைவை ஏற்படுத்தாததால், அதை அப்படியே விட்டுவிட்டிருந்தால் அவர்களுக்கு நலமாயிருந்திருக்கும். ஏனெனில், எனது நூல் அவர்களைப் புண்படுத்திவிட்டது என்பதை அறிந்தேன். அதில் கொஞ்சம் கூட நியாயம் இல்லை, இருப்பினும் முடிந்தமட்டும் அந்நூல் மேலும் சுற்றுக்குச் செல்லாதபடி பார்த்துக் கொண்டேன்; நூலையும் திரும்பப் பெற்றுக்கொண்டேன். அந்நூலில் குறிப்பிட்ட அனைத்துச் செய்திகளையும் என்னால் எளிதில் நிலைநிறுத்த முடியும். ஏனெனில் நான் பார்த்தவற்றை மட்டுமே அதில் எழுதியிருக்கிறேன். அவர்கள் எண்ணியதுபோல் தவறாக எழுதவில்லை. அப்படி எழுதியிருப்பேனாகில் நிலைமை மிக மோசமாயிருக்கும். காரணம், இனத்தின் பெருமை போல, இன உணர்வுகளும் விவாதத்திற்கு உட்பட்டவை அல்ல. நாட்கள்

செல்லச் செல்ல, கிறிஸ்தவக்கல்வியினால் எல்லா இன மக்களிலும் படித்தவர்களின் எண்ணிக்கை அதிகரிக்க அதிகரிக்க, இப்படிப்பட்ட தீமைகள் தானாகவே குறைந்து இறுதியில் மறைந்துவிடும்.

நாட்கள் செல்ல செல்ல சாணார்களிடையே ஒரு சிறப்பான பண்பைக் கண்டேன். தங்களின் முன்னேற்றத்திற்காகவும் வளர்ச்சிக்காகவும் இடைவிடாது முயற்சி செய்துகொண்டே இருக்கின்றனர். சமுகத்தில் தொடக்கநிலையில் அவர்கள் எந்த இடத்தில் இருந்தாலும், இப்பொழுது, தென்னிந்தியாவில் உள்ள இனங்களில் அவர்கள் ஓர் உயர்ந்த இடத்தைப் பிடித்து விட்டனர் என்று உறுதியாகக் கூறலாம். தென்னிந்தியாவில் உள்ள வளர்ச்சியடைந்த இனமக்களில் திருநெல்வேலி கிறிஸ்தவச் சாணார்களும் அடங்குவர் என்பதை ஒப்புக்கொள்ளலாம். மாநிலத்தில் அவர்கள் இல்லாத பணித்தளமே கிடையாது. திருமண்டலப் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் அவர்களே சிறந்த ஆசிரியர்களாகப் பணியாற்றுகின்றனர். அரசுப் பணிகளிலும் அவர்கள் இருக்கின்றனர். அதிகப் பொறுப்பும் செல்வாக்குமிக்க இடங்களைப் பெறும் அளவுக்கு வேகமாக முன்னேறி வருகின்றனர்.

இப்பொழுது நான் பணிபுரிந்த மக்களைப் பற்றி எழுதுகிறேன். அப்பொழுது இருந்த திருநெல்வேலி கிறிஸ்தவர்கள், பிற்காலத்தியக் கிறிஸ்தவர்களைவிடக் கல்வியிலும் பண்பிலும் குறைவுபட்டவர்களாக இருந்தாலும், நீதிநெறி மற்றும் சமயச் சார்பான செயல்களில் மற்றவர்களை விட எல்லாவகையிலும் குறைந்தவர்கள் அல்லர். அவர்கள் மற்றவர்களைப் புரிந்துகொள்ள அதிக நேரம் எடுப்பர்; அதுபோல மெதுவாகவே கற்கின்றனர்; கற்றதை மறக்கவும் நாட்களாகும்; எனினும், மற்றவர்களிடமிருந்து கற்றுக் கொள்ள ஆயத்தமாக உள்ளனர்; மிகவும் பணிவு உள்ளவர்கள்; கடின உழைப்பாளிகள்; நிதானமானவர்கள்; அமைதியை விரும்புகிறவர்கள். அவர்கள் முன்னேற்றம் சற்று மெதுவாக இருந்தாலும், தொடர்ந்து இருப்பதால் நாளடைவில் உறுதியாகவும் நிலையாகவும் இருக்கும் என எதிர்பார்க்கலாம். அப்படிப்பட்ட மக்களிடையே பணிபுரிவதே சாலச்சிறந்தது என எண்ணினேன். அம்மக்களை கிறிஸ்தவ நம்பிக்கையிலும் திருச்சபை ஒழுங்கிலும் அறிவு வளர்ச்சியிலும் ஆன்மீக வாழ்விலும் உறுதியாகக் கட்டப்பட என் வாழ்க்கையை

அர்ப்பணிக்க முடிவு செய்தேன். இறைவனின் உதவியினாலும் அருளாலும் அவர்களிடமிருந்து கனிகளைப் பெற முடியும். அக்கனிகள் இறுதிவரை நிலைத்திருக்கும் என்ற உறுதியான நம்பிக்கை எனக்குண்டு.

தலைமுறை தலைமுறையாகத் தீய பழக்கங்களில் ஈடுபாடு கொண்டிருந்த கீழைநாடுகளின் மக்களைக் கிறிஸ்தவர்களாக்கி முன்னேறச் செய்யும் எனது முயற்சி எனக்கு ஏமாற்றத்தை அளிக்கலாம். எனது நோக்கங்களைத் தவறாகப் புரிந்துகொள்ளலாம். எனது எதிராளிகளின் பகைமையினாலோ அல்லது நண்பர்களின் மனமுவந்த ஆதரவு இல்லாததினாலோ, இன்றும் நீடித்திருக்கும் இனப் பொறாமையினாலோ நான் தீட்டிய நல்ல திட்டங்கள் தோல்வி அடையலாம். இவைகள் நடக்கும் அல்லது நடக்கலாம் என்பதையும் நான் அறிவேன். இருப்பினும், கிறிஸ்தவர்களுக்கோ அல்லது கிறிஸ்தவர் அல்லாதவருக்கோ நன்மை செய்ய நான் எடுத்துக்கொள்ளும் முயற்சிகள் நாளடைவில் இறைவனுடைய அருளால் வெற்றி பெறும் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

பணித்தளத்திற்குத் தேவையான கோவில், வீடு, பள்ளிகள் கட்டுவதற்கு இடையன்குடியில் உள்ள நிலத்தையும் அருகில் உள்ள நிலத்தையும் வாங்க முயன்றேன். அது அவ்வளவு எளிதான செயல் இல்லை. அதற்குப் பல காரணங்கள் உண்டு. முதலாவது, நிலத்தை உடையவர்கள் அதிக விலை கேட்டனர். இரண்டாவது ஆவணம் முடிப்பதில் உள்ள சிக்கல்கள். மூன்றாவது, சிலர் தாங்கள் நிலத்தை யாருக்கும் அதிலும் வெள்ளைக்காரர்களுக்கு விற்க விரும்பவில்லை. வெளிநாட்டுக்காரர் பொதுநல நோக்கத்திற்காகவே அதை வாங்க விரும்புகிறார்கள் என்ற எண்ணம் சிறிதும் இல்லை.

கிராம மக்கள் தங்கள் நிலத்தை ஒத்திக்கு வைக்கின்றனர். ஆனால் நிலத்தை விற்பதற்குத் தயக்கம் காட்டுகின்றனர் என்பதை உணர்ந்து கொண்டேன். தனித்தனி ஆள்களிடமிருந்து பலமுறை வாங்கியிருக்கிறேன். ஒரு துண்டு நிலத்திற்கு மூன்று மடங்கு அதிகம் விலை கொடுத்து வாங்க வேண்டிய நிலை ஏற்பட்டது. பக்கத்துக் கிராமத்தில் உள்ள (குட்டம்) நாடார்களிடம் கடும் இன்னல்கள். ஏனெனில் சுற்றுவட்டாரத்தில் உள்ள எல்லா நிலங்களும் அவர்களின் கட்டுப்பாட்டிலேயே இருந்திருக்கிறது. தாங்கள் விற்ற நிலத்திற்கும்

தாங்கள் விற்ற நிலத்தில் கட்டப்பட்ட வீடுகளுக்கும் குடிக்கூலி வாங்கவும், திருமணக்காலங்களில் கட்டணம் வாங்கிக் கொள்ளவும் தங்களுக்கு உரிமை உண்டு என்றனர்.

சட்டப்படி அவர்களுக்கு அப்படி உரிமை உண்டா என்பது தெரியாது. ஆனால் தங்களை உயர்குலமக்கள் எனக் கூறிக்கொள்ளும் அவர்கள் நல்லவர்கள் அல்லர் என்பதில் ஐயம் எதுவும் கிடையாது. அவர்களுடன் வாக்குவாதம் அல்லது மோதல் ஆகியவற்றைத் தவிர்க்கும் பொருட்டு அவர்களிடம் வாங்கிய நிலத்தோடு வீடுகட்டும் உரிமையும் வாங்கி விட்டேன். இவ்வாறு எல்லா உரிமைகளோடும் நிலத்தை வாங்கியதால் பிற்கால அமைதிக்கு வித்திட்ட எனது எதிர்காலத் திட்டங்களின் வெற்றி, இத்திட்டத்தின் வெற்றியையே சார்ந்திருந்தது.

சட்டப்படி நிலங்களுக்கு எல்லா உரிமைகளையும் பெற்றதும் தெருக்களை ஒழுங்காக அமைக்கவும், சில மாதிரி வீடுகளை கட்டவும் எண்ணினேன். இவற்றை நிறைவேற்றச் சில ஆண்டுகள் ஆயின. இதற்குள் இதைவிட மேலான வீடுகள் கட்டவேண்டும் என்ற எண்ணம் மக்களிடையே மேலோங்கியது. யார் முதலில் கட்டுவது என்பதுதான் சிக்கல். யாராவது ஒருவர் கட்டத் தொடங்கினால் போதும், "நாங்கள் அவர்களுக்கு குறைந்தவர்கள் அல்லர்" என்று எண்ணி மற்றவர்களும் உடனே கட்ட தொடங்கிவிடுவார்கள். அதே வேளையில் நான் ஒரு பெரிய நிலத்தை வாங்கினேன். அதில் ஒரு பகுதி வேலியிடப்பட்டிருந்தது. இன்னொரு பகுதி மணற்பாங்கானது. இச்சபைக்குத் தேவையான அனைத்துக் கட்டிடங்களையும் அதில் கட்டத் தீர்மானித்தேன். பின்பு எங்கே கோவில் கட்டப்பட வேண்டுமென்பதைக் குறித்துக் கொண்டேன். தெருக்கள் எவ்வாறு அமைய வேண்டும் எவ்வளவு இடங்கள் காலியாக விடப்பட வேண்டும் கட்டிடங்கள் எங்கே எவ்வாறு கட்டப்பட வேண்டும் என்பன தீர்மானிக்கப்பட்டன.

முதலாவது என்ன செய்தேன் என்பது நினைவுக்கு வருகிறது. ஒரு மரத்தின் உச்சிவரை ஏறினேன். அங்கிருந்து சுற்றியுள்ள இடங்களைப் பார்வையிட்டேன். அதற்குப்பின்பு, ஒவ்வொரு தெருவிலும் மரக்கன்றுகளை நடத் தொடங்கினேன். பல இடங்களில் கிணறுகள் தோண்டப்பட்டன. ஊரிலிருந்து நான்கு பக்கங்களிலும் செல்லச் சாலை வசதி செய்யப்பட்டது. அருகில் உள்ள காலி இடங்களிலெல்லாம் மரக்கன்றுகள் நடப்பட்டன. அன்று முதல் அழகுக்காகவும் நிழலுக்காகவும் மணல்

அரிப்பைத்தடுக்கவும் பனை, தென்னை மரங்களைப் பொருளாதாரக் காரணங்களுக்காகவும் எல்லாத் திக்குகளிலும் நட்டேன். அதே நேரம் ஊருக்குள் வரும் காற்றைத் தடுக்கும் முள்மரங்களையும் அழித்துவிட்டேன். தொடக்க காலத்தில் குறைகண்ட பழமைவாதிகள் உட்பட தன்னை அம்மண்ணின் மன்னவன் என்று எண்ணிக்கொண்டிருந்த ஒரு முரட்டு 'நாடான்' "எனது ஊரை நீர் நாசப்படுத்தி விட்டீர்" என்று என்னிடம் கூறினார். எல்லா மக்களும் எனது புதுமையான திட்டத்தை வரவேற்றனர். மாற்றங்களை ஏற்றுக் கொண்டதுடன் புலிப்பொலிவுடன் விளங்கும் தங்களது ஊரைப் பற்றிப் பெருமிதம் அடைந்தனர்.

இடையன்குடியில் நடந்த வழிபாட்டு ஒழுங்குகள் மற்றும் சபைச் செயல்கள் யாவும் திருநெல்வேலி S.P.G. இறைப்பணியாளர் இயக்கத்தில் உள்ளது போலவே இருந்தன. இப்பொழுது எங்குப் பார்த்தாலும் ஒழுங்குப்படுத்தப்பட்டுள்ள சபைகள், அழகிய கோவில்கள், இனிமையான பாடல்கள் நிறைந்த அருமையான வழிபாடுகள் ஆகியவற்றைத் திருநெல்வேலியில் உள்ள சிறந்த கிறிஸ்தவப் பணித்தளங்களில் காணலாம். ஆனால் தொடக்க காலத்தில் அதாவது சுமார் 40 முதல் 50 ஆண்டுகளுக்கு முன்பு அவ்வாறு இல்லை. அந்நாட்களில் உள்ள காட்சிகள் கண்களுக்கும் குரல்கள் காதுகளுக்கும் இனிமையாக இல்லை. இரண்டு காலங்களுக்கும் உள்ள வேறுபாட்டை விவரிக்க இயலாது. அவ்வளவு அதிகம்!

கிராமச் சபை மக்களின் நிலைமை, தலைமையிடங்களில் வெளிநாட்டு இறைப்பணியாளர்களின் மேற்பார்வையில் உள்ள சபை மக்களின் நிலைமையை விடச் சற்றுக்கீழானதாகவே இருந்தது.

நான் குறிப்பிடும் அந்நாட்களில், ஞாயிறு வழிபாட்டுக்கு வருபவர்கள் அணிந்து வரும் ஆடைகள் தூய்மையாக இருக்கும் என்று சொல்லமுடியாது. ஆணோ அல்லது பெண்ணோ, யாராயிருந்தாலும் மற்ற நாட்களில் அணியும் ஆடைகளையே கோவிலுக்கு வரும்போதும் பயன்படுத்தினர். பதனீரைக் காய்ச்சி கருப்புக்கட்டி தயாரிப்பதே அவர்களது முதன்மையான தொழிலாக இருந்ததினால், (பதனீர்க் காலங்களில் பெண்கள் பனங்காடுகளிலேயே தங்கள் வாழ்க்கையைச் செலவழிப்பர்.) அடிக்கடி குளிப்பதற்கு நேரம் கிடைப்பது அரிது. குளிக்காமல்,

அழுக்கான ஆடைகளுடன் கோவிலுக்கு வருவதால் வியர்வை நாற்றம் வீசுவது இயற்கையே.

காலை மாலை வழிபாடுகளை திருப்பணிவிடையாளரே நடத்துவார்; தவறின்றி படிப்பார். ஆனால் எப்பகுதியையும் பாடுவதில்லை. பல ஞானப்பாடல்களைத் திருப்பணிவிடையாளரும் பள்ளி ஆசிரியருமே இழுத்து மகிழ்ச்சியின்றி பாடுவார்கள். இசை சரியாக இருக்காது. கீர்த்தனைகளை நன்றாகப் பாடுவர். ஆனால் வழிபாடுகளில் அவைகளைப் பாட முயற்சிக்கவில்லை. அந்நாட்களில் மட்டுமல்ல, அதற்குப் பின்பு பல ஆண்டுகளாக தூய வழிபாடுகளில் கீர்த்தனைகளைப் பாடினால் அது தூய்மைக் குலைச்சலாகிவிடும் என்று மக்கள் நினைத்தனர். பண்டிகை நாட்களில் வழிபாடு முடிந்தபின்பே கீர்த்தனைகளை மகிழ்ச்சியுடன் பாடுவார்கள்.

அக்காலத்தில் உள்ள வியப்பான செயல் என்னவென்றால் வழிபாடுகளில் மக்க்ள் எவ்வித பங்கும் எடுக்கவில்லை. வழிபாட்டு வேளைகளில் எழுந்திருப்பதே கிடையாது. மறுமொழியிலும் அவர்கள் கலந்து கொள்ளுவதில்லை. ஞாயிற்றுக்கிழமைகளில் மன்றாட்டு படித்தபின்பு அருளுரை உண்டு. மற்ற நாட்களில் ஜெபபுத்தகத்திலிருந்து ஓரிரண்டு மன்றாட்டுகள் படிக்கப்பட்டபின் அல்லது சொந்தமான ஒரு மன்றாட்டு பண்ணப்பட்டபின் திருப்பணிவிடையாளர் சபையாருக்கு விசுவாசப்பிரமாணம், கர்த்தருடைய ஜெபம், மற்றும் பத்துக்கட்டளைகளை, அவைகளின் பொருளை விளக்காமல் கற்றுக் கொடுப்பார். கருத்தை விளங்கி இறைவனைத் தொழுவதாக எனக்குத் தெரியவில்லை. கிறிஸ்துவின் செயல்கள், மீட்பு என்பதெல்லாம் அவர்களுக்கு அதிகம் தெரியாது. ஆனால் அவற்றைக் கற்றுக்கொள்ள ஆயத்தமாக இருந்தனர். இறையியல் உண்மைகளை அவர்களுக்கு எளிய மொழியில் கற்றுக் கொடுப்பதிலும் அவர்களது ஐயங்களைத் தெளிவாக்கும் முயற்சியிலும் நான் அதிக மகிழ்ச்சி அடைந்தேன்.

அக்கால பள்ளிகளைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். மிகவும் பின்தங்கிய நிலை. மாணவர்களின் வருகை மிகவும் குறைவு. வருகையில் ஒழுங்கின்மை இயல்பானது. பெண்பிள்ளைகளின் வருகை பரிதாபத்திற்குரியது. கையூட்டு கொடுக்காமல் எந்தப் பெண்பிள்ளையையும் பள்ளிக்கு வரவழைக்க முடியாது. மிகவும் அடிப்படை செய்திகளே

கற்பிக்கப்பட்டன. கிராமங்களில் உள்ள பள்ளிகளில் ஆங்கிலமோ, புவியியலோ, கணிதமோ, இலக்கணமோ கற்றுக் கொடுக்கப்படவில்லை. மனநிறைவு ஏற்படும் அளவுக்கு படிக்கவும் கற்றுக்கொடுக்கப்படவில்லை.

நான் வந்ததும் இங்குப் பெண்களுக்கான பள்ளியை ஏற்படுத்தினேன். பெண்களுக்கான பள்ளி எதுவும் அந்நாட்களில் இப்பகுதியில் கிடையாது. விடுதியுடன் தொடங்கியிருந்தால் நன்றாக இருந்திருக்கும், ஏனெனில் விடுதியுடன் கூடிய பள்ளியினால் பல நன்மைகள் உண்டு என்பதை அறிவேன். எனக்கு அச்சமயம் திருமணமாகவில்லை. ஒரு பெண்தான் அப்படிப்பட்ட பள்ளியைத் திறம்பட நடத்தமுடியும் என்பதையும் நன்கு அறிவேன். அக்காரணத்தாலேயே பெண்களுக்கான விடுதியுடன் கூடிய பள்ளியைத் தொடங்கும் முயற்சியைத் தள்ளிப்போட்டேன். சில ஆண்டுகளுக்குப்பின் இறைவனின் திருவருளால் திருமணம் ஆன பின்பு இத்தடை நீங்கியது. என் மனைவி தனது திறமையினால் அப்பள்ளியை நன்கு நடத்தி, தான் ஒரு சிறந்த இறைப்பணியாளரின் மனைவி என்பதைச் செயலில் காட்டிவிட்டார். முதலில் இறைப்பணியாளராகவோ பின்பு பேராயராகவோ, ஏதாவது நன்மையானதை நான் செய்திருந்தால் அந்தப்பெருமை இறைவனுக்குப் பிறகு அவர் எனக்கு இரக்கமாய் அளித்த என் மனைவியின் முடிவு எடுக்கும் திறன், பட்டறிவு, பொறுமை, இடைவிடா முயற்சி ஆகியவற்றையே சாரும்.

நான் 1841ஆம் ஆண்டு இறுதியில் இடையன்குடிக்கு வந்தேன். திருமணம் 1844இல் நடைபெற்றது. இடையன்குடிக்கு வந்ததும் என் மனைவி பெண்களுக்கான உறைவிடப்பள்ளி ஒன்றை நிறுவினார். முதலில் 6 மாணவியரே இருந்த அப்பள்ளியில் மாணவியரின் எண்ணிக்கை சிறிது காலங்கழித்து, 100க்கு மேல் சென்றது. அம்மையார் பெண்களின் முன்னேற்றத்திற்காகவும், அவர்கள் நடத்தையைப் பண்புள்ளதாக்கவும் எடுத்த பல முயற்சிகள் நல்ல பலன் அளிக்கத் தொடங்கின. பெண்களின் முன்னேற்றம் மூலம் ஆண்களையும் முன்னேற்றமடையச் செய்யலாம் என்பது என் நோக்கம். அதே காலத்தில் விடுதியுடன் கூடிய பெண்கள் பள்ளிகளை நாசரேத்தில் திருமதி. கேமரரும், முதலூரில் திருமதி. ஹேய்னும் உருவாக்கினர்.

இந்த நாற்பது ஆண்டுகளில் புதிதாக நிறுவனங்கள் எதுவும் நிறுவப்படவில்லை. சமயத்தொடர்பாகவோ,

உதவியளிக்கும் நோக்கிலோ எவ்வித இறைப்பணி இயக்கங்களும் கிடையாது. பொதுக் கூட்டங்கள் எதுவும் நடைபெறவில்லை. கோவில்களைப் பழுதுபார்ப்பதற்காகச் சிறிய தொகையைப் பெற்றுக்கொள்ள வேண்டும் என்ற எண்ணத்துடன் ஒரு கிறிஸ்தவத் தொண்டு நிறுவனம் மட்டுமே தொடங்கப்பட்டது. இந்தத் தொகையும் மனமுவந்து கொடுக்கப்படாமல் முணுமுணுப்புடனேயே கொடுக்கப்பட்டது. காரணம்: கோவில்கள் இறைப்பணியாளர் இயக்கத்திற்கே சொந்தம். எனவே அவைகளை பாதுகாக்க வேண்டியது அவர்களே, நாம் அல்லர் என்பது மக்களின் எண்ணம். C.M.S. இறைப்பணியாளர்களின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி முதன்முதலில் கோவில் கட்டும் குழுவை ஏற்படுத்தினேன். அடுத்து, 'ஏழைகளின் நிதி' என்ற திட்டத்தைத் தொடங்கினேன். இத்திட்டம் மக்களின் பாராட்டைப் பெற்றது.

கிறிஸ்தவத்தைப் பற்றி மக்களுக்குப் போதிய அறிவு இல்லாததினால் கிறிஸ்தவத்தைப் பரப்ப வேண்டுமாயின், பல இறைப்பணி இயக்கங்களை நிறுவ வேண்டும் என்று அவர்கள் எண்ணவில்லை. அதுபோன்ற இயக்கங்களின் தேவையையும் அவர்கள் உணரவில்லை. சபைகள், ஆயர் தொடர்பான செயல்களைத் தாங்களே நிறைவேற்றிக் கொள்ளுவதற்கு ஏதுவாகக் கிராம அளவிலும், மன்ற அளவிலும், பெருமன்ற அளவிலும் ஏற்படுத்தப்பட்ட நிறுவனங்களில் கூட மக்கள் ஆர்வமுடன் பங்கு பெறவில்லை. விரைவாக வளர்ந்து வந்து கொண்டிருந்த கிறிஸ்தவச் சபைகளே கச்சாப்பொருள். ஐரோப்பிய இறைப்பணியாளர்களே அக்கச்சாப்பொருளைப் பயன்தரும் பொருட்களாக மாற்ற உதவும் ஆற்றல்கள். மேனாட்டுத் திருச்சபைகளிடமிருந்து இப்புதிய திருச்சபைகள் கற்றுக் கொள்ள வேண்டியன யாவை என்பதையும், வருங்காலத்தில் தேவ ஆவியானவரின் வழிநடத்துதல் மூலம் காலாகாலங்களில் அவர்கள் கற்றுக் கொள்ள வேண்டியன யாவை என்பதையும் கற்றுக் கொடுக்க ஐரோப்பிய இறைப்பணியாளர்கள் ஆயத்தமாக இருந்தனர்.

இந்தப் பணித்தளப் பகுதியில் எட்டு அல்லது பத்து திருப்பணிவிடையாளர்களும் இரண்டு ஆசிரியர்களுமே இருந்தனர். திருப்பணிவிடையாளர்களைக் கண்காணிக்க ஓர் ஆய்வுத் திருப்பணிவிடையாளர் இருந்தார். தஞ்சாவூரைச் சேர்ந்த

அவர் பெயர் ஞானமுத்துப்பிள்ளை. திருப்பணிவிடையாளர்களில் இருவர் தஞ்சாவூரைச் சேர்ந்தவர்கள். அவர்கள் சாதித்தது மிகக்குறைவு. எனினும் நல்லவர்கள்; மதிப்பிற்குரியவர்கள்; கற்கவேண்டிய வயதைக் கடந்து விட்டாலும் கற்க வேண்டும் என்ற ஆவல் உள்ளவர்கள்; நற்செய்தி அறிவிக்கும் பயிற்சிக்காக வாரம் ஒரு முறை கூடுவது வழக்கம்; அக்கூட்டங்களில் சிறப்பாக ஒன்றும் கற்றுக்கொள்ளவில்லை; திருமறையில் ஏதாவது சில பகுதிகளை மனப்பாடம் செய்து, அந்த வாக்கியங்களை தாங்கள் செய்யும் மன்றாட்டுகளில் பயன்படுத்தி வந்தனர். அக்கூட்டங்களுக்குத் தலைமை வகிப்பவர் ஆய்வுத் திருப்பணிவிடையாளரே. நல்ல வேத விளக்கம் கொடுப்பது அவருக்கும் எட்டாக்கனி.

நான் சற்று வேறுபட்ட முறையைப் பயன்படுத்தினேன். பழைய ஏற்பாட்டில் ஒரு புத்தகத்தையும் புதிய ஏற்பாட்டில் ஒரு புத்தகத்தையும் படிக்கவேண்டுமென்றும், கூட்டங்களில் அந்த வாரத்தில் அவர்கள் செய்த இறைப்பணி பற்றிய செய்தியைத் தெரிவிக்க வேண்டும் என்றும் கூறினேன். அப்பொழுதுதான் தாங்கள் கிறிஸ்தவரல்லாதோருக்கு நற்செய்தியை அறிவிக்க வேண்டும் என்பது தங்களின் கடமை என்பதை முதலாவதாகக் கற்றுக்கொண்டனர்.

திருப்பணிவிடையாளர் அனைவரும் வயதானவர்கள். எனவே அவர்களைக் கொண்டு என்னால் ஒன்றும் சாதிக்கமுடியவில்லை. ஏதாவது பயனுள்ள செயல் எதுவும் செய்யவேண்டுமென்றால் இதைவிடக் கல்வி கற்ற இளைஞர்களின் உதவி தேவை என்பதை உணர்ந்தேன். அச்சமயம் இறையியற்கல்லூரி எதுவும் நிறுவப்படவில்லை. சாயர்புரம் என்ற ஊரே அந்நாட்களில் இல்லை. அறிவர் போப்பும் வரவில்லை. எனவே நானே சில இளைஞர்களுக்குக் கற்றுக் கொடுக்கவேண்டும் என முடிவு செய்தேன். எட்டுப்பேரைத் தெரிந்து எடுத்தேன். அவர்களின் மூன்றுபேர் பணித்தளங்களில் அருமையாக இறைப்பணி செய்தனர். அம்மூவரில் இருவர் பிற்காலத்தில் அருட்பணியாளர் பட்டம் பெற்றனர்; நான் இளைஞர்களைத் தெரிவு செய்யாமல் சிறுவர்களைத் தெரிந்தெடுத்திருக்க வேண்டும். அது தவறு என்பதை உணர்ந்தேன். ஏனெனில் இளவயதில் சரியான பயிற்சி பெறாதோர், வயதான பிறகு கற்கும் ஆற்றலை இழந்துவிடுவர். எனவே, எனது

மனைவி, மாணவியருக்கான விடுதியுடன் தொடங்கிய பள்ளியைப்போல, மாணவர்களுக்காக விடுதியுடன் கூடிய ஒரு பள்ளியை நிறுவவேண்டுமென்று முடிவு செய்தேன்.

விரைவில் அவ்வகையான பள்ளி தொடங்கப்பட்டது. இது பலனையும் மனநிறைவையும் தந்தது. இதில் குழந்தைப் பருவத்திலிருந்தே கற்று வந்த மாணவர்கள் பலர் என்னிடம் இருந்தனர். பின்னால் தொடங்கப்படும் எந்த உயர்கல்வி நிறுவனத்திலும் சேருவதற்கு அவர்கள் தகுதிபெற்றவர்களாயினர். மட்டுமல்ல, பணித்தளங்களில் உள்ள உயர் அலுவலகங்களில் பணி செய்யவும் அவர்கள் தகுதியுள்ளவர்களே. இதுபோன்று ஐரோப்பியர் வாழும் மற்ற பணித்தளங்களிலும் மாணவியருக்கான விடுதியுடன் கூடிய பள்ளிகள் ஏற்படுத்தப்பட்டன. நன்கு அடிப்படை அறிவு பெற்ற மாணவர்கள் பலர் அறிவர் போப் சாயர்புரத்தில் தொடங்கியுள்ள இறையியல் பயிற்சி நிலையத்திற்கு அனுப்பப்படவிருந்தனர். மாணவர்கள் ஆயத்தமாக இருந்தாலும், அவர்கள் வீட்டிற்கும் சாயர்புரத்திற்கும் உள்ள 30 மைல் தொலைவும், அவர்களது தாய்மாராலும் தடைகள் ஏற்பட்டன. ஏனெனில் அந்நாட்களில் 30 மைல் தொலைவு என்பது பிள்ளைகளை வெளிநாட்டுக்கு அனுப்புவது போல் அவர்களுக்குத் தோன்றியது.

இதுவரை ஐரோப்பிய இறைப்பணி இயக்கங்களிடையே எந்தக் கூட்டமும் நடைபெறவில்லை. உள்ளூர் செயற்குழுவும் கிடையாது. காரணம், இதுவரை இப்பகுதியில் இறைப்பணியாளர்களே இருந்தனர். ஆனால் மூன்றாவது இறைப்பணியாளர் வந்தபின்பு ஒரு உள்ளூர் செயற்குழு உருவாக்கப்பட்டது. அச்செயற்குழு C.M.S. ஸில் உள்ள குழுவை ஒத்திருந்தது. இறைப்பணியாளர்களின் எண்ணிக்கை பெருகியபொழுதும், உள்நாட்டினர் அருட்பணிக்குச் சேர்ந்தபொழுதும், பணித்தளங்களையும் உள்நாட்டுத் திருச்சபை தொடர்பான பல கருத்துகளையும் பற்றித் தீர்மானிக்க வேண்டியதிருந்தது. இந்நேரத்தில் இச்செயற்குழு பணித் தளங்களுக்கும் பணியாளர்களுக்கும் மிகவும் பயனுள்ளதாக இருந்தது. பணித்தளப் பகுதியில் பணிபுரியும் திருப்பணி விடையாளர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் ஏற்கனவே அறிவிக்கப்பட்ட பாடங்களில் ஆண்டுத்தேர்வு நடத்த ஏற்பாடு செய்ததே புதிதாக அமைக்கப்பட்ட உள்ளூர் செயற்குழுவின் முதல்

பணி. இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு விவிலிய விளக்கங்கள் அளிக்கப்பட்டன. 20 வயதுக்கு மேற்பட்டோருக்கு இடையன்குடியில் நான் கற்றுக்கொடுத்தேன். அதற்குக் கீழானவர்களுக்கு ஆய்வுத் திருப்பணிவிடையாளர் பயிற்சி அளித்தார்.

ஓராண்டு காலப் பயிற்சி முடிந்ததும் பொது வாய்மொழித்தேர்வு நடைபெற்றது. எல்லா மக்களுக்கும் மகிழ்வூட்டிய நிகழ்ச்சி அது. எல்லோரும் அதில் அக்கறை காட்டத் தொடங்கினர். அவ்வாண்டின் மிகச்சிறந்த நிகழ்ச்சியாகவே அது கருதப்பட்டது. இப்பயிற்சியிலும் தேர்விலும் சிறந்து விளங்கினவர்களுக்கு 'மாங்டன் நிதி'யிலிருந்து சில பரிசுகள் வழங்கப்பட்டதே இவைகளில் உண்டான மகிழ்ச்சிக்கும் அக்கறைக்கும் காரணமாகும். அவைகளில் உயர்ந்த பரிசு மாங்டன் திருப்பணிவிடையாளர் உதவித்தொகையாகும். அதற்குத் தேர்வு பெற்றோருக்கு அதிக ஊதியம் கொடுக்கப்பட்டது. அத்தேர்வுகள் இன்னும் தொடர்ந்து நடைபெறுகின்றன; பயனுள்ளதாகவும் இருக்கின்றன. ஆனால் வாய்மொழித்தேர்வு எடுக்கப்பட்டுவிட்டதால் முந்தின நாட்களில் இருந்த எழுச்சி இப்பொழுது இல்லை.

இப்போதுள்ள கிராமத்தை உருவாக்க நிலம் வாங்கியதும் முதலாவது ஒரு மாளிகையைக் கட்டத் தொடங்கினேன். திருமணமானவர்கள் தங்க சபையில் வசதியுள்ள பெரிய சபைவீடு கட்டவேண்டுமென்று திட்டமிட்டிருந்தேன். அந்தப் பெரிய வீடு கட்டி முடித்த பின்பு இந்த மாளிகை ஒரு சிறு மாளிகையாக பயன்படும். திருமணம் ஆகும் வரை நான் ஓர் அறையுள்ள வீட்டில்தான் வாழ்ந்து வந்தேன். திருமணமான பின்பு நானும் என் மனைவியும் இந்த மாளிகையில்தான் வாழ்ந்தோம். அதே வேளையில் ஊருக்கும் புது மாளிகைக்கும் இடையில் தற்காலிக கோவில் கட்டும் பணியையும் தொடங்கினேன். அதன் அருகில் பெரிய, நிலையான கோவிலைக்கட்ட வேண்டுமென்று எண்ணினேன். சபையாரின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகியதாலும், பள்ளி மாணவர்கள் எண்ணிக்கை மிகுந்ததாலும் தற்காலிகக் கோவில் நான்கு முறை விரிவாக்கப்பட்டது.

திருநெல்வேலியில் எனது தொடக்கக்கால அருட்பணி வாழ்க்கையை நினைத்துப்பார்த்தபோது, நான் செய்த பல தவறுகள் நினைவுக்கு வந்தன. சற்று வருத்தமாகத்தான் இருக்கிறது.

தவறை ஏற்றுக்கொள்ள நான் வெட்கப்படவில்லை. எனினும் அருள் நிறைந்த தகப்பனும், இரக்கமுள்ள என் மீட்பரும் எனது தவறுகளை எல்லாம், எனக்கு நன்மையாக மாற்றியிருக்கிறார். தொடக்ககாலத்தில் நான் தவறு செய்ததற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று, சமாதானத்தை அல்ல, சண்டையையே விரும்பின பழைய காலத்து திருப்பணி விடையாளரின் தாக்கம். இரண்டு, அவர்கள் தங்களைப் பின்பற்றி வருபவர்களின் எண்ணிக்கைக்கே முதன்மை கொடுத்தனர். அவர்களது நடத்தைக்கு முதலிடம் கொடுக்கவில்லை. ஆனால் நாட்கள் செல்லச்செல்ல, பணித்தளத்திற்கும் மக்களுக்கும் எவை நன்மை பயக்கும் என்று நான் எண்ணினேனோ, அவைகளை நிறைவேற்றுவதில் உறுதியாகச் செயல்பட்டேன். நீதி, நியாயம், உண்மை, அன்பு ஆகியவை இறுதியில் நன்மை பயக்கும் சிறந்த ஆற்றல்களாக விளங்கும் என்ற எனது திடநம்பிக்கையைச் செயல்படுத்துவதிலும் உறுதியாகச் செயல்பட்டேன். மற்றவர்களின் போக்குக்கு விடவில்லை. எல்லா நன்மைக்கும் ஊற்றான இறைவன் நல்லவைகளை முழுமையாக்கவும், தீமைகளை நல்லவைகளாக மாற்றவும் அருள்புரிவாராக.

குறிப்பு:- பேராயர் அவர்கள் திருநெல்வேலிக்கு சில ஆண்டுகளில் அங்குள்ள கிறிஸ்தவர்களின் நிலை பற்றியும், அவர் பணியாற்றிய முறை பற்றியும் மேலும் சில விவரங்களை அவர் குடும்பத்தினருக்கு எழுதிய மடல்களிலிருந்து தொகுத்து வழங்கியுள்ளோம்.

அருகில் உள்ள C.M.S அருப்பணியாளருடன் ஓர் ஒப்பந்தம் பண்ணியிருக்கிறேன். அதன் காரணமாக, எனது பணிப்பகுதி பெரிதாகிவிட்டது. எல்லாமே எனது கட்டுப்பாட்டுக்குள் வந்துவிட்டது. ஐந்து கிராமங்கள் அவருக்குக் கொடுக்கப்பட்டன. பதிலாக இருபது கிராமங்கள் எனக்குத் தரப்பட்டன. அவைகளில் ஒன்று முற்றிலும் கிறிஸ்தவர்கள் அல்லாதவர்களால் நிறைந்த பெரிய கிராமம். இதின் காரணமாக எனக்கு பணிப்பளு அதிகம். இன்று காலை 13 மைல்களுக்கு அப்பால் உள்ள ஒரு கிராமத்திற்கு வந்தேன். இடையர்களே அங்கு வாழ்கின்றனர். பன்னிரண்டு குடும்பங்கள் நற்செய்தியைக் கேட்டு மனமாற்றம் அடைந்திருக்கின்றனர். காலை 10:00 மணிக்கு திருப்பணிவிடையாளர்களை நேரில் கண்டேன். மாலை 4:00

மணி வரை அவர்களோடு இருந்தேன். இடைப்பட்ட நேரத்தில் அருளுரை வழங்கினேன். அவர்களின் அருளுரையைக் கேட்டேன்.

கிராமங்களில் அவர்கள் ஆற்றிய பணி பற்றிய அறிக்கைகளைப் பெற்றுக் கொண்டு, கிறிஸ்தவரல்லாதோர் கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டவர்களுக்குக் கொடுக்கும் இன்னல்களையும் தொல்லைகளையும், அவர்கள் மீது நேர்மையற்ற முறையில் தொடுக்கப்பட்டிருக்கும் நீதிமன்ற வழக்குகளையும் பற்றி ஆராய்ந்து அறிவுரை கூறினேன். இவ்வளவு பணிகளுக்குப்பிறகு மடல் எழுத உடம்பில் வலிமையோ அல்லது நேரமோ இருக்கும் என்று எதிர்பார்க்கக்கூடாது. திருநெல்வேலியில் பணிபுரியும் ஸ்விட்சர்லாந்து நாட்டைச் சேர்ந்த திரு. சாப்டர் ஐரோப்பாவுக்குத் திரும்புகிறார்; கிளாஸ்கோவுக்கும் வரக்கூடும். அவரிடம் உனக்கும், அறிவர் வார்ட்லோவுக்கும், திரு. டர்னருக்கும் மடல்கள் கொடுத்தனுப்பியிருக்கிறேன். அவர் நல்ல மனிதர்; சிறந்த இறைப்பணியாளர். திருநெல்வேலியில் இறைப்பணி எவ்வாறு நடைபெறுகிறது என்பதையும் அப்பணியில் இறைவனின் அருளாசியையும் நீ அவரைப் பார்க்கும்போது உன்னிடம் அவர் விளக்குவார்.

நீ ஓரளவு அறிந்திருக்கிறபடி, நான் பணிபுரியும் இடம் எனது வாழ்க்கை முறைக்குச் சற்று வேறுபட்டு இருப்பினும் ஒத்துப்போகிறது. நான் வாழும் வீடு உண்மையில் 17 அடி நீளமும் 11 அடி அகலமும் கொண்ட அறைதான். அதன் சுவர் பச்சைச் செங்கற்களால் கட்டப்பட்டுள்ளது. கூரை பனை ஓலைகளினால் வேயப்பட்டது. வாரத்தில் ஓரிரு நாட்களே நான் அங்கு தங்குகிறேன். வாரத்தில் பெரும்பாலான நாட்களைக் கிராமங்களிலே செலவிடுகிறேன். குறைந்த செலவில் கட்டப்பட்டுள்ள வழிபாட்டு அறைகளில் தங்கிக்கொள்கிறேன். சில நேரங்களில் வெப்பம் அதிகமாக இருக்கும். இரவு நேரங்களில் பெரும்பாலும் வெளியே தூங்குகிறேன். மூட்டைப்பூச்சிகள் வீட்டினுள் தங்கிக் கொள்ளுகின்றன. பணித்தள விரிவாக்கத்தின்போது மலைக்கு நேராக உள்ள காட்டுப்பகுதி எனக்கு ஒதுக்கப்பட்டது. இடையர்களும் மறவர்களும் அங்கு அதிகமாக வாழ்கின்றனர்.

மறவர்கள் 'மாமூல்' வாங்கியே தங்கள் வாழ்நாளைக் கழிப்பவர்கள். இம்மாமூல் திருடாமல் இருக்க மக்களிடமிருந்து பெறப்படுகிறது. முற்காலத்தில் காவல் துறையில்

பணியாற்றியவர்கள் யார் வீட்டிலாவது களவுபோய்விட்டால் களவு போன தொகைக்கு இவர்களே இழப்பீடு கொடுக்க வேண்டும். இழப்பீட்டுத் தொகைக்காகப் பக்கத்துக் கிராமங்களில் திருடுவார்கள். ஆங்கிலேயர் தம் காலத்தில் சற்று மேம்பட்ட காவல்துறையை அறிமுகப்படுத்தினர். அக்காவலர்கள் திருடுவார்கள். இழப்பீட்டுத் தொகை எதுவும் கொடுக்க வேண்டியதில்லை. மக்கள் பழைய திருடர்களையே விரும்பினர். இப்படிப்பட்ட மக்களுக்கு அருளுரை அளிப்பது எவ்வளவு அரிது என்பதை எளிதில் கற்பனை செய்துகொள்ளுவாய் என எண்ணுகிறேன். இருப்பினும், அவர்களும் சில சமயங்களில் நான் சொல்லுகிறதைக் கேட்கிறார்கள். நமது முயற்சி நல்ல பலன் அளித்திருக்கிறது. பலரிடத்தில் மாற்றத்தைக் காண்கிறோம்.

பன்னிரண்டு குடும்பங்கள் மாற்றமடைந்துள்ளனர். என்னிடமுள்ள சிறந்த திருப்பணிவிடையாளரும் அந்த இனத்தைச் சேர்ந்தவரே. அந்த இனத்துக்குரிய அஞ்சாமையும் துடிப்பும் அவரிடம் இருந்தாலும், அவர் சிறந்த எடுத்துக்காட்டான கிறிஸ்தவர். இவ்வாறாக, வாரக்கணக்கில் பல இடங்களுக்குச் சுற்றித்திரிந்து ஒவ்வொரு புதன்கிழமையும் தலைமைப்பணியிடத்திற்குச் சென்று விடுவேன். திருப்பணி விடையாளர்கள் அங்கு எனக்காகக் காத்திருப்பார்கள். அவர்களுக்குப் பாடம் கற்பிப்பேன். மிகுந்த களைப்பாகிவிடும். யாராவது ஒரு ஆங்கில இறைப்பணியாளர் இங்கு வரமாட்டாரா என்று ஆவலோடிருப்பேன். பக்கத்துப் பணித்தளத்திற்குச் சென்று சில நாட்கள் ஓய்வு எடுக்கவும் பல்வேறு செய்திகளைப் பற்றிப் பேசவும் விரும்பினேன்.

உண்மையான இறைப்பணி திருநெல்வேலியின் நடந்திருப்பதைப் போல நான் பார்த்த அளவில் இந்தியாவில் வேறு எங்கும் நடந்ததில்லை; அதேபோன்று இறைப்பணியாளர்கள் திருநெல்வேலியில் ஒருவரையொருவர் காணும் போது உண்டாகும் மகிழ்ச்சியைப் போல வேறு எங்கும் அவ்வளவு மகிழ்ச்சி உண்டாகாது. பாளையங்கோட்டை இந்த மாநிலத்தில் ஒரு சிறப்பான நகரம். எனினும் அங்கு வாழ்பவர்களும் அதை ஆளுகை செய்கிறவர்களும் அதைப்பற்றி நன்கு அறியார்.

இந்நகரம் இடையன்குடியிலிருந்து சுமார் 40 மைல் தொலைவில் உள்ளது. இம்மடலை ஓர் ஆள் மூலம் பாளையங்கோட்டைக்கு இன்று இரவு அனுப்புகிறேன். நாளை

மறுநாள் காலை அவர் அங்கு போய்ச்சேருவார். திரும்பி வரும்போது புதிய ரொட்டிகளையும், எனக்கு மடல்கள் வந்திருந்தால் அவற்றையும் வாங்கி வருவார். எனது பணிகளைப்பற்றி உனக்குத் தெரிவித்துள்ளேன். எந்த இடத்தையும் தனது சொந்த வீடுபோல நினைத்து வாழத்தெரிந்த மனிதனுக்குத் திருநெல்வேலி வசதியான இடமாக இருக்கும் என்பதை நீ புரிந்திருப்பாய் என எண்ணுகிறேன். இங்கு வரும்வரை இறைப்பணி என்றால் எப்படி இருக்கும் என்பது எனக்கு உறுதியாகத் தெரியாது. குறுகிய மனப்பான்மை கொண்ட நமது சமய அமைப்பின் உழைப்பு மிகுந்த கனிகளைத் தந்திருக்கிறது. இதுபோன்ற கனி கொடுக்கும் இடத்தை வேறு எங்கும் நான் கண்டதில்லை; காணும் நம்பிக்கையுமில்லை.

## 18.3.1843 நாளிட்ட அவரது மற்றொரு மடலின் சுருக்கம்

எனது பணி முன்பைவிட அதிக மகிழ்ச்சியூட்டுகிறது. பணித்தளத்தின் எல்லாப் பகுதிகளும் பழகிய இடங்களாக மாறிவிட்டன. மக்களிடையில் ஓரளவு செல்வாக்கும் உண்டு. குறிப்பிடத்தக்க வளர்ச்சியை மாதாமாதம் காண்கிறேன். சில ஆண்டுகளுக்கு முன்புவரை பேயை வணங்கியவர்கள் இப்போது கிறிஸ்துவை வணங்குகின்றனர். கிறிஸ்தவ அருளுரையையும் கட்டுப்பாட்டையும் ஏற்றுக் கொண்டுள்ளனர். ஒரு கிராமத்திலிருந்தே இம்மடலை எழுதிக் கொண்டிருக்கிறேன். இந்தக் கிராமத்தில் 700க்கும் மேற்பட்டோர் இறைவனை ஏற்றுக் கொண்டுள்ளனர். சென்ற மாதம் திருமுழுக்கு ஆயத்தமாக இருந்த 40 பேரோடு ஒருவாரம் செலவழித்து அவர்களை நன்கு ஆராய்ந்து பார்த்தேன். இறுதியாகப் பெரியோரும் சிறியோருமாக 21 பேர்களுக்கு திருமுழுக்குக் கொடுத்தேன். மீட்பின் திட்டத்தைப் பற்றி அவர்கள் காட்டிய அறிவும் மனத்தின் ஊக்கமும் எனக்கு அதிக மனநிறைவை அளித்தது.

எனது பணித்தளத்தில் உள்ள ஒவ்வொரு பகுதியிலும் திருமுழுக்கிற்காக ஆயத்தப்படுவோரின் எண்ணிக்கை ஓரளவு அதிகமாக உள்ளது. கிட்டத்தட்ட ஆறு மாதங்கள் அவர்களுக்கு நற்செய்தி கொடுக்கப்படும். இருப்பினும் இங்குள்ள நிலை மற்ற பணித்தளங்களில் உள்ள நிலையுடன் ஒப்பிடும்போது கீழாகவே இருப்பதை உணர்கிறேன். குறிப்பாக, திரு. தாமஸ் பணியாற்றும் பகுதியில் (மெஞ்ஞானபுரம்) காலரா பரவியபோது நற்செய்தியின்

ஆற்றல் மக்களின் மனத்தைத் தூய்மைப்படுத்தியது; பண்படுத்தியது; மகிழ்வித்தது. இந்துக்களும் நற்செய்தியின் ஆற்றலின் தாக்கத்திற்கு உட்பட்டனர் திருநெல்வேலியில் நற்செய்தி என்னும் மரம் நன்றாக வேர்விட்டுத் தளிர்விடத் தொடங்கியது. இதனால் மக்களின் ஆன்மீக வாழ்வில் பெரிய மாற்றம் ஏற்பட்டது. இதைத்தான் நாங்கள் விரும்பினோம். இதைக் கண்கூடாகப் பார்த்தோம். திரு. தாமஸ் ஐந்து ஆண்டுகளாகச் சோர்வடையாது அப்பகுதியில் பணியாற்றி வந்திருக்கிறார். கடந்த ஆறுமாதத்தில் ஏறத்தாழ 400 பேருக்கு திருமுழுக்கு கொடுத்திருக்கிறார். காரணம் என்னவென்றால் எங்கே துன்பங்கள் உண்டோ அங்கே ஆன்மீக விழப்புணர்வு அதிகரிக்கும்.

நான் ஏற்கனவே குறிப்பிட்டுள்ள துன்பங்களின் இறுதிக்காலத்தின்தான் ஆன்மீக அறுவடையில் மிக அதிக விளைச்சலைப் பெற்றிருக்கிறார் தாமஸ். எல்லாவற்றையும் அந்தந்தக் காலத்தில் மிகச்சிறப்பாக செய்யும் நமது இறைவன் என்னுடைய பணித்தளத்திலும் இப்படிப்பட்ட ஆன்மீக அறுவடையை அருளுவார் என்ற நம்பிக்கையோடு கடுமையாக உழைத்து வருகிறேன். மற்ற பகுதிகளில் சென்ற ஆண்டு கிறிஸ்தவர்களுக்குக் கொடுக்கப்பட்ட இன்னல்களும் வேதனைகளும் இப்போது எனது பணித்தளத்தில் உள்ள பகுதிகளுக்கும் பரவத் தொடங்கியுள்ளது. மிக அதிக ஆன்மீக விளைச்சலுக்கு ஒரு நல்ல அறிகுறி இது என்று எண்ணுகிறேன்.

சுற்றிலும் உள்ள கிறிஸ்தவரல்லாதோர் அனைவரும் இணைந்து மீட்பரின் மந்தையில் உள்ள ஆடுகளை மந்தையை விட்டு விரட்டத் தங்களால் இயன்ற அளவு முயன்றும், இதுவரை அவர்களின் முயற்சி வெற்றிபெறவில்லை. முன்னாள் இறைப்பணியாளரின் செயலர் ஜோன்ஸ் அவர்களின் மறைவிற்குப்பின், பேராயர் என்னை இறைப்பணியாளரின் செயலராக அமர்த்தி, எனது பணித்தளத்து பணிகளோடு தென்னிந்தியாவில் உள்ள மற்ற பணித்தளங்களிலும் விரிவாக்கப் பணிகளை மேம்படுத்த வேண்டும் என்று கேட்டதற்கிணங்க, அப்பகுதிகளிலும் என்னால் இயன்ற அளவு பணி செய்தேன். மடல் தொடர்பும் செய்திகளைப் பெற்று பதில் அளிப்பதே எனது சிறந்த பணியாதலால், பணிப்பளு அதிகமில்லை.

அதன் விளைவாக, ஒவ்வொரு இயக்கத்தின் மூலம் தென்னிந்தியாவில் செய்யப்படும் பணிகளைப் பற்றி நன்கு அறிந்து

கொள்ளவும், அவைகளை ஒப்பிட்டுப்பார்க்கவும் நல்ல வாய்ப்புக் கிட்டியது. சென்னை மாநிலத்தில் உள்ள இங்கிலாந்து திருச்சபையின் பணித்தளங்கள் மிகவும் பரந்தவை; அவைகளின் தாக்கத்தை அறிய வேண்டுமென்ற எண்ணமும் உண்டு. எனினும் எனக்கு அளிக்கப்பட்ட இறைப்பணியே முதன்மை பணி என்று நான் கருதுவதால் வேறு எதுவும் இதில் குறுக்கிட உடன்படமாட்டேன்.

## கிறிஸ்தவர்களுக்கு ஏற்பட்ட இன்னல்களைப் பற்றி 09.02.1846ஆம் தேதியிட்ட மடலில் எழுதப்பட்ட செய்திகளின் சுருக்கம்

திருநெல்வேலியில் குறிப்பாக வடபகுதியில் வாழும் கிறிஸ்தவர்களுக்கு மிகவும் அதிகத் தொல்லைகள். அரசு அலுவலர்களின் ஒத்துழைப்புடன் கிறிஸ்தவரல்லாதோர் கூட்டங்கூட்டமாகக் கிறிஸ்தவக் கிராமங்களுக்குச் சென்று கொள்ளையிட்டனர்; வீடுகளைத் தரை மட்டமாக்கினர். கிறிஸ்தவ சமயத்தைக் கைவிடத் தயங்கினவர்களையும் மறுத்தவர்களையும் அடித்துத் துன்புறுத்தினர். எனது பணித்தளம் தெற்குக்கடைசியில் இருந்ததால் வன்முறை இங்குவரை பரவவில்லை. ஐரோப்பிய நீதிபதி உதவியனால் இன்னல் ஓரளவு கட்டுப்பாட்டுக்குள் இருந்தது. குற்றவாளிகள் கைது செய்யப்பட்டு விசாரிக்கப்பட்டனர். நீதிமன்ற அலுவலர்கள் அனைவரும் கிறிஸ்தவர்களல்லாதோர். அதனால் விசாரணையால் எவ்வகைப் பயனும் இல்லை. உண்மையில், அது கிறிஸ்தவசாட்சிக்கான உறுதிக்கும் மற்றவர்களின் துன்புறுத்தலுக்கும் இடையே நடந்த விசாரணை.

எங்கள் பகுதியைச் சூறாவளி தாக்கியது. திருநெல்வேலியில் சூறாவளி எப்பொழுதாவது நிகழும் ஒன்று. எங்கள் வீட்டில் உள்ள கூரையில் பாதியைக் காணோம். காற்றில் பறந்துவிட்டது. படுக்கை அறையில் 6 அங்குல உயரத்திற்குத் தண்ணீர். காற்றின் ஆற்றலுக்கு இங்குள்ள கோவில் தூண்கள் தாக்குப்பிடிக்க முடியாததால் கோவில் தரைமட்டமாகிவிட்டது. ஏறத்தாழ 130 பேர் உயிரிழந்தனர். பொருள் இழப்பும் அதிகம்.

பணித்தளத்தில் நல்ல பலன். நல்ல முன்னேற்றம். நான்கு ஆண்டுகளுக்கு முன்பு இருந்ததைவிடப் பணித்தளங்களின் எண்ணிக்கையும் உள்ளூர்க் கிறிஸ்தவர்களின் எண்ணிக்கையும்

இரு மடங்கானது. இறைப்பற்றும் கிறிஸ்தவ உணர்வும் பெருகின. புதுத்தலைமுறையினரில் பெரும்பகுதியினர் பள்ளிக்குச் செல்கின்றனர். என்னுடைய பொறுப்பில் உள்ள 3000 பேரில் 500 பேர் பள்ளியில் தற்சமயம் கல்வி கற்று வருகின்றனர். இம்மாணவ மாணவியரின் பெற்றோர் ஒருகாலத்தில் கிறிஸ்துவை அறியாதவர்கள். இப்போது கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டவர்கள். தங்கள் குழந்தைகளும் கிறிஸ்துவின் வழியில் நடக்கவேண்டும் என்று விரும்புகிறார்கள்.

## 1848ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 11ஆம் நாளிட்ட மடல்

மொத்தத்தில் பணித்தளம் வெகுவாய் முன்னேறிவருகிறது என நம்புகிறேன். மனமாற்றமடைந்தோரில் சிலர் அறிவிலும் இறைவன் அருளிலும் வளர்ந்து பெருகிவருகின்றனர். பணித்தளத்தில் உள்ள மாணவியருக்கான விடுதிப் பள்ளிக்கான எதிர்காலம் ஒளி பொருந்தியதாக உள்ளது. தற்சமயம் இப்பள்ளியில் 45 மாணவியர் உண்டு. ஒவ்வொரு நாள் காலையும் விடுதி மாணவியருக்கும் ஊரில் உள்ள பள்ளி மாணவ மாணவியருக்கும் வேதபாடம் கற்றுக் கொடுக்கிறேன். வேத அறிவில் நல்ல முன்னேற்றம். உள்ளம் மகிழ்வடைகிறது. அன்பாயி என்ற 12 வயதுள்ள மாணவி மாதத்தேர்வில் முதல் இடத்தைப் பெற்றவள். அவளது விடைகள் சிறப்பாக உள்ளன. அவளுடைய உறவினர் அனைவரும் கிறிஸ்தவரல்லாதோர். அவள் விருப்பத்தின் பேரில் எங்களோடு தங்கியிருக்கிறாள். இப்பணித்தளத்திற்கு அணியாய் இருப்பவள். சிறந்த மாணவரை 30 மைல் தொலைவில் அமைந்திருக்கும் பணித்தளத்தில் உள்ள கல்விச்சாலைகளுக்கு மேற்படிப்புக்காகவும் பயிற்சிக்காகவும் அனுப்புகிறேன்.

இறையியல், விவிலிய வரலாறு, திருச்சபை வரலாறு, வரைபடக்கணிதம், அல்ஜ்ப்ரா, தத்துவம், கிரேக்க மொழி, இசை, ஆங்கிலம் ..... என்ன விழிக்கிறாய்? இவைகள் எல்லாம் இந்த ஊரைச் சேர்ந்த 14 வயது மாணவன் அந்த நிறுவனத்தில் படித்த பாடங்கள்! எனினும் இளவயதில் மிகவும் அறிவாளியாய்த் திகழும் இங்குள்ள மாணவர்கள், வெப்பமண்டலத்தில் விரைவில் தீய்ந்துபோகும் பயிர்களைப் போலக் களை இழந்துவிடுகின்றனர். எதிர்கால நம்பிக்கை நட்சத்திரங்களாகத் திகழ்வார் என்று நாம் நினைத்தவர்களில் ஒரு சிலரே எழும்பி ஒளிவீசுகின்றனர் என்பது வரலாறு கூறும் உண்மை.

இந்த ஊரில் கோவில் கட்டும் பணியில் ஈடுபட்டுள்ளேன் என்பதை நீ அறிவாய் என நினைக்கிறேன். ஒவ்வொரு ஊரிலும் ஒரு மன்றாட்டு அறை உண்டு. இந்த ஊரில் நான் தங்கியிருப்பதாலும் இப்பகுதியில் இவ்வூர்ச் சபை மிகவும் பெரியது என்பதாலும் ஒரு பெரிய அழகிய கல்லால் ஆன கோவிலை இங்குக் கட்ட விரும்புகிறேன். தேவைப்படும் பணத்தில் பாதி என்னிடம் உள்ளது. எனவே பணியைத் தொடங்கிவிட்டேன். அடிக்கல் நாட்டும் பணி நடந்து கொண்டிருக்கிறது. மணற்பாங்கான தரையாக இருப்பதால் ஆழமாகத் தோண்டியிருக்கிறோம். பணி முடிய குறைந்தது மூன்று ஆண்டுகள் அல்லது அதற்கு மேல் ஆகலாம். 50 பவுண்ட் (இப்போது அதின் மதிப்பு ரூ.37,500) மதிப்புள்ள அழகிய வரை படங்களையும் திட்டங்களையும் இலண்டன் மாநகரைச் சேர்ந்த கட்டிடக் கழகத்தார் இலவசமாக அனுப்பியுள்ளனர்.

இதுபற்றி மடல் எழுதும் போது அக்கழகத்தின் எந்த ஒரு உறுப்பினரையும் அறியேன், கழகம் மட்டும் தெரியும். வேறு எந்த இறைப்பணியாளரும் இக்கழகத்தின் உதவியை நாடி விண்ணப்பித்ததாக நான் கேள்விப்படவில்லை. ஆயினும், உதவிக்காக விண்ணப்பிப்பதில் எவ்வகைத் தவறும் இல்லை என எண்ணுகிறேன். மேலும் அக்கழகம் அங்கே உள்ள (இங்கிலாந்தில்) இடங்களில் கோவில் கட்ட நிதி உதவி அளிக்கும் கழகம் என்றும் வெளிநாடுகளில் கோவில் கட்ட நிதி உதவி செய்யும் கழகம் அல்ல என்பதும் தெரியும். எனினும் எனது மடல் கிடைத்ததும் அக்கழகத்தார் அடுத்த தபாலில் வரை படத்தையும் திட்டங்களையும் ஒரு பெட்டியில் வைத்து அனுப்பியிருக்கின்றனர். மட்டுமன்று, தேவைப்பட்டால் மேலும் உதவிச் செய்ய ஆயத்தமாக இருப்பதாகவும் எழுதியிருக்கின்றனர். இங்கிலாந்து நாட்டினரின் முழுமனத்தோடு கூடிய ஈகைப் பண்புக்கு அருமையான எடுத்துக்காட்டு இது.

இதைவிடச் சிறந்த திட்டத்தை என்னால் உருவாக்க முடியாது. இலாபம் 50 பவுண்ட் மட்டுமல்ல. 500 தலைவலிகளிலிருந்து விடுதலை! எத்திட்டத்திற்கும் உறுதியான நம்பிக்கை தேவை என்ற பாடத்தையும் கற்றுக் கொண்டேன்.

## இயல் : 6

# திருநெல்வேலியில் நான் நேரில் கண்டவர்கள்

திருநெல்வேலியில் ஐரோப்பிய இறைப்பணியாளர்களை நான் கண்டபோது எழுந்த எண்ணங்களே முதலில் இடம் பெற வேண்டும். அதுதான் சரியான முறை. ஆனால், எனக்கு ஒரு முறைகூடப் பார்க்கக் கொடுத்து வைக்காத ஒரு புகழ்பெற்ற இறைப்பணியாளர்களைப் பற்றி எழுதுகிறேன். திருநெல்வேலியில் **1820** முதல் **1838** வரை பணியாற்றி அண்மையில் மறைந்த இரேனியஸ்ஸே அவ்விறைப்பணியாளர். திருநெல்வேலியில் மட்டுமல்ல, தென்னிந்தியாவில் பணியாற்றிய இறைப்பணியாளர்களுள் முன்னணியில் இடம் பெறும் இறைப்பணியாளர் அவரே. ஸ்வார்ட்ஸ ுக்குப் பின் 19ஆம் நூற்றாண்டில் பல்வேறு இயக்கங்கள் மூலமாக அனுப்பப்பட்ட இறைப்பணியாளர்களுள் அவர்தான் முதல் இடத்தைப் பெறத் தகுதியானவர் என்பதில் இரு கருத்துக்கள் இருக்க முடியாது.

**1841**ஆம் ஆண்டு இறுதியில் நான் திருநெல்வேலிக்கு வந்த வேளையில் ஒவ்வொருவரும் அவரைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தனர். அவரது புகழ் மங்கவில்லை. மாறாகப் பசுமையாகவே இருந்தது. அவரை நான் பார்க்காவிட்டாலும் அவர் எழுதிய நூல்கள் வழியாகவும் அவர் வரைந்த மடல்கள் வழியாகவும் அவரை நன்கு அறிந்தவர்களிடம் நடந்த உரையாடல்கள் மூலமும் அவரைப் பற்றி நன்கு அறிந்திருந்தேன். தனிப்பட்ட முறையில் என்னிடம் நன்கு பழகியவர் போல் உணர்கிறேன். அவர் அதிகம் படித்தவர்; அருமையான இறைப்பணியாளர். மன்னவன் (இயேசு) பணியே அவரைப் புகழேணியின் உச்சிக்கு எடுத்துச் சென்றது. தமிழில் அவர் எழுதியவை அனைத்தும் முத்துக்கள். அவரது நடை பழுதற்றது; தமிழ் மொழி அறிவு ஆழமற்றது; தமிழில் இலக்கண நூல் ஒன்றை எழுதினார். இருபது ஆண்டுகளாக அந்நூல் மட்டுமே பழக்கத்தில் இருந்தது.

எனினும் இங்குள்ள செம்மொழிகளின் இலக்கணங்களைப் பற்றி அவர் நன்கறியார், பெப்ரிஷியஸ் மொழியாக்கம் செய்த தமிழ் விவிலியத்தை ஒதுக்கிவிட்டுத் தானே புதிய ஏற்பாட்டையும் பழைய ஏற்பாட்டின் ஒரு பகுதியையும் தமிழில் மொழியாக்கம் செய்தார். இலக்கியக் கண்ணோட்டத்தோடு பார்க்குங்கால் அது ஓர் அருமையான படைப்பு. ஆனால் விவிலிய மணமோ, குணமோ இல்லாததினால், லியாண்டர் வான் எஸ்ஸின் (Leander Van Ess) புதிய ஜெர்மன் விவிலியம் போன்று சிறிது காலமே நிலைத்திருந்து. பின் முற்றிலுமாக மறைந்துவிட்டது. இரேனியஸ் எபிரேய, கிரேக்க மொழிகளில் சிறந்த புலமை பெற்றவர். வேத விளக்கங்களில் மிகப் புதிய கருத்துக்களே அவருக்குப் பிடிக்கும்.

பிறப்பிலே இரேனியஸ் ஒரு லூத்தரனாக இருப்பினும், லூத்தரன் கொள்கைகளையும் பழக்கவழக்கங்களையும் சிறிது சிறிதாக விட்டு விட்டார். C.M.S. இயக்கத்தின் ஆங்கில எதிர்ப்பாளர் (Dissenters) கொள்கைகளின் அடிப்படையில் தனக்களிக்கப்பட்ட பணித்தளத்தில் அவர் முழுமூச்சுடன் செயலாற்றினர்; அமைப்புகளைச் சிறந்த முறையில் நடத்தும் திறமையுள்ளவர்; இறைப்பணியில் தீவிர ஆர்வமுள்ளவர்; அருளுரை வழங்குவதில் வல்லவர்; தமிழில் நல்ல பேச்சாளர், திறமையான எழுத்தாளர், இந்தியாவில் தொடர்ந்து வலுவாக உழைத்த இறைப்பணியாளருள் ஒருவர்; ஓரளவே புலமை பெற்றவராயினும், மற்றவர்கள் மீது தனது தாக்கத்தை ஏற்படுத்துவதில் முதலிடம் பெற்றவர்.

அவரின் இத்திறமைகள்தான் பலரை மனமாற்றமடையச் செய்தது. இதனால்தான் அவர் தென்னிந்திய இறைப்பணியாளர்களுள் ஸ்வார்ட்ஸுக்கு அடுத்த இடத்தைப் பிடித்துள்ளார். C.M.S. ஸிலிருந்து பிரிந்து செல்லவும் பிரிந்த போது அனைவரையும் தன்னோடு எடுத்துச் செல்லவும் இந்தியா எங்குமுள்ள ஐரோப்பிய நண்பர்களிடமிருந்து குறிப்பாக, செல்வாக்குள்ள ப்ளீமத் சகோதர்களிடமிருந்து மிகுதியாகப் பொருளதவி பெறவும் கைகொடுத்தது இத்திறமைகளே. தன் வாழ்நாள் வரை இறைப்பணியின் ஒவ்வொரு துறையையும் மூன்று ஐரோப்பியச் சகோதரர்களுடைய உதவியுடன் மிகத்திறமையாகக் கண்காணித்து வந்தார்.

இரேனியஸின் மறைவுக்குப் பின் இந்த உதவிகள் குறையத் தொடங்கின. நாளடைவில் முழுவதும் நின்று போயின. திருச்சபைக்கு எதிராக இயக்கம் தொடங்கியதும், அது நிலைத்திருந்ததும் இரேனியஸின் செல்வாக்கினால்தான் என்பதற்கு இதுவே சான்று. அவர் மறைந்த பின்பு திருநெல்வேலி C.M.S. இறைப்பணி இயக்கங்களில் அப்படிப் பிரிவு இருந்ததற்கான அறிகுறிகள் எதுவும் இல்லை. S.P.G.யின் கட்டுப்பாட்டில் உள்ள உள்ளூர்த் திருச்சபைகளிலும் அதன் தாக்கம் எதுவும் கிடையாது. தினமும் காலையிலும் மாலையிலும் சபையார் கோவிலில் கூடி வழிபட வேண்டும் என்ற முறைமையை அவரே அறிமுகப்படுத்தினார். அவரது வழிபாடு ஏறத்தாழ குடும்ப மன்றாட்டு முறையிலேயே இருந்தது. ஜெபபுத்தகம் பயன்படுத்தப்படவுமில்லை. அது பற்றிய குறிப்பும் இல்லை. குறிப்பிட்ட சங்கீதங்களோ அல்லது விவிலியப் பகுதிகளோ படிக்கப்படுவதுமில்லை. அவர் அறிமுகப்படுத்திய இந்த வழிபாட்டு முறைமை, அவரது மறைவுக்குப் பின் பல ஆண்டுகள் C.M.S. சபைகளில் பின்பற்றப்பட்டு வருகிறது.

நான் வந்தபோது திருநெல்வேலியில் உள்ள இறைப்பணியாளர்களுள், மிகவும் வயதான இறைப்பணியாளர் சாப்டரே ஆவார். இரேனியஸைப் போல அவர் லூத்தரன் முறைப்படி கல்வி கற்றவர்; அருட்பொழிவு பெற்றவர். இவருக்கும் C.M.S. மறு அருட்பொழிவு கொடுக்கவில்லை. அதற்குச் சில காலம் சென்ற பின்னரே C.M.S. ஆல் பணி அமர்த்தப்பட்ட ஜெர்மன் இறைப்பணியாளர்களுக்கு அருட்பொழிவு கொடுக்கும் முறை அறிமுகப்படுத்தப்பட்டது. ஸ்விட்சர் நாட்டில் பிறந்தவர் சாப்டர். அவரது தாய்மொழி பிரெஞ்சு. ஆனால் பலர் அவரை ஜெர்மனி நாட்டைச் சேர்ந்தவர் என்றே எண்ணுகின்றனர். தொடக்ககால தொடர்பையும் அவரது பற்றினையும் பார்த்தால் அவர் ஒரு லூத்தரன் என்பதை விட மொரேவியன் என்பதே பொருத்தமாகும்.

பால் பசிபிக் (Paul Pacifique) என்பதே அவரது கிறிஸ்தவப் பெயர். மற்றவர்களால் பசிபிக் (Pacifique) (சமாதானம் பண்ணுகிறவர்) என்று அழைக்கப்பட்டார். மிகப்பொருத்தமான பெயர். ஏனெனில் மென்மையும் அமைதியையும் தன்னகத்தே கொண்ட அவர் பல இடர்களில் சிக்குண்ட, இன்னல் நிறைந்த காலத்தில் திருநெல்வேலிக்கு அனுப்பப்பட்டார். ஆராய்ந்து அறியும்

உள்ளம் கொண்ட அவர் இறைப்பற்று மிகுந்தவர்; நகைச்சுவையுடனும் நயத்துடனும் பேசுபவர்; பாளையங்கோட்டைக்கும் குற்றாலத்திற்கும் இடையே உள்ள நல்லூரில் புதிய பணித்தளம் ஒன்றைத் தொடங்கினார்.

அடுத்து நான் திருநெல்வேலியில் ஜாண் ஜேம்ஸ் முல்லரை நேரில் கண்டேன். இவர் இளையவர்; இரேனியஸின் மற்றொரு உதவியாளர். இவர் ஒரு ஜெர்மானியர் C.M.S. இயக்கத்தினரால் முதலாவது அனுப்பப்பட்டபோது இங்கிலாந்து திருச்சபையில் 'டீக்கன்' பணியில் உள்ளவர். இரேனியஸ்ஸின் மறைவுக்குப் பின்பு அவர் மீண்டும் இயக்கத்தில் சேர்ந்த போது, இங்கிலாந்து திருச்சபையின் அருட்பணியாளராக அருட்பொழிவு பெறவேண்டும் என்று வலியுறுத்தப்படவே அதற்கு அவர் சற்று தயக்கத்துடன் ஒப்புக் கொண்டார். திருநெல்வேலியின் தென்பகுதியில் உள்ள சுவிசேஷபுரத்தில் இறைப்பணி செய்ய மீண்டும் அமர்த்தப்பட்டார். அந்தச் சுவிசேஷபுரம்தான் பேராயர் சார்ஜென்ட்டின் முதல் பணித்தளம். சுவிசேஷபுரம் இடையன்குடியில் இருந்து 5 மைல் தொலைவில் உள்ளதால் நான் முல்லரை அடிக்கடி பார்த்தேன். அவர் நீண்டகாலம் உயிர் வாழவில்லை.

அவருடைய மனைவி, இரேனியஸ்ஸின் மகள். இலண்டன் இறைப்பணி இயக்கத்தைச் சேர்ந்த இறைப்பணியாளர் ஒருவரை மறுமணம் செய்து மீண்டும் விதவையாகத் திருமதி. ரைஸ் (Mrs Rice) என்ற பெயருடன் பெங்களூரில் இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கிறார். லெக்லர் (Lechler) இரேனியஸ்ஸின் மூன்றாவது உதவியாளரும் மாணவருமாவார். இவரும் ஒரு ஜெர்மனியரே. முல்லரைப் போன்று அவரும் அருட்பணியாளர் அமைப்பைச் சேர்ந்தவராயினும், 'சர்ச் மிஷனரி இயக்க'த்தில் அருட்பணியாளராக சேர மறுத்துவிட்டார். அவர் முற்றிலும் இரேனியஸைப் போன்றவர். எனவே, இரேனியஸ் மறைவுக்குப் பின் இலண்டன் இறைப்பணி இயக்கத்தில் சேர்ந்து, சேலத்தில் உள்ள பணித்தளத்தில் பணிபுரிய அனுப்பப்பட்டார்.

சென்னையில் அவரை நான் பார்த்தேன். சேலத்தில் ஒரு தச்சுத்தொழிற்பள்ளியைத் தொடங்கினார். அது ஓரளவு வெற்றியைக் கொடுத்தது. நான் திருநெல்வேலிக்கு வரும் போது C.M.S. இறைப்பணியாளர்கள் இரண்டு பேர் மட்டுமே இருந்தனர். ஒருவர் பாளையங்கோட்டையில் உள்ள பெற்றிற். மற்றவர்

மெய்ஞ்ஞானபுரத்தில் உள்ள தாமஸ். அதற்குப் பின்னால் இறைப்பணியாளரின் எண்ணிக்கை உயர்ந்து கொண்டே சென்றது. இரேனியஸ் இடத்தை நிரப்ப C.M.S. உறுப்பினர் பெற்றிட்டைப் பாளையங்கோட்டைக்கு அனுப்பினர். (அச்சமயம் இரேனியஸ் உயிருடன் இருந்தார்) இச்சிறப்புப் பணித்தளத்தை இங்கிலாந்து திருச்சபையுடனும் 'சர்ச் மிஷனரி சொஸைட்டி'யுடனும் கட்டிக்காப்பதே அவரது சிறந்த நோக்கம். இப்பணிக்கு இதைவிடப் பொருத்தமானவர் எவருமிலர். பெற்றிட் வயதில் இளையவர். ஆனால் நிர்வாகத்திறமை உள்ளவர்; எதிலும் உறுதியானவர். ஆனால் அமைதியான்வர். இரேனியஸைப் போன்று தமிழில் சிறந்த எழுத்தாளரும், பேச்சாளரும் அல்லர். ஆனால் அவரைப் போன்று தமிழ் அறிவு உள்ளவர்.

அந்நாட்களில் சபையின் தூணாக விளங்கியவர் பெற்றிட். அவர் எழுதிய 'C.M.S.ஸின் திருநெல்வேலிப் பணித்தள வரலாறு' ஓர் அருமையான நூல். அவரைப் பற்றியும் அவர் பணி செய்த காலம் பற்றியும் அவரது பணி பற்றியும் அறிந்து கொள்ள இந்நூல் பெரிதும் உதவுகிறது. ஜெபபுத்தகத்தின் முதல் திருத்திய பதிப்பு வெளிவரக் காரணமாய் இருந்தவர் அவரே. அது பற்றிய விவரங்களை அடுத்த இயலில் காணலாம். சில ஆண்டுகளுக்குப்பின் விடுப்பில் இங்கிலாந்து சென்ற அவர் திருநெல்வேலிக்குத் திரும்ப வரவில்லை. இலங்கையில் உள்ள C.M.S. பணித்தள மையத்தின் செயலராகப் பொறுப்பேற்றார். இதை விட விரும்பத்தகாதது என்னவென்றால் அவருக்கும் இலங்கையில் உள்ள சில இறைப்பணியாளர்களுக்கும் இடையே ஏற்பட்ட கருத்துவேறுபாட்டில், தாய்ச்சங்கம் அவருக்கு ஆதரவு அளிக்கவில்லை. எனவே பணியிலிருந்து விலகி இங்கிலாந்து சென்றுவிட்டார். ஓர் அருமையான அருட்பணியாளரின் சேவையை திருநெல்வேலியும் இலங்கையும் இழக்க நேரிட்டது.

நான் திருநெல்வேலிக்கு வந்து சிறிது காலத்தில் C.M.S.ஸின் மற்றொரு இறைப்பணியாளரான திரு. ஜாண் தாமஸ் அவர்களுடன் அறிமுகமானேன். இவர் ஜார்ஜ் பெற்றிற்றை விட வேறுபட்டவர். அவரைவிட அதிகப்புகழ் வாய்ந்தவர் அல்லர் என்றாலும் பல செயல்களில் அவருக்கு இணையானவர். பெற்றிற் பாளையங்கோட்டையில் தங்கியிருந்து கொண்டு மற்ற C.M.S. பணித்தளங்களைப் பார்வையிட்டு வந்தார். ஆனால் தாமஸ் நெடுவிளை (மெஞ்ஞானபுரம்) என்ற கிராமத்தில் தங்கியிருந்து

சுற்றியுள்ள நூற்றுக்கணக்கான கிராமங்களில் அருட்பணி செய்து வந்தார். ஆங்கில ஆயர் செயல்முறையை அவ்விடங்களில் அறிமுகப்படுத்தினார்.

ஒவ்வொரு ஊரிலும் ஒரு சபையையும் ஒரு பள்ளியையும் நிறுவ வேண்டும் என்ற நோக்கத்துடன் பணிபுரிந்தார். அவர் அதிக வரம் பெற்றவர்; பெரிய சாதனையாளர்; சட்ட வல்லுநர்; மருத்துவத்தையும் நன்கு கற்று மருத்துவராகப் பணி செய்தார்; சிறந்த பாடகர்; இசையில் வல்லவர்; இசையை முறைப்படி கற்றவர்; கட்டிடம் கட்டுவதில் தலைசிறந்தவர்; கட்டிடம் கட்டுவதில் அவருக்கு நிகரானவர் திருநெல்வேலியில் எவருமிலர். அவர் கட்டிய கட்டிடங்கள் கோவில்களாக இருக்கலாம் அல்லது ஆயர் இல்லங்களாக இருக்கலாம் அல்லது பள்ளிகளாக இருக்கலாம். இவை கட்டிடக் கலைப் பிரியர்களின் கண்களுக்கு விருந்து. தவிர, இவர் இயந்திர நுட்பத்தில் சிறந்தவர்; நன்றாகக் குதிரைச் சவாரி செய்பவர்; நல்ல நீச்சல் வீரர். இவருடைய உடம்பு கட்டுக்கோப்பானது; வலிமையானது; எப்பொழுதும் சுறுசுறுப்பாகவும் எழுச்சி மிக்கவராகவும் இருப்பார். எனினும் நாளடைவில் காலநிலை அவரது உடம்பைப் பதம் பார்த்தது. மேலும் தமிழில் புலமை வாய்ந்தவர்; அழகு தமிழில் அருமையாகப் பேசுவார்; தமிழிலும் ஆங்கிலத்திலும் நன்றாக அருளுரை ஆற்றுவார். அமைப்புகளைச் சிறப்பாக நடத்தும் திறமை வாய்ந்தவர்; ஒழுக்கத்திற்கும் கட்டுப்பாட்டிற்கும் முதலிடம் கொடுப்பவர். அவரது கண்காணிப்பில் இருக்கும் சபைகளிலும் பள்ளிகளிலும் பள்ளி ஆசிரியர்களிடமும் திருப்பணி விடையாளர்களிடமும் உள்ளூர் அருட்பணியாளர்களிடமும் இதைக் கண்கூடாகக் காணலாம்.

திருநெல்வேலிக்கு வந்தபின் சில ஆண்டுகளாக அவ்வப்போது மெஞ்ஞானபுரம் சென்று, பணித்தளத்தில் ஏற்படும் இன்னல்களைப் பற்றியும் கட்டிடங்கள் கட்டும் விபரங்கள் பற்றியும் அவரிடம் கலந்து கலந்து பேசுவது வழக்கம். அவரது நட்பு எனக்கு மிகவும் பயனளித்தது. ஜான்தாமஸிடம் சிறிய குறைபாடு காணப்பட்டது. பணித்தளங்களை நடத்துவதில் அவர் தன்னிச்சையாகவே செயல்படுவார். தான் நினைத்ததைச் செய்வார். தான் சொல்வதைத்தான் மற்றவர்களும் செய்ய வேண்டும் என எதிர்பார்ப்பார். இதனால் மற்றவர்களின் தனிப்பட்ட வளர்ச்சிக்கு இடம் இல்லாமல் போய்விட்டது. பணித்தளங்களில்

ஒரே ஒரு எண்ணம் உண்டு. அது அவருடையதே. ஒரே ஒரு ஆணை உண்டு. அது அவருடையதே. மற்ற எல்லாச் செயல்களிலும் அமைப்புகளின் நடைமுறைக் கொள்கைகள் நிறைவானவை; எப்பொழுதும் வெற்றியைக் கொடுத்தன. அவைகள் இங்குள்ள மக்களின் மன நிலைக்கும் நடத்தைக்கும் ஏற்றவை. அம்மக்களுக்கு வேண்டியது ஒரு தலைவர். அவர் என்ன சொல்கிறாரோ அதற்குக் கீழ்ப்படிவதே அவர்களது கடமை என்று எண்ணினர்.

அம்மக்களுடைய கல்வியறிவற்ற ஒழுங்கற்ற சிந்தனைகளையும் விருப்பங்களையும் விட அவரது சிந்தனைகளும் செயல்களும் சிறந்தவை என்பதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். மற்ற ஐரோப்பியர்கள் அவர் மீது ஐயப்படலாம். அவரைக் குறைகூறலாம். ஆனால் உள்ளூர் மக்கள் அவ்வாறு செய்ததுமில்லை; செய்யவும் மாட்டார்கள். அவர்களின் இந்த உண்மையான பிணைப்பு அவரது மறைவு வரை இருந்தது. இன்றுவரை யாரும் அவரை குறைவாக மதித்துப் பேசியது கிடையாது. அவர் மெய்ஞ்ஞானபுரத்தில் கட்டியுள்ள கோவில் திருநெல்வேலியில் மிகப்பெரியது; மிக அழகானது. அந்த ஊர் மக்களுக்கு மட்டுமல்ல, சுற்றியுள்ள கிராம மக்களுக்கும் அக்கோவில் உண்மையான நினைவுச் சின்னமாக விளங்குகிறது. அவருடைய தொண்டுகள் அவரைப் பின் தொடரும் என்ற வாக்கு அவருக்கு மிகப் பொருத்தமானவை. மெய்ஞானபுரம் கோவில் அருகே அவரது உடல் அவரால் பயிற்சி அளிக்கப்பட்டு முன்னேற்றமடைந்த பதினைந்து ஆயர்களால் அடக்கம் செய்யப்பட எடுத்துச் செல்லப்பட்டது.

நான் திருநெல்வேலிக்கு வந்தபோது S.P.G. இறைப்பணியாளர்களான அகஸ்டஸ் ஃப்ரெட்ரிக் கேமரர் நாசரேத்திலும், ஜார்ஜ் இயேட்ஸ்ஹேய்ன் முதலூரிலும் பணி செய்து கொண்டிருந்தனர். இருவருடைய பெற்றோரும் ஐரோப்பியர்கள். ஆனால் இருவரும் இந்தியாவில் பிறந்து ஐரோப்பிய ஆசிய மக்களிடையே வளர்ந்தவர்கள். கல்கத்தாவில் உள்ள பேராயர் கல்லூரியில் பயின்றவர்கள். இருவரும் ஐரோப்பாவுக்குச் சென்றதுமில்லை, உயிர் மீட்சிப் பெற்று வந்த இங்கிலாந்து திருச்சபையினரைப் பார்த்து கருத்துப் பரிமாறிக் கொள்ளவுமில்லை. எனவே அவர்கள் பெரும்பாலும் தங்களுக்கு முன் பணியாற்றிய பழங்காலத்து லூத்தான் ஆயர்களைப் போலவும் தஞ்சாவூரிலிருந்து

வந்து பணியாற்றிய பழங்காலத்து திருப்பணிவிடையாளர்களைப் போலவுமே தங்கள் பணியைத் தொடர்ந்து செய்து வந்தனர். கேமரார் நல்ல உடல் வலிமையுள்ளவர்; ஆற்றலுடையவர்; அதிக ஊக்கமும், ஆவலும் கொண்டவர்.

அண்மையில் வந்த C.M.S. இறைப்பணியாளர்களை விடப் பணியில் தொய்வு ஏற்பட்டுவிடக் கூடாது என்ற எண்ணத்தில் வளர்ச்சிக்கான பல திட்டங்களை நடைமுறைப்படுத்த முனைந்தார். அதன் விளைவாக நாசரேத்திலும் அதைச் சுற்றியுள்ள கிராமங்களிலும் நல்ல ஒழுக்கமும் வளர்ச்சியும் இருந்தது. பல புதிய கிராமங்கள் இயேசுவின் மந்தையில் இணைந்தன. அவருடைய பணியின் தாக்கம் இராமநாதபுரம் வரையிலும் இருந்தது. நாசரேத்தில்தான் முதன் அருளுரை ஆற்றினார். விரைவில் நல்ல வளர்ச்சி ஏற்பட்டது. நாசரேத் உட்பட மூன்று ஊர்களில் கோபுரங்களைக் கட்டினார். ஒரே இடத்தில் இருந்து மூன்று கோபுரங்களையும் பார்க்கலாம். கட்டிடக்கலையில் முன்னேற்றமடைந்த காலத்தில் வாழும் மக்களுக்கு அந்தக் கிறித்தவக் கோவில்கள் மற்றும் கோபுரக் கட்டிடக்கலை வெறுப்புணர்வைக் கொடுக்கலாம். ஆனால் கட்டிடக்கலை உணர்வு இல்லாத அக்காலத்தில் உள்ள மக்களின் தேவையை அவை நிறைவு செய்தன.

இதை விஞ்சும் வகையில் திருநெல்வேலிப் பகுதியில் வேறு எங்கும் கட்டப்படவில்லை. கேமரார் சிறந்த அறிவாளி என்று கூற முடியாது. அவர் அதிகம் படிப்பதில்லை. எனினும் உள்ளூர் மக்களின் தேவை என்ன என்பதை நன்கு அறிந்திருந்தார். எனவே, தனது மனைவியின் மறைவிற்குப்பின் தரமான இறையியல் விவிலியப் புத்தகங்களைத் தமிழில் மொழியாக்கம் செய்து உள்ளூர் திருச்சபை மக்களுக்குப் பேருதவி புரிந்தார். அந்த நூல்களை இன்றும் மக்கள் பயன்படுத்துகின்றனர். அவரது வாழ்நாளின் பின்பகுதியைத் தஞ்சாவூரிலும் மற்ற இடங்களிலும் கழித்தார்.

ஹேய்ன் கேமரரைவிட அறிவில் குறைந்தவர் அல்லர். ஆனால் ஆற்றலைப் பொறுத்தமட்டில் அவர் கேமரரைவிடப் பல மடங்கு குறைந்தவர்; மிகவும் அமைதியானவர்; அன்புள்ளம் கொண்டவர்; எவரையும் புண்படுத்தாதவர். இவ்வளவு பண்புடையவராயிருந்தாலும், அவரிடம் சில குறைகளும் உண்டு.

சோம்பேறித்தனம் அவரது பிறப்பிலிருந்தே தொடரும் நோய். வீட்டைவிட்டு வெளியே செல்வது மிகவும் அரிது. நல்ல தமிழ் அறிவு இருந்தும் தயாரிப்பின்றி அருளுரை ஆற்ற முன்வரமாட்டார். அவ்வளவு பயந்த தன்மை! பணித்தளத்தில் ஏற்பட்ட முன்னேற்றங்களைப் பற்றிக் கூட கோவில்களில் அறிவிக்கத் துணியார்.

முதலூரில் கட்டிய அந்தப் பெரிய கோவில் தான் அவர் செய்த உருப்படியான வேலை. பல ஆண்டுகளாக அதுவே திருநெல்வேலியில் பெரிய கோவிலாகக் கருதப்பட்டது. அதுவும் நிலைக்கவில்லை. பலமுள்ளதாகத் தோன்றினாலும், உண்மையில் கட்டிடம் பலவீனமாகவே இருந்தது. எனவே மீண்டும் கட்டப்பட வேண்டிய நிலை ஏற்பட்டது. சிறிது காலத்திற்குப் பின் உண்டான இனப்பிரச்சினையைத் தாங்க முடியாமல் தானாகவே முதலூரை விட்டுவிட்டு வடநாட்டுக்குச் சென்றார். எளிமையாகவும் அமைதியாகவும் வாழ்ந்தார். அது போலவே அமைதியாக 1881ஆம் ஆண்டு மறுமைக்குட்பட்டார்.

நான் ஏற்கனவே எழுதியிருந்தபடி அறிவர் போப் திருநெல்வேலிப் பகுதிக்கு வந்ததும் S.P.G. பணித்தளங்கள் மிகவும் வலுவான நிலையை அடைந்தன. 1841ஆம் ஆண்டு திருநெல்வேலிக்கு வந்தபோது நான் நேரில் பார்க்காத இறைப்பணியாளர்களில் அச்சமயம் ஆயராக இருந்து பின் பேராயராக அமர்த்தப்பட்ட எட்வர்ட் சார்ஜன்ட் என்பவரும் ஒருவர். நான் வந்த சமயம் அவர் இங்கிலாந்து நாட்டில் ஐலிங்டனில் (Islington) உள்ள C.M.S. கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தார். அருட்பொழிவு பெற்றதும் திருநெல்வேலிக்குத் திரும்பினார். அந்நாளிலிருந்து இருவரும் மிகவும் நெருங்கிப் பழகினோம். திருநெல்வேலியில் அவருக்கு அளிக்கப்பட்ட பணித்தளம் சுவிசேஷபுரம்.

இடையன்குடியிலிருந்து அவ்வூர் 5 மைல் தொலைவில் உள்ளதால் நாங்கள் அடிக்கடி நேரில் கண்டு கலந்துரையாடுவது வழக்கம். நேரில் பார்த்துப் பேசியதால் நான் அதிகப் பயன் அடைந்திருக்கிறேன். திரு. சார்ஜன்ட்டுக்கு நல்ல இறைப்பணியாளர் பட்டறிவு உண்டு; நல்ல தமிழறிவும் உண்டு; உள்ளூர் மக்களைப் போன்று அழகாகத் தமிழில் பேசுவார். உள்ளூர் மக்களின் எண்ணங்கள் என்ன என்பதையும் அறிவார். அதனால் அவ்வப்போது அவரை நேரில் கண்டு பேசுவது எனக்கு

அதிகப் பயனுள்ளதாய் இருந்தது. எனது மனைவியும் திருமதி. சார்ஜன்ட் அம்மையாரும் சுவிசேஷபுரத்தில் அடிக்கடி நேரில் கண்டு பேசும் வழக்கம் உண்டு.

தமிழ் விவிலியம், ஜெபபுத்தகம் மறுவெளியீடு தொடர்பாகவும் நாங்கள் இருவரும் கலந்து சிந்திப்போம். இருவரும் வெவ்வேறு இறைப்பணி இயக்கங்களைச் சேர்ந்தவர்கள். எனினும் நோக்கம் ஒன்றே என்பதால் மோதல்களுக்கு வாய்ப்பில்லை. பலமுறை பல காரணங்களுக்காக நேரில் கண்டு பேசியுள்ளோம். எனினும் எங்களிடையே கருத்து வேறுபாடோ, காழ்ப்புணர்ச்சியோ ஏற்பட்டதே இல்லை. பேராயருக்காக அருட்பொழிவு பெற்றதுதான் எங்களது நட்பின் மகுடம். இருவருமே 1877ஆம் ஆண்டு மார்ச் மாதம் ஒரே நாளில் கல்கத்தாவில் அந்நாள் தலைமைப் பேராயரால் அருட்பொழிவு பெற்றோம். தலைமைப் பேராயருக்கு உதவி புரிய இந்தியா மற்றும் இலங்கையில் உள்ள பேராயர்கள் பலரும் வந்திருந்தனர். சென்னைப் பேராயருக்கு உதவியாகவே நாங்கள் இருவரும் பணி அமர்த்தப்பட்டதால் திருவாங்கூர், கொச்சிப் பேராயருக்கு ஒதுக்கியது போல எங்களுக்கென்று குறிப்பிட்ட பகுதி எதுவும் ஒதுக்கப்படவில்லை. இந்த ஏற்பாடு பலருக்கு மனநிறைவை அளிக்காவிட்டாலும் எங்களைப் பொருத்தவரை எவ்வகை இடையூறுமின்றி அனைத்து செயல்களும் செயல்பட்டுவந்தன. சிக்கல் எதுவும் உண்டாயிருந்தால், அதற்குக் காரணமாயிருந்தவர்கள் யாவரென்றால் சில நேரங்களில் என்னுடைய விருப்பத்திற்கும், சென்னை பேராயரின் விருப்பத்திற்கும் மாறாகச் செயல்பட்ட S.P.G. இயக்கத்தின் சென்னைக்குழு உறுப்பினர்களே.

'சென்னையில் நான் கண்ட மனிதர்கள்' என்ற தலைப்பில் நான் எழுதிய கட்டுரையில் S.P.G.யில் நான் சேர்ந்ததற்கான காரணங்களையும் C.M.S.ஸில் ஏன் சேரவில்லை என்பதற்கான காரணங்களையும் குறிப்பிட்டிருந்தேன். நான் குறிப்பிட்டிருந்த காரணங்கள் C.M.S. நண்பர்களின் மனத்தைப் புண்படுத்தியிருக்கின்றன என்பதை அறிந்து வருந்துகிறேன். அக்குறிப்புகள் சுமார் 40 ஆண்டுகளுக்கு முன்பு எழுதப்பட்டவை. அதற்குப் பின் அவ்வியக்கத்தின் பணியாளர்களுடன் நெருங்கிய உறவு வைத்ததுமட்டுமல்லாமல், அவர்களுடைய சீரிய பணிகளையும் பார்த்திருக்கிறேன். எனவே அக்குறிப்புகள்

இச்சமயத்திற்குப் பொருந்தாததால் அவைகளைப் பெரும்பாலும் விட்டுவிட்டேன் அல்லது மாற்றிவிட்டேன்.

நான் திருநெல்வேலிக்கு வந்தபோது திரு E.B.தாமஸ் C.S. மாவட்ட ஆட்சியராக இருந்தார். அவர் ஒரு இறைப்பணியாளர் அல்லர். எனினும் திருநெல்வேலிப் பகுதியில் நடைபெற்ற பணித்தள இறைப்பணிகளில் அவருக்கு இருந்த ஈடுபாட்டைக் கவனிக்குங்கால் அவரை ஒரு இறைப்பணியாளராகவே, ஏற்றுக் கொள்ளலாம். அவர் பொது நலமிக்கவர். 'மக்கள் தொண்டே மகேசன் தொண்டு' என்றக் கூற்றுக்கேற்ப, சாலை மேம்பாடு, சாலையோரங்களில் நிழல்தரும் மரங்களை வளர்த்தல், பயணிகளின் வசதிக்காகச் சத்திரங்கள் அல்லது தங்கும் அறைகள் அமைத்தல், கிணறுகள் தோண்டுதல், பயன்தரும் சிறந்த மரங்களை இப்பகுதியில் அறிமுகப்படுத்துதல் ஆகிய நலத்திட்டங்களைச் செய்தார்.

இப்பணிகளில் அவர் முந்தைய ஆட்சியர்கள் அனைவரையும் விஞ்சிவிட்டார். மதுரை இராணி மங்கம்மாளுக்குச் சவால் விடுக்கும் வகையில் பொதுநலத்திட்டங்களை நிறைவேற்றினார். எங்காவது பழங்காலத்திய பொருட்களோ அல்லது இடங்களோ, இருக்குமாயின் அவை மங்கம்மாளையே நினைவுபடுத்துகின்றன. அவை தற்காலத்தில் ஆக்கப்பட்டிருந்தால் அவை ஆட்சியர் தாமஸின் புகழையே பாடும். விருந்தோம்பலின் அவர் முதன்மையானவர். ஐரோப்பியர்களை மட்டுமல்ல இந்தியர்களின் மனத்திலும் அவர் விருந்தோம்பல் நீங்காத இடத்தைப் பெற்றுக் கொண்டது. அவரது மகன் எச்.எஸ்.தாமஸும் ஆட்சிப்பணி புரிந்தவரே. தந்தை செய்த நலத்திட்டங்களைத் தொடர்ந்து செய்தார். தென்னிந்தியாவில் மீன் வளத்தைப் பெருக்க அவர் ஆற்றிய பணி அளவிட முடியாதது.

## இயல் : 7

# 50 வது ஆண்டு விழா உரை ஜனவரி 8, 1888.

1838ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 8ஆம் நாள் நான் ஒரு இறைத்தொண்டனாய் சென்னை வந்திறங்கினேன். கடந்த 50 ஆண்டுகளாக அவர் காட்டி வரும் இரக்கங்களுக்காகவும், அருளாசிகளுக்காவும் நான் இறைவனுக்கு நன்றியுடையவனா யிருக்கிறேன். இறைப்பணியில் என்னிடம் குறைகள் இல்லை எனக்கூற முடியாது; குறைகள் உண்டு. அவைகளுக்காக மனம் வருந்துகிறேன். இவ்வளவு குறைகள் இருந்தாலும், 50 ஆண்டு இறைப்பணியில் பலன்கள் இல்லை என்று கூற முடியாது; உண்டு என உறுதியாகக் கூறலாம். தகுதியற்ற எனக்கு அவர் செய்த அருளுக்காக (உள்ளத்தின் ஆழத்திலிருந்து நன்றி கூறுகிறேன்) மிகவும் நன்றியுடையவனாக இருக்கிறேன். எனது திட்டங்களினாலும் உழைப்பினாலும் பெற்ற பலன்களைப் பார்க்க வாய்ப்புக் கிட்டியது. நான் உலகைவிட்டுப் பிரிந்த பின்னும் அப்பலன்கள் நிலைத்திருக்க இறைவன் அருள்புரிவார் என நம்புகிறேன். நிலைத்திருந்தால் மட்டும் போதாது, வளர்ந்து பெருக வேண்டும். லேவியர்கள் 50 ஆண்டுகள் முடிந்ததும் ஓய்வெடுக்க வேண்டும். ‘தசமபாகம்’ போன்ற வருமானம் இருப்பதால் அவர்கள் தங்கள் வாழ்நாட்களில் துன்பப்பட வேண்டிய தேவை இருக்காது.

இந்தியாவில் அரசுப்பணியாளர்கள் 55ஆம் வயதில் ஓய்வு பெறுவர். இச்சட்டத்தினால் சில திறமையான பணியாளர்களின் சேவையை இழக்க வேண்டியதிருக்கிறது. இந்த வயதில் பேராயர்கள் ஓய்வு பெற வேண்டும் என்ற சட்டம் திருச்சபையில் இல்லாததால் நான் ஓய்வு பெற வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. இறைவனுக்கு விருப்பமானால் இன்னும் சில ஆண்டுகள் எனது பணி தொடரும் என நம்புகிறேன்.

நான் 1814ஆம் ஆண்டு மே மாதம் 7ஆம் நாள் பிறந்தேன். நான் சென்னைக்கு வந்திறங்கிய போது 24 வயது பூர்த்தியாகவில்லை. இன்று (08.01.1888) 74 வயது முடியவில்லை.

இந்தியாவுக்கு வந்த பின் சென்னையில் மூன்றரை ஆண்டுகள் தங்கியிருந்தேன். முதலாண்டில் தமிழை நன்கு கற்றறிவதே எனது தலையாயப் பணி. செந்தமிழையும் சிறந்த இலக்கியங்களையும் மக்களின் பேச்சு மொழியையும் கற்பதே எனது நோக்கம், அப்பொழுது நான் கற்றது நான் விரும்பிய அளவு இல்லாதிருந்தும், அம்மொழியறிவு எனக்கு மிகவும் பயனுள்ளதாக இருந்தது. சரியான ஒலிப்பு முறையைக் கற்றுக் கொள்ள அக்கறையுடன் முயற்சி செய்தேன்.

இலண்டன் இறைப்பணி இயக்கத்தைச் சேர்ந்த இறைப்பணியாளர் திரு. ட்ரூ (Drew) வீட்டில் தங்கும் வாய்ப்புக் கிட்டியது. பண்பட்ட உள்ளம் கொண்ட அவர், தமிழை நன்கு கற்றறிந்தவர். பழம்பெரும் அறநெறி இலக்கியமாகிய திருக்குறளுக்கு உரை எழுதியவர். அவ்வுரையை அவர் முடிக்க முடியாமற்போனாலும் அப்படைப்பு அவரை ஐரோப்பிய தமிழ் அறிஞர்களுள் ஒருவர் என்ற நிலைக்கு உயர்த்தியது. இலக்கிய வளம் நிறைந்த அழகு தமிழை ஆழ்ந்து கற்காது பேச்சு மொழியில் மட்டும் ஆர்வம் காட்டிய, பின்னால் வந்த ஆங்கில இறைப்பணியாளர்களை நினைத்தால் சற்று வியப்பாகவே உள்ளது. அறிவர் போப் இதற்கு ஒரு விதி விலக்கு. அறிவர் கிரெளல் தமிழிலிலும், அறிவர் குண்டர்ட் மலையாளத்திலும், திரு. கிட்டல் கன்னடத்திலும் புலமை பெற்ற அறிஞர்கள் என்பது உண்மை. ஆனால் அவர்கள் ஆங்கிலேயர்கள் அல்லர் ஜெர்மானியர்கள்.

சென்னையில் இருந்தபோது எனது வீட்டுப் பணியாளர்களிடம் இறைத்தொண்டைத் தொடங்கினேன். அப்பணியில் மிகுந்த ஆர்வம் காட்டினாலும் மற்றவர்கள் மற்ற இடங்களில் செய்யும் பணிகளைப்பற்றி நன்கு அறிந்து கொண்டேன். சிறப்பாக, சென்னையில் உள்ள சிறந்த கிறிஸ்தவப் பள்ளிகளைப் பற்றி நன்கு அறிவேன். அவைகளில் குறிப்பிடத்தகுந்தது ஜான் ஆண்டர்ஸன் பள்ளி ஆகும். இப்பள்ளியே தற்போதுள்ள கிறிஸ்தவக் கல்லூரியாக வளர்ச்சி பெற்றுள்ளது. பாமர மக்களுக்கு அவர்களுடைய தாய்மொழி வழியாகவும் படித்தவர்களுக்கு ஆங்கிலம் வழியாகவும் கற்பிப்பதே சிறந்தது என்பது எனது கருத்து.

இவ்வகை இருமுனைக்கல்விப் பணியின் ஆதரவாளன் நான். சென்னையில் உள்ள சிறந்த மனிதர்களிடம் குறிப்பாக திரு. ஆண்டர்சன், திரு. டக்கர், பேராயர் காட்டரில், திரு. சைமண்ட்ஸ்

மற்றும் அறிவர் பவர் ஆகியோரிடம் நன்கு பழகினேன். அறிவர் கென்னற் திருநெல்வேலியில் அறிமுகமானவர். அரசின் இராணுவச் செயலராக இருந்த மேஜர் சி.ஏ. ப்ரெளன் அவர்களைப் பல ஆண்டுகளாக அறிவேன். வெள்ளிக்கிழமை மாலை நடக்கும் கூட்டங்களில் அவர் தவறாது கலந்து கொள்வார். 1841ஆம் ஆண்டின் நடுவில் சென்னையிலிருந்து திருநெல்வேலிக்குப் புறப்பட்டேன். இந்தியாவில் இறைப்பணி செய்யத் திருநெல்வேலியை மையமாக நான் தெரிந்து கொண்டதற்குப் பல காரணங்கள் உண்டு. வழியில் பாண்டிச்சேரி, கும்பகோணம், தரங்கம்பாடி, தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, நீலகிரி, மதுரை ஆகிய இடங்களைப் பார்வையிட்டேன். தஞ்சாவூரிலும் திருச்சிராப்பள்ளியிலும் கோலாஃப் குடும்பத்தினரைக் காணும் வாய்ப்பு கிட்டியது. தஞ்சாவூரில் உள்ளவர் ஸ்வார்ட்ஸின் மாணவர். திருச்சியில் உள்ளவர் அக்குடும்பத்தில் கடைசியானவர்.

நீலகிரியில் பேராயர் ஸ்பென்சர் அவர்களை நேரில் கண்டேன்; அவரால் அருட்பொழிவு பெற்றேன்; பின்பு அவரது இறைப்பணியில் பேராயரின் உதவியாளராகப் பணியாற்றினேன். 1841ஆம் ஆண்டு நவம்பர் மாதம் திருநெல்வேலி வந்து சேர்ந்தேன். அம்மாதம் 28ஆம் நாள் முதலாம் வருகையின் (அட்வெந்து) ஞாயிறு. அன்றுதான் எனது முதல் அருளுரை. இடையன்குடி பணித்தளப் பகுதியில் நல்ல முன்னேற்றம். இறைவனுக்கு நன்றி கூறினேன். சுற்றியுள்ள இடங்களில் எனது பணி மூலம் ஏற்பட்ட முன்னேற்றம் நான் எதிர்பார்த்த அளவு இல்லாவிடினும், மனநிறைவு அடையும் அளவுக்கு இருந்தது. இறைவனுக்கு நன்றி. பணித்தளத்தின் மேற்குப்பகுதியின் வளர்ச்சி மிகவும் நன்றாக இருந்ததினால் இராதாபுரம் தனிப்பகுதியாகப் பிரிக்கப்பட்டது. இப்போது இடையன்குடி கணக்கில் சேர்க்கப்பட்டுள்ளது. 1841ஆம் ஆண்டு 14 சபைகளே இருந்தன. ஆனால் இப்போது (1887இல்) இராதாபுரம் பகுதியையும் சேர்த்து 129 சபைகள் உள்ளன. சபையார் மற்றும் திருப்பணிவிடையாளரின் எண்ணிக்கை 1201லிருந்து 8167ஆக வளர்ச்சி பெற்றுள்ளது.

அதே காலத்தில் திருநெல்வேலியிலும் வியக்கத்தக்க அளவு பணி வளர்ச்சி அடைந்திருந்தது. விக்டோரியா பேரரசியின் பொன்விழா மலரில் வெளியிடப்பட்டுள்ள செய்திகள் இவற்றை

உறுதி செய்கின்றன. S.P.G. இயக்கம் 1837ஆம் ஆண்டு வெளியிட்டுள்ள அறிக்கையில் கீழ்க்காணும் செய்திகள் தரப்பட்டுள்ளன.

| | | |
|---|---|---|
| சபைகளில் திருமுழுக்கு பெற்றவர் | : | 4352 |
| பள்ளிக்குழந்தைகளின் எண்ணிக்கை | : | 269 |
| மாணவியரின் எண்ணிக்கை | : | 6 |

குறைவான தொடக்கம் ஆனால் இப்போது (1887இல்) ...

| | | |
|---|---|---|
| சபைகளின் எண்ணிக்கை | : | 566 |
| சபை உறுப்பினர்கள் | : | 39577 |
| திருமுழுக்கு பெற்றோர் | : | 29656 |
| பள்ளிகளில் பயிலும் மொத்த மாணவ, மாணவியர் | : | 8517 |
| மாணவியர் மட்டும் | : | 2425 |

இப்புள்ளி விவரங்கள் இராமநாதபுரம் பகுதியையும் உள்ளடக்கியது. திருமண்டலக் கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் 425 மாணவரும், விடுதிப் பள்ளியில் 416 மாணவியரும் பயின்று வருகின்றனர். விக்டோரியா பேரரசியின் 50 ஆண்டு ஆட்சியிலும் எனது 50 ஆண்டு பணிக்காலத்திலும் பணித்தளத்தின் வளர்ச்சி 10 மடங்கு அதிகரித்துள்ளது.

பேராயராக அருட்பொழிவு பெறும் முன்பே, மந்தையில் சேராத எண்ணிலங்கா ஆடுகளை மந்தையில் சேர்க்க வேண்டும் என்ற நோக்கத்துடன், நற்செய்திக் குழுக்களை ஏற்படுத்த வேண்டும் என முயற்சி செய்தேன். அருட்பொழிவு பெற்ற பின்பு எனது ஆளுகைக்குட்பட்ட திருநெல்வேலி, இராமநாதபுரம் பகுதிகளில் இப்பணியைத் தீவிரப்படுத்தத் தொடங்கினேன். அச்சமயம் 1877–78 பெரும் பஞ்சம் மக்களை வாட்டியது. பஞ்சத்தால் வாடும் மக்களுக்குச் சிறந்த முறையில் தொண்டு புரியும் நோக்குடனே இறைவன் என்னை அங்குப் பணிசெய்ய அமர்த்தியிருக்கிறார் என எண்ணினேன். இந்த இருமுயற்சிகளும் ஒரே நேரத்தில் நிகழ்ந்தன. ஒன்றுக்கொன்று துணை புரிந்தன. இந்த இரண்டும் பணித்தளங்களில் பெருந் தாக்கத்தை ஏற்படுத்தின.

**1881**ஆம் ஆண்டு மக்கட்தொகையை **1871**ஆம் ஆண்டு மக்கட்தொகையுடன் ஒப்பிடும்போது, இராமநாதபுரம் நீங்கலாக மற்ற சபைகளில் C.M.S. சபைகளையும் சேர்த்து 33070 பேர் இறைவனை ஏற்றுக்கொண்டுள்ளனர். நமது மக்களின் எண்ணிக்கை இந்தப் பத்து ஆண்டுகளில் இரண்டு மடங்காயிருக்கிறது'. இவர்கள் அனைவரும் இறுதிவரை நிலைத்திருப்பார்கள் என்று உறுதியாகக் கூறமுடியாது. நாம் இவர்களை 'மனமாற்றமடைந்தவர்கள்' என்று அழைக்காமல் 'ஏற்றுக்கொள்ளப்பட்டவர்கள்' என்றே அழைத்தோம். அவர்களில் சிலராவது தங்களது தாய்ச் சமயத்திற்குத் திரும்பி விடுவார்கள் என எதிர்பார்த்தோம். வரலாற்றின் அடிப்படையில் பார்க்கும்போது அப்படிப் பின்வாங்கியவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு என்ற விவரம் நமக்கு மனநிறைவை அளிக்கிறது.

**1877**ஆம் ஆண்டு மார்ச்சு **11**ஆம் நாள் கல்கத்தாவில் உள்ள பேராலயத்தில் கல்கத்தா, சென்னை, பம்பாய், கொழும்பு ஆகிய இடங்களைச் சேர்ந்த பேராயர்களால் பேராயராக அருட்பொழிவு பெற்றேன். பேராயர் சார்ஜண்ட்டும் அதே நாளில் பேராயராக அருட்பொழிவு பெற்றார். இருவருமே சென்னைப் பேராயருக்கு உதவிப்பேராயர்களாக அமர்த்தப்பட்டோம். திருநெல்வேலி, இராமநாதபுரம் ஆகிய மாவட்டங்களில் உள்ள S.P.G. பணித்தளங்களையும் சபைகளையும் மேற்பார்வையிடும் பணி எனக்களிக்கப்பட்டது. 1877இல் நான் பேராயரான பின் 7391 பேர் திடப்படுத்தல் பெற்றிருக்கின்றனர். 37 உதவி ஆயர், 17 ஆயர் உட்பட மொத்தம் 54 பேர் அருட்பொழிவு பெற்றுள்ளனர். இவர்களில் 3 பேர் ஐரோப்பியர். ஒருவர் C.M.S. இயக்கத்தைச் சேர்ந்தவர்.

திருநெல்வேலிக்கு வந்த பிறகு இறைப்பணி எந்த வகையிலும் பாதிக்காதபடி இலக்கியப் பணியிலும் போதிய நேரம் செலவிட்டேன். தமிழ் மன்றாட்டுப் புத்தகத்தைத் (ஜெபபுத்தகத்தை) திருத்தும் பணிக்கான குழுவில் 1842இல் சேர்ந்தேன். மற்றொரு திருத்திய பதிப்பு 1872இல் வெளிவந்தது. அதிலும் நான் பங்கேற்றேன். தூய திருமறையைத் திருத்தும் பணி 1858ஆம் ஆண்டு தொடங்கியது. அப்பணியிலும் நான் பங்கு பெற்றேன். அப்பணி வெற்றிகரமான 1869 ஏப்ரல் மாதம் முடிக்கப்பட்டது.

என் வாழ்வில் இப்பதினோரு ஆண்டுகளும் மிகவும் மகிழ்ச்சியான காலம். திருத்தும் பணியில் முதன்மையானவர்

அறிவர் பவர். தமிழ்த் திருச்சபைக்கு அவர் ஆற்றிய பணிக்காகக் கான்டர்பெரியின் ஆர்ச் பிஷப் இறையியலில் மதிப்பியல் அறிவர் பட்டம் அளித்துப் பெருமைப்படுத்தினார். எனினும், கடவுள் தமது தீர்மானத்தின்படி அவரை தமது அரசுக்கு 1886இல் அழைத்துக் கொண்டார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அவரது இறப்பு தமிழ்த்திருச்சபைக்கு ஈடுசெய்ய முடியாத பேரிழப்பு. 'டாக்டர் ஆஃப் டிவினிட்டி' என்ற பட்டத்தைப் பெற்ற முதல் ஐரோப்பிய ஆசியர் என்ற பெருமை அறிவர் பவருக்கு உண்டு. அதற்குப்பின் சில ஆண்டுகள் சென்றபின் அதுபோன்ற பட்டம் இரண்டாவதாக புலமை வாய்ந்த அறிவர் கென்னற்றுக்கு 'கான்டர்பெரி ஆர்ச் பிஷப்' அவர்களால் வழங்கப்பட்டது. இருவரும் தங்கள் தங்கள் துறையில் அழகிய அணிகள்! ஆனால் இருவரும் தங்களைப் போன்று திறமையுள்ள பரம்பரையை விட்டுச் செல்லாதது நமக்கு பெரிய நஷ்டம் என எண்ணுகிறேன்.

இந்தியாவுக்கு வந்த நாள் முதல் குறிப்பாகத் திருநெல்வேலிக்கு வந்த நாள் முதல் இந்திய மொழிகளைப் பற்றியும் இனவியல் பற்றியும் வரலாறு பற்றியும் கற்கத் தொடங்கினேன். அத்துறையில் கிடைக்கக்கூடிய சிறந்த நூல்களை வாங்கினேன். ஜெர்மானிய அறிஞர்கள் இந்தியாவைப்பற்றி எழுதியுள்ள அரிய செய்திகளை அறிந்து கொள்ள வேண்டுமென்ற நோக்கத்துடன் ஜெர்மன் மொழியையும் கற்றேன். 'திராவிட அல்லது தென்னிந்திய மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்ற நூலே நான் எழுதிய முதல் நூலாகும். அதின் முதற்பதிப்பு 1856ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. விரைவில் எல்லா நூல்களும் விற்றுத் தீர்ந்துவிட்டன.

மிகவும் கவனத்துடன் திருத்தப்பட்ட அதன் இரண்டாவது பதிப்பு 608 பக்கங்களைக் கொண்டது. முன்னுரை மட்டுமே 154 பக்கங்களைக் கொண்டது. பெரிய நூலாக இருந்ததினால் இந்திய மக்கள் வாங்கமுடியாது அளவுக்கு விலை அதிகம். இதைத் தொடர்ந்து இரு ஒப்பிலக்கண நூல்கள் வெளியிடப்பட்டன. முதலாவது நூல் பீம்ஸ் (Beames) எழுதிய 'வடஇந்திய மொழிகளின் ஒப்பிலக்கணம்' ஆகும். இரண்டாவது நூல் அறிவர் ஃப்ளீக் (Bleek) எழுதிய 'தென்னாப்பிரிக்க மொழிகளின் ஒப்பிலக்கணம்'. 1862இல் வெளிவந்த இந்நூல் மிகவும் பயனுள்ளது. இலக்கணத்தைக் கற்பதில் இந்தியர்கள்

ஆர்வமுள்ளவர்கள். ஆனால் தங்கள் தாய்மொழியின் இலக்கணத்தைக் கற்பதோடு நிறுத்திவிடுகின்றனர். மற்றமொழி இலக்கணங்களோடு தங்கள் மொழி இலக்கணத்தை ஒப்பிட்டுப் பார்க்க யாரும் முற்படுவதில்லை. அதன் விளைவாக அவர்களுடைய இலக்கணங்கள் அறிவியல் தன்மையன அல்ல; வளர்ச்சி அடையவும் இல்லை. இக்குறையைக் குறிப்பிட்டு அது எவ்வாறு களையப்படவேண்டும் என்பதே எனது நூலின் நோக்கம்.

'திருநெல்வேலி மாவட்டத்தின் அரசியல், மற்றும் வரலாறு தொடக்கமுதல் 1801 வரை' என்ற (தலைப்பு கொண்ட) நூலே எனது இரண்டாம் நூலாகும். உள்ளூர் பற்றியதே நூலின் முதன்மை நோக்கமாயினும் தென்னிந்தியாவின் இன வரலாறு பற்றிய செய்திகளும் இதில் உண்டு. சென்னை அரசே தனது செலவில் இந்நூலை வெளியிட்டது. மட்டுமல்லாமல் எனக்கு அன்பளிப்பாக ரூ.1000/– கொடுத்தது. எல்லா நூல்களும் விற்று விட்டன. யாரும் இதை மீண்டும் அச்சடித்து வெளியிட முன்வரவில்லை. S.P.C.K. மற்றும் S.P.G. ஆகிய இயக்கங்களை உள்ளடக்கிய 'திருநெல்வேலி மிஷன் வரலாறு' என்பதே எனது மூன்றாவது நூல். இரண்டாம், மூன்றாம் நூல்கள் கிட்டத்தட்ட ஒரே நேரத்தில் வெளியிடப்பட்டன. 356 பக்கங்களைக் கொண்ட இந்நூலை சென்னையைச் சேர்ந்த 'ஹிக்கின்பாதம் கம்பெனி' தனது செலவில் வெளியிட முன் வந்தது.

பல சுவையான நிகழ்ச்சிகளைக் கொண்ட பழைய ஆவணங்களைச் சேகரித்து அவற்றைப் பேணிக்காப்பதே இந்நூலின் தலையாய நோக்கம். ஏனெனில் அவை மறைந்துவிடுகின்றன அல்லது மறக்கப்படுகின்றன. இவை நீங்கலாக பல சிறு நூல்கள், அருளுரைகள் மற்றும் கட்டுரைகளும் அவ்வப்போது வெளியிடப்பட்டுள்ளன. 20 ஆங்கில குறுநூல்களும் 4 ஆங்கில அருளுரைகளும் 8 தமிழ்க்குறு நூல்களும் அவைகளுள் அடங்கும். நானும் பேராயர் சார்ஜன்ற்றும் சேர்ந்து தமிழில் உள்ள பாமாலை நூலின் திருத்திய பதிப்பிற்கு உதவினோம். அது இங்கிலாந்து திருச்சபை உபயோகத்திற்கென்று மறுபதிப்பைப் பெற்றது. அந்நூலில் நான் மொழியாக்கம் செய்த 'சபையின் அஸ்திபாரம்...' என்ற பாடலும் சேர்க்கப்பட்டுள்ளது.

இந்தியாவிலுள்ள மிகவும் வெப்பமான மாவட்டங்களுள் திருநெல்வேலியும் ஒன்று. இங்குக் குளிர்காலமே கிடையாது. மூன்று மாதங்கள் கோடைக்காலம். ஒன்பது மாதங்கள்

கடுங்கோடைக்காலம்! ஐரோப்பியர்களுக்கு மிகவும் தாங்கவொண்ணா காலநிலை. ஒரு நாள் கூட நான் முழுநலத்துடன் இருந்தது கிடையாது. எனினும் இவ்வளவு காலம் தங்கியிருக்கவும் பல பணிகளைச் செய்யவும் அருள்செய்த இறைவனைத் துதிக்கிறேன். உடல் நலம் காரணமாக மூன்று முறை இங்கிலாந்து சென்றேன். இவை முறையே 17, 15, 8 ஆண்டு இடைவெளிக்குப் பின் நடைபெற்றன. இறுதிப் பயணத்திற்குப்பின் 1884ஆம் ஆண்டு இந்தியா திரும்பினேன். முதல் இடைவெளிக்காலத்தில் இங்கிலாந்து நாட்டிலும் திருச்சபையிலும் பல பெரிய இயக்கங்கள் தொடங்கப்பட்டு, அவைகள் ஓரளவு வளர்ச்சி அடைந்தன. பெருந்திருச்சபை இயக்கம், பெருங்கல்வி இயக்கம், கலையார்வ இயக்கம் அவற்றுள் அடங்கும். அக்காலத்தில்தான் இருப்புப்பாதைகள் அமைக்கப்பட்டன. தந்திமுறை அறிமுகப்படுத்தப்பட்டது. இவை தவிர சமயம், நீதிநெறி, மற்றும் பொருளாதாரம் போன்ற பல துறைகளிலும் வளர்ச்சி ஏற்பட்டது.

விக்டோரியா பேரரசியின் காலத்தை 'முன்னேற்றக் காலம்' என்றால் மிகையாகாது. இங்கிலாந்து கால நிலையிலும் எனது உடல் நிலையில் அவ்வளவு முன்னேற்றம் இல்லை. மிகவும் மெதுவாகவே உடல்நிலை தேறி வந்தது. எனவே மூன்று ஆண்டுகள் இங்கிலாந்தில் தங்கவேண்டிய நிலை உண்டாயிற்று. அந்த மூன்று ஆண்டுகளில் சார்பாளராக பல இடங்களுக்குச் சென்று பார்க்கும் வாய்ப்புக் கிட்டியது. 'சமர்சட்ஷியர்' என்ற இடத்திற்குக் கோடைக்காலத்தில் சென்றேன். வண்டியின் மேல்பாகத்தில் இருந்து பயணம் செய்ததினால் வெப்பம் தாக்கியதால் இங்கிலாந்தில் மேலும் ஓராண்டு தங்கவேண்டிய நிலை ஏற்பட்டது. கேட்பதற்கே சற்று வியப்பாக இருக்கிறது அல்லவா?

1864இல் இந்தியாவுக்கு மீண்டும் திரும்பினேன். மூளை பாதிக்கப்பட்டது. எனவே, ஓராண்டு படிக்கவோ, எழுதவோ, அல்லது அருளுரை ஆற்றவோ முடியாது. இனிமேல் என்னால் எதுவுமே செய்ய முடியாது எனப் பலர் அஞ்சினர். ஆனால் என் தேவன் என்னைக் கைவிடவில்லை. எல்லாப் பணிகளையும் மீண்டும் தொடர இறைவன் உதவி செய்தார். சிறப்பான நூல்களை எழுதும் பணியைத் தொடர்ந்தேன். தலைவலியின் காரணமாகத்தான் மயக்கம் இருக்கிறது எனத் தோன்றுகிறது.

சென்ற முறை இங்கிலாந்து நாட்டிலிருந்து திரும்பியதும் பழனிக் குன்றுகளில் உள்ள கொடைக்கானல் பற்றிக் கேள்விப்பட்டேன். அது ஏறத்தாழ உதகமண்டலம் உயரத்தில் உள்ளது. காலநிலை காய்ச்சலுக்கு அப்பாற்பட்ட இடம். அருமையான கோடை வாழிடம். உடலுக்கு புத்துணர்வு அளிக்கும் இடம். அக்கோடை வாழிடத்தில், உயரமான இடத்தில் அருமையான கோவில் ஒன்று கட்டப்பட்டது. இங்கிலாந்து திருச்சபையிலிருந்து வருவோரின் நீண்டநாள் கனவு நனவாகியது. 1885ஆம் ஆண்டு கிறிஸ்து உயிர்த்தெழுந்த திருநாளுக்குப் (ஈஸ்டர்) பின் 4ஆம் ஞாயிறு அன்று அக்கோவில் மங்கலப்படைப்புச் செய்யப்பட்டது.

1844ஆம் ஆண்டு மார்ச் மாதம் 20ஆம் நாள் எனக்கும் இலண்டன் இறைப்பணி இயக்கத்தைச் சேர்ந்த இறைப்பணியாளர் அருட்திரு. சார்லஸ்மால்ட் அவர்களின் மூத்த புதல்வி எலிசாவுக்கும், தென் திருவாங்கூரில் உள்ள நாகர்கோவிலில் திருமணம் நடைபெற்றது. இந்த முன்னோடி இறைப்பணியாளர்களான திரு. & திருமதி. மால்ட் ஆகிய இருவருக்கும் தென் திருவாங்கூர் அதிக நன்றிக் கடன்பட்டுள்ளது. திருநெல்வேலி மக்களுக்கு திருமதி. கால்டுவெல்லின் சேவைகள் பயனுள்ளதாய் இருந்திருக்குமேயானால், அதற்கு நாகர்கோவிலில் அவர் பெற்ற பட்டறிவும், பயிற்சியுமே காரணமாகும். பேச்சுத் தமிழில் அவருக்கு இருந்த முழு அறிவே அவரது சாதனைக்கு அடிகோலியது. திருநெல்வேலியில் நான் உருவாக்கிக் கொண்டிருந்த இடையன்குடிப் பணித்தளத்திற்கு வந்ததும் எனது ஒவ்வொரு பணியிலும் எனக்கு உறுதுணையாக இருந்தார். சிறப்பாகப் பெண்கல்வியில் முழுமூச்சுடன் இறங்கினார். அவர் தொடங்கிய பெண்கள் விடுதிப்பள்ளி தென்னிந்தியாவில் S.P.G. பணித்தளங்களுள் ஏற்படுத்தப்பட்ட முதல் பள்ளியாகும். திருநெல்வேலியில் பின்னற்கலையை அறிமுகப்படுத்தியவர் அம்மையாரே.

எனது வாழ்க்கையில் சிக்கல்கள் ஏராளம். அதிலும் பேராயராகப் பொறுப்பேற்ற பின் கேட்கவே வேண்டாம். சிறப்பான மொழியறிவு உள்ள பேராயராகிய நான் இன்னும் இதைவிட அதிகப் பயனுள்ள, மகிழ்ச்சியான செயல்களில் ஈடுபட வேண்டுமென்று நண்பர்களில் பலர் எதிர்பார்த்தனர். அவர்களுடைய இந்த எதிர்பார்ப்புகள் நிறைவேறவில்லை. எனது பயன்பாடு அதிகரித்தது உண்மையே. ஆனால் நான் முன்பைவிட

மகிழ்ச்சியாக இல்லை. பேராயர் என்ற முறையில் எனது பொறுப்பு அதிகம். அதிகமான பணித்தளங்களுக்குச் செல்ல வேண்டியதிருந்தது. மேலும் அதிகப் பயனுள்ள செயல்கள் செய்யப் பல கதவுகள் திறந்திருந்தன. இதற்காக நான் இறைவனுக்கு நன்றியுள்ளவனாய் இருக்கிறேன்.

சிறப்பாக, நான் ஏற்கனவே குறிப்பிட்டபடி, பெரும் பஞ்சத்திற்கு முன்னும் பின்னும் பல ஆத்துமாக்கள் பலரை நல்மேய்ப்பரின் மந்தையில் சேர்க்க முடிந்தமைக்காக இறைவனுக்கு நன்றி. இருப்பினும் எனது பயனுடைமை பாதிக்கப்பட்டது. எனது வசதிகளும் மன அமைதியும் குறையத் தொடங்கின. ஏனெனில், எனது நண்பர்களாகவும் உதவி செய்பவராகவும் இருக்க வேண்டிய பலரால் கொடுக்கப்பட்ட துன்பங்களையும் இகழ்ச்சிகளையும் நான் பொறுத்துக்கொள்ள வேண்டியதிருந்தது.

இம்மனச்சோர்வுகளை நான் குறிப்பிடுகையில், நியாயாதிபதிகளின் புத்தகத்திலுள்ள யோதாமின் உவமை என் நினைவுக்கு வருகிறது. அரசராகப் பொறுப்பேற்கும் எந்த மரத்திற்கும் ஏற்படவிருக்கும் இன்னல்களையும் துன்பங்களையும் யோதாம் இவ்வுவமையில் குறிப்பிடுகிறார். தான் இதுவரை மிகவும் விழிப்புடன் பாதுகாத்து வந்த அனைத்தையும் இழந்து அவைகளுக்குப் பதிலாக ஏமாற்றங்களையே பெற வேண்டிய திருக்கும். நன்மையானவையோ தீமையானவையோ அவை யாவும் இறைவனால் கொடுக்கப்பட்டவை, மனிதர்களால் அல்ல என்றே நான் எண்ணுகிறேன். எனவே, அவர் திருப்பெயரின் புகழுக்கான யாவற்றையும் திருச்சபையின் நன்மைக்கான யாவற்றையும், துன்பக்காலத்திலும், நல்ல காலத்திலும் நமக்குத் தந்தருளுவார். இறைவன் அருள்பணிக்காக செலவிடப்படும் ஒவ்வொரு ஆண்டும் ஒரு யூபிலி ஆண்டாகவே கருதப்பட வேண்டும்.

## இயல் : 8
# திருநெல்வேலிக்கு வருகை தந்த பெரியோர்கள்

1841ஆம் ஆண்டு ஜனவரி மாதம் திருநெல்வேலியில் உள்ள பணித்தளங்களைப் பார்வையிடப் பேராயர்கள் திருநெல்வேலிக்கு வந்தனர். ஒரு பேராயர் பணித்தளங்களைப் பார்வையிட வந்தது இதுவே முதல் முறை. கொச்சிக்கும் பம்பாய்க்கும் போகிற வழியில் பேராயர் மிடில்ட்டன் திருநெல்வேலிக்கு வந்தார். இரேனியஸ் பிரிவினையால் C.M.S.ஸில் ஏற்பட்ட பிளவைச் சரிக்கட்டவே பேராயர் காரி (Corrie) பாளையங்கோட்டைக்கு வருகை தந்தார். பேராயர் ஸ்பென்சர் வருகை தொடர்பான எல்லா விவரங்களும் பெற்றிற் எழுதிய 'திருநெல்வேலி C.M.S. மிஷன் வரலாறு' என்ற நூலில் உள்ளன. அவர் S.P.G. பணித்தளங்களில் நாசரேத்து, முதலூர் ஆகிய இடங்களை மட்டுமே பார்வையிட்டார். ஸ்பென்சரின் பயணத் திட்டத்தில் இடையன்குடி, சாயர்புரம் ஆகிய இடங்கள் இடம் பெறவில்லை.

இடையன்குடியிலும் சாயர்புரத்திலும் சிறந்த இறைப்பணியாளர்கள் அங்கு இல்லாததே அதற்குக் காரணம். ஆனால் அவர் 1845ஆம் ஆண்டு மீண்டும் திருநெல்வேலிக்கு வரும்போது இடையன்குடிக்கும் சாயர்புரத்திற்கும் சென்றார். இவ்விரு பணித்தளங்களும் தனித்தனியாக ஏற்றுக் கொள்ளப்பட்டு ஒவ்வொரு இடத்திலும் இறைப்பணியாளர்கள் அமர்த்தப்பட்டிருந்தனர். இடையன்குடியில் நானும் சாயர்புரத்தில் அறிவர் போப்பும் பணிகளைக் கண்காணித்து வந்தோம்.

பேராயர் ஸ்பென்சர் தனது உடல் நலக் குறைவால் தனது பதவியிலிருந்து விலகி இந்தியாவை விட்டு வெளியேற வேண்டிய நிலை ஏற்பட்டது. அவருக்குப் பின்னால் வந்தவர் பேராயர் டெல்ட்ரி (Dealtry). 1850ஆம் ஆண்டு முதன்முதலாக இடையன்குடிக்கு வந்த அவர், இருமுறைகள் இங்கு வந்துள்ளார்; சிறந்த பேச்சாளர்; நன்றாக அருளுரை வழங்குவார். அவரது வருகையால் மக்களுடைய நடத்தையிலும் மனத்திலும் முன்னேற்றம் ஏற்பட்டது. இறைப்பணியாளர்களுக்கு $B_{12}$ இன்ஜெக்ஷன் போட்டது போன்ற உணர்வும் மகிழ்ச்சியும்

ஏற்பட்டது. அவருக்குப்பின் பேராயர் ஜெல் அப்பணியை 1861ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 27ஆம் நாள் ஏற்றார். பேராயர் வில்சனைத் தவிர அதிக காலம் இப்பணியில் இருந்த பெருமை அவரையே சேரும். முதன் முறையாக அவர் 1864இல் இடையன்குடிக்கு வந்தார். அதன்பின் ஐந்து முறைகள் இங்கு வந்திருக்கிறார். செவிக்கு இனிய அருளுரைகளைவிட சாந்தம், பண்பு, நேசிக்கும் தன்மை, வாழ்க்கையில் தூய்மை ஆகியவையே மிகுந்த பலனைக்கொடுக்கும் என்று மக்களுக்கு எடுத்துக் கூறினார். அவரது கடைசி இரண்டு வருகையின் போது கிராமத்தில் உள்ள பணித்தளங்களைப் பார்வையிடாமல், தலைமையிடங்களாகிய பாளையங்கோட்டையிலும் தூத்துக் குடியிலும் உதவிப் பேராயர்களுடன் கலந்துரையாடினார்.

பேராயராக இரு முறைகள் சென்னைப் பேராயத்தில் உள்ள பல இடங்களைப் பார்வையிட்ட பேராயர் வில்சன் (மெட்ரோபாலிட்டனாக) தலைமையிடத்தில் இருக்கும் பேராயராக முதன் முறையாக இங்கு 1842இல் வந்தார். பேராயரின் நேர்முக உதவி ஆயராக (சேப்ளான்) பிராட் (Pratt) அவருடன் வந்திருக்கிறார். அச்சமயம் நான் இடையன்குடிக்கு வந்து ஒரு ஆண்டே ஆகியிருந்தது. கோவில் மற்றும் இறைப்பணிக்கான கட்டிடங்கள் கட்ட நிலம் இன்னும் வாங்கமுடியாத நிலை. எனவே அவர் எனது பணித்தளமாகிய இடையன்குடிக்கு வந்து முறையான வழிபாடு எதுவும் நடத்த முடியவில்லை. அதன் விளைவாக, இடையன்குடி மற்றும் பக்கத்து கிராம மக்களும் C.M.S. இயக்கத்தைச் சேர்ந்த சுவிசேஷபுரம், அதைச் சுற்றியுள்ள ஊர் மக்களும் மற்றும் பல இடங்களிலிருந்து வந்த ஆயிரக்கணக்கான மக்களும் தற்காலிகமாகப் போடப்பட்ட ஒரு கொட்டகையில் இறைவழிபாட்டிற்காக கூடியிருந்தோம்.

பேராயருடைய அருளுரையை அச்சமயம் C.M.S. இறைப்பணியாளரும் இப்போது என்னைப் போன்று உதவிப் பேராயருமான அருட்திரு. சார்ஜன்ட் அவர்கள் தமிழில் மொழிபெயர்த்து வழங்கினார். பேராயர் வில்சன் C.M.S. மற்றும் S.P.G. பணித்தளங்களைப் பார்வையிடச் சென்ற போது நானும் அவருடன் சென்றேன். அவரது அருளுரைகளிலும் உரைகளிலும் காணப்பட்ட ஆற்றல், நயமான நடை, புத்தம் புதிய கருத்துக்கள் ஆகியவற்றைக் கேட்டு அசந்துவிட்டேன். தனி இடங்களிலும் பொது இடங்களிலும் அவரது நடத்தை மற்றும் குறிப்புரைகளும் என்னைக் கவர்ந்தன. தலைநகரில் இருக்கும் தலைமையிடப்

பேராயராக அவர் பாளையங்கோட்டைக்கு வந்தபோது சில நல்ல செயல்களை நடைமுறைப்படுத்தினார். அவருக்குப் பின் வந்த யாரும் அவைகளைத் தொடர்ந்து செய்யவில்லை.

திருநெல்வேலிக்கு வந்த அடுத்த மேன்மை தங்கிய கிறிஸ்தவ சமயத் தலைவர் பேராயர் காட்டன் அவர்கள். அவருடைய துணைவியாரும், அவரது நேர்முக உதவி ஆயருமான அருட்திரு. ஈ.சி.ஸ்டுவேர்ட்டும் உடன் வந்திருந்தனர். அருட்திரு. ஸ்டுவேர்ட் அவர்கள் இப்போது நியூசிலாந்தில் பேராயராக உள்ளார். பேராயர் காட்டன் அவர்களின் நினைவுகள் பற்றி அவருடைய துணைவியார் ஒரு நூல் எழுதியுள்ளார். இவர்கள் மூவரும் 1863–64 குளிர்காலத்தில் வந்தனர். திருநெல்வேலியிலிருந்து நாகர்கோவில் வழியாகத் திருவாங்கூர் வரை நான் பேராயர் காட்டன் அவர்களுடன் சென்றேன்; வழியில் பார்க்க வேண்டிய இடங்களைக் காட்டி, அவ்விடங்களின் சிறப்புதன்மைகளை எடுத்துக் கூறினேன். இங்குள்ள கிராமங்கள், கிராமத்து மக்கள், அவர்களுடைய மொழிகள் மற்றும் இலக்கியங்கள் மீது மிகுந்த ஆர்வம் காட்டினார். அறிவார்ந்த வினாக்கள் கேட்டு அவைகளைப் பற்றி நன்கு அறிந்து கொண்டார்.

அவர் ஒரு சிறந்த பேச்சாளர் என்று கூறமுடியாது. எனினும் அவரது பேச்சில் தெளிவு இருந்தது; இனிமை இருந்தது; அன்பு கலந்திருந்தது; நற்பண்பும் சுவையும் ஒருங்கே அமைந்திருந்தன. கிறிஸ்தவ சமயத் தலைவர்களுக்கும் கல்விமான்களுக்கும் ஒரு எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தவர் அவர். இங்கிலாந்து திருச்சபையைத் தவிர வேறு எந்தத் திருச்சபையும், இங்கிலாந்து பல்கலைக்கழகத்தைத் தவிர வேறு எந்தப் பல்கலைக்கழகமும் இவர் போன்று ஒருவரை உருவாக்கியிருக்க முடியாது என்று நான் அடிக்கடி நினைப்பதுண்டு. அவரது வாழ்க்கை குறுகியதே. எனினும் அவர் வாழ்க்கை போன்று சிறப்பு மிகுந்ததும் பயனுள்ளதுமான வேறு வாழ்க்கை இருந்ததில்லை.

அவர் நீரில் மூழ்கி இறந்துவிட்டார் என்ற செய்தியைக் கேட்டதும், கன்னியாகுமரியில் நடந்த ஒரு நிகழ்ச்சி என் நினைவுக்கு வந்தது. அவர் திருநெல்வேலியிலிருந்து திருவாங்கூர் செல்லும்போது நானும் அவருடன் சென்றேன். கன்னியாகுமரியில் என்னுடன் கடலில் குளிக்குமாறு அழைத்தேன். கிரேக்கர் காலத்திலிருந்தே புனித நீராடும் இடமாக இது இருந்துவருகிறது என்றும் கங்கையில் புனித நீராடுபவர்கள் இந்தியாவின் தென் கோடியிலுள்ள ஏழாவது தூய இடமாகிய குமரியில் குளிப்பது

எவ்வளவு பொருத்தம் என்பதையும் அவருக்கு விளக்கினேன்.

அங்குக் குளிப்பது தீமை தருவது என்றும் அவருக்கு நீச்சல் தெரியாது என்பதையும் நான் அறிவேன். அவரது நேர்முக உதவி ஆயர் அவரது வலது கையைப் பிடித்துக்கொண்டார். நான் அவரது இடது கையைப் பிடித்துக் கொண்டேன். மூவரும் கரையில் அலைவரும் என்று காத்திருந்தோம். எதிர்பாராது ஒரு பெரிய அலை வந்து எங்களை வாரி விட்டது. திரும்பிவரும் அலை உள்ளே இழுக்கும் பயங்கரநிலை ஏற்பட்டது. என் பிடி விடுபட்டது. நல்லவேளையாக அவரது நேர்முக உதவி ஆயர் இறுகப்பிடித்துக் கொண்டார். "இங்குள்ள தேவதை உங்களுக்கு 'வணக்கம்' செலுத்தியிருக்கிறது. ஒரு வணக்கம் போதும். நாம் போகலாம்" என்றேன். உடனே மேட்டுப் பகுதிக்குச் சென்று உடைமாற்றப் போனோம். ஆனால் இப்போது அவர் எவ்வாறு இறந்தார்? கல்கத்தா அருகே பலகையிலிருந்து தவறி ஆழமான தண்ணீரில் விழுந்துவிட்டார் என்ற செய்தி கிடைத்தது. கன்னியாகுமரியில் அவர் காப்பாற்றப்பட்டது மீண்டும் நினைவுக்கு வந்தது. சிறந்த பண்புள்ள, அறிவுள்ள, நன்மை செய்வதில் நாட்டம் கொண்ட பெரிய மனிதர் நீரில் பயணம் செய்யும் அறிவிலா ஒரு சிறுவனைப் போல எதிர்பாராமல் தவறி விழுந்து உயிரிழந்தது இன்னும் விளங்காத புதிர்போலவே இருக்கிறது.

தலைநகரத்திலிருந்து இங்கு வந்த மூன்றாவது பேராயர் மறைந்த மில்மேன் ஆவார். தன்னுடைய நேர்முக உதவி ஆயர் (சேப்ளான்) அருட்திரு.ஏ.சி. ஹார்டியுடன் அவர் 1870ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் இங்கு வந்தார். அவரை வரவேற்க இடையன்குடியில் காத்திருந்தேன். கூடங்குளத்திற்கும் கன்னியாகுமரிக்கும் அவருடன் சென்றேன். மற்ற பணித்தளங்களுக்கு நான் செல்லவில்லை. பேராயர் காட்டனைப் போல அவர் கன்னியாகுமரியில் குளிக்கவில்லை. அவருக்குக் கலையில் ஆர்வம் உண்டு. எனவே அவ்வூர் அமைப்பின் படத்தை வரைந்தார். கல்கத்தாவில் அவருக்கு முன்னர் பணியாற்றிய பேராயர்களைப் போல அவரிடம் அதிக நற்பண்புகள் உண்டு. எனினும் சில செயல்களில் இருவரும் இருதுருவங்கள். இவர் மக்களை எளிதில் கவரக்கூடிய பேச்சாளர். இவருக்கு முந்தினவரோ அமைதியானவர். இவர் வெட்டு ஒன்று, துண்டு இரண்டு என்று சொல்லக்கூடிய முரட்டுப்பேர்வழி. அவரோ சாந்தமானவர். ஆனால் இது வெளித்தோற்றமே. இவரின் உள்தோற்றம் முற்றிலும் மாறுபட்டது. மிகவும் அன்புடையவர்.

இப்பணியில் அவர் வேறு எவருக்கும் குறைந்தவர் அல்லர். அவருடைய தனிப்பண்பு இடையன்குடியில் ஒரு நாள் மலர்ந்தது. அன்று தூய மிகாவேலின் திருநாளுக்கு முன்தினம்...

அவரது செய்தியைக் கேட்க பக்கத்துச் சபைகளிலுள்ள மக்களை இடையன்குடிக்கு அழைத்திருந்தேன். "நான் ஏற்கனவே இங்கு ஒரு முறை செய்தி கொடுத்திருக்கிறேன். இப்போது நீவிர் பேசுவதை நான் கேட்க வேண்டும்" என்று உறுதியுடன் சொன்னேன். அன்று காலையில் மீண்டும் அவரைக் கேட்டேன். "என்ன பேசுவது எனக்குத் தெரியவில்லை" என்று மறுத்துவிட்டார். எனக்கும் ஒரு நல்ல வாய்ப்பு. "இன்று தூய மிகாவேல் திருநாளாகையால் அவரைப் பற்றி பேசலாமே" என்றேன். "மிகாவேலைப்பற்றி எனக்கு என்ன தெரியும்?" என்று சற்று உரத்த குரலில் பதில் அளித்தார். "உங்களுக்கு அவரைப்பற்றித் தெரியுமோ, தெரியாதோ, நீங்கள் தான் செய்தி கொடுக்க வேண்டும். உங்கள் செய்தியைக் கேட்க சபையார் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

இங்குள்ள ஆயர் உங்கள் உரையை மொழியாக்கம் செய்யக் காத்துக் கொண்டிருக்கிறார்" என்றேன். அதற்கு இணங்காமல் அவர் திருவறைக்குச் சென்றார். நல்லதே நடக்கும் என்று நான் நம்பிக்கையுடன் இருந்தேன். அவருக்குத் தென்படாத இடத்தில் நான் அமர்ந்து கொண்டேன். விசுவாசப்பிரமாணம் முடிந்தது. அடுத்த என்ன நடக்கப்போகிறது என்பதை அறிய ஆவலோடு இருந்தேன். திருவறையிலிருந்து பேராயரின் உரத்த குரல் கேட்டது. "தானியேல் 10:13, மிகாவேல், வெளிப்படுத்தின விசேஷம் 12:7 மிகாவேல்" மீண்டுமாக அதைச் சொல்லி விட்டு மிகாவேல் என்ற பெயரின் பொருளை விளக்கினார்.

மிகாவேல் இறைவனைப் போன்றவர். ஆம். அவர் இறைவனைப் போன்றவர். தேவ சேனையின் தலைவர். இறைவனைப் போன்றவர் எவருமிலர் என்பது தேவதூதர்களின் அசைக்கமுடியாத நம்பிக்கை. இப்படியிருக்க, இறைவனைப் போன்ற ஒன்றை உருவாக்க முடியும் என்ற தவறான எண்ணத்தில் இருக்கிறார்களே என்பது வியப்பாக இருக்கிறது. ஏற்கனவே சிந்தித்து வைக்காமல் அந்நேரத்தில் கொடுத்த இந்த அருளுரை இந்த இடத்தில் நான் கேட்ட சிறந்த அருளுரை என எண்ணுகிறேன். அவ்வளவு ஆற்றல்! அவ்வளவு அனல்! அவ்வளவு கவிதை நயம்! அவ்வளவு உருக்கம்! அவருக்கு முன்பு இருந்த பேராயரைப் போல மிகவும் பழுத்த வயதில்

மறுமைக்குட்பட்டார். பேருழைப்பினால் உடல் மெலிந்து அவர் இறக்க நேரிட்டது. "பளுவான பணியிலிருந்து ஓய்வு பெறுகிறார். அவரது செயல்கள் அவரைத் தொடர்கின்றன" என்று அவரைப் பற்றிக் கூறினால் தவறில்லை.

மற்ற தலைமையிடத்துப் பேராயர்களைப் பற்றி சுதந்திரமாக எழுதியது போல தற்சமயம் தலைமைப் பேராயராக இருக்கும் ஜாண்சன் அவர்களைப் பற்றி எழுதுவது அவ்வளவு நன்றாக இருக்காது என நினைக்கிறேன். எனினும் அவர் பற்றி ஒன்றைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. மற்ற எந்த தலைமையிடத்துப் பேராயர்களின் வருகையைவிட அவரது வருகை மிகவும் பயனுடையது; பயன் கொடுக்கக் கூடியது. அவரது நீண்ட பட்டறிவு இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் உள்ள பணித்தளங்களின் வளர்ச்சி பற்றிய அறிவு, அவரது உற்று நோக்கும் திறன், எந்தப் பொருட்களையும் மிகவும் அக்கறையுடன் பார்த்தல், செயலறிவுத்திறன், உழைப்பின் வலிமை, தாங்கிக் கொள்ளும் திறன் இவை அனைத்தும் பணித்தளங்களுக்கு மிகவும் பயனுள்ளவையாக இருந்தன.

இவருக்கு முன்பு புகழ்மிக்கப் பேராயர்கள் வந்தனர்; பார்த்தனர்; பணித்தளத் திட்டங்களுக்கு ஒப்புதல் அளித்தனர். ஆனால் முன்னேற்றத்திற்கான கருத்துரைகளைத் தரவில்லை. அவர்களுடைய வருகை மகிழ்ச்சியளித்தது; சபைமக்களுக்கும் பணியாளர்களுக்கும் ஊக்கமளித்தது; பல நன்மைகள் உண்டாயின. ஆங்கிலப் பேராயர் காட்டனுக்கு ஆங்கிலக்கல்வி மீதுள்ள பற்று பல பணித்தளங்களில் ஆங்கிலக் கல்விக்கு இருந்த எதிர்ப்பை மேற்கொள்ள உதவியது எனலாம். பணித்தளத்தில் உள்ள ஒவ்வொரு துறைக்கும் பேராயர் ஜாண்சன் அளித்த செயல்முறை கருத்துரைகள் அனைத்துமே பயனுள்ளவைகளாக இருந்தமையால் நிறைவேற்றப்பட்டன. திருநெல்வேலியில் உள்ள பணித்தளங்கள் அமைப்பிலும், திருச்சபைக் கொள்கைகளிலும் சிறந்து விளங்குகிறதென்றால், அதற்குக்காரணம் இவரது அறிவுரைகளும் பரிந்துரைகளும் என்றால் அது மிகையாது.

திருநெல்வேலியில் உள்ள S.P.G. இறைப்பணிகள் அனைத்தும் தூத்துக்குடியை மையமாகக் கொண்டு இயங்க வேண்டும். எனது இருப்பிடத்தை இடையன்குடியிலிருந்து தூத்துக்குடிக்கு மாற்ற வேண்டும். அதைச் சுற்றி பல கல்வி நிலையங்கள் ஏற்படுத்தப்பட வேண்டும். சாயர்புரத்தில் உள்ள

S.P.G. கல்லூரியைத் தூத்துக்குடிக்கு மாற்ற வேண்டும் இவை அவரது விருப்பங்களில் அடங்கும். எனக்கும் இதே விருப்பம் நீண்ட காலமாக இருந்து வந்தது. குறிப்பாக எனது அருட்பொழிவுக்குப் பின் இருந்து வந்தது. இடையன்குடியில் கோவில் பணிகளும் முடிந்துவிட்டன. எனவே புதுப்பணியைப் புது இடத்தில் தொடங்கத் தடை ஏதும் இல்லை. ஆனால் 40 ஆண்டுகள் மிகவும் எழுச்சியுடன் பயனுள்ள பணியாற்றிய இடையன்குடியை விட்டுப் போக வேண்டுமே என்று எண்ணியதும் உள்ளம் துன்பக்கடலில் மூழ்கியது.

பணித்தளங்களில் அரும்பணியாற்றவும் திருச்சபையில் ஒரு சிறப்பான பொறுப்பை ஏற்கவும் விருப்பம் கொண்ட இறைவன் தூத்துக்குடியை மையமாகக் கொண்டு மேலும் பணி செய்ய விருப்பம் கொண்டுள்ளார் என நினைத்தேன். பல வகைகளில் தூத்துக்குடி இதைவிட இன்றியமையாத இடமாகத் திகழ்கிறது. மாவட்டத்தின் மையப்பகுதியில் அமைந்துள்ளதால் பணித்தளங்களைப் பார்வையிட பல வகையில் வசதிகள் உண்டு. அவைகளில் சிறப்பானது இரயில் இணைப்பு வசதி. S.P.G. பணித்தளங்களுள் தூத்துக்குடி முதன்மையான இடமாதலால், பாளையங்கோட்டை வளர்ச்சிக்கு C.M.S. எவ்வளவு செய்திருக்கிறதோ, அவ்வளவு தூத்துக்குடி வளர்ச்சிக்கு முயலவேண்டியது S.P.G. யின் கடமை.

திருநெல்வேலி வரலாறு பற்றிய எனது நூலில் லிவர்பூலைச் சேர்ந்த திரு.குரோவ்ஸ் என்பவரைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறேன். 50 ஆண்டுகளுக்கு முன்பு பஞ்சு வணிகத்தைத் தூத்துக்குடிக்கு அறிமுகப்படுத்தியவர் அவரே. தூத்துக்குடியில் பஞ்சு வியாபார வளர்ச்சிக்குக் காரணம் அவர்தான். தூத்துக்குடி வளர்ச்சிக்கான எனது திட்டங்களைப் பற்றிக் கேள்விப்பட்டதும் நன்கொடையாக ரூ. 600/- அனுப்பினார். கல்லூரிக் கட்டிடத்திற்காகத் தேவைப்படும் பணத்தில் ரூ.20,000ஐக் கிறிஸ்தவ அறிவுக்கழகத்தினர் கொடுத்துதவினர். மேலும் 5000 பவுண்டுகளை ஆறு ஆண்டுகளுக்குக் கல்வி உதவித் தொகைக்கும் அங்கு வரவிருக்கும் கால்டுவெல் கல்லூரியில் இளங்கலை பட்டப்படிப்பை (பி.ஏ.) அறிமுகப்படுத்தி அதை முதல்தரக் கல்லூரியாகக் கொண்டுவர முயற்சி பண்ணவும், கணித விரிவுரையாளருக்கு ஆறு ஆண்டுகளுக்கு ஊதியத்திற்காக 1500 பவுண்டுகளை ஒதுக்கவும் முடிவெடுக்கப்பட்டது. கல்லூரியில் நடத்தப்படும்

சமயக்கல்வி தொடர்பான விவரங்களை அறிய 1887ஆம் ஆண்டு அறிக்கையைப் பார்க்கவும்.

இடையன்குடிக்கு வருகைதந்த மற்றவர்களைப் பற்றிப் பார்ப்போம். அவர்களில் என்னை மிகவும் கவர்ந்து முதல் இடத்தைப் பெறுபவர் அறிவர் டஃப். இவர் கல்கத்தாவில் உள்ள புகழ்பெற்ற ஸ்காட்லாந்து நாட்டு இறைப்பணியாளர், இந்தியாவில் உள்ள இறைப்பணித்தளங்களில் கல்விக் கூடங்களை ஏற்படுத்திய பெருமை இவரையே சேரும். 1848இல் வந்த இவர் பல நாட்கள் எங்களுடன் தங்கியிருந்தார். பள்ளிகளில் அவர் ஆற்றிய உரைகளும் உரையாடல்களின் போது அவரிடம் நாம் கண்ட மொழித் திறனும் எங்களை வியப்பில் ஆழ்த்தியது. அடுத்து இடையன்குடிக்கு வந்த பெருமைக்குரிய பெரியவர் 'ஸ்க்லெஸ்விக்–ஹோல்ஸ்டைன்' (Schleswig-Holstein) இளவரசர் ஃபிரட்ரிக் ஆவார். 1866இல் வந்த இவரும் பல வாரங்கள் எங்களுடன் தங்கியிருந்தார். உலகைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்ற அவாவினால், பயணத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்தார். சமஸ்கிருதத்தில் நல்ல புலமை உண்டு. பழங்கால இந்தியப் பொருட்கள் மீது நாட்டம் அதிகம்.

முதலூர் மக்களிடையே உரையாற்றும்போது முதலூரில் உள்ள கிறிஸ்தவர்கள் டென்மார்க் மன்னரான கிறிஸ்டியானுக்கும் அவர் அனுப்பின இறைப்பணியாளர்களுக்கும் மிகவும் நன்றிக்கடன்பட்டவர்கள். இதே மன்னர் தான் இப்போதுள்ள வேல்ஸ் இளவரசருடைய மூதாதையர். வேல்ஸ் இளவரசருக்கு இந்தியா மீது பற்று உண்டு. இந்தியாவுக்கு வருமுன் "திருநெல்வேலியில் உள்ள இந்தியக் கிறிஸ்தவர்களைக் காணும் வாய்ப்பு இருப்பின், அவர்களுடைய முன்னேற்றத்தில் எனது மூதாதையர் காட்டின ஆர்வத்தை அவர்களுக்கு நினைவூட்டுவேன்" என்று கூறினார்.

சென்னை மாநில ஆளுநர் நேப்பியர் பிரபுவும், அவரது துணைவியார் மற்றும் அலுவலர்கள் 1868ஆம் ஆண்டு இடையன்குடிக்கு வந்து, ஏறத்தாழ ஒரு வாரம் தங்கியிருந்தனர். அவர் பெரிய அறிஞர்; பலதுறைகளில் திறமை உள்ளவர். மேலும் மேலும் தம் அறிவைப் பெருக்க ஆசை கொண்டவர். இங்கிலாந்தில் அவரது அறிவு பயனற்றதாகவே இருந்தது. கிராமங்களைப் பற்றியும் அங்குள்ள மக்களைப் பற்றியும் பல வினாக்கள் கேட்டார். அனைத்துக் வினாக்களுக்கும் மிகுந்த மகிழ்ச்சியுடன் பதில் அளித்தேன்.

## இயல் : 9

# நற்செய்திப் பணி முறைகள்

1838ஆம் ஆண்டு ஜனவரி 8ஆம் நாள் சென்னைக்கு வந்தேன். 50 ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. இங்கு வந்தும் தமிழ் மொழியைக் கற்பதே எனது முதல் பணி. சுமார் 3 ஆண்டுகள் சென்னையில் தங்கியிருந்தேன். பணியாளர் நடுவில் மட்டும் பணி செய்ய வாய்ப்பு இருந்தது. எளிதான பணி எனக் கருதப்பட்டாலும் என் முழு பெலத்தோடும் அதைச் செய்யத் தொடங்கினேன். அந்தப் பணியின் வாயிலாகவே நற்செய்திப் பணி செய்யும் முறையைக் கற்றேன். சபையை மையமாகக் கொண்டு பணி செய்ய வேண்டுமென்பதே எனது திட்டம். ஒவ்வொருவரும் சபையுடன் நல்ல உறவு வைத்துக் கொள்ள வேண்டும். இதற்கு என் உதவியாளர்களின் உதவியை நாடினேன்.

ஒருவர் கிறிஸ்தவ தாக்கத்துக்கு உட்படும் போது அவனது உறவினர்களையும் நண்பர்களையும் அழைத்து வரத் தூண்டினேன். இவ்விதமாக, இறையன்பை உணர்ந்த ஒருவர் மற்றவர்களை இறையன்புக்குள் வழி நடத்த முடியும். இந்த எனது திட்டம் நான் எதிர்பார்த்ததைவிடப் பெரிய வெற்றி பெற்றுள்ளது. நான் சென்னை செல்வதற்கு முன்பே கோவிலில் இடமில்லாத அளவுக்கு சபை பெருகி வளர்ந்திருந்தது. அனைத்து நற்செய்திப் பணிக்கும் சபையே மையம். மனமாற்றம் அடைந்த ஒருவரே தன்னுடைய நண்பர்களுக்கு இறைப்பணியாளர். இவ்விரண்டுமே எனது திட்டத்தின் இரு கண்கள். இத்திட்டமே திருநெல்வேலியில் நற்செய்திப் பணியின் வெற்றிக்கு அடிகோலியது. உலகின் எப்பகுதியிலும் இத்திட்டத்தைப் பயமின்றியும் தயக்கமின்றியும் நற்செய்தியின் அனைத்துப் பணிகளுக்கும் பயன்படுத்தலாம்.

1841ஆம் ஆண்டு இறுதியில் திருநெல்வேலிக்கு வந்தேன். கிறிஸ்தவச் சபை மக்களிடையே ஆற்றம்படும் ஆயர் பணியை மட்டும் செய்வதில் எனக்கு மனநிறைவு கிடையாது. எனவே இருளில் மூழ்கியிருக்கும் கிறிஸ்தவரல்லாதோருக்கு நற்செய்திப் பணி செய்வதே ஒரு S.P.G. இறைப்பணியாளரின் கடமை என உணர்ந்து அவ்வாறே செயல்பட முற்பட்டேன். இடையன்குடியிலும்

அதைச் சுற்றியுள்ள கிராமங்களிலும் அவைகளுக்கும் அப்பாலுள்ள கிராமங்களிலும் கிறிஸ்தவரல்லாதோர் ஏராளம், ஏராளம். நான் அவர்களை அழைக்கும் போது இம்மக்கள் என்னிடம் கற்றுக் கொள்ளாவிட்டாலும், நான் என்ன சொல்லுகிறேன் என்பதை நன்கு உற்றுநோக்குகின்றனர். சொல்லப்போகும் செய்தியைக் கேட்க பொறுமையாய்க் காத்திருக்கின்றனர். நாட்டில் மற்ற பணித்தளங்களில் நாம் கேள்விப்படும் முரட்டுத்தனமும் வன்முறையும் இங்கு இல்லை. கிறிஸ்தவக் கொள்கைகளுக்கும் தாக்கங்களுக்கும் இங்கே வாசல்கள் திறந்தே இருக்கின்றன.

முடிந்த அளவுக்கு, ஒவ்வொரு ஊரிலும் ஒரு பள்ளிக்கூடம் கட்ட வேண்டும் என்று திட்டமிட்டிருக்கிறேன். குழந்தைகளுக்கு கல்வி புகட்டுவது ஒரு நோக்கம். இன்னொரு நோக்கமும் உண்டு. அந்தந்த ஊர்களில் உள்ள மக்களைப் பள்ளிக்கூடங்களுக்கு வரவழைத்து அவர்களுக்கு நற்செய்தி அளிக்கவும் கலந்துரையாடவும் அவர்கள் கேட்கும் வினாக்களுக்குப் பதில் அளிக்கவும் ஆழமான வேதவாக்கியங்களை விளக்கவும் பள்ளிக்கூடங்கள் பெரிதும் உதவும் என்பது எனது நம்பிக்கை. சில சமயங்களில் தெருவில் நற்செய்தியை அறிவித்திருக்கிறேன். அவை எனக்கு மனநிறைவு அளிக்கவில்லை. ஏனெனில் அவைகளில் இடையூறுகளும் ஒழுங்கின்மையும் அதிகம். நமது கட்டுப்பாட்டில் உள்ள பள்ளிக் கூடங்களில் கிறிஸ்தவரல்லாதோரைக் கண்டு பேசுவதே சாலச் சிறந்தது. அப்படிச் செய்தால் தேவையில்லாத இடையூறுகளையும் தொல்லைகளையும் தவிர்க்கலாம்.

ஒரு சபையை ஏற்படுத்தியதும் சிறிதோ அல்லது பெரிதோ எப்படியிருந்தாலும் சரி வழிபாட்டிற்காக ஒரு கட்டிடம் கட்டுவேன் அல்லது அம்மக்களைக் கட்டச் சொல்லுவேன். அதை வழிபாட்டிற்கு மட்டும் அல்லது வழிபாட்டிடமாகவும் பள்ளிக்கூடமாகவும் பயன்படுத்திக் கொள்ளலாம். முதலில் கிறிஸ்தவர்களுடன் இறைவழிபாடு. இரண்டாவது அவர்கள் படித்த வேதாகமப் பகுதியில் தேர்வு. இவை முடிந்ததும் நான் வெளியே உட்கார்ந்து கொள்ளுவேன். ஆர்வத்தோடு கிறிஸ்தவரல்லாதோர் பலர் வருவார்கள். அவர்களுக்கு நான் நற்செய்தியைக் கூறுவேன். தேவைப்படின் இங்குள்ள மற்றோரும் நற்செய்தியைச் சொல்லுவர். இப்படிப்பட்ட நேரங்களில் நோக்கமில்லாத, மக்களுக்குப் பிடிக்காத, விளங்காத செய்தி எதையும் கொடுப்பதில்லை; அத்துடன்

நிறுத்திவிடுவதும் இல்லை; கிறிஸ்தவக் கொள்கைகளை நன்கு கற்றுக்கொண்டு, மற்றவர்களுடன் உறவு கொண்டு, இறைவனுக்காக வாழ வேண்டும் என்று அறிவுறுத்துவேன்; உதவியும் செய்வேன்; வாரம் 3 நாட்கள் கிராமத்து மக்களிடையே செலவு செய்ய வேண்டியது கடமை என்பதில் உறுதியாய் இருந்தேன்; இதனால் அம்மக்களை அடிக்கடி அவர்களுடைய இடத்தில் நேரில் கண்டதால் அவர்களைப் பற்றி அதிகப் பயனுள்ள செய்திகளை அறிந்து கொண்டேன். எனது செல்வாக்கும் அதிகரித்தது.

கிறிஸ்தவரல்லாதவரிடையே நான் செய்த பணியின் பலன் எனது நோக்கத்திற்கும் விருப்பங்களுக்கும் இணையாக இல்லை என்பது உண்மைதான். எனினும் மிகவும் மோசமாக இருந்தது என்று கூற முடியாது. அதிகப் பலன் கிடைத்தது. அதற்காக இறைவனுக்கு நன்றி. இராதாபுரம் பகுதியில் அதிகப் பலன். அதன் விளைவாக அது தனி பணித்தளப்பகுதியாக உயர்வு பெற்று, இடையன்குடி அறிக்கையில் சேர்க்கப்பட்டுள்ளது. 1841யில் மொத்த சபைகளின் எண்ணிக்கை 14. இப்போது (1888இல்) இராதாபுரத்திலுள்ள சபைகளையும் சேர்த்து இறைவன் அருளால் 129 சபைகள் உள்ளன.

மனமாற்றமடைந்து திருமுழுக்கு பெறாமல் இருப்பவர்கள் இராதாபுரத்தையும் சேர்த்து கிறிஸ்தவர்கள் எண்ணிக்கை 1201 லிருந்து 8167 ஆக உயர்ந்துள்ளது. இராதாபுரத்தில் 73 சபைகளும், கிறிஸ்தவ நற்செய்தி பெற்று வருகின்ற 3500 பேர்களும் உண்டு. கிறிஸ்தவரல்லாதவர் நடுவில் நடைபெறும் பணி எனக்கு மனநிறைவு அளிக்கவில்லை. திருப்பணி விடையாளர்களுடன் இணைந்து செய்யும் பணியிலும் அதே நிலைதான். எனவே ஒரு புது திட்டத்தைத் தீட்டினேன். ஒவ்வொரு ஊரிலும் புதிதாக மனமாற்றமடைந்தவர் உட்பட உள்ளூர்க் கிறிஸ்தவர்களைத் தங்களுக்கு அருகில் உள்ள கிறிஸ்தவரல்லாத நண்பர்களிடம் நற்செய்தியை அறிவிக்க தங்களுக்குள்ளே குழுக்கள் அமைக்குமாறு ஊக்கப்படுத்தினேன்.

அந்தக் குழுக்கள் இப்பணிக்காக ஒவ்வொரு வாரமும் ஒரு குறிப்பிட்ட நேரத்தை ஒதுக்கவும் ஒவ்வொரு மாதமும் அறிக்கை அளிக்கவும் உறுதியளித்தன. இப்பணி பல பகுதிகளில் ஒழுங்காக நடைபெற்று வந்தது. பொதுவாக இந்தியாவில் ஆண்கள், பெண்களை அவர்களுடைய வீடுகளில் கூட தனியாக நேரில்

காண விரும்பமாட்டார்கள். கிறிஸ்தவப் பெண்களின் உதவியன்றி இந்தியாவில் உள்ள பெண்களைப் பார்க்க முடியாது. எனவே, பெண்களையும் இப்பணியில் இணைந்து செயலாற்றும்படி ஊக்கப்படுத்தினேன். பெரிய பட்டணங்களில் உள்ள உயர்குலப் பெண்களை நேரில் காணச் 'செனானா இயக்க'த்தைச் சேர்ந்த பெண்களின் சேவை மிகவும் தேவைப்பட்டது. தன்னார்வப்பணி செய்யும் பெண்களைக் குழுக்களாக அமைத்து, நேரில் அவர்கள் ஒன்று கூடி கலந்துரையாடல் செய்து அவ்வப்போது தங்கள் அறிக்கைகளை எனக்கு அனுப்பி வைக்குமாறு ஊக்குவித்தேன்.

இப்பணி தொடங்கியதும் ஒவ்வொரு திருப்பணிவிடையாளரையும் நற்செய்திப் பணிக்கென வாரம் ஒரு நாளை ஒதுக்குமாறு கேட்டேன். மேலும் அவரோடு சபை மக்களில் சிலரைத் தன்னுடன் கூட்டிச்செல்லவும் ஏற்பாடு பண்ணினேன். அவர் அத்திட்டத்தை தன்னார்வத் தொண்டர்கள் மூலம் அறிமுகப்படுத்தி, தனியாகவோ அல்லது குழுக்களாகவோ அதை நிறைவேற்ற அவர்களை ஆயத்தப்படுத்த வேண்டும்.

இடையன்குடிக்கு வந்து சில ஆண்டுகள் கழிந்தன. பரந்த நோக்குடன் பெரிய அளவில் நற்செய்திக்குழுவை தொடங்கி நடத்தும் அளவுக்கு மக்களிடையே முன்னேற்றம் ஏற்பட்டிருந்தது. முழுவதும் கிறிஸ்தவரல்லாதோர் உள்ள மேற்குப் பகுதியில் நற்செய்தியை அறிவிப்பதே அக்குழுவின் முக்கிய நோக்கம் ஆகும். தங்களுக்குள்ளே பணம் சேகரித்தனர். நற்செய்திப் பணியாளர்களை அமர்த்தினர். பணி நிறைவேற்றப்பட வேண்டிய மேற்குப் பகுதியின் வரைபடத்தைக் கையில் வைத்துக் கொண்டு, ஒரு உறுதியான திட்டத்துடன் செயலாற்றினர். தாங்கள் ஒவ்வொரு இடங்களிலேயும் பணியின் விவரங்களை ஒவ்வொரு மாதமும் இடையன்குடியில் அதற்கெனக் கூட்டப்படும் பொதுக்கூட்டத்தில் அறிவிக்க வேண்டும்.

இப்பணியை நிறைவேற்ற தேவைப்படும் அறிவு, பெலன், பொறுமை, அன்பு, மனவலிமை ஆகியவற்றைப் பெற மன்றாடுவதற்காக ஒழுங்கு செய்யப்பட்டுள்ள வழிபாட்டில் பங்கு பெற வேண்டும். இக்குழுவுக்குச் சபைமன்றங்களை விட அதிக செல்வாக்கும் ஆதரவும் மக்களிடையே இருந்தது. நாளடைவில் தங்களது சார்பாளர்களைத் தாங்களே தாங்க சபை மன்றங்கள் ஏற்படுத்தப்பட்டன. உள்நாட்டுத் திருச்சபை தங்கள் சொந்தக்காலில் நிற்க இத்திட்டம் தேவை எனக் கருதப்பட்டது.

ஆனால் நற்செய்திக் குழுக்கள் மக்களின் நேரடியான ஒத்துழைப்பை நாடின. நற்செய்திக்குழுத் திட்டம் மகத்தான வெற்றி பெற்று இராதாபுரம் என்ற தனி பணித்தளம் தோன்ற அடிகோலியது.

திருவாங்கூர் மாநிலத்தின் அருகில் உள்ள பணித்தளத்தில் இலண்டன் இறைப்பணி இயக்கத்தால் உருவாக்கப்பட்ட சில சபைகள் ஆங்காங்கே இருந்தன. பின்பு அவை என்னிடம் ஒப்படைக்கப்பட்டு ஒரே தலைமையின் கீழும் ஒரே ஆளுகையின் கீழும் கொண்டுவரப்பட்டன. இப்பணித்தளத்தைக் கண்காணிக்கும் பொறுப்பு என்னால் பயிற்றுவிக்கப்பட்டவரும் இடையன்குடியைச் சேர்ந்தவருமாகிய அருட்திரு. D.சாமுவேல் B.D., ஆயரிடம் கொடுக்கப்பட்டது. இப்போது உள்ளூரைச் சேர்ந்த நான்கு ஆயர்கள் அதைக் கண்காணித்து வருகிறார்கள்.

கிறிஸ்தவரல்லாதோர் நடுவில் நற்செய்திப்பணி தொடர்ந்து நடைபெற்று வருகிறது. எங்கெங்கு நான் செல்கிறேனோ, அந்த இடங்களில் உள்ள ஆயர்களை, முகவர்களை மற்றும் மக்களை இன்னும் அதிக எழுச்சியுடனும் வைராக்கியத்துடனும் இப்பணியை நிறைவேற்ற என்னால் முடிந்த அளவு ஊக்குவித்து வருகிறேன். சென்ற ஆண்டு ஆயர்பணி அருட்பொழிவுக்கு ஆயத்தப்படுத்த 25 பேர்களுக்கு 3 மாதப்பயிற்சி இடையன்குடியில் அளிக்கப்பட்டது. நற்செய்திப் பணியில் பயிற்சி அளிக்கும் பொருட்டு அவர்களை இரண்டு இரண்டு பேராகப் பிரித்து, வாரத்திற்கு ஒரு நாள் அங்கு அனுப்பி வைத்தேன். இப்பயிற்சி அவர்களுக்கு வருங்காலத்தில் அவர்கள் பணியாற்றவிருக்கும் இடங்களில் நல்லமுறையில் பணிபுரிய உதவியாக இருக்கும் என்பது என்னுடைய நம்பிக்கை.

இதுவரை நேரில் கண்டு பேசாத உயர்ந்த இன மக்கள் வாழும் இடங்களில் நற்செய்திப் பணியைச் செய்யத்திட்டமிட்டேன். 1876ஆம் ஆண்டு இப்பணி தொடங்கப்பட்டு சுமார் ஓராண்டுக்காலம் செயல்படுத்தப்பட்டது. ஆனால் இந்த நற்செய்திப்பணி அம்மக்கள் மீது எந்தவித தாக்கத்தையும் ஏற்படுத்தவில்லை. எவரும் திருச்சபையில் சேர முன் வரவில்லை. இது தொடர்பாக நான் செய்த பணி பற்றி ஐந்து சிறு நூல்கள் எழுதியுள்ளேன். ஒவ்வொரு பணித்தளம் பற்றியும் செய்திகள் கொடுக்கப்பட்டுள்ளன. பள்ளிகள் மூலம் அல்ல, நேரடியாகப்

நற்செய்தி கொடுப்பதன் மூலம் அம்மக்களின் மனமாற்றத்திற்காக முயற்சி செய்ய ஆவலாய் இருந்தேன்.

திறமையும் மன உறுதியும் உள்ள ஒரு குழுவை இதற்காகத் தெரிந்து கொண்டேன். எனினும் நான் எதிர்பார்த்த பலன் கிட்டவில்லை. சபைப்பள்ளிகள் மூலம் நடக்கும் நற்செய்தி கற்பித்தலே அதிகப் பலனைக் கொடுக்கிறது என்ற உண்மையை உணரலாயினேன். நான் எவ்வாறு மனமாற்றம் அடைந்தேன் என்ற பட்டறிவு எனக்கு உண்டு. மனமாற்றத்திற்கான பல வழிகளை நான் செயல்படுத்தியிருக்கிறேன். விளைவு? பள்ளிகள் மூலம் அல்லாது வேறு எந்த முறை மூலமாகவும் இந்தியாவில் இந்தப் பகுதியில் உள்ள ஓர் உயர்குல இந்துவையும் மனமாற்றமடையச் செய்ய முடியவில்லை. அப்படிப் பள்ளிகள் மூலம் மனமாற்றமடைந்த உயர்குல மக்களின் எண்ணிக்கை எதிர்பார்த்தபடி மிக அதிகம் இல்லாவிடினும் நாம் நினைத்ததை விட அவர்கள் எண்ணிக்கை அதிகமே. என்னைப் பொருத்தவரை அவர்கள் மனமாற்றத்திற்குப் பள்ளிகளே சிறந்த கருவிகள்.

1881இல் இது தொடர்பாகப் புள்ளி விவரங்கள் சேகரித்தேன். அதன்படி மசூலிப்பட்டணத்தில் (ஆந்திரப் பிரதேசம்) உள்ள நேரன் பள்ளியில் 25 உயர்குல மக்கள் மனமாற்றம் அடைந்திருக்கின்றனர். அவர்களில் 16 பேர் அந்தணர்கள். பாளையங்கோட்டையில் அந்த எண்ணிக்கை 36ஐத் தொட்டாலும், அவர்களில் மூன்று பேர் இந்து சமயத்திற்கு மீண்டும் போய்விட்டனர். பள்ளிகள் மற்றும் கல்லூரிகள் மூலமாகவே திருநெல்வேலியிலும் இராமநாதபுரத்திலும் S.P.G. தனது பணியைத் தொடர்ந்தது. பெற்ற கனிகள் நாற்பதிலிருந்து ஐம்பது வரை இருக்கும்.

உயர்குல மக்கள் நடுவில் எனது நேரடி நற்செய்திப்பணி மூலம் பலன்களைப் பெற்ற ஒரே இடம் ஆழ்வார்திருநகரி. அந்தணர்கள் அதிகமாக வாழ்ந்த இடம். புகழ் பெற்ற கோவில் ஒன்று அங்கு உண்டு. சிறந்த பள்ளி ஒன்றும் அங்கு இருந்தது. மக்களிடையே பெரும் செல்வாக்கு பெற்றவர். சமயம் வாய்க்கும் போதெல்லாம் கிறிஸ்தவச் சத்தியத்தை இளைஞர்கள் நடுவில் கற்பிக்கத் தவறமாட்டார். அங்குள்ள அந்தணர்கள் மிகவும் நல்லவர்கள். நற்செய்திக் கூட்டங்கள் நடத்த அங்குள்ள இந்துக்கோவில் மண்டபத்தைப் பயன்படுத்த ஒப்புதல் அளித்தனர். ஒரு முறை அருட்திரு. லூக் ரிவிங்டன் பேசினார். அச்சமயம்

இரண்டாயிரத்திற்கும் அதிகமான அந்தணர்களும் உயர்குல மக்களும் இருநூறு கிறிஸ்தவர்களும் குழுமி இருந்தனர். இக்கூட்டத்திற்குப் பின் நான் தனித்தனியாகப் பலரை நேரில் கண்டு அவர்களிடம் கேட்டபோது சுமார் 20 பேர் கிறிஸ்தவராக மாறத் தங்கள் விருப்பத்தைத் தெரிவித்தனர்.

ஆற்றங்கரையில் அவர்கள் கூடி, தூய பவுலடியாரின் செய்தியைக் கேட்டு எவ்வாறு லீதியாள் மனந்திரும்பினாளோ, அவ்வாறு நாங்களும் அவளது முன்மாதிரியைப் பின்பற்றத் தீர்மானம் பண்ணியிருப்பதாகவும் என்னிடம் கூறினார்கள். அவர்களில் ஆறு இளைஞர்கள் திருமுழுக்கு பெற்றுக் கொண்டனர். அருட்திரு. ரிவிங்டன் மீண்டும் ஒருமுறை அங்குச் சென்ற போது இருவருக்கு திருமுழுக்கு கொடுத்தார். ஒருவர் மட்டும் சில நாட்களுக்குப் பின் காலமானார். மற்ற அனைவரும் இறை நம்பிக்கையில் உறுதியாய் நிலைத்திருந்தனர்.

1877–78 ஆண்டுகளில் மக்களை வாட்டி வதைத்த பெரும்பஞ்சத்தின் போது செய்யப்பட்ட நிவாரணநலப்பணி கிறிஸ்தவரல்லாதவரிடையே பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது. அதின் விளைவாக 19,000 பேர் கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டனர். அவர்கள் கிறிஸ்தவர்களான நோக்கம் ஐயத்திற்குட்பட்டதாய் இருந்தாலும் கிறிஸ்தவச் சத்தியங்களும் கடமைகளும் அவர்களுக்குக் கற்பிக்கப்பட்டன. பெரும்பாலானோர் இன்றுவரை இறை நம்பிக்கையில் உறுதியாக நிலைத்திருக்கின்றனர். அவர்களின் குழந்தைகள் இறைவனின் திருப்பணி செய்ய எங்களால் பயிற்றுவிக்கப்பட உள்ளனர். இருவகையான தாக்கங்கள் அவர்களைக் கவர்ந்திருக்கின்றன. ஒன்று நற்செய்திக் குழுக்கள் மூலம் அவர்கள் பெற்ற இறையறிவு. இரண்டு பஞ்சக்காலத்தில் பட்டினியால் வாடும்போது அந்தணச்சாமியர்கள் அவர்களைக் கைவிட்டாலும் இங்கிலாந்து நாட்டிலுள்ள கிறிஸ்தவ மக்கள் அவர்களைக் கைவிடவில்லை. கிறிஸ்துவின் அன்பினால் ஏவப்பட்ட அந்த அன்பு உள்ளங்களினால் பெற்ற உதவியே தங்களைக் காப்பாற்றியது என்ற எண்ணம்.

கிறிஸ்தவரல்லாதோரை இயேசுவின் மந்தையில் சேர்ப்பது நமது முதல் பணி என்றால், மந்தையில் சேர்ந்த ஆடுகளுக்குச் சரியான இறை அறிவும் பயிற்சியும் அளித்து அவர்களைத் தகுதிப்படுத்துவதே இரண்டாவது பணியாகும். நான் ஏற்கனவே

குறிப்பிட்டுள்ளபடி, நம்முடைய பணியின் அடித்தளமும் மையமும் சபையே. பொதுவாக, ஒரு சபை ஒரு திருப்பணிவிடையாளரின் பொறுப்பில் இருக்கும். பணப்பற்றாக்குறை இருந்தாலோ அல்லது சபை சிறிதாக இருந்தாலோ அல்லது மற்ற சபைக்கு மிக அருகில் இருந்தாலோ ஒரு திருவிடைப்பணியாளர் இன்னும் சில சபைகளுக்குப் பொறுப்பாக இருப்பார். ஒவ்வொரு சபையிலும் தினமும் ஒரு சிறிய வழிபாடும் ஞாயிற்றுக்கிழமைகளில் முழு வழிபாடும் நடைபெறும்.

வழிபாடுகளில் சங்கீதங்கள் திருப்பணிவிடையாளராலும் சபையாராலும் மாறி மாறி படிக்கப்படுவது ஒரு சிறப்பு முறை. ஞாயிறு வழிபாடு முடிந்ததும் வேதாகம வகுப்பு நடைபெறும். படித்தவர், படிக்காதவர் என இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு தனித்தனியே வகுப்புகள் நடைபெறும். படிக்கத் தெரியாதவர்களுக்கு (படிக்காதவர்) நற்செய்தி வாய்மொழியில் அளிக்கப்படும். வேதாகமத்திலிருந்து ஒரு பகுதி மனப்பாடம் செய்யக் கொடுக்கப்படும். அது வகுப்புகளில் ஒப்புவிக்கப்படும். பள்ளிப்பணிகள், சபைமக்களின் விவிலிய அறிவு பற்றி ஆய்வு செய்ய ஓர் ஆய்வு திருப்பணிவிடையாளரை அமர்த்துவது வழக்கம். இப்போது உள்ளூர் ஆயர்கள் அந்தப் பணியைச் செய்து வருகின்றனர். அவர்கள் பணிபற்றிய அறிக்கைகளை அவ்வப்போது எனக்கு அளிப்பார்கள்.

இப்பணித்தள மாவட்டத்தின் மிகச் சிறப்பான பணி என்னவென்றால் ஆசிரியர்களுக்கும் திருவிடைப்பணியாளர் களுக்கும் வாரம் ஒரு வாராந்திரக் கூட்டம் நடைபெறும். ஆறு மைல் தொலைவிற்குள் இருக்கும் ஆசிரியர்களும் திருவிடைப்பணியாளர்களும் காலையில் வருவர். கூட்டத்தில் பங்கு பெற்றுவிட்டு மாலையில் திரும்பி விடுவார்கள். நாளடைவில் இக்கூட்டத்திற்கு ஆயர்களும் வந்தனர். மாதத்திற்கு ஒரு முறை மட்டும் அவர்கள் அங்குத் தங்கிவிட்டு மறுநாள் செல்வர். அந்நாட்களில் ஒரு சிறப்பு வழிபாடு நடைபெறும். இக்கூட்டங்கள் இருபிரிவாகப் பிரிக்கப்பட்டு, முதுநிலைக்குழு எனது தலைமையிலும் இளநிலைக்குழு ஒரு திருவிடைப்பணியாளர் அல்லது ஆயர் தலைமையிலும் செயல்படும். நடந்த வேலைகள் பற்றிய அறிக்கைகள் இக்கூட்டத்தில் முதலில் படிக்கப்படும். சிறப்பு செய்திகள் எவையேனும் இருப்பின் அவை எடுத்துக்கூறப்படும்.

அடுத்த பகுதியில் விவிலியத்தில் உள்ள ஒரு தெரிந்தெடுக்கப்பட்ட பகுதிக்கு விளக்க உரை அளிக்கப்படும். கலந்து கொள்பவர்கள் உரையிலிருந்து குறிப்புகளை எடுத்துக் கொள்வர். அருளுரை எப்படி ஆயத்தம் பண்ணுவது என்பது அடுத்தது. விவிலியத்திலிருந்து ஒரு பகுதியை எடுத்து அதை ஐந்து அல்லது ஆறு பேரிடம் கொடுத்து ஐந்து முதல் எட்டு நிமிடங்கள் முன் ஆயத்தமின்றி அருளுரை வழங்க வேண்டும் என்று அரை மணி நேரம் கொடுப்பேன். நேரம் முடிந்த பிறகு சபையாராக இருந்து அருளுரையைக் கேட்டவர்களை அழைத்து அருளுரைப் பற்றிய அவர்களது கருத்துக்களைக் கேட்டறிவேன். அடுத்து அருளுரையைக் கேட்க நானே செல்வேன். தேவையான திருத்தங்களைக் கொடுப்பேன். இக்கடைசி மீள்பார்வை முடிந்ததும், அருளுரையின் இறுதி வடிவத்தை ஒவ்வொருவரும் எழுதிக் கொள்ளுவார்கள்.

இவ்வாறு, இடத்திற்கும் சபை மக்களுக்கும் தகுந்த அருளுரை ஒவ்வொரு வாரமும் வழங்கப்படுகிறது. யாராவது ஒரு திருவிடைப்பணியாளரின் வேண்டுதலுடன் கூட்டம் நிறைவு பெறும். திருவிடைப்பணியாளர்களுக்கும் பள்ளி ஆசிரிய ஆசிரியைகளுக்கும் விவிலியத்தில் இருந்து ஏதாவது ஒரு புத்தகத்திலிருந்து அல்லது வாரக்கூட்டங்களில் படிக்கும் புத்தகங்களிலிருந்து ஆண்டு தோறும் தேர்வுகள் நடத்துவது எனது திட்டத்தின் ஒரு பகுதி. சிறந்த தேர்வர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. ஒரு காலத்தில் இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் தேர்வு எழுத இங்கு வருவார்கள். இது பலருக்கு வசதிக் குறைவாக இருந்தமையால், எழுதப்பட்ட வினா–விடை முறைமை நடைமுறைப்படுத்தப்பட்டது.

சபை மக்களுக்கான அருளுரையுடன், சிறப்பு நோக்கங்களுக்காக சிறப்பு வகுப்புகளும் நடத்தப்பட்டன. சான்றாக, திருமுழுக்கு, திடப்படுத்தல், திருவிருந்து ஆகியவைகளுக்குச் சபையாரை ஆயத்தப்படுத்த சிறப்பு வகுப்புகள் நடத்தப்பட்டன. இவ்வகுப்புகளுக்காக நான் தமிழில் சில நூல்கள் எழுதியிருக்கிறேன். அவைகளில் ஒன்று திருமுழுக்கு பெறுவோருக்கான 'ஞானோபதேசம்.' சிறப்பான கிறிஸ்தவச் சத்தியங்களும் கொள்கைகளும் எளிய நடையில் எழுதப்பட்டுள்ளது. திடப்படுத்தல் பெறுவோருக்கான 'ஞானோபதேசம்' மற்றொன்று. இன்னொன்று திருவிருந்துக்கான

துணைவன், ஆயத்தக்கூட்டங்களுக்கான போதனைகள், தியானங்கள், மன்றாட்டுகளை உள்ளடக்கியது.

தன் ஆதரவு மற்றும் தன் ஆளுகையை மேம்படுத்தும் முறைகளைக் குறிப்பிட்டு இதை நிறைவு செய்கிறேன். ஒவ்வொரு பணித்தள மாவட்டத்திலும் சபை மன்றம் நிறுவப்பட்டது. சேகரத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட சார்பாளர்கள் இதன் உறுப்பினர்கள். இது கோட்ட அளவில் உள்ள பொதுமன்றத்திற்குக் கீழானது. பணித்தள மாவட்டத்திற்கான நிதி, இம்மன்றத்தின் கட்டுப்பாட்டில் இருக்கும். இதற்கு நிர்வாகப்பொறுப்பு அதிகம் உண்டு.

நற்செய்திப் பணி செய்யும் முறைகள் பற்றிய குறிப்புகள் உள்ளூர் சம்பத்தப்பட்டவையாக இருந்தாலும், இந்தியாவின் பல பகுதிகளிலும் உலகத்தின் பல பகுதிகளிலும் இது போன்ற பணிகளில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு உதவியாக இருக்கும் என்று நம்புகிறேன்.

## இயல் : 10

# மனமாற்றமடைந்து திருமுழுக்குப் பெறக் காத்திருப்போரின் நோக்கங்கள்

அறியாமையில் மூழ்கியுள்ள கிராம மக்கள் கிறிஸ்தவத்தைப் பற்றி அறிய விரும்பியபோது, அதற்கான காரணத்தைக் கேட்பது அவ்வளவு நல்லதாகத் தோன்றவில்லை. பெண்களையும் குழந்தைகளையும் பற்றி சிக்கல் எதுவும் கிடையாது. அவர்களுக்குச் சிறப்பு நோக்கமும் கிடையாது. குடும்பத் தலைவன் எவ்வழியோ அவர்களும் அவ்வழியே. ஆனால் ஆண்களைப் பொருத்த வரையில் ஏதாவது நோக்கம் இருக்கும். அது நமது பணியின் தாக்கமாகவோ அல்லது அவர்கள் வாழும் இடங்களில் உள்ள சூழ்நிலைக்காரணிகளின் தாக்கமாகவோ இருக்கலாம். வேறு உயர்ந்த நோக்கம் எதுவும் இருக்க முடியாது என்று கிராமங்களின் அவர்களோடு வாழ்ந்து அவர்கள் நடுவில் பணி செய்த மற்றவர்களுக்கு நன்கு தெரியும். அவர்கள் கிறிஸ்தவக் கருத்துக்களுக்கு ஆயத்தம் என்றால் அத்துண்டலுக்கான காரணம் அவர்களுடையதன்று. அது நம்முடையதே.

உயர்ந்த நோக்கம் என்றால் என்ன என்பதை அவர்கள் கேட்டிலர். அதன் பொருளையும் அறிந்திலர். ஆன்மீகக் காரணமா? இல்லையா? என்று கேட்டறிய முற்படுவோமாயின், அவர்களுடைய கிரேக்க அல்லது அல்ஜிப்ரா சம்பந்தப்பட்ட அறிவை அறிய முற்படுவதற்குச் சமம். நல்ல நோக்கம் என்ன என்பதை காலப்போக்கில் அவர்கள் அறிவர். கிறிஸ்தவ வழிகாட்டுதலும் கட்டுப்பாட்டிலும் நிலைத்திருந்தால் உயர்ந்த நோக்கம் என்ன என்பதையும் புரிந்து கொள்வர். ஆனால் அவர்களது சமயத்தையும் கடவுள் உருவங்களையும் மூடநம்பிக்கைகளையும் விட்டுவிட்டு, திருச்சபையின் செட்டைக்குள் அடைக்கலம் பெறாவிட்டால், உயர்ந்த நோக்கம் எது என்பதை அறியச் சிறிதளவும் வாய்ப்பு இல்லை.

“இப்போது உங்களை நற்செய்தி சொல்லித்தர ஏற்றுக் கொள்ளமுடியாது. நான்கு அல்லது ஐந்து மாதங்களில், உங்களது

நோக்கம் ஆன்மீகம் என்று நாங்கள் அறிந்தால், அப்போது உங்களை ஏற்றுக் கொள்ளுவோம்" என்று கூறினால் அதன் விளைவு? அவர்களது நோக்கம் முன்பைப் போலவே நான்கு அல்லது ஐந்து மாதங்கள் கழிந்த பின்னும் இருக்கும். நான்கு அல்லது ஐந்து ஆண்டுகளோ அல்லது நான்கு தலைமுறைகளோ காத்திருந்தாலும் எந்த முன்னேற்றத்தையும் காணமுடியாது. அவர்களை எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் கிறிஸ்துவின் பள்ளியில் சேர்ப்பதுதான் நமக்கு இருக்கும் ஒரே நம்பிக்கை.

பள்ளிக்கு வரும் குழந்தைகளின் நோக்கத்தைப்பற்றி நாம் கவலைப்படுவதில்லை. அவர்களைப் பள்ளிக்கு அனுப்பும் பெற்றோரின் நோக்கத்தையும் நாங்கள் கேட்டு அறிவதில்லை. பள்ளிக்கு வந்தால் அவர்கள் கற்கலாம் என்பதில் மட்டுமே நாங்கள் அக்கறை கொள்ளுகிறோம். கடைத்தெருவில், தெருக்களில் அல்லது கோவில்களில் எமது அருளுரையைக் கேட்கும் மக்களின் நோக்கங்கள் பற்றியும் நாங்கள் அதிக அக்கறை கொள்வதில்லை. அவர்கள் கேட்பதில் ஏதாவது ஒரு செய்தி என்றைக்காவது ஒருநாள் அவர்களுக்கு நன்மை பயக்கும் என்று நம்புகிறோம்.

இப்படியிருக்க, கல்லாமையில் மூழ்கியிருக்கும் கிராம மக்கள் எங்களிடம் வந்து "உங்களுடைய அறிவையும் அன்பையும் முழுமையாக நம்புகிறோம். நீங்கள் எங்களுக்குக் கற்பிப்பது எங்களுடைய நன்மைக்காகவே என்பதை நாங்கள் நன்றாக அறிவோம். நீங்கள் கற்றுக் கொடுப்பதை நாங்கள் கற்போம் என்று உறுதி அளிக்கிறோம். நீங்கள் என்ன செய்யவேண்டும் என்று சொல்லுகிறீர்களோ அதைச் செய்கிறோம். எதைச் செய்யக்கூடாது என்று சொல்லுகிறீர்களோ அதைச் செய்யமாட்டோம். உங்களுடைய நற்செய்திகளை முறைப்படி கேட்டு அறிய விரும்புகிறோம். உங்களுடைய சமயத்தை ஏற்றுக்கொள்ள விரும்புகிறோம். கிராமங்களில் நடைபெறும் இறைவழிபாடுகளில் தவறாது பங்கேற்போம் என்று உறுதி கூறுகிறோம். 'எங்களைக் கண்காணிக்கவும் எங்களுக்கு நற்செய்தியைக் கற்றுத் தரவும், எங்களுக்கும் எங்கள் குழந்தைகளுக்கும் பயிற்சி அளிக்கவும் தயை கூர்ந்து திருப்பணிவிடையாளரை ஏற்படுத்துங்கள்" என்று அவர்களுடைய நோக்கத்தைக் கேட்பது சரியல்ல. இவர்களில் சிலரே அடுத்த நிலையை அடைந்து கிறிஸ்தவர்களாவதற்குத்

தகுதி பெறுவர். அதில் குறை எதுவும் இல்லை. அது "அழைக்கப்பட்டோர் அநேகர்; தெரிந்து கொள்ளப்பட்டவர்களோ சிலர்" என்ற இயேசுவின் வாக்குப்படியே நடக்கிறது.

நமது அருள்நாதரின் வழிகாட்டுதலையும் அப்போஸ்தலர்களின் வழியையும் பின்பற்றுவதே நமக்கு சாலச்சிறந்த திட்டம். இயேசுவின் சீடர்களில் ஒருவன் காட்டிக்கொடுக்கத் துணிந்தான். அப்போஸ்தலர்களைப் பின்பற்றிய பலர் கிறிஸ்தவத்திற்கு தீயபெயரையே தேடித்தந்தனர். எனினும் இறைப்பணியாளர்களிடம் வந்த அனைவருக்கும் அவர்கள் அருளுரை வழங்கினர். மந்தைக்குள் வரவிரும்பின அனைவரையும் மந்தையில் சேர்த்தனர். விளைச்சலைப் பற்றியோ, கனிகளைப்பற்றியோ நாம் இப்போது நினைக்கக்கூடாது. அவருடைய ஆணைக்குக் கீழ்ப்படிவதே நமது சிறப்பு நோக்கம். "உலகத்தின் சர்வசிருஷ்டக்கும் சுவிஷேத்தைப் பிரசங்கியுங்கள்" என்பதே அக்கட்டளை. இதைவிடத் தெளிவான கட்டளை இருக்கமுடியாது.

ஒரு நோக்கமின்றி வழிப்போக்கர்களுக்கு அருளுரை வழங்கும் அருட்பணியாளர்களைப் போலன்றி, கேட்போர் இறைநம்பிக்கையோடு திருமுழுக்கு பெற வேண்டும் என்ற நோக்கத்துடன் கற்பிக்க வேண்டும். அது எல்லா இறைப்பணிகளுக்கும் அடிப்படையாக அமையும். "நீங்கள் புறப்பட்டுப் போய், சகல ஜாதிகளையும் சீடராக்கி, பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானங் கொடுத்து நான் உங்களுக்குக் கட்டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்ளும்படி அவர்களுக்கு உபதேசம் பண்ணுங்கள்". உலகத்தில் உள்ள எல்லா திருச்சபைகளும் மிகவும் தெளிவுள்ள இக்கட்டளையை நிறைவேற்ற முயற்சி எடுப்பது முற்றிலும் சரியானதே. மனிதகுலம் அனைத்தும் அவரது மந்தை. திருச்சபையின் வழிநடந்தால் தவறு நடப்பதற்கு வாய்ப்பு இருக்காது. கீழ்ப்படிவது நமது கடமை. பலனை இறைவனிடம் விட்டுவிடவேண்டும். இறைவனை நம்புங்கள். அதுதான் நமது முதல் கடமை. நீதிநெறிகளில் குறிப்பிட்டுள்ளது போல, முதலாவது இறைவனை நாம் நம்பவேண்டும். நாளடைவில் நமது நம்பிக்கை, பட்டறிவு யாவும் உண்மை என்றும் சரியானவை என்றும் தானே ஏற்றுக்கொள்ளப்படும்.

பெண்கள் பற்றி ஒருசில வரிகள் எழுத விரும்புகிறேன். இவர்களைப் பிறரைப்பற்றிக் கேட்டு அறிபவர் என்று நாம் நினைப்பது சரி அல்ல. அது நகரங்களில் உள்ள ஒருவகை தனிமனிதர்களுக்கே பொருந்தும். மேலும், கிறிஸ்தவசமயம் உண்மையானதா இல்லையா என்று கேட்டறிய இவர்கள் நம்மிடம் வருவதில்லை. அது உண்மையானது என்று அவர்களாகவே நினைத்து கிறிஸ்தவத்தைப் பற்றிக் கற்றுக்கொள்ளவே நம்மிடம் வருகிறார்கள். எனவே அவர்களைக் கேட்டறிய விரும்புபவர்கள் என்று நினைப்பது பொருத்தமாகாது. 'பின்பற்றுகிறவர்கள்' என்று நினைப்பதும் பொருத்தமானதன்று.

ஏனெனில் ஏற்கனவே இருக்கும் சபையினரை அவர்கள் பின்பற்றுவதில்லை. புதுக்கிறிஸ்தவக் குழுவினராகவே இருக்கின்றனர். 'கிறிஸ்தவத்தைப்பற்றி கற்பிக்கப்படுகிறவர்கள்' என்றே நாம் அவர்களை இன்னும் அழைத்து வருகிறோம். நீளமான பெயர். ஆனால் அது எல்லாப் பொருளையும் உள்ளடக்குகிறது. கிராமங்களிலுள்ள கோவில்களில் இறைவனிடம் வேண்ட காலையிலும் மாலையிலும் கூடுகின்றனர். உண்மை அவர்களுக்குப் சொல்லப்படுகிறது. நம்முடைய இயக்கத்தின் நங்கூரமே அவர்கள்தான். நமது எதிர்கால நம்பிக்கையின் நட்சத்திரங்களும் அவர்களே. திருமுழுக்கு பெற்று கிறிஸ்தவர்களாகும் வரை இப்பெயர் நிலைத்திருக்கும். 'மனமாற்றமடைந்தவர்' என்ற பெயரும் பொருத்தமில்லை. ஏனெனில், கொள்கைகளில் முழுநம்பிக்கை கொண்டு சமய மாற்றமடைந்தவர்களுக்கும் வேறு சமயத்திலிருந்து கிறிஸ்தவத்திற்கு வந்தவர்களுக்கும் மட்டுமல்ல உலகப்பிடிகளிலிருந்து விடுபட்டு இறைவனின் திருவடிகளை இறுகப்பிடிப்பவர்களுக்கே இது பொருந்தும்.

பல்வேறு காரணங்களால் கவரப்பட்டு கிறிஸ்தவக் கருத்துக்களை ஏற்போர் பற்றி நான் கவலைப்படவில்லை. ஆனால் அவற்றைப் பெற்றபின் முதலில் அவர்களை ஏற்க மறுப்பதும், அல்லது ஏற்க கால நீட்சி செய்வதும் அல்லது கிறிஸ்தவர்களாக வேண்டும் என்ற நோக்கம் ஆன்மீகம் அல்ல என்ற கண்டறிந்தபின் அவர்களை ஏற்க மறுப்பதும் (அவ்வளவு) சரியில்லை எனத் தோன்றுகிறது.

ஆன்மீகத் தொடர்பு இல்லாத இருவகை நோக்கங்களை ஆராயும் வாய்ப்புக் கிட்டியது. உட்பகுதிகளில் வாழும் விவசாயக்

குடிமக்களிடையே காணப்படும் பொதுவான நோக்கம் ஒடுக்கப்படுதலில் இருந்து பாதுகாப்பு மட்டுமே. ஒவ்வொரு கிறிஸ்தவரல்லாத கிராமத்திலும் அதிக ஒடுக்கப்படுதல் உண்டு. வசதி உள்ளவர்களுக்கும் வல்லவர்களும் கண்டிப்பாக பணி செய்தாக வேண்டும். இல்லை என்றால் நடப்பது வேறு. அவ்வளவு கொடுமை. இவ்வகைக் கொடுமையில் இருந்து பாதுகாப்புப் பெற விரும்புவது இயற்கை; நியாயமானது.

இந்தச் சூழலில் கிறிஸ்தவக் கருத்துக்களை ஏற்றுக்கொண்டு திருச்சபையுடன் உடன் தங்களை இணைத்துக் கொண்டால், மிக வேகமாக முன்னேறி வரும் மக்கள் கொண்டுள்ள பாதுகாப்பு உணர்வு தங்களுக்கும் கிடைக்கும் என்று நினைக்கின்றனர். அவ்வித நோக்கத்தோடு வரும் மக்களை ஏற்றுக்கொண்டு அவர்களுக்கு அருளுரை அளித்து வரும் இறைப்பணியாளர்களை நான் குற்றம் சாட்டவில்லை. அவர்கள் அம்மக்களுக்கு உதவி செய்யலாம் அல்லது அவர்களது செல்களை அவர்களே பார்த்துக் கொள்ளட்டும் என்று விட்டுவிடலாம். இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு ஒரு சில நல்ல கருத்துக்களை அவர்களின் மனத்தில் நிலைநிறுத்தியதை எந்த வகையிலும் குறை சொல்லமுடியாது. ஆனால் அதற்குப்பின் நடந்த சில நிகழ்ச்சிகளைக் கண்காணிக்கும் போது அம்மக்களுடைய நடவடிக்கைகள் எப்பொழுதும் முழு மனநிறைவை அளிக்கவில்லை.

எந்த நோக்கம் அவர்களை மந்தைக்குள் கொண்டு வந்ததோ அந்த நோக்கம் அவர்களுடைய நன்னெறி வாழ்வுக்குப் பெரும் தடையாக உள்ளது. அவர்கள் இதுவரை பொறுத்துக் கொண்டிருக்கும் ஒடுக்குதலை, கொடுமையை அடுத்த சாரார் வேறு கோணத்தில் பார்க்கின்றனர். அதை நிலஉரிமை பற்றியது என்றே அவர்கள் விவரிக்கின்றனர். நாளடைவில் நிலத்திற்குச் சொந்தக்காரர்களாக அவர்கள் விரும்புகின்றனர் என்று கூறுகிறார்கள் அடுத்தகுழு மக்கள். இச்சிக்கல் நீதிமன்றத்திற்கு எடுத்துச்சொல்லப்படுகிறது. அங்கு வெற்றி கிடைக்கிறது. சாதாரண வெற்றி அல்ல. ஒரு பரம்பரைக்குக் கிடைத்த வெற்றி. புதுகிறிஸ்தவர்கள் மனத்தில் புது எழுச்சி! அதன் மிக மோசமான விளைவு என்ன தெரியுமா? தங்களுக்கு அருகில் வாழும் இவர்களுக்கும் வெறுப்புணர்வு! தாங்கள் மனமாற்றமடைய முயற்சிக்கும் அம்மக்களே இவர்களுக்கு பகைவராகி விடுகின்றனர்.

அவர்கள் கிறிஸ்தவச் செய்திகளைக் கேட்க மகிழ்ச்சியுடன் வருவதற்கான மற்றொரு நோக்கம் பஞ்சகாலத்தில் நாம் செய்த நலப்பணிகள். புதிதாய் வந்தவர்கள் இவ்வாறு கூறுகிறார்கள். "இடுக்கண்களைவது நட்பு. நாங்கள் இடுக்கண்களைக் கடந்து செல்கையில் அவைகளைக் களைந்தவர்கள் நீங்களே. எங்களது உண்மையான நண்பர்கள நீங்கள் என்பதை எடுத்துக்காட்டி விட்டீர்கள். நீங்கள் நல்லவர்கள் என்பதை நாங்கள் பார்த்துவிட்டோம். நாங்கள் துன்பப்படும் போது எங்களது தெய்வங்கள் எங்களுக்கு உதவவில்லை. விஷ்ணு, சைவச் சாமியார்கள் எங்களை அச்சமயத்தில் கண்டு கொள்ளவில்லை.

உங்கள் திருமறையில் குறிப்பிட்டுள்ள நல்ல சமாரியன் போன்று எங்களுக்கு உங்கள் உதவிக்கரங்களை நீட்டினீர்கள். அதை நாங்கள் மறக்க முடியுமா எனவே உங்கள் அருளுரைகளைக் கேட்க நாங்கள் தயக்கமின்றி வருகிறோம். இப்போது நாங்கள் உங்களுடைய சீடர்கள். நாங்கள் எதைக் கற்றுக்கொள்ள வேண்டுமோ அதை எங்களுக்கு க்றபியுங்கள். நாங்கள் பாவிகள். மீட்பின் வழியைக் கண்டுகொள்ள உங்களிடத்திற்கு வருகிறோம்". இதுதான் அவர்களது உறுதியான அறிக்கை. திருப்பணிவிடையாளர் கற்றுக்கொடுக்கும் கருத்துக்களை எளிதில் கற்றுக்கொள்வார்கள். இந்த நோக்கங்கொண்ட மக்களுக்குக் கிறிஸ்தவச் சத்தியத்தைக் கொடுப்பதினால், கிறிஸ்தவ வாழ்க்கையில் முன்னேற எது தடையாயிருக்கும்? கிறிஸ்தவத்தால் அவர்கள் நன்மை பெற்றிருக்கின்றனர். இது அவர்களுக்கு நல்ல படிப்பினையையும் கற்றுத்தந்திருக்கிறது. இறைவன் அவர்களுக்கு நன்மை செய்திருக்கிறார். உள்ளங்களை மகிழ்ச்சியினால் நிரப்பியுள்ளார். எனவே பயனற்ற சிலைகளை விட்டுவிட்டு என்றும் உயிரோடிருக்கிற இறைவனிடம் திரும்பியுள்ளனர். இதைவிட இயற்கையானது ஒன்றும் இருக்கமுடியாது. இதைவிட பாராட்டத்தக்க நிகழ்ச்சி எதுவும் இருக்கமுடியாது. இரண்டு செயல்களில் இந்த மக்கள் முந்தைய கிறிஸ்தவர்களை விட நல்ல நிலைமையில் உள்ளனர்.

அவர்கள் எவரையும் வெறுக்கவில்லை. அதற்கு அவசியமும் இல்லை. சுற்றிலும் உள்ளவர்கள் எந்த இனத்தைச் சேர்ந்தவர்களாயிருந்தாலும், அவர்களிடம் நல்ல உறவு

வைத்திருக்கின்றனர். எவரையும் கீழே தள்ளுவதோ அல்லது மற்றவர்களை வென்றுவிட்டோம் என்ற வெற்றிக்களிப்பில் பெருமை கொள்ளுவதோ அவர்களுடைய நோக்கமன்று. கிறிஸ்தவக் கொள்கைகளின் சிறப்பான பண்பும், சமாதானத்திற்கு அடிப்படையுமான அன்பைக் கற்றுக்கொள்ளுவதில் அவர்களுக்கு எவ்வகை வருத்தமும் இல்லை.

அவர்களைச் சுற்றி உள்ளவர்களும் அவர்கள் மீது பொறாமை கொள்ளவுமில்லை; அவர்களைக் குறித்து ஐயப்படவும் இல்லை. யாரும் அவர்களைத் துன்புறுத்தவும் விரும்பவில்லை; கிறிஸ்தவத்தை விட்டு அவர்களைத் துரத்தவும் விரும்பவில்லை. ஏனெனில் அவர்கள் கிறிஸ்தவர்களானதால் யாருக்கும் எவ்வகைத் துன்பமும் இல்லை; இழப்பும் இல்லை. அவர்களைச் சுற்றியுள்ள செல்வந்தரும் ஏழைகளும் அவர்களைப் பற்றி ஒரே வகையாகவே எண்ணுகின்றனர். அவர்களைக் குறைகூறாமல், துன்பக்காலத்தில் மேலை நாட்டு மக்களிடம் உதவி பெற்று, தங்களுக்குத் துன்பக்காலத்தில் உதவிய மக்களின் சமய நம்பிக்கையுடன் தங்களை இணைத்துக் கொண்டது முற்றிலும் சரியே என்று கூறுகின்றனர். இந்துக்களைப் பொறுத்தவரையில் ஒருவர் சமயப்பற்று உடையவராய் இருந்தால் போதும். அவர் எந்த சமயத்தினர் என்பது தேவை அல்ல. ஆவி சார்ந்ததல்லாத பலநோக்கங்களுக்காக மக்கள் கிறிஸ்தவ சமயத்தைத் தழுவ முற்படுகின்றனர்.

இதுவரை நான் குறிப்பிட்ட கருத்துக்கள் யாவும் அறியாமையில் மூழ்கியுள்ள இந்திய விவசாயக்குடிமக்களைப் பற்றியதேயாகும். உயர்ந்த நோக்கங்களுக்காகவும் உயர்ந்த கிறிஸ்தவத்திற்காகவும் கிறிஸ்தவ சமயத்தை ஏற்றுக் கொண்டவர்களும் ஆங்காங்கே உண்டு. அவர்கள் அனைவரும் படித்தவர்களே. குறிப்பாக, அவர்கள் அனைவரும் நமது சபை பள்ளிகளில் படித்தவர்களே. கிறிஸ்தவ சமயத்தை அதிகமாக ஏற்றுக்கொள்ளும் மற்றொரு மக்கட் கூட்டமும் உண்டு. அவர்கள் நற்செய்திக்குழு உறுப்பினர்களின் நற்செய்திப்பணியின் பயனாக வந்தவர்கள். S.P.G. ஆளுகைக்குட்பட்ட சபைகளில் உள்ள இந்நற்செய்திக் குழுக்கள் தங்கள் பணி பற்றிய அறிக்கையை ஒவ்வொரு மாதமும் என்னிடம் ஒப்படைக்க வேண்டும். இக்குழுக்களின் பணியின்றி பஞ்ச நிவாரணப்பணி மக்களிடையே இவ்வளவு பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியிருக்காது. நான்

குறிப்பிட்டுள்ள மக்கள் எவ்வகை எதிர்பார்ப்பும் இல்லாமல் கிறிஸ்தவ சமயத்தில் சேரும் நோக்கம் என்ன? அதற்கு முதற் காரணம் அவர்களல்லர். தங்களுடைய பெரும் முயற்சியினால் அவர்களை அழைத்து வருகிறார்களே அவர்கள்தான் என்று நான் எண்ணுகிறேன்.

அவர்கள் அம்மக்களிடம் நீண்டகாலமாக நற்செய்தியை அறிவித்திருக்கின்றனர். கூட்டங்களுக்கு அடிக்கடி அழைத்து வருகின்றனர். நாம் ஏன் இவர்கள் சொல்லுவதை ஏற்றுக்கொள்ளக் கூடாது? என்று எண்ணிச் சபைகளில் இணைகின்றனர். மேலும் அவர்களுடைய உறவினர்கள் ஏற்கனவே கிறிஸ்தவ சமயத்தில் சேர்ந்துள்ளனர் அல்லது சேர்ந்து கொண்டிருக்கின்றனர்; ஏனெனில் இப்படிப்பட்ட இயக்கங்களுக்குக் கிராமத்தில் உள்ள இந்துக்களிடம் நல்ல மதிப்பு உண்டு. அவர்கள் வழிநடத்துகிறவர்கள் அல்லர்; பின்செல்லுகிறவர்கள். இந்தியாவில் உள்ள எல்லாச் சிறப்பான இயக்கங்களிலும் மக்கள் கூட்டங்கூட்டமாகவே இணைந்து வந்திருக்கின்றனர். எனவே இது கிறிஸ்தவத்திற்கு மட்டும் பொருந்தும் எனக்கூறவியலாது.

நம்மோடு இணைந்த மக்களின் பண்பு நலன்களைப்பற்றி நான் கண்டவற்றைக் கூறுவது பொருத்தமாகாது எனக்கூற இயலாது. கடந்த நான்கு மாதங்களாக இராமநாதபுரம், திருநெல்வேலியின் வடபகுதியில் உள்ள பணித்தளங்களையும் சபைகளையும் பார்வையிட்டு வருகிறேன். பயணம் இன்னும் முடியவில்லை. இந்நாட்களில் பெரும்பாலும் கூடாரங்களிலேயே தங்குகிறேன். இதுவரை 105 நகரங்களையும் கிராமங்களையும் அங்குள்ள சபைகளையும் நேரில் கண்டுள்ளேன். அவைகளில் பெரும்பாலான சபைகள் புதியவை. எல்லா உறுப்பினர்களும் புதியவர்கள். அவர்களிடம் சில வினாக்கள் கேட்டேன். அடிப்படைக் கருத்துகள் பற்றி அருளுரை வழங்கினேன். அவர்களைச் சுற்றிலும் இருக்கும் கிறிஸ்தவரல்லாதவரைப் பற்றியும் கேட்டறிந்தேன். முந்திய நிலையைவிட பிந்திய நிலை நன்றாக இருந்தது என்ற எண்ணம் என் மனத்தில் உண்டானது. புதியவர்கள் அதிக அறிவுடையவர்களாகவும் முற்போக்குவாதிகளாகவும் எதிர்கால நம்பிக்கை கொண்டவர்களாகவும் எனக்குத் தோன்றினர். அருகில் உள்ள கிறிஸ்தவரல்லாதவருக்கு நற்செய்தியை அறிவிக்கத் தங்களுக்குள்ளே குழுக்கள் அமைத்திருக்கிறார்கள் என்பதை அறிந்து வியந்தேன்.

## இயல் : 11
# விவிலியம் மற்றும் ஜெபபுத்தகம் தமிழ்மொழியாக்கமும் புதுப்பித்தல் பணியும் தமிழ் ஜெபபுத்தகத்தின் முதல் திருத்திய பதிப்பு

1841ஆம் ஆண்டு நவம்பர் மாதம் திருநெல்வேலிக்கு வந்தேன். இங்கு வந்த சிறிது காலத்தில், 1842யில் தமிழ் ஜெப புத்தகத்தின் திருப்பதல் பணிக்காக சென்னைப் பேராயர் ஸ்பென்சர் அவர்களால் பணியமர்த்தப்பட்ட இறைபணிக்குழுவில் நானும் சேர்க்கப்பட்டேன். அச்சமயம் பழக்கத்தில் இருந்த புத்தகம் பேராயர் ஹீபரின் வேண்டுகோளுக்கு இணங்க சென்னை வேப்பேரியில் உள்ள S.P.G. இறைப்பணியாளர் அறிவர் இராட்லர் (Dr. Rottlar) அவர்களால் உருவாக்கப்பட்டு பதிப்பிக்கப்பட்டது. அவர் ஒரு ஜெர்மானியர். எனவே குருத்துவம் தொடர்பான ஆங்கில மரபுச் சொற்களையும் அவைகளின் பொருளையும் நன்றாக அறிந்திருப்பார் என்பது ஐயத்திற்குரியது. தகுதி வாய்ந்த ஆங்கில இறைப்பணியாளர்கள் கிடைத்ததும் ஜெபபுத்தகத்தைத் திருத்தும் பணியைத் தொடங்க வேண்டும் என்ற எண்ணம் இருந்தது. திருநெல்வேலியில் உள்ள இறைப்பணியாளர்கள் அனைவரும் அக்குழுவில் இடம் பெற்றுள்ளனர். உறுப்பினர்களின் விவரம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

<u>C.M.S. இறைப்பணியாளர்கள்</u>

ஜாண் தாமஸ்
ஜார்ஜ் பெற்றிற்
பால் பசிபிக் சாப்டர்

ஸ்டீபன் ஹாப்ஸ் (பின்னால் மொரிஷியஸ் பேராயத்தின் முதன்மை டீக்கன் ஆனவர்.)

ஜாண் தேவசகாயம், சிறந்த உள்நாட்டு ஆயர். பொதுவாக 'ஜான்' என்று அழைக்கப்படுபவர்.

சார்ஜன்ட் (இப்போது பேராயராக இருப்பவர்)

டென்ட், கிழக்கு இந்தியன்

**S.P.G. இறைப்பணியாளர்கள்**

ஏ.எஃப். கேமரர்
ஜி.ஒய். ஹேய்ன்
ஆர். கால்டுவெல் (இப்போது பேராயராக இருப்பவர்)
அறிவர் ஜி.யு.போப்.

இவர்களில் மிகவும் மூத்தவர் ஜாண்தாமஸ். தமிழில் நல்ல புலமை பெற்றவர். அவர்களில் சிறந்த திருந்துநர் ஜார்ஜ் பெற்றிற். பல சிறந்த தமிழ்ப்பாமாலைகளுக்கு உரிமையாளர். S.P.G.யைச் சேர்ந்த தாமஸ் பிரதர்ட்டன் அச்சமயம் தஞ்சாவூரில் இருந்தார். நீண்ட காலம் வரை இங்கு வரவில்லை. உறுப்பினர்கள் அனைவரும் மாதம் ஒருமுறை ஏதாவது ஒரு இறைப்பணியாளர் வீட்டில் கூடுவோம். ஒவ்வொரு கூட்டமும் மூன்று அல்லது நான்கு நாட்கள் நீடிக்கும். இக்கூடுகை பயனுள்ளதாகவும் மகிழ்ச்சி அளிப்பதாகவும் இருந்தது. எங்களைப் பற்றிய சுவையான நிகழ்வுகள், சிறப்புச்செய்திகள் இக்கூட்டங்களில் கலந்துரையாடப்பட்டன. தமிழ் ஜெபபுத்தகத்தைத்தவிர மற்ற பல செயல்கள் அக்கூட்டங்களில் (புதுப்பிக்கப்படுகின்றன) திருத்தப்பட்டு சீர்ப்படுத்தப்படுகின்றன என்று நகைச்சுவையாகக் குறிப்பிடுவதுண்டு. திருத்திய பதிப்பு பொதுவாக தமிழ்த்திருச்சபையால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. தமிழ் ஜெபபுத்தகத்தின் இத்திருத்திய பதிப்பு 1864இல் வெளியிடப்பட்டது. கருத்துக்கள் எவையும் புதியனவாக இருந்தால் நாளடைவில் அவைகளையே மக்கள் ஏற்றுக்கொள்ளுவர். அதன்படி முழு திருமறையையும் திருத்தியமைக்கப்படவேண்டும் என்ற கோரிக்கையும் எழுந்தது. அதுபற்றி பின்னால் எழுதுகிறேன்.

## தமிழ்த்திருமறையின் திருத்திய பதிப்பு

இந்த சிறப்பான பணி 11 ஆண்டுகள் – ஏப்ரல் 1858 முதல் ஏப்பிரல் 1869 வரை – நடைபெற்றது. இத்திருப்புதல் பணி மிகவும் விரைவில் தேவை என்று எண்ணப்பட்டதால் உடனே தொடங்கப்பட்டது. முதலாவது தமிழ் புதிய ஏற்பாடு எடுத்துக் கொள்ளப்பட்டது. தமிழில் புதிய ஏற்பாட்டை முதன் முதலின் மொழியாக்கம் செய்தவர் இந்தியாவிற்கு வந்த முதல் புராட்டஸ்டன்ட் இறைப்பணியாளர் பர்தலோமேயு சீகன் பால்கு ஆவார். 18ஆம் நூற்றாண்டின் முதல் பகுதியில் நடைபெற்ற இப்பணிக்கு உதவியவர்கள் ஸ்குல்ஸ் மற்றும் தரங்கம்பாடியில்

உள்ள இறைப்பணியாளர்களுமே. அதே நூற்றாண்டின் இறுதியில் இது மீண்டும் திருப்புதல் செய்யப்பட்டது.

புகழ்பெற்ற ஜெர்மன் இறைப்பணியாளர் பெப்ரிஷஸ் என்பவரால் ஏறத்தாழ மீண்டுமாய் எழுதப்பட்டது. மற்றொரு திருத்திய பதிப்பு C.M.S. இறைப்பணியாளர் இரேனியஸ் என்பவரால் திருநெல்வேலியில் வெளியிடப்பட்டது. எனினும் இவ்விரு மொழியாக்கத்திற்கும் தமிழ் பேசும் மக்களிடையே போதிய வரவேற்பு இல்லை. பெப்ரிஷஸ்ஸின் மொழியாக்கம் மூலமொழிக்கு ஒத்திருந்தாலும், அவரது நடை தமிழ்மொழி நடைக்கு ஒத்துவரவில்லை. இரேனியஸ்ஸின் மொழியாக்கம் தமிழ் மொழி நடைக்கு ஒத்திருந்தது. எனினும் அவர் எவ்வகைக் காரணமுமின்றி மற்ற ஐரோப்பியர்களின் நடையினின்று விலகிச் சென்றது மட்டுமின்றி, பெப்ரிஷஸின் துல்லியமான மொழியாக்கத்திலிருந்து தேவையில்லாமல் மாற்றம் செய்திருக்கிறார்.

1850இல் அருட்திரு. பெர்சீவல் மற்றும் யாழ்ப்பாணம் இறைப்பணியாளர்களால் மற்றுமொரு வரைவு உருவாக்கப்பட்டு அது பின்னர் சென்னையில் மீண்டும் திருத்தியமைக்கப்பட்டது. 'தற்காலிக வரைவு' என்றழைக்கப்பட்ட இம்மொழியாக்கம் தமிழ் வேதாகமத் திருத்திய பதிப்புக்கு மிகவும் உதவியாக இருந்தது. மாறுபட்ட சுவையும் விருப்பமும் கொண்டுள்ள இப்பகுதியில் அந்த 'வரைவு' எடுபடவில்லை. அதில் பெப்ரிஷஸ், இரேனியஸ் ஆகியோரின் பதிப்பில் உள்ள சிறப்புத்தன்மைகள் எதுவும் இல்லை. தனிமனிதனின் கருத்தையே அது எதிரொலிக்கிறது. எனவே அது மக்களால் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. இன்னும் 'தற்காலிக வரைவாகவே' உள்ளது.

முந்நூறு ஆண்டுகளாகத் தமிழ்நாட்டில் பணிசெய்து வந்த உரோமன் கத்தோலிக்கர்கள் தமிழில் திருமறையை வெளியிடுவதைத் தவிர்த்து வந்தனர். அவர்கள் நினைத்திருந்தால் பெஸ்கி போன்ற சிறந்த ஐரோப்பியத் தமிழ் அறிஞர்களின் உதவியுடன் வெகுகாலத்திற்கு முன்பே தமிழில் திருமறையை அருமையாக மொழியாக்கம் செய்திருக்கலாம். எனினும், நற்செய்தி நூல்களையும், அப்போஸ்தலர் நடவடிக்கைகளையும் அவர்கள் பாணியில் மொழியாக்கம் செய்து 1857ஆம் ஆண்டு பாண்டிச்சேரியில் வெளியிட்டனர். ஆனால் இது மூலமொழியான கிரேக்கத்திலிருந்து அல்ல, வல்கேட் இலத்தீன் மொழியிலிருந்தே

தமிழில் மொழியாக்கம் செய்யப்பட்டது. இம்மொழியாக்கம் ஏறத்தாழ பெப்ரிஷஸ்ஸின் மொழியாக்கம் போன்றே இருந்தது. பொதுவாக உரோமன் கத்தோலிக்கரது தமிழ் இனிமையாக இருக்கும். ஆனால் இந்த மொழியாக்கத்தில் அதற்கு இடமே இல்லை. மாறாக, பெரும்பாலான பகுதிகள் செம்மொழியும் கொச்சை மொழியும் கலந்த நடையில் எழுதப்பட்டிருந்தன.

இவ்வாறு பலதரப்பட்ட திருமறை மொழியாக்கங்கள் இருப்பின், அவை தமிழக மக்களின் ஆன்மீக வாழ்க்கைக்குக் கேடு விளைவிக்கும். இத்தீமையினின்று மக்களைக் காப்பாற்ற ஒரு சிறந்த மொழியாக்கம் தேவை என உணரப்பட்டது. அது எல்லாக் குழுவினராலும் ஏற்றுக்கொள்ளக்கூடியதாகவும், எல்லாக் குழுவினரையும் ஒன்றாக இணைக்கக்கூடியதாகவும் இருக்கவேண்டும். வேதாகமச் கழகத்தின் சென்னைக் கிளை ஒரு புதிய பதிப்பை வெளியிடத் தீர்மானம் செய்தது. அதற்காக ஒரு குழு அமைக்கப்பட்டது.

முன்பு வெளிவந்துள்ள பதிப்புக்களின் அனைத்து சிறப்புக் கூறுகளையும் உள்ளடக்கியதாக அப்பதிப்பு இருக்க வேண்டும் எனவும் தீர்மானிக்கப்பட்டது. அக்குழுவின் தீர்மானப்படி S.P.G. இறைப்பணியாளர் அருட்திரு. பவர் சிறப்புத் திருத்துநராக அமர்த்தப்பட்டார். அவருக்கு உதவியாகத் தமிழ்நாட்டில் பணியாற்றும் இறைப்பணி இயக்கங்களின் சார்பாளர்கள் பணியாற்றினார். திருத்தும்பணி முடிந்ததும் பவர் மீண்டும் ஒருபகுதியைத் தானே திரும்பிப்பார்க்கவேண்டும் என்றும், அவர் பார்த்த அப்பகுதியை மற்ற உறுப்பினர்கள் திருப்பிப்பார்க்க வேண்டுமென்றும், எல்லாப்பகுதிகளும் இவ்வாறு மீண்டும் திருப்பிப் பார்க்கப்பட்டபிறகு அனைவரும் ஓரிடத்தில் கூடி மறுபடியும் திருப்பிப்பார்க்க வேண்டும் என்றும் ஒழுங்கு செய்யப்பட்டிருந்தது. இப்பணியில் ஈடுபட்டிருக்கும் காலத்தில் பவருக்கான ஊதியத்தில் ஒரு பாதியை S.P.G. இயக்கமும், மறு பாதியை வேதாகமக் கழகமும் கொடுக்க வேண்டும் என்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது. உறுப்பினர்களுக்கான பயணச் செலவு உட்பட அனைத்து இதரச் செலவுகளும் வேதாகமக் கழகத்தாரால் கொடுக்கப்படும்.

உறுப்பினர்கள்

அருட்திரு F. பேலிஸ், திருவாங்கூர். இலண்டன் இறைப்பணி இயக்கத்தின் சார்பாளர்.

" T. பிரதர்ட்டன் எம்.ஏ. திருநெல்வேலி. S.P.G. சார்பாளர்.

" A. பர்கஸ், சென்னை. வெஸ்லியன் இறைப்பணி இயக்கச் சார்பாளர்.

" ஆஷ்டன் டிப், திருநெல்வேலி. C.M.S. சார்பாளர்.

" J. கில்னர், யாழ்ப்பாணம், சிலோன்(இலங்கை) வெஸ்லியன் இறைப்பணி இயக்கம் மற்றும் செயலர், வேதாகமக்கிளைக் கழகம், யாழ்ப்பாணம்.

" C.S. கோலாஃப், தஞ்சாவூர். S.P.G. சார்பாளர்.

" E. சார்ஜன்ட், திருநெல்வேலி. C.M.S. சார்பாளர்.

" J.W. ஸ்கட்டர் வட ஆற்காடு, அமெரிக்க–டச்சு சீர்திருத்தச் சபைச் சார்பாளர்.

" L. ஸ்பால்டிங் D.D. யாழ்ப்பாணம் இலங்கை. அமெரிக்க இறைப்பணி வாரியம் மற்றும் தலைவர், யாழ்ப்பாண வேதாகமக் கிளைக் கழகம்.

" W. ட்ரேசி M.A. மதுரை. அமெரிக்க இறைப்பணி வாரியச் சார்பாளர்.

" பவர், சென்னை. S.P.G. இறைப்பணியாளர், முதன்மை திருத்துநர்.

" R. கால்டுவெல் D.D.LLD., திருநெல்வேலி. S.P.G. சார்பாளர் மற்றும் சார்பாளர்களின் செயலர்.

சார்பாளராக இல்லாவிட்டாலும் வேதாகமத்தின் தமிழ் முனிவர் திரு. முத்தையாபிள்ளை எல்லாக் கூட்டங்களிலும் கலந்துகொண்டார். அவரது பரந்த மொழி அறிவும் நுண்மாண்நுழைபுலமும் இப்பணியில் பேருதவியாக இருந்தது.

திரு. பவர் மற்றும் திரு. டிரேசி அறிவர்கள் ஆனார்கள். திரு. சார்ஜன்ட், திரு. கால்டுவெல் இருவரும் பேராயராக

அருட்பொழிவு பெற்றனர். திரு. பர்கஸ்ஸிம் கில்னரும் இங்கிலாந்துக்குத் திரும்பிவிட்டன. அவர்கள் உயிருடன் இருக்கிறார்களா இல்லையா என்பதே நான் அறியேன். அறிவர் ஸ்பால்டிங், திரு. கில்னர் ஆகிய இருவரும் சாதாரணக் கூட்டங்களில் கலந்து கொள்ளமுடியவில்லை. ஆனால் சென்னையில் நடைபெற்ற இறுதிக் கூட்டத்தில் பங்கேற்றனர். பேலிஸ், பிரதர்ட்டன், டிப், ஸ்பால்டிங், டிரேசி, கோலாஃப், பவர் ஆகிய ஏழுபேரும் இறைவனுடைய திருவடியை அடைந்துவிட்டனர்.

லெப்ஸிக் லூத்தரன் இறைப்பணியாளர்கள் தங்கள் சார்பாளரை அனுப்பாதது பற்றி வருந்தினோம். எந்த அடிப்படையில் நமது பணி நடைபெறுகிறது என்பதை அவர்கள் பொதுவாக ஏற்றுக்கொள்ளவில்லை. பெப்ரிஸஸ் பதிப்பிற்கும் திருத்திய பதிப்பிற்கும் உள்ள சிறிய மாறுதல்களையும் அவர்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை. பெப்ரிஸஸ் பதிப்பை அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதை அவர்களது வாதம். திருத்தப்பட்ட எப்பகுதியும் அவர்களுக்கு மனநிறைவு அளிக்கவில்லை. இருப்பினும், அவர்களின் நேர்மையானக் கருத்துக்களை ஏற்றுக்கொண்டு வேண்டிய திருத்தங்கள் செய்தோம். இப்பணிக்காலம் முழுவதும் எவரிடமிருந்தும் நிறைகுறைகள் வருகின்றனவா என்று காத்துக்கொண்டே இருந்தோம்.

ஒவ்வொரு சார்பாளரும் ஒவ்வொரு துறையில் தனித்திறமை பெற்றிருந்ததால் ஒவ்வொரு சிக்கலானப் பகுதியும் மிகவும் அக்கறையுடன் ஆராயப்பட்டு குறை நீக்கப்பட்டது. இருவரின் தனித்திறமை இப்பணியில் மிகவும் பயனுள்ளதாய் இருந்தது. ஒன்று பவரின் தனித்திறமை. எல்லா மொழியாக்கமும் அவருக்குத் தண்ணீர் பட்ட பாடு. மற்றொன்று பிரதர்ட்டனின் எபிரேய மொழி அறிவு. நாங்கள் அவரை 'ரபி' என்று அழைப்பது வழக்கம். பழைய ஏற்பாட்டில் எப்படிப்பட்டச் சிக்கல்கள் ஏற்பட்டாலும் நடமாடும் பேரகராதியான அவர் உடனே அவைகளைத் தீர்த்து வைப்பார்.

தொடக்கம் முதல் முடிவு வரை எங்களிடையே காணப்பட்ட ஒற்றுமைக்காக நாங்கள் இறைவனுக்கு நன்றி செலுத்தினோம். சார்பாளர்கள் பற்பல பணித்தளங்களிலிருந்து வந்தாலும் தமிழ்நாட்டின் பல இடங்களிலிருந்து வந்தாலும் பல

பழக்கவழக்கங்களை உடையவர்களாக இருந்தாலும் பல கருத்துக்களை உடையவர்களாக இருந்தாலும், எந்தக் கூட்டத்திலும் கருத்து வேறுபாடு இருந்ததில்லை. பல எண்ணங்கள் கொண்டோர் பல விருப்பங்கள் உடையோர் கூடும் கூட்டங்களில் கருத்துவேறுபாடு ஏற்படுவது இயல்பு. எனினும் அவைகள் கிறிஸ்தவப்பண்பையும் அன்பையும் தாண்டிச் செல்லவில்லை. கருத்துவேறுபாடுகள் ஏற்படும் நேரங்களில் தனிப்பட்டவரின் புலமையை விடச் சத்தியமே மேலோங்கி நிற்க வேண்டும் என்றும் திருமறைக்கே முதலிடம் கொடுக்க வேண்டும் என்றும் அனைவரும் விரும்பினர். இறையியல் அல்ல, மொழியியல் கருத்துக்களே எங்களுக்கு முன்னே இருந்த பெருங்கேள்விக்குறிகள்.

1861ஆம் ஆண்டு தொடக்கத்திலேயே பவர் தனது பணியைத் தொடங்கிவிட்டார். ஏப்ரல் மாதம் வரை சார்பாளர்களின் முதற்கூட்டமே நடைபெறவில்லை. புதுப்படிவத்தைத் உருவாக்குவதிலும் ஆராய்ந்து பார்ப்பதிலும் சார்பாளர்களின் கருத்துக்களை அத்துடன் சேர்ப்பதிலும் அதிக நேரம் செலவிடப்பட்டது. 1861ஆம் ஆண்டு ஏப்ரல் 29ஆம் நாள் சார்பாளர்களின் முதல் கூட்டம் தொடங்கப்பட்டு ஆறு வாரங்கள் தொடர்ந்து நடைபெற்றது. தினமும் ஒன்பது மணிநேரம் பணி செய்தோம். நான்கு நற்செய்திப் புத்தகங்களும் அப்போஸ்தலருடைய நடபடிகளும் திருத்தியமைக்கப்பட்டன. பவரைச் சேர்த்து நான்கு சார்பாளர்கள் மட்டும் வந்திருந்தனர். திரு.டிரேசி, திரு.சார்ஜன்ட், அறிவர் கால்டுவெல் ஆகியோர் மற்ற மூவர். இரண்டு ஆண்டுகளுக்குப்பின் பவர், சார்ஜன்ட், கால்டுவெல் ஆகியோர் அதே இடத்தில் புதிய ஏற்பாட்டைத் திருத்தும் பணியை முடிக்கக்கூடினர்.

மேலும், இந்தியாவில் உள்ள நிலையற்ற தன்மையுள்ள வாழ்க்கை நடுவிலும், ஏழு ஆண்டுகளுக்குப்பின் பழைய ஏற்பாட்டு திருத்தும் பணியை நிறைவு செய்ய அதே இடத்தில் கூடி வர இறைவன் அருள் செய்தார். சார்பாளர்களின் இரண்டாம் கூட்டம் பழனிக்குன்றுகளில் உள்ள கொடைக்கானலில் 1867ஆம் ஆண்டு ஜூலை மாதம் நடைபெற்றது (அங்கிருந்து இம்மலரும் நினைவுகளை எழுதிக் கொண்டிருக்கிறேன்) 1863ஆம் ஆண்டு ஜூன் மாதம் 18ஆம் நாள் முதல் ஆகஸ்டு மாதம் 12ஆம் நாள் வரை நடைபெற்றது. நாங்கள் தினமும் 9:30 மணிநேரம் பணி

செய்தோம். முதல் கூட்டத்தில் பங்குபெற்றவர்களே இதிலும் பங்கு பெற்றனர். புதிதாக இக்கூட்டத்திற்கு வந்தவர் கோலாஃப். இவர் தஞ்சாவூர் இறைப்பணியாளர்களின் சார்பாளர். சிறுவயது முதலே பெப்ரிஷஸின் திருமறையையே அவர் பயன்படுத்தி வந்ததால், அவருடைய உதவி மிகவும் பயனுள்ளதாய் இருந்தது.

சார்பாளர்கள் படித்து ஆய்வு செய்வதற்கு ஏற்றதாக ஐந்து ஆகமங்கள், சங்கீதங்கள் ஆகிய நூல்களை உள்ளடக்கிய பழைய ஏற்பாட்டுப் பகுதிகளைப் பவர் சேர்த்து அச்சிட்டார். இறுதிப்பகுதி இவர்கள் கையில் கிடைத்ததும் ஒரு கூட்டம் குற்றலாத்தில் 1886ஆம் ஆண்டு ஆகஸ்டு 2ஆம் நாள் கூட்டப்பட்டது. இக்கூட்டத்தில் பழைய ஏற்பாட்டில் உள்ள எல்லாப் புத்தகங்களுக்கும் இறுதி வடிவம் கொடுக்கப்பட்டடது. குற்றாலத்தில் தொடங்கப்பட்ட அக் கூட்டம் நவம்பர் 10ஆம் நாள் பாளையங்கோட்டையில் நிறைவு பெற்றது. மூன்று மாதங்களும் ஒன்பது நாட்களும் நடைபெற்ற இக் கூட்டங்களில் முதல் இரண்டரை மாதங்களில் ஒரு நாளுக்கு 7 மணி நேரமும் மீதி நாட்களில் 9:30 மணி நேரமும் பணி செய்தோம்.

இக்கூட்டங்களில் புதிதாக வந்தவர்கள் திரு. பர்கெஸ், அறிவர். J.W. ஸ்கட்டர், திரு. டிப், திரு. பிரதர்ட்டன் ஆவார்கள். திரு. பேலிஸ் கூட்டத்திற்கு வரமுடியவில்லை. படிப்பதிலும் உருவாக்குவதிலும் ஒராண்டு ஏழு மாதங்களைக் கழித்தபின் நான்காவது கூட்டத்திற்கு வந்திருந்தார். இதுவே இறுதிக் கூட்டம். 1868ஆம் ஆண்டு ஜுன் மாதம் 24ஆம் நாள் குற்றாலத்தில் தொடங்கிய இக்கூட்டம் அக்டோபர் மாதம் 23ஆம் நாள் பாளையங்கோட்டையில் முடிவுற்றது. இந்த நான்கு மாதங்களும் தினமும் 8:30 மணி நேரம் பணி செய்தோம். இக்கூட்டங்களில் பழைய ஏற்பாடு மட்டுமல்ல, திருமறை முழுவதும் திருத்தியமைக்கப்பட்டு இறுதி வடிவத்தைப் பெற்றது. அச்சடித்து வெளியிடுவதைத் தவிர வேறு எதுவும் செய்ய வேண்டியதில்லை.

இடைவிடாது 4 மாதங்கள் இப்பணியில் ஈடுபட்டதினால் பல்வேறு பொறுப்புகளைக் கொண்ட சார்பாளர்களுக்கு மிகுந்த வசதிக் குறைவுகள் ஏற்பட்டிருக்கும். எனினும் இப்பணியின் இன்றியமையாமையை அவர்கள் உணர்ந்திருந்தனர். இந்த உயர்ந்த பணிக்காக எவ்வகை வசதிக் குறைவுகளையும் அவர்கள் தாங்கிக் கொண்டனர். திருப்புதல் பணிக்கு அவர்கள் செலவிட்ட

நேரம் பத்தரை மாதங்கள். இதில் ஏழு மாதம் ஒன்பது நாட்கள் பழைய ஏற்பாட்டிற்கே செலவிட நேர்ந்தது. இடைப்பட்ட நேரங்களில் இப்பணிக்காக எடுத்துக் கொண்ட நேரம் இதில் அடங்காது. இவ்வளவு நீண்ட காலமாக இவ்வளவு நீண்ட நேரம் தொடர்ந்து பணி செய்ய கொடுத்த நலத்திற்காவும், பலத்திற்காவும் இறைவனுக்கு நன்றி. கிடைத்த நேரத்தைப் பிரித்து, அந்த நேரத்தை ஒழுங்காகவும் அக்கறையுடனும் பயன்படுத்தியதும், ஆய்வுகள், உரையாடல்கள், கண்டுபிடிப்புகள் ஆகியவற்றில் ஒருமித்த உணர்வு, இன்றியமையாத பணியில் ஈடுபட்டுள்ளோம் என்ற எண்ணம் ஆகியவையே நமது வெற்றிக்குக் காரணங்கள்.

எங்களிடத்தில் ஒப்படைக்கப்பட்ட இப்பணியை நிறைவேற்றுவதில் இருந்த எழுச்சி இதுவரை நாங்கள் ஆற்றிய எப்பணியிலும் இல்லை என்று உறுதியுடன் கூறலாம். மேலும் இப்பணி எங்களுக்கு அதிகப் பயனையும் கருத்துத் தெளிவையும் அளித்தது. திருமறையில் மூல மொழியில் உள்ள வாக்கியங்களையும் சொற்களையும் பிரித்து ஆராய்ந்தபோது அவைகளில் இறைவனின் வெளிப்பாட்டை உணர்ந்தோம். அதனால்தான் இயேசு கிறிஸ்துவும் .... " .......... பூர்வத்தாருக்கு உரைக்கப்பட்டதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள். நான் உங்களுக்கு சொல்லுகிறேன் ......" என்று அடிக்கடி கூறும் வேளையில் திருமறையின் ஒவ்வொரு சொல்லிலும் இறைவனின் வெளிப்பாடு இருப்பதைத் தெளிவுபடுத்துகிறார். இறைவனால் ஏவப்பட்டு எழுதப்பட்ட திருமறையில் உள்ள ஆவியின் தன்மை அறிவு, உண்மை, அழகு நீதிநெறி ஆகியவற்றின் சிறப்பினை இப்பதினொரு ஆண்டுகளில் உணர்ந்தது போல் வேறு ஒருபோதும் உணர்ந்ததில்லை. கூட்டங்களில் பங்கு பெற்ற நாங்கள் (பேராயர், சார்ஜன்ட், பேராயர் கால்டுவெல்) அந்நாட்களை எங்கள் வாழ்க்கையின் ஒளிபொருந்திய, மகிழ்ச்சியான காலமாக எண்ணி ஒவ்வொரு நாளையும் எங்கள் மனக்கண்கள் முன்னால் நிறுத்திக் கொண்டிருக்கிறோம். எங்களது அன்றாடப்பணிகள் ஒவ்வொன்றும் நாங்கள் இறைவனோடு மேலும் மேலும் நெருங்கி வரவும் அவரது பெருமை மிக்க ஆழமான செயல்களோடு தொடர்பு கொள்ளவும் செய்தன. அத்தொடர்பு இடைவிடாத தெம்பையும் வலிமையையும் மகிழ்ச்சியையும் அளித்தன.

எங்களுக்கிடையே இருந்த சகோதர ஒற்றுமை உணர்வு எங்களது அரியப்பணியை மகிழ்ச்சியாக மாற்றியது. சங்கீதப்

புத்தகம் பற்றி எழுதிய நூலின் முன்னுரையில் தனது பட்டறிவைப் பற்றி பேராயர் ஹார்ன் மிகவும் அழகாக எழுதியுள்ளது போல இருந்தது எங்கள் பட்டறிவு! காலம் மிக வேகமாகப் பறந்து சென்றது. ஒவ்வொரு நாளின் பணியும் சற்று தயக்கத்துடனே முடிவுற்றது. இறுதி நாளைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். வெகு நேரம் ஆகிவிட்டது. எனினும் பணி நிறைவு பெறுகிறது என்ற மனநிறைவு உண்டு. அடுத்த நாள் பிரிந்து செல்ல ஆயத்தமானோம்.

கூட்டங்கள் இறை வேண்டுதலுடன் தொடங்கி வேண்டுதலுடன் முடிவடைந்தன. தினமும் எங்களுக்கு அறிவொளி ஊட்டவும் வழி நடத்தவும் அருளாசி வழங்கவும் தினமும் இறைவனிடம் மன்றாடினோம். எங்களுக்குக் கொடுக்கப்பட்ட பணியை நிறைவேற்ற நாங்கள் முற்றிலும் அவரையே சார்ந்திருந்ததால், பணி நிறைவடைந்ததும் அதை அவர் தமது பரிசுத்த ஸ்தலத்தில் கிருபையாக ஏற்றுக் கொள்ளுவார் என்ற நம்பிக்கையுடன் அவரது தூய திருவறையில் படைத்தோம். இறைவன் நல்லவர் என்பதை மக்கள் புரிந்து கொள்ள அதைப் பயன்படுத்தவும் இந்நாட்டுத் திருச்சபையையும் மக்களையும் அருளாசியால் நிரப்பவும் வேண்டினோம்.

பாளையங்கோட்டையில் 1868ஆம் ஆண்டு நடந்த கூட்டத்தின் இறுதியில் கிட்டத்தட்ட எங்களது பணி முடிந்தது போன்று தோன்றியது. இருந்தாலும் அடுத்த ஆண்டு ஏப்ரலில் மற்றொரு கூட்டம் நடைபெற்றது. தவிர்க்கமுடியாத காரணங்களால் யாழ்ப்பாணச் சார்பாளர்கள், சார்பாளர்களின் கூட்டத்தில் பங்கேற்க முடியவில்லை. எனினும் அவர்கள் விருப்பம் என்ன என்று அறியமுற்பட வேண்டும். அவர்களது ஒப்புதலையும் ஒத்துழைப்பையும் பெறுவது கட்டாயமானது என எண்ணினோம். எனவே திருத்திய பதிப்பை அச்சிடுமுன் இரு கிளை இயக்கங்களின் சார்பாளர்கள் அடங்கிய கூட்டம் ஒன்றைக் கூட்டவேண்டும் என்று ஒப்புக்கொள்ளப்பட்டது.

இலங்கை சார்பாக அறிவர் ஸ்பால்டிங், திரு. கில்னர் ஆகியோரும் மண்டலச் சார்பாளர்களாக பவர், அறிவர் கால்டுவெல் ஆகியோரும் பணி அமர்த்தப்பட்டனர். சென்னையில் 1869ஆம் ஆண்டு ஏப்ரல் 12ஆம் நாள் தொடங்கிய இக்கூட்டம் ஏப்ரல் 27ஆம் நாள் வரை நடைபெற்றது. பழைய புதிய

ஏற்பாடுகளிலிருந்து படிவப்பகுதிகள் படிக்கப்பட்டு, ஆராயப்பட்டன. அப்போது எழுப்பப்பட்ட ஐயங்கள், துன்பங்கள், பொருத்தமான சொற்கள், சொற்றொடர்கள் பற்றியவை ஆராயப்பட்டன. நியாயமற்ற கோரிக்கைகளை யாரும் வைக்கவுமில்லை; நியாயமற்ற முறையில் அவைகளை எதிர்க்கவும் இல்லை. யாழ்ப்பாண சார்பாளர்கள் கொடுத்த பல திருத்தங்கள், மண்டலச் சார்பாளர்களின் கடைசிக் கூட்டத்தில் எதிர்பார்க்கப்பட்டவைதான். இக்கூட்டம் மனநிறைவுடன் நிறைவு பெற்றது. புதிய வரைவு திருச்சபையாலும், உலகத்தாராலும் முழுமனதுடன் ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஏற்கனவே குறிப்பிட்டுள்ள ஒரு இறைப்பணியாளர் இயக்கத்தைத் தவிர, தமிழ்நாட்டிலுள்ள எல்லாச் சீர்திருத்த இறைப்பணியாளர் இயக்கங்களின் இனிய நல்வாழ்த்துக்களுடனும் இறை வேண்டலுடனும் அது ஏற்றுக்கொள்ளப்பட்டது.

எந்த அளவுக்கு 1611ஆம் ஆண்டு ஆங்கிலமொழியில் வெளியிடப்பட்ட திருமறைக்கு அம்மக்களிடையே ஆதரவும் மதிப்பும் இருந்ததோ அந்த அளவுக்கு இப்புது திருத்திய பதிப்புக்கு தமிழ் மக்களிடையே ஆதரவும் மதிப்பும் இருக்கும் என்று நாங்கள் நம்பத் துணியவில்லை. லூத்தரின் புகழ்பெற்ற ஜெர்மனிய திருமறையையே திருத்தப்பட வேண்டும் என்ற கோரிக்கை எழுந்தது. அதுபோல இத்திருத்திய தமிழ்த் திருமறையையும் ஆங்கிலத் திருமறைத் தரத்திற்கு கொண்டு வர மீண்டும் திருத்தம் தேவை என்ற கோரிக்கை எழுந்தாலும் அதற்கு நாம் ஆயத்தமாக இருக்க வேண்டும் என்று உணர்ந்தோம். எனினும், திருப்புதற்கான சார்பாளர்களின் இறுதிக்கூட்டம் முடியும் வரை இவ்வகைக் கோரிக்கைகள் எழும்பாது என நம்புகிறேன்.

இப்பணி நிறைவடைந்தபின் தமிழ்த்திருச்சபைக்கு ஆற்றிய அரும்பணிக்காகப் பவருக்கு கான்டர்பரி தலைமைப் பேராயரால் இறையியலில் அறிவர் பட்டம் வழங்கப்பட்டது. 1866இல் அம்மகானை இறைவன் விண்ணுலகிற்கு அழைத்துக் கொண்டார். தமிழ்நாட்டிற்கும், தமிழ்த்திருச்சபைக்கும் பவரது மறைவு ஈடுசெய்யமுடியாத இழப்பு. இது பற்றிய முழுச்செய்திகளையும் சென்னைத் திருமறைக்குழுவிற்கு நான் அனுப்பியுள்ள அறிக்கையில் காணலாம். அவர்கள் அந்த அறிக்கையை 'தமிழ்த்திருமறை திருப்புதல்' என்ற தலைப்பில் ஒரு சிறு நூலாக 1869இல் அச்சிட்டு வெளியிட்டுள்ளது.

## தமிழ் ஜெபபுத்தகத்தின் இரண்டாம் திருத்திய பதிப்பு

இத்திருப்புதல் பணி 1872ஆம் ஆண்டு 3மாதங்கள் பாளையங்கோட்டையில் நடைபெற்றது. இப்பணியில் பங்கேற்றோரின் பெயர்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

அறிவர். பவர், முதன்மை திருத்துநர்
அருட்திரு. D. ஃபென்
அருட்திரு. A. டிப்
அறிவர் அருட்திரு. கால்டுவெல்
அருட்திரு. ஜோசப் கொர்னெலியஸ் – உள்நாட்டுத் திருத்துநர்
அருட்திரு. D. சாமுவேல் – உள்நாட்டுத் திருத்துநர்
திரு. முத்தையாப்பிள்ளை – தமிழ் நடுவர்.

இது சென்னைக் கிறிஸ்தவ அறிவுக் கழகத்தினரால் அச்சிடப்பட்டுள்ளது. அச்சமயம் அக்கழகத்தின் செயலராக இருந்தவர் அருட்திரு. அறிவர் கென்னற். அதன் கடைசிப்பதிப்பில், யூபிலி வழிபாடுகளில் பயன்படுத்தப்படும் அரசி பதவி ஏற்கும் விழா தொடர்பான ஜெபமுறைமை சேர்க்கப்பட்டுள்ளது.

## இயல் : 12

# நூல் படைப்பு

இந்தியாவிற்கு வந்ததும் குறிப்பாக திருநெல்வேலிக்கு வந்து சேர்நத நாள் முதல் இந்திய மொழிகளைப் பற்றியும் இனவியலைப் பற்றியும் வரலாற்றையும் தீவிரமாகக் கற்கத் தொடங்கினேன். கிடைக்கக்கூடிய சிறந்த அனைத்து நூல்களையும் வாங்கினேன். சிறப்பாக ஜெர்மனிய மொழியைக் கற்றேன். ஏன்? இந்தியாவைப்பற்றியும் இந்தியர்களைப் பற்றியும் ஜெர்மானிய அறிஞர்கள் எழுதியுள்ள அறிய நூல்களைக் கற்றுக் கொள்ள. இங்கிலாந்திற்குச் செல்லும் வேளையில் பிரிட்டிஷ் அருங்காட்சியகத்தில் இந்தியத் தொல்பொருள் தொடர்பான நூல்களைக் கண்டால் அவற்றை முனைப்புடன் ஆய்வு செய்வேன்.

ஹெரடாட்டஸ் முதல் பைஜென்டைன் (Byzantine). எழுத்தாளர்கள் எழுதியுள்ள கிரேக்க உரோமப் பழம்பெரும் இலக்கியங்களில் இந்தியாவைப் பற்றி ஏதேனும் குறிப்புகள் இருந்தால் அவைகளைத் துல்லியமாக ஆராயத் தவறுவதில்லை. எதை ஆராய்ந்து அறிய முற்படுகிறேனோ அவற்றில் முழுமையும் துல்லியமும் அடைய வேண்டும் என்பதே எனது முதன்மையான குறிக்கோள். இது பற்றி ஆராய்ச்சி மேற்கொள்ளாத எவரும் மொழியியல், இனவியல், வரலாறு ஆகிய துறைகளில் நான் வெளியிட்டுள்ள கருத்துக்களை இவ்வளவு முழுமையாகவும் துல்லியமாகவும் அறிந்து கொள்ள நான் எடுத்துக் கொண்ட முயற்சியையும் உழைப்பையும் உணரவேண்டும். நான் சேகரித்துள்ள செய்திகள் யாவையும் நினைவுக் குறிப்பேட்டில் எழுதி வைத்துக்கொண்டு வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் ஆய்வு மேற்கொள்வேன்.

இங்கிலாந்துக்கு நன்னம்பிக்கை முனை வழியாக முதல் முறை செல்லும் பயணத்தின் போது இவ்வாறே என் நேரத்தைப் பயன்படுத்தினேன். நான்கு மாத கால பயணத்தில் ஞாயிறு தவிர மற்ற நாட்களில் ஆறு மணி நேரம் பணி செய்தேன். இந்தியாவில் இறைப்பணியாளராக இருந்த காலத்திலும், குறிப்பாக கிராமங்களில் அருட்பணி செய்த நாட்களிலும் எனது இறைப்பணி

பாதிக்கப்படாத வகையில் இலக்கியப் பணிக்கு தினமும் இரண்டு மணி நேரம் கண்டுபிடித்து உழைப்பது வழக்கம். உடல்நலத்தைப் பேண கோடைவாழிடங்களில் தங்கும் நாட்களில் ஒரு நாளைக்கு ஆறு மணி நேரம் புத்தகம் எழுதச் செலவிடுவேன். ஆஷம்பு மலைகளில் தங்கியிருக்கும் போது 'திருநெல்வேலி மிஷன் வரலாறு' என்ற நூல் எழுத எனக்கு ஓராண்டு தேவைப்பட்டது. ஒவ்வொரு இறைப்பணியாளரும் தனது முதன்மையான பணி, படிப்பு ஆகியவற்றோடு எதாவது துணைப்பாடத்தையும் படிக்கவேண்டும். மட்டுமல்ல, தான் வாழும் நாட்டைப்பற்றியும் அம்மக்களைப் பற்றியும் நன்றாக அறிந்து கொள்ள வேண்டும். அப்படிச் செய்யும் போது குறுகிய மனப்பான்மை நம்மைவிட்டு நீங்கிவிடும். "நீங்கள் வெறும் ஆயராக இருக்காமல் மக்களோடு இணைந்து அவர்கள் நலனுக்காக உழைக்கும் மனிதராக மாறிவிடுவீர். அதே நேரத்தில் தங்களுடைய முதன்மையான பணிக்கு பாதிப்பு ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

## நூல்கள்

1. 'திராவிட அல்லது தென்னிந்திய மொழிகளின் ஒப்பிலக்கணம்' எனது முதல் நூல். நான் எழுதிய நூல்களுள் மிகப்பெரிய நூலும் இதுவே. இந்நூலின் முதற்பதிப்பு 1856ஆம் ஆண்டிலும் இரண்டாம் பதிப்பு 1875ஆம் ஆண்டிலும் வெளிவந்தது. இரண்டாம் பதிப்பின் பதிப்பாளர் ட்ரப்நர் அன் கோ. மிகவும் விழிப்புடன் திருத்தியமைக்கப்பட்டதால் பாமர மக்கள் வாங்க முடியாத அளவுக்கு மிகவும் பெரியதாய் இருந்தது. முன்னுரை, பின்னிணைப்பு ஆகியவற்றையும் சேர்த்து மொத்தப் பக்கங்கள் 608 ஆகும். முன்னுரை 154 பக்கங்கள் பின்னிணைப்பு 96 பக்கங்கள். முன்னுரை பாமரமக்களுக்கு மட்டும் பயன்படக் கூடியதாய் இருப்பதால் அதைத் தனியாக அச்சிட்டு வெளியிட்டிருக்கலாம். இலக்கணம் பற்றிய இயல்கள் திராவிட மொழிகளில் ஆர்வமுள்ளோருக்கே பயனுள்ளதாய் இருக்கும்.

'திராவிடர்' என்ற சொல்லை முதன்முதலில் பயன்படுத்தியது நானே. 'தமிழர்' என்ற சொல் குறுகிய தன்மையைக் குறிப்பதால் அதைப் பயன்படுத்த நான் விரும்பவில்லை. 'திராவிடர்' என்ற சொல் இன்று எல்லாராலும் பயன்படுத்தப்படுகிறது. இச்சொல்லின் வரலாற்றையும் பொருளையும் முன்னுரையில் விளக்கியிருக்கிறேன். பின்பு திராவிட

மொழிகளை வரிசைப்படுத்தியுள்ளேன். அதின் சிறப்புத் தன்மைகளை குறிப்பிட்டுவிட்டு கிரேக்க இலக்கியங்களிலும் மற்ற வெளிநாட்டு இலக்கியங்களிலும் திராவிட சொற்கள் இடம்பெற்றுள்ளதையும் குறிப்பிட்டுவிட்டு, திராவிட நாகரீகத்தின் வரலாறு, திராவிட இலக்கியங்களின் தொன்மை, திராவிடச் செய்யுளின் தன்மைகள் பற்றிக் கூறியிருக்கிறேன். இலக்கணப்பகுதி, ஒலிகள், வேர்ச்சொற்கள், பெயர், எண்ணுப்பெயர், மாற்றுப் பெயர்ச்சொற்கள், வினை, அருஞ்சொற்றொடர்பு என ஏழு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. பின்னிணைப்பில் திராவிடர்களின் உடல் அமைப்பு பழங்காலத்திய இனம், சமயம் தொடர்பான செய்திகள் அடங்கியுள்ளன. பேஸல் இறைப்பணி இயக்கத்தைச் சேர்ந்த அறிவர் அருட்திரு. குண்டர்ட் எனக்குக் கொடுத்த குறிப்புகள் இந்நூலின் ஒவ்வொரு பகுதியையும் எழுதும் போது பேருதவியாக இருந்தன.

தென்னிந்திய மொழிகளின் ஒப்பிலக்கணத்தை போன்று வடஇந்திய மொழிகளின் ஒப்பிலக்கணத்தை 'இந்தியாவிலுள்ள தற்கால ஆரிய மொழிகள்' என்ற தலைப்பில் திரு. பீம்ஸ் என்பவர் எழுதியுள்ளார். 1862 பயனுள்ள மற்றொரு ஒப்பிலக்கண நூல் வெளிவந்தது. 'தென்னாப்பிரிக்க மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்ற தலைப்புக் கொண்ட அந்நூலை எழுதியவர் அறிவர். ஃப்ளீக் ஆவார். பொதுவாகவே இந்தியர்கள் இலக்கணம் மீது நாட்டம் கொண்டவர்கள். ஆனால் தங்களது தாய்மொழியின் இலக்கணத்தை மட்டுமே ஆர்வத்துடன் கற்று வந்தனர். மற்ற மொழிகளுடனும் தங்கள் மொழியை ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும் என்ற ஆர்வம் இந்தியர்களுக்கு இல்லை. அதனால் அவர்களது இலக்கண அறிவு அறிவியல் முறையற்றது; முற்போக்குச் சிந்தனையற்றது. ஒரு குறிப்பிட்ட துறையில் அவர்கள் பெற்ற அறிவுத்திறன் மொத்தத்தில், செல்லாக் காசாகி விட்டது. அக்குறையைப் போக்குவது இந்நூலை எழுதுவதற்கான சிறப்புக் காரணங்களில் ஒன்று.

II. "திருநெல்வேலி மாவட்ட அரசியல், பொது வரலாறு தொடக்கம் முதல் 1801 வரை" இது என்னுடைய இரண்டாவது நூலாகும். பொதுவாக உள்ளூர் பற்றியது என்றாலும் தென்னிந்தியாவில் உள்ள பரம்பரையினர் பற்றிய குறிப்பு உண்டு. என்னுடைய இலக்கண நூலை விட இந்நூலையே ஐரோப்பியரும் இந்தியரும் அதிக ஆர்வத்துடன் படிக்கின்றனர். இந்நூலுக்கான

தகவல்களைச் சேகரிக்கப் பல ஆண்டுகள் ஆயிற்று. உள்ளூர் ஆவணங்கள், பிரிட்டிஷ் அருங்காட்சியகத்தில் உள்ள நூல்கள், சென்னை அரசு ஆவணங்கள் ஆகியவையே முதன்மை ஆதாரங்கள். தகவல் அனைத்தையும் சேகரித்த பின்பு, நூலை எழுதும் பணியில் தீவிரமாக ஈடுபட்டேன்.

1881இல் சென்னை அரசால் இந்நூல் வெளியிடப்பட்டது. அரசு செலவில் வெளியிட்டதுமன்றி, எனக்கு மதிப்பூதியமாக ரூ. 1000/– கொடுத்தனர். இதில் 10 இயல்கள் உண்டு. முதல் இயலில் திருநெல்வேலியின் பழைய வரலாறும், இரண்டாவது இயலில் பாண்டியர் ஆட்சி முதல் விஜயநகர அரசர்கள் ஆட்சி முடியவும், மூன்றாம் இயலில் பாண்டியனரின் இரண்டாம் பரம்பரையினர் வரலாறும், நாயக்கர்களின் ஆட்சி பற்றியும் விவரிக்கப்பட்டுள்ளது. நான்காவது, ஐந்தாவது இயல்கள் ஆற்காட்டு நவாப் காலம் பற்றியவையே. ஆறாவது இயலில் 1761 முதல் 1799 வரையிலான திருநெல்வேலியின் வரலாறு விவரிக்கப்பட்டுள்ளது. பாளையக்காரர்களின் போர்கள் ஏழாவது, எட்டாவது இயல்களில் அடங்கியுள்ளன. ஒன்பதாவது இயலில் பாளையக்காரரின் இறுதிப்போர் பற்றியும் திருநெல்வேலி கர்நாடகக் கட்டுப்பாட்டிலிருந்து பிரிந்து ஆங்கில அரசின் கைக்கு வந்ததையும் காணலாம். 1801 வரையுள்ள திருநெல்வேலி திருச்சபை வரலாறு 10ஆம் இயலில் எழுதப்பட்டுள்ளது. இந்த இயல் இரு பகுதிகளைக் கொண்டது. முதல்பகுதியில் உரோமன் கத்தோலிக்க திருச்சபை வரலாறும் இரண்டாம் பகுதியில் இங்கிலாந்து திருச்சபையின் வரலாறும் வரையப்பட்டுள்ளன.

300 பக்கங்களைக் கொண்ட இந்நூலுக்குப் பல பின்னிணைப்புகள் உண்டு. 1. திருநெல்வேலி–திருவாங்கூர் தொடர்பு 2. வெள்ளங்களும் கொள்ளைநோய்களும் 3. திருநெல்வேலியிலுள்ள நூலாசிரியர்கள் 4. திருநெல்வேலியில் உள்ள புதையல் தாழிகள். 5. கொற்கை, காயல் பற்றிய ஆராய்ச்சி.

III. " S.P.C.K. & S.P.G. இயக்கங்களின் திருநெல்வேலி பணித்தள ஆரம்பகால வரலாறு." எனது இரண்டாவது நூலும் மூன்றாவது நூலும் ஒரே நேரத்தில் எழுதப்பட்டன. மூன்றாவது நூலும் 1881ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. 356 பக்கங்கள் கொண்ட இந்த நூலை சென்னை ஹிக்கின் பாதம்ஸ் கம்பெனியார் தங்கள் சொந்தப் பொறுப்பில் வெளியிட முன் வந்தனர். கிடைக்கப் பெறுகின்ற ஆவணங்களையும், வரலாற்றுச் சான்றுகளையும் கால

ஒழுங்குப்படி வரிசைப்படுத்தி வெளியிட்டால் திருநெல்வேலி திருச்சபை வரலாற்றைப் பற்றி இன்னும் பல செய்திகளை அறிய அவை உதவும். தேவைப்பட்டால் விளக்கக் குறிப்புகளையும் அத்துடன் இணைக்க வேண்டும். பல வரலாற்றுச் சான்றுகள் ஆங்கிலத்திலும் தமிழிலும் கையினால் எழுதப்பட்ட மடல் வடிவிலேயே இருந்தன. அவைகளைச் சேகரித்து முதன்முறையாக நான் வெளியிட்டேன். சேகரிக்கப்பட்ட ஆவணங்களும் அறிக்கைகளும் காலவாரியாக அடுக்கப்பட்டன.

இயல் ஒன்றில் ஸ்வாட்ஸின் பணி பற்றிய விவரம் அடங்கியுள்ளது. 1771 முதல் அவர் வருகை பற்றிய அறிவிப்புகள் எழுதிய மடல்கள் ஆகிய குறிப்புகள் இதில் கொடுக்கப்பட்டுள்ளன. 1791ஆம் ஆண்டு ஜெனிக்கே பாளையங்கோட்டைக்கு வந்தார். அவருடைய வருகைக்கு முன் நடந்த நற்செய்திப்பணி விவரங்கள் இதில் கொடுக்கப்பட்டுள்ளன. 1780இல் நாற்பது உறுப்பினர்கள் பெயர்கள் உள்ளடங்கிய பாளையங்கோட்டை சபையின் முதல் பணித்தளப் பதிவேடு இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஜெனிக்கேயின் பணி விவரங்கள் இரண்டாம் இயலிலும், கெரிக்கே மற்றும் பலர் கிராம மக்களுக்குக் கொடுத்த திருமுழுக்கு பற்றிய குறிப்புகள் மூன்றாவது இயலிலும் கொடுக்கப்பட்டுள்ளன.

நான்காவது இயல் ரிங்கிள்டேயேவுக்கு ஒதுக்கபட்டுள்ளது. ஐந்தாவது இயல் இருண்ட காலம் பற்றியும், ஆறாவது இயல் திருநெல்வேலியில் ஹெனஃப் ஆற்றிய பணி பற்றியும் விவரிக்கிறது. ஏழாவது இயலில் S.P.C.K. தனது பணிப் பொறுப்பை S.P.G. யிடம் கொடுத்த விவரம் உள்ளது. ரோஷன், ஜரியன், கேமரர் ஆகியோர் பணி செய்த காலம் எட்டாவது, ஒன்பதாவது, பத்தாவது இயல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆசிரியர் இந்தியாவுக்கு வந்த 1841ஆம் ஆண்டு வரையிலான விவரங்களை இங்குக் காணலாம்.

பின்னிணைப்பு 1. திருநெல்வேலி திருச்சபை முதல் நூற்றாண்டு விழா 1880 ஆம் ஆண்டு பாளையங்கோட்டையில் கொண்டாடப்பட்டது. அச்சமயம் படிக்கப்பட்ட கட்டுரை.

பின்னிணைப்பு 2. இந்திய இறைப்பணியாளர்களுக்கு 1735இல் கிறிஸ்தவ அறிவு இயக்கம் வழங்கிய அறிவுரை.

பின்னிணைப்பு 3. S.P.G. 1706இல் இறைப்பணியாளர்களுக்கு கொடுத்த அறிவுரை.

## சொற்பொழிவுகள், சிறுநூல்கள், அருளுரைகள்.

1. திருநெல்வேலி திருச்சபை பற்றிய சொற்பொழிவுகள், இலண்டன் பெல் அன் கம்பெனி. 1857 'இந்தியாவில் கிறிஸ்தவத்தின் வளர்ச்சி' என்ற முன்னுரையுடன், வயல்வெளி பணி மற்றும் பலன் அறிய மூன்று சொற்பொழிவுகள்.

2. திருநெல்வேலி சாணார்கள், சென்னை, 1849 இலண்டன், 1850 (பின்பு இது திரும்பப் பெறப்பட்டது.)

3. திருநெல்வேலியும், திருநெல்வேலிப் பணித்தளமும், இந்தியக் கிறிஸ்தவ இயக்கத்தில் ஆற்றிய உரை. சென்னை, மே, 1869.

4. மூன்று அடையாளங்கள் : இந்துக்களுக்கு ஆற்றிய உரை. இவ்வுரை சென்னை கிறிஸ்தவ தாய்மொழிக் கல்வி கழகத்தினரால் 1860 இல் வெளியிடப்பட்டது.

5. 1862இல் ஆளுநரின் பாளையங்கோட்டை வருகை – விவரம்

6. "இந்துக்களின் ஆன்மீக நெறி" – சிறு நூல்.
   ஆசிரியர் : மாண்புமிகு சடகோப சால்லு
   வெளியிட்டோர் : அறிவர் மர்டோக், செயலர், C.V.E.S.
   சென்னை, 1863.
   இச்சிறுநூலின் மீதான குறிப்புரை.

7. "சமயத்தின் உள் அரண்"
   வெளியிட்டோர் S.P.C.K. பக்கம் 32.

8. கிறிஸ்தவமும் இந்துத்துவமும் : நான்கு சொற்பொழிவுகள்.

9. திருச்சபை பள்ளிகளில் கிறிஸ்தவரல்லாதோருக்குச் சமயப் போதனை:
   C.R.S. அச்சகம், சென்னை, 1881. ப. 196.

10. சென்னைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு உரை. 1879.
11. 'குடுமி,' டைம்ஸ் அலுவலகம், சென்னை. 1867.
12. கத்தோலிக்க ஜெபபுத்தகத்தால் கை கழுவப்பட்ட வழிபாடு, டைம்ஸ் அலுவலகம், சென்னை, 1867.

13. தமிழ்த் திருமறைத் திருப்புதல்: சார்பாளர்களின்

நடவடிக்கைகள் பற்றிய அறிக்கை, சென்னை வேதாகமக் கிளைக்கழகத்திற்கு அனுப்பப்பட்டது, ஏப்ரல் 1869.

14. இந்திய மொழிகளுக்கு உரோமன் எழுத்துக்கள்: சென்னை இலக்கியக் கழகத்தின் இதழ்.

15. 'இந்திய மொழிகளும் இறைப்பணியாளர் பணிகளும்'
1875ஆம் ஆண்டு நடைபெற்ற S.P.G. ஆண்டு விழாவின் போது ஆற்றிய உரை.

16. 'தென்னிந்தியாவில் பேய் வணக்கம்'
1887இல் பம்பாய் இனவியல் கழகம் வெளியிட்ட கட்டுரை.

17. உயர் சாதி, உயர்குல மக்களிடையே நற்செய்திப் பணி.
இதழ்கள், 1876, 1877, 1878 மற்றும் 4 இதழ்கள்.

18. சென்னைப் பேராயரின் ஆண்டு அறிக்கைகள்: 1877 முதல் 1882 வரை. முதல் நிருபம் M.D.C. 1877–78ஆம் ஆண்டு அறிக்கையில் வெளியிடப்பட்டது.

19. சென்னைப் பேராய மாநாட்டில் படிக்கப்பட்ட கட்டுரை.

20. திருநெல்வேலிப் பணித்தளங்களைத் தாக்கி எழுதிய தந்தை ஆட்டரிட்ஜ் அவர்களுக்குப் பதில்.

## அருளுரைகள்

1. அருட்பொழிவு அருளுரை : உதகமண்டலம் ஜூன் 15, 1851. 'கிறிஸ்துவின் அளவற்ற செல்வம்' எபே. 3:8.

2. S.P.G. யூபிலி (ஐம்பதாவது ஆண்டு) விழா அன்று ஆற்றிய அருளுரை உதகமண்டலம் 1852.

   தலைப்பு : உலக அறிவினால் தேவனை அறியாதிருத்தல். I கொரி 1:22.

3. அருட்பொழிவு அருளுரை: பாளையங்கோட்டை, டிசம்பர் 20, 1862.
   தலைப்பு : பரதத்திலிருந்து வரும் அறிவு. யாக். 3:17.

4. பாளையங்கோட்டையில் ஆற்றிய அருளுரை: அக் 21, 1866. தலைப்பு: இந்தியாவில் கிறிஸ்தவமும் இந்தியக் கிறிஸ்தவர்களும்.

## தமிழ்.

1. கிறிஸ்டியாநகரம் தூய மாற்கு ஆலயப் மங்கலப்படைப்பில் ஆற்றிய அருளுரை:
ஜனவரி 25, 1849.
தலைப்பு : ஆவிக்குரிய ஆலயம், 2 கொரி 6:16.
பாளையங்கோட்டையில் 1849இல் அச்சிடப்பட்டுள்ளது.

2. திருவிருந்து துணைவன் (தியான மாலை) 5ஆம் பதிப்பு. வெளியிட்டோர்: S.P.C.K. சென்னை, பக்கம் 152.

3. "ஆரம்ப ஞானாபதேசம்" S.P.C.K. சென்னை, 3 பதிப்புகள்.

4. திடப்படுத்தலுக்கான அடிப்படை ஞானோபதேசம், பாளையங்கோட்டை, 1887.

5. கோவில் மங்கலப்படைப்பு வழிபாட்டுக்கான தமிழாக்கம்.

6. அரசி பதவியேற்பு வழிபாடு

7. கிறிஸ்தவ கொள்கை ஏற்று திருமுழுக்கிற்காக ஆயத்தப்படுவோரை ஏற்றுக் கொள்ளுதலுக்கான முறைமை.

8. பணையேறுபவர்களுக்கான வழிபாட்டு முறைமை.

பேராயர் சார்ஜன்டின் வேண்டுகோளுக்கிணங்க தமிழ்ப்பாமாலை நூல் திருத்தியமைக்கப்பட்டு, இங்கிலாந்து திருச்சபை உபயோகத்திற்காக சீரமைக்கப்பட்டது. சில சிறப்பு ஆங்கிலப் பாடல்கள் தமிழில் மொழியாக்கம் செய்து அதில் சேர்க்கப்பட்டன.

அவைகளில் குறிப்பிடத்தக்கவை. 'சபையின் அஸ்திபாரம்' ..... 'கேள் ஜென்மித்த ராயர்கசே' 103ஆம் சங்கீதத்தின் முதல் பகுதியை அடிப்படையாகக் கொண்ட பாடலான 'தூய, தூய், தூயா' என்ற பாடல்கள் ஆகும்.

## பின்னிணைப்பு

இப்பகுதியில் 1880ஆம் ஆண்டு ஜனவரி 26ஆம் நாள் பாளையங்கோட்டையில் நடைபெற்ற திருநெல்வேலி திருச்சபையின் முதலாம் நூற்றாண்டு விழாவின் போது நான் படித்த கட்டுரையின் சுருக்கத்தை இங்கு தருகிறேன்.

# திருநெல்வேலி திருச்சபையின் முதலாம் நூற்றாண்டு

திருநெல்வேலிக்குக் கிறிஸ்தவம் வந்து நூறு ஆண்டுகள் முடிவுற்றதைக் கொண்டாடும் பொருட்டு 1880ஆம் ஆண்டு ஜனவரி 20ஆம் நாள் ஒரு விழா பாளையங்கோட்டையில் நடைபெற்றது. இந்நாள் இத்திருச்சபைக்கும், நற்செய்திப் பணியில் ஆர்வம் உள்ளோருக்கும் சிறப்பான நாள். காலை 7:00 மணிக்குத் தூய திருவிருந்துடன் விழா தொடங்கியது. சென்னைப் பேராயர் வழிபாட்டை நடத்தினார். தூய விருந்தில் பேராயர் கால்டுவெல்லும் பேராயர் சார்ஜன்டும் அவர்களுடைய இந்திய உதவியாளர்களும் உதவி செய்தனர். பேராயரின் உதவியாளர் அருட்திரு. S.மார்லி பரி.யோவான் 17ஆம் அதிகாரம் 4ஆம் வாக்கியத்தை மையமாகக் கொண்டு அளித்த செய்தி விழாவிற்கு மிகவும் பொருத்தமாக இருந்தது. S.P.G. மற்றும் C.M.S. இயக்கங்களைச் சேர்ந்த அனைத்து ஐரோப்பிய உள்நாட்டுக் ஆயர்களும் அதில் கலந்து கொண்டனர். முற்பகல் 11:00 மணிக்கு நூற்றாண்டு விழா நடைபெற்றது. சென்னைப் பேராயர் தலைமை தாங்கினார். வலது பக்கம் பேராயர் கால்டுவெல்லும் இடது பக்கம் பேராயர் சார்ஜன்ட்டும் அமர்ந்திருந்தனர்.

இப்பகுதியிலிருந்தும் தொலைவான இடங்களிலிருந்தும் வந்த மக்கள் கூட்டத்தால் கோவில் நிரம்பி வழிந்தது. அவர்களில் பெரும்பாலானோர் ஆண்கள். செனானா இயக்கத்தைச் சேர்ந்த சகோதரிகளும், அருட்பணிகளில் ஈடுபாடும் அக்கறையும் கொண்ட நண்பர்கள் பலரும் வந்திருந்தனர். பாட்டு முடிந்து வேண்டுதல் பண்ணப்பட்டு சென்னைப் பேராயர் உரையாற்றினார். அந்நிகழ்ச்சியில் அவர் பொதுவாக மக்கள் காட்டிய எழுச்சி பற்றியும் கிறிஸ்தவத் திருச்சபையின் ஆரம்பம் பற்றியும் சிறப்பாக ஒரு நூற்றாண்டுக்குள் திருநெல்வேலியில் உள்ள சபைகளின் வளர்ச்சி பற்றியும் குறிப்பிட்டார். சிலருக்கு இந்த வளர்ச்சி பற்றி மனநிறைவு இல்லை. நம்முடைய வழிகள் அவருடைய வழிகள் அல்லவே. நமது அறியாமையினால் பல செயல்களை விளங்கிக் கொள்ள முடியவில்லை. இப்போது விளங்காத யாவும் விண்ணகத்தில் நன்றாக விளங்கும். இறைவனின் அரசில் உண்மையிலேயே பெரிதும் வெற்றியை நம் கண்கள் காண்கின்றன. இந்த அருஞ்செயல்களுக்காக நாம் ஆண்டவரைப் போற்றவும் அவருக்கு நன்றி செலுத்தவும் கடமைப்பட்டுள்ளோம்.

திருநெல்வேலியில் கிறிஸ்தவ வளர்ச்சி பற்றி கால்டுவெல் எழுதிய வரலாற்றுச் சுருக்கம். ஆங்கிலத்தில் முதலாவது படிக்கப்பட்டது. அதன் தமிழாக்கம் இடையன்குடியைச் சேர்ந்த அருட்திரு. சாமுவேல் அவர்களால் படிக்கப்பட்டது. வாகைக் குளத்தைச் சேர்ந்த அருட்திரு. வேதநாயகம் பேசும் போது S.P.G. மற்றும் C.M.S. ஆகிய இரு இயக்கங்களும் திருநெல்வேலியில் ஒரு நோக்கத்துடனே செயல்படுகின்றன. சான்றாக S.P.G. பகுதியைச் சேர்ந்த இடையன்குடியில் வளர்ந்த நான் C.M.S. பகுதியைச் சேர்ந்த வாகைக் குளத்தில் பணி செய்து வருகிறேன் என்றார். அடுத்து பேசிய பேராயர் சார்ஜண்ட், தானும் பேராயர் கால்டுவெல்லும் அவரவர் இடங்களில் உள்ளூர்ச்சபைகளைப் பலப்படுத்தவும் வளர்ச்சியடையவும் சிறப்பான பணி செய்து வருவதாக உணர்ச்சி ததும்பக் கூறினார். பேராயர் நல்லாசி கூற கூட்டம் இனிது முடிந்தது.

## இயல் : 13

# திருநெல்வேலித் திருச்சபையின் முதல் நூற்றாண்டுவிழா 1880 ஜனவரி 20ஆம் நாள் பேராயர் கால்டுவெல் படித்த உரை

திருநெல்வேலி திருச்சபை நூறாவது ஆண்டை இன்று நாம் கொண்டாடுகிறோம். மிகச்சிறிய தொடக்கம். நீண்ட காலமாக முன்னேற்றமே இல்லை. எனினும் பிற்பகுதியில் வியத்தகு வளர்ச்சி. இந்திய இறைப்பணி இயக்கங்களில் திருநெல்வேலி முதல் இடத்தைப் பிடித்துள்ளது. 1780ஆம் ஆண்டு பாளையங்கோட்டையில் சிறிய சபையாக உருவெடுத்தது இவ்வியக்கம். தென்னிந்திய பணித்தள வரலாற்றில் தனக்கென ஒரு தனி இடத்தைப் பெற்றுள்ள ஸ்வார்ட்ஸ் அவர்களால் இச்சபை தொடங்கப்பட்டது. சிறிது காலம் தரங்கம்பாடியில் அருட்பணி செய்தபின் அவர் திருச்சினாம்பள்ளியில் தனது முதல் பணித்தளத்தை நிறுவினார். அச்சமயம் திருநெல்வேலி மீது ஆர்வம் காட்டினார். பாளையங்கோட்டையைப் பற்றிய செய்தி முதலாவது ஸ்வார்ட்ஸ் இதழில் 1771ஆம் ஆண்டு வெளியானது. அப்போது ஒரு சமயத்தவர் திருமுழுக்கு பெற்றார். அவர் ஓர் இளைஞர். கணக்கர் பணி செய்தவர். ஸ்வார்ட்ஸின் ஒப்புதலை பெறுமுன்பே ஒரு கிறிஸ்தவ சார்ஜன்ட் இவருக்கு திருமுழுக்கு கொடுத்து விட்டார். இதுவே பாளையங்கோட்டை சபை வரலாற்றின் கருவாகும்.

ஸ்வாட்ஸ் பாளையங்கோட்டைக்கு முதன்முதலில் 1778ஆம் ஆண்டு வருகை தந்தார். அச்சமயம் ஒரு அந்தண விதவைக்கு குளோரிந்தா என்ற பெயருடன் திருமுழுக்கு கொடுத்தார். அப்பெண்மணி கோட்டையில் ஒரு சிறிய கோவிலைக் கட்டினார். அதுவே திருநெல்வேலி பணித்தளத்தில் கட்டப்பட்ட முதல் கோவில். 1780ஆம் ஆண்டு அது தொடர்பான ஒரு ஆவணம் இன்னும் பாதுகாக்கப்பட்டு வருகிறது. அதுவே திருநெல்வேலிச் சபையின் முதல் பதிவேடு ஆகும். பாளையங்கோட்டை சபை உறுப்பினர்களின் பெயர்கள் அப்பதிவேட்டில் உள்ளன. பல

ஆண்டுகளுக்கு முன்பு தஞ்சாவூரில் இப்பதிவேட்டை நான் பார்வையிட்டேன். திருநெல்வேலிப் பகுதியில் அச்சமயம் உள்ள ஒரே சபை பாளையங்கோட்டை. சபை உறுப்பினர்களின் எண்ணிக்கை 40. உயர்குல மக்களிடம் நாம் செய்ய வேண்டியது அதிகம். எனினும் அற்பமான தொடக்கத்தை யார் அசட்டை செய்ய இயலும்? இறைவனுக்கு இதயத்தின் ஆழத்தினின்று நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

அந்த 40 பேரில் 18 உறுப்பினர்களின் இனம் பற்றிய செய்தி எதுவும் கொடுக்கப்படவில்லை. மற்ற 22 பேரும் 13 வெவ்வேறு இனத்தைச் சேர்ந்தவர்கள். இந்த இளஞ்சபையின் நிலைமையைப் பற்றிய செய்திகளை இதைவிடச் சிறந்த முறையில் கொடுப்பது அரிது அவர்களில் பலரைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. மற்றவர்களால் கைவிடப்பட்டவர்கள் என்று அவர்கள் கருதப்படலாம். ஒரு குடும்பத்தில் ஆறுபேர் உண்டு. அவர்கள் வேளாளர்கள். தகப்பனார் தேவசகாயம். அவர் ஒரு கவிஞர். அவருடைய குழந்தைகளில் ஒருவர் தேவநாயகம். அவர் தனது தந்தையை விட புகழ் பெற்றவர். அவர்தான் தஞ்சாவூர் கவிஞர் வேதநாயகம் சாஸ்திரியார். இவர் 12ஆம் வயதிலேயே திருநெல்வேலியை விட்டுத் தஞ்சாவூருக்குச் சென்றார். பல செய்யுள் இலக்கியங்கள் எழுதியுள்ளார். அவை தமிழ்க் கிறிஸ்தவ இலக்கியத்தை வளப்படுத்தியுள்ளன. அவர் இயற்றிய பல கீர்த்தனைகள் கோவில்களிலும் திருநாள்காலங்களிலும் பாடப்படுகின்றன. அதை விட அதிகமாகத் திருமணங்களிலும், ஜெபக் கூட்டங்களிலும் பாடப்படுகின்றன.

1785ஆம் ஆண்டு பாளையங்கோட்டையில் உள்ள சிறிய கோயிலை (குளோரிந்தாள் அம்மையார் கட்டின ஆலயம்) இறைவனைத் தொழுது கொள்ளும் படியாக ஸ்வார்ட்ஸ் மங்கலப்படைப்பு செய்தார். அச்சமயத்திலிருந்து நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக சபையின் உறுப்பினர்களின் எண்ணிக்கை கூடிக் கொண்டு இருந்தது. சத்தியநாதன் என்ற திருப்பணிவிடையாளர் இந்தப் புதிய பணித்தளத்திற்குப் பொறுப்பாளராக அமர்த்தப்பட்டார். பின்பு அவர் ஆயராக அருட்பொழிவு செய்யப்பட்டார். இவரது முயற்சியினால் பல இடங்களில் சபைகள் உருவாக்கப்பட்டன.

ஓர் ஐரோப்பிய இறைப்பணியாளரை பணி அமர்த்துவது நல்லது என்று ஸ்வார்ட்ஸ் எண்ணினார். அதன்படி ஜெனிக்கே 1791இல் அங்கு பணியமர்த்தப்பட்டார். அங்கு அவர் கண்ட செயல்கள் அவருக்கு வியப்பை அளித்தன. நல்ல எதிர்காலம் இருப்பதாக எண்ணி இவ்வாறு இறைவாக்கு கூறினார். "திருநெல்வேலிப்பகுதியில் கிறிஸ்தவத்திற்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது என்று நான் உறுதியாக நம்புகிறேன்". மலைக்காய்ச்சலினால் அதிகமாகப் பாதிக்கப்பட்டதினால் பாளையங்கோட்டையில் அவர் அதிக நாட்கள் தங்கிப் பணிசெய்ய முடியவில்லை. 1800ஆம் ஆண்டு தஞ்சாவூரில் மறுமைக்குட்பட்டார்.

ஆனால் அவர் இறக்கும் முன்பு 1797இல் சாணார் மக்களிடையே இப்போது முதலூர் என்று அழைக்கப்படும் கிராமத்தைச் சுற்றியுள்ள இடங்களில் தொடங்கிய எழுச்சி, பல இடங்களுக்கும் பரவி வியக்கத்தக்கப் பலனைக் கொடுத்தது.

ஸ்வாட்ஸ் காலத்திற்குப் பின் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் திருநெல்வேலிக்கு வந்தவர்களுள் சிறப்புக்குரியவர் ஜெரிக்கே. அவ்வமயம் கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ள சாணார் இன மக்களிடையே ஏற்பட்ட இயக்கம் இம்மாவட்டத்தின் தென்கிழக்குப் பகுதியில் காட்டுத் தீப் போல் பரவியது. பலர் கிறிஸ்தவரானார்கள். ஜெரிக்கே மட்டும் 1300 பேருக்கு திருமுழுக்கு கொடுத்திருக்கிறார். சத்தியநாதன் 1802ஆம் ஆண்டு முடியுமுன் அதைவிட இரு மடங்கு அதிகமானோருக்கு திருமுழுக்கு கொடுத்திருக்கிறார். கோலாஃப் இப்பணிமாவட்டத்தை 1803ஆம் ஆண்டு பார்வையிட்டார். 1806 முதல் 1809 வரை இப்பணித்தளம் இலண்டன் இறைப்பணியாளர் இயக்கத்தைச் சேர்ந்த இறைபணியார் ரிங்கிள் டோபே ஆளுகைக்குட்பட்டிருந்தது. அவர் பெரும்பாலும் பாளையங்கோட்டையில் தங்கியிருந்தார். அதே வேளையில் திருவாங்கூரில் ஒரு பணித்தளத்தை நிறுவினார்.

திருநெல்வேலிக்கும் திருநெல்வேலி திருச்சபைக்கும் 1811ஆம் ஆண்டு ஒரு பேரழிவு எனலாம். தொடர்ந்து பெய்த மழையால் மாவட்டத்தைக் கொள்ளை நோய் தாக்கியது. போதுமான அளவு மருந்தை பேணுதல் இல்லாததாலும் பயத்தினாலும் ஜெரிக்கே, சத்தியநாதன் ஆகிய இருவர்களால்

திருமுழுக்கு பெற்றவர்களில் குறைந்தது மூன்றில் ஒரு பங்கினர் தங்கள் தாய்ச்சமயத்திற்கே திரும்பி சென்றுவிட்டனர்.

பேராயர் மிடில்ட்டன் கல்கத்தாவின் முதல் பேராயர். அவர் **1816**இல் சென்னையிலிருந்து கொச்சி வழியாகப் பம்பாய்க்குப் போகும் வழியில் பாளையங்கோட்டைக்கு வந்தார். ஒரு பேராயர் திருநெல்வேலிக்கு வருவது இதுவே முதல் முறை. அவருடைய வருகை இறைப்பணி இயக்க வரலாற்றிலே ஒரு சிறப்பு நிகழ்ச்சி. பாளையங்கோட்டையை வந்தடையுமுன் மூன்று குழுவினர் அவரைக் கண்டனர். முதல்குழு வழக்கம் போல அண்டையிடங்களிலுள்ள அலுவலர்களைக் கொண்டது. இரண்டாவது குழு சற்று வியப்பானது. திருநெல்வேலி கோவிலில் பணிபுரியும் சுமார் 40 அந்தணர்களைக் கொண்டது அக்குழு. கோவில் பணிக்காக அரசு அளிக்கும் செலவுத்தொகை மிகவும் குறைவாக இருப்பதாகவும், அதனால் அவர்கள் உணவின்றித் தவிக்கும் நிலை ஏற்படும் என்றும் அவர்களுடைய சமயத்திற்கும் கேடான நிலை ஏற்படும் என்றும் கூறினர். எனவே இது தொடர்பாக அவர்கள் சார்பாகப் பேராயர் தலையிட்டு அரசிடமிருந்து போதிய உதவி பெற முறையிட்டனர்.

மூன்றாவது குழுவில் உள்ளோர் திருநெல்வேலியிலும் பாளையங்கோட்டையிலும் உள்ள 30 கிறிஸ்தவர்கள் அடங்குவர். உள்ளூர் அருட்பணியாளர் அக்குழுவிற்குத் தலைவர். பேராயர் இக்குழுவை மகிழ்ச்சியுடன் வரவேற்றார். பேராயரின் எழுத்தரே மொழிபெயர்ப்பாளராக உதவினார். புகழ்பெற்ற சத்தியநாதன் என்ற அருட்பணியாளரின் மகன்தான் அந்த எழுத்தர். அக்குழுவில் உள்ளோர் பெரும்பாலும் சத்தியநாதன் அவர்களால் மனமாற்றம் அடைந்தவர்களே. கிறிஸ்தவ அறிவு இயக்கத்தினரால் அச்சிடப்பட்டு வெளிவந்த சந்தியநாதனின் அருளுரையைப் பேராயர் இந்தியாவுக்கு வருவதற்கு முன்பே படித்திருக்கிறார். பாளையங்கோட்டையில் உள்ள ஒரு பள்ளியைப் பேராயர் பார்வையிட்டார். கோட்டையில் உள்ள திருச்சபை கோவிலுக்கும் (குளோரிந்தா ஆலயம்) சென்றார். மாவட்ட ஆட்சியர் வீட்டில் நடைபெற்ற ஆங்கில வழிபாட்டில் பங்குப்பெற்றார். சில நாட்கள் சென்ற பின்பு ஆரல்வாய்மொழி கணவாய் வழியாக ரிங்கிள் டோபேயி திருவாங்கூர் சென்றார். அங்கு இறைப்பணி இயக்கத்தைச் சேர்ந்த 800 பேரைக் கொண்ட குழு பேராயரைச் சந்தித்தது.

இந்தியக் கிறிஸ்தவத்தின் வரலாறு என்ற நூலாசிரியர் ஹாஃப் அண்மையில் சென்னைப் பேராயரின் உதவியாளராக பணியமர்த்தப் பட்டிருந்தார். 1816ஆம் ஆண்டின் இறுதியில் அவர் பாளையங்கோட்டைக்கு வருகை தந்தார். அவர் ஆற்றிய பணி திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றில் முதன்மையானதாகக் கருதப்படுகிறது. திருநெல்வேலி இறைப்பணி இயக்கத்தின் இரண்டாம் தந்தையாக கருதப்படவேண்டியவர் அவர். இப்போது பேராயர் சார்ஜன்ட் வாழும் வீட்டில்தான் ஹாஃப் வாழ்ந்து வந்தார். இந்தக் கட்டிடம் இருக்கும் நிலத்தை வாங்கியவர் அவரே. பின்பு அருகில் உள்ள நிலத்தை வாங்கி அதில் ஆங்கிலப்பள்ளி ஒன்றும் தமிழ்ப்பள்ளி ஒன்றும் கட்டினார்.

கிறிஸ்தவ அறிவுச்சங்கத்தின் சென்னை செயற்குழு கேட்டுக் கொண்டதின் பேரில், 1817ஆம் ஆண்டு ஹாஃப், கிராமங்களில் உள்ள அருட்பணி இயக்க தளங்கள் அனைத்தையும் பார்வையிட்டார். செயற்குழு அவரது அறிக்கையை வெளியிட்டது. அவருடைய கலந்துரையாடல் மிகவும் நன்றாக இருந்தது. இந்த அறிக்கை திருநெல்வேலி மக்களிடையே ஒரு விழிப்புணர்வையும் எழுச்சியையும் ஏற்படுத்தியது. அதன் விளைவாக C.M.S; திருநெல்வேலியில் ஒரு பணித்தளத்தை ஏற்படுத்தி அதற்குப் பொறுப்பாக இரேனியஸ் 1820 இல் அமர்த்தப்பட்டார். இப்பணித்தளம், 1829 இல் ரோஷன் என்பவரால் மீண்டும் புத்துயிர் பெற்றது. இரேனியஸைப் போல, ரோஷனும் ஒரு லுத்தரன்.

இரேனியஸ் ஹாஃப்புக்கு உதவி செய்யவே முதலாவது அனுப்பப்பட்டார். ஆனால் இரேனியஸ் வந்த சிறிது காலத்திற்குள் ஹாஃப் சென்று விட்டதால் இரேனியஸ் அவரது பணியைத் தொடர்ந்தார்.

இரண்டு இறைப்பணி இயக்கங்களும் ஹாஃப்பின் இரு குழந்தைகள்; ஸ்வார்ட்ஸின் பேரப்பிள்ளைகள். யாக்கோபைப் போல தனது இரு பிள்ளைகளையும் (இறைப்பணி இயக்கங்களை) ஹாஃப் ஆசீர்வதித்தார். C.M.S ஸுக்கு 1820 முதல் ஐரோப்பிய இறைப்பணியாளர்களின் தட்டுப்பாடு கிடையாது. ஆனால் S.P.G.க்கு பின்னரே அவ்வியக்கத்திற்குத் தொடர்ச்சியாக ஐரோப்பிய இறைப்பணியாளர்கள் பணிபுரிய வந்தனர். 1835க்குப் பின் இவ்விரு இயக்கங்களுக்கும் சுதந்திரமாக செயல்படத் தொடங்கின. இருவருடைய செயல்பாட்டிற்கும் இடையே வேறுபாடு

இருந்தாலும் அவை ஒன்றுக்கொன்று மோதாமல், இணையாகவே செயல்பட்டன. அண்மைக்காலம் வரை திருநெல்வேலியில் உள்ள கிறிஸ்தவர்களில் மூன்றில் இரண்டுபேர் C.M.S.யைச் சேர்ந்தவர்கள். மூன்றில் ஒரு பங்கினர் மட்டும் S.P.G.யைச் சேர்ந்தவர்கள். ஆனால் இப்போது வேறுபாடு அதிகமில்லை. யாக்கோபின் இரு பேரப்பிள்ளைகளையும் போல, இவ்விரு இயக்கங்களுக்கும் கர்த்தர் அருள்புரிவாராக.

**30.6.1879** நாளின்படி இவ்விரு இயக்கங்களின் புள்ளி விவரச் சுருக்கம் கீழே தரப்பட்டுள்ளது. இராமநாதபுரம் பற்றிய *புள்ளிவிவரம்* S.P.G. *அறிக்கையில் அடங்கியுள்ளது.*

| | கிராமங்களின் எண்ணிக்கை | உள்ளூர் ஆயர் எண்ணிக்கை | திருமுழுக்கு பெற்றோர் | திருமுழுக்கு பெறாதோர் | மொத்தம் | திருவிருந்துக்கு தகுதி பெற்றவர்கள் | உள்ளூர்க் கிறிஸ்துவர் களின் காணிக்கை ரூ. பை |
|---|---|---|---|---|---|---|---|
| C.M.S. | 875 | 58 | 34484 | 19052 | 53536 | 8378 | 24,498-20 |
| S.P.G. | 631 | 31 | 24719 | 19350 | 44069 | 4887 | 13,056-80 |
| *மொத்தம்* | 1506 | 89 | 59203 | 38402 | 97605 | 13265 | 37,555.00 |

இவ்வளவு திரளான மக்கள் கிறிஸ்துவின் மந்தையில் சேருவார்கள் என்று **1780** ஆம் ஆண்டு யாராவது இறைவாக்கு கூறியிருப்பார்களா? அந்நாட்களில் சென்னையில் பேராயர் கிடையாது. அப்படி யாரேனும் இருந்திருந்தால், அந்தப் பேராலயத்தில் இங்கிலாந்து திருச்சபையைச் சேர்ந்த எந்த ஆயராவது கிடைப்பாரா என்று பார்த்தால், அவர் தூய ஜார்ஜ் கோட்டையில் பணியாற்றும் உதவி ஆயராகத்தான் இருக்க முடியும். கிராமப்பகுதிகளில் பணிபுரிந்த இறைப்பணியாளர்கள் அனைவரும் லுத்தரன் அமைப்பைச் சேர்ந்தவர்களே. திருநெல்வேலியில் 40 பேரைக் கொண்ட ஒரே சபை இருந்ததினால், அதை மேற்பார்வையிட பேராயர் சார்ஜன்ட் அல்லது என்னைப் போன்ற உதவியாளர்கள் தேவைப்பட்டிருக்க மாட்டார்கள். ஐரோப்பிய இறைப்பணியாளர்கள் எவரும் இங்குக் கிடையாது. ஏனெனில் C.M.S. அச்சமயம் இங்கு இல்லை. S.P.G. தனது பணிகளை இந்தியாவுக்கு விரிவுபடுத்தவுமில்லை. *அதனுடைய பணியை அச்சமயம் செய்து வந்தது கிறிஸ்தவ*

அறிவுச் சங்கமே. உள்ளூர் ஆயரும் கிடையாது. உள்ளூர் முகவரும் கிடையாது.

1980இல் திருநெல்வேலியின் நிலைமை எப்படியிருக்கும் என்று யாராவது இறைவாக்கு கூற முடியுமா? திருவெல்வேலி திருச்சபை வரலாற்றின் முதல் நூறு ஆண்டுகளில் 40 ஆன்மாக்களிலிருந்து திருவிருந்துக்காரர்கள் மட்டும் 50203 ஆக வளர்ச்சி அடைய முடிந்ததென்றால், அடுத்த நூறு ஆண்டுகளுக்குள் திருநெல்வேலியில் உள்ள அனைவரும் கிறிஸ்துவின் மந்தையில் சேர்ந்திருக்க வேண்டும். நூறு ஆண்டுகளுக்குப் பின் 1980 இல் எவ்வாறு இருக்கும் என்று இப்பொழுதே கூற முயற்சிப்பது பயனற்ற செயல். எதிர்காலம் இறைவன் கையில் இருக்கிறது. ஆனால் கடந்த காலத்திலிருந்தே எதிர்காலம் சிறகடித்துப் பறக்கிறது என்பது நாமறிந்த உண்மை. கடந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய மூன்றும் தெய்வீக ஆளுநரின் ஆளுகைக்குட்பட்டது. விண்ணிலும் மண்ணிலும் உள்ள எல்லா அதிகாரங்களும் நமது மீட்பருக்கு அருளப்பட்டது. அவர் தமது சீடர்களை அனுப்புகையில் உலகத்தின் முடிவு பரியந்தம் அவர்களுடன் எப்பொழுதும் இருப்பதாக உறுதி அளித்திருக்கிறார்.

## இயல் : 14

# தூய திரித்துவக் கோவில் மங்கலப்படைப்பு

முப்பத்து மூன்று ஆண்டுகளுக்கு முன் அடிக்கல் நாட்டப்பட்ட கோவில் 1880ஆம் ஆண்டு ஜூலை மாதம் 6ஆம் நாள் மங்கலப்படைப்பு செய்யப்பட்டது. மேற்கு ஐரோப்பாவில் 12ஆம் நூற்றாண்டு முதல் 16ஆம் நூற்றாண்டு வரை புகழ்பெற்றிருந்த இருந்த 'காத்திக் கட்டிடக்கலை' நுட்பத்துடன் கட்டப்பட்ட அந்தக் கோவிலின் அழகு அதன் பலகணிகள்தான். கிழக்கிலும், மேற்கிலும் உள்ள பெரிய பலகணிகள் அழகிற்கு அழகு சேர்க்கின்றன. கோவிலின் நடுப்பாகத்தில் உள்ள தூண்கள் ஒவ்வொன்றும் ஒரே கல்லால் ஆனவை. வளைவுகள் உட்பட பலகணிகள் அனைத்தையும் நான் முழு வடிவத்தில் களிமண்ணால் உருவாக்கினேன். பின்பு அவை அனைத்தும் பக்கத்து ஊர் கல்தச்சர்களால் வெள்ளைக் கற்களால் எனது மேற்பார்வையில் செய்யப்பட்டன. கூரைக்கான மரவேலைகளும் 'காத்திக் கலை நுட்பத்' துடன் செய்யப்பட்டன. அதன் படிவத்தை நான் களிமண்ணால் செய்தேன். தச்சர்கள் அப்படிவத்தைப் பார்த்து மரத்தில் அழகாக வடிவமைத்தனர்.

மங்கலப்படைப்பு விழாவிற்குத் திருநெல்வேலி, திருவாங்கூர் பகுதிகளிலிருந்து ஐரோப்பியர் பலரும் உள்ளூர் மக்களும் வந்திருந்தனர். வழிபாடு பவனியுடன் 11:30 மணிக்கு எங்கள் வீட்டிலிருந்து தொடங்கியது. 50 பாடகர்கள் கொடிகளைப் பிடித்துக் கொண்டு கீர்த்தனைகளைப் பாடி முன் சென்றனர். ஆயர் 40 பேர் (5 ஐரோப்பியர் 35 இந்தியர்) பின் தொடர, இறுதியாகப் பேராயர் சார்ஜண்டும் நானும் சென்றோம். கோவில் மக்கள் வெள்ளத்தால் நிரம்பி வழிந்தது. உள்ளே இடம் கிடைக்காமல் வெளியே நின்றவர்கள் 5000 பேர். அவர்களில் 2000 பேர் இந்துக்கள். திருவிருந்தில் பங்கு கொண்டோர் 680 பேர். சென்னைப் பேராயத்தில் பின்பற்றப்பட்ட மங்கலப்படைப்பு வழிபாட்டு முறை பின்பற்றப்பட்டது. நான் மொழியாக்கம் செய்த 'சபையின் அஸ்திபாரம்...... ' என்ற பாட்டு சிறப்புப் பாடலாகப் பாடப்பட்டது. பேராயர் சார்ஜன்ட் அருளுரை வழங்கினார்.

அச்சமயம் 45 ஆண்டுகளுக்கு முன்னால் அருகில் உள்ள C.M.S. கிராமத்தைப் பார்க்கச் செல்கையில் இடையன்குடியைக் கடந்து சென்றதாகவும், அந்நாட்களில் ஒருசில கிறிஸ்தவக் குடும்பங்களே இருந்ததாகவும் குறிப்பிட்டார். இந்திய நண்பர்களும் இங்கிலாந்து நாட்டு நண்பர்களும் செய்த உதவியை மறக்க இயலாது. சிறப்பாக, எஸெக்ஸ் நண்பர்களான அருட்திரு. பிலிபரே மற்றும் திருமதி. ஜெலி பிராண்டு ஆகியோர் உதவி செய்திராவிட்டால், கோவில்பணி நிறைவு பெற்றிருக்காது.

ஆயத்த நிலையில் வைக்கப்பட்டிருந்த கிழக்கு பலகணியை நேப்பியர் பார்த்ததும் அதற்கான செலவுத்தொகை ரூ. 500/– ஐ அப்பொழுதே கொடுத்து விட்டார். எனது குடும்பத்தினரால் அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்ட 4 மணிகள் கோபுரத்திலிருந்து ஒலித்துக் கொண்டிருந்தன. அழகிய திருமுழுக்குத்தொட்டியை அன்பளிப்பாக அளித்தவர் இந்திய நிதித்துறையில் பணியாற்றும் திரு. இராபர்ட் டெய்லர் ஆவார். அதைத் தொடர்ந்து நடைபெற்ற மற்ற நிகழ்ச்சிகளும் நடவடிக்கைகளும் சென்னைப் பேராயருக்கு அனுப்பி வைக்கப்பட்ட 1880–81 க்குரிய ஆண்டு மடலில் உள்ளன.

அதற்குப்பின்பு அருட்திரு. H.B.நார்மன் அவர்களால் முதலூரிலும், J.A.ஷேராக் அவர்களால் சாயர்புரத்திலும் மிக அழகிய கோவில்கள் கட்டப்பட்டன. அந்தக் கோவில்களுக்கு அடிக்கல் நாட்டியவர்கள் முறையே திரு. ஹேயன், பேராயர் ஹக்ஸ்டபுள் ஆகியோராவார். சாயர்புரத்து கோவில் பணி சுமார் 33 ஆண்டுகளுக்கு முன் தொடங்கப்பட்டது.

## இயல் : 15

# பேராயரின் அருட்பொழிவு

திருநெல்வேலிக்குத் தனியாகப் பேராயர் வேண்டும் என்ற எண்ணம் நீண்ட காலமாக மக்களிடையே இருந்து வந்தது. ஆனால் அதற்கு இரண்டு தடைகள் இருந்தன ஒன்று, சென்னைப் பேராயரின் உரிமை மடல். அம்மடலின்படி திருநெல்வேலி அவரது ஆளுகை எல்லைக்குள் அடங்கியிருக்கிறது. சென்னைப் பேராயரைத் தவிர வேறு யாரும் அந்த எல்கையை மாற்றி அமைக்க முடியாது. மேலும் நாடாளுமன்றத்தில் சட்டம் இயற்றியே இத்திட்டத்தை மாற்ற முடியும். இரண்டு, திருநெல்வேலிக்கு இரண்டு பேராயர்கள் தேவை என்ற எண்ணமும் இருந்தது. ஒருவர் C.M.S. பணித்தளங்களை மேற்பார்வையிட. மற்றொருவர் S.P.G. பணித்தளங்களைக் கண்காணிக்க. இத்தடைகள் நீக்கப்படவே இல்லை. ஆனால் ஒரு மாற்றுத்திட்டம் ஏற்படுத்தப்பட்டது. இரு தனிப்பேராயர்களுக்குப் பதிலாகச் சென்னைப் பேராயருக்கு உதவியாக இரு துணைப் பேராயர்களைப் பணியமர்த்துவதே அத்திட்டம். இந்த மாற்றுத் திட்டம் எனக்கு மனநிறைவை அளிக்காவிட்டாலும், இப்போது உள்ள நிலைமைக்கு இதுவே நல்லது என்று தோன்றிது.

சென்னைப் பேராயர் நல்லவர்; அன்பானவர்; அக்கறை உள்ளவர். இன்னொருவரின் கீழ்ப்பணிபுரிவது சுமையாக இருக்கக் கூடாது என்பதற்காக எனக்கு எவ்வளவு சுதந்திரம் கொடுக்க முடியுமோ அவ்வளவு சுதந்திரம் அளிக்க ஆவலாய் இருந்தார். சென்னை S.P.G. செயற்குழுவின் கீழ் பணிபுரிய எனக்கு விருப்பமில்லை. ஏனெனில் சென்னையிலுள்ள மக்கள் சார்பாளர்களும் உதவி ஆயர்களுமே அச்செயற்குழுவின் உறுப்பினர்கள். எனது உணர்வுகளையும் விருப்பங்களையும் மதிக்க மாட்டார்கள். உள்ளூர் திருப்பணிவிடையாளர் போல என்னை நடத்த விரும்புகிறார்கள். எனவே அச்செயற்குழுவின் கீழ் பணிபுரிவதை ஒரு சுமையாக மட்டுமல்ல, அவமானமாகவே நான் எண்ணுகிறேன். ஆயரல்லாத இக்குழுவுக்கு பதிலாக, கல்கத்தாவில் இருப்பது போல் இங்கும் திருமண்டல சார்பாளர் பெருமன்றம் விரைவில் அறிமுகப்படுத்தப்படவுள்ளது.

பேராயர் சார்ஜன்ட்டும் நானும் பேராயர் அருட்பொழிவுக்காக கல்கத்தாவுக்கு அழைக்கப்பட்டோம். கல்கத்தா பேராலயத்தில் 1877ஆம் ஆண்டு மார்ச் மாதம் 11ஆம் நாள் அதற்கான அருட்பொழிவு நடைபெற்றது.

அருட்பொழிவு வழங்கிய பேராயர்கள்.

1. அருள்பெருந்திரு. எட்வர்ட் ரால்ஃப் ஜாண்சன். D.D
   தலைமையிடப் பேராயர், கல்கத்தா

2. அருள்பெருந்திரு. ஃப்ரெட்ரிக் ஜெல், D.D; சென்னைப் பேராயர்

3. அருள்பெருந்திரு. லூயி ஜார்ஜ் மிலன், D.D; பம்பாய்ப் பேராயர்

4. அருள்பெருந்திரு. ரெஜினால்டு S.காப்புஸ்டோன், கொழும்புப் பேராயர்

வழிபாட்டு நிகழ்ச்சிகள் உள்ளத்தைத் தொட்டன. அந்நாள் என் வாழ்வில் மிகச்சிறப்பான நாள். மனத்தில் நீங்காத இடம் பெற்ற நாள். பேராயர் என் தலையில் கைகளை வைத்து அருளாசி வழங்கிய போது பெற்றுக் கொண்ட வரத்தை எனக்கு உரிமையாக்கிக் கொள்ளத் தொடர்ந்து முயலவும், பயத்தை அல்ல, அதிக ஆவியையும் ஆற்றலையும், அன்பையும், அறிவுக்கூர்மையையும் மற்றும் ஒவ்வொரு ஆயருக்கும் தேவையான, குறிப்பாக, ஒரு பேராயருக்குத் தேவையான வரங்கள் அனைத்தையும் இறைவன் எனக்குத் தந்தருளுவார் என்று நம்புகிறேன்.

அருட்பொழிவு முடிந்த பிறகு இந்தியாவின் வடமேற்குப்பகுதியில் உள்ள பல நகரங்களைப் பார்வையிட அறிவர் ஸ்ட்ராச்சருடன் சென்றேன். இறுதியாக பம்பாயிலிருந்து தூத்துக்குடிக்குக் கடல் வழியாகப் பயணம் செய்யத் திட்டமிட்டிருந்தோம்; புனாரஸ், டில்லி, இலக்னோ, கான்பூர், ஆக்ரா, பத்தேபூர்சிக்ரி, ஜெய்ப்பூர், அலகாபாத் ஆகிய இடங்களைப் பார்த்தோம். அதிக பயனுள்ள இப்பயணத்தின் போது, ஏராளமான செய்திகளைச் சேகரித்து வைத்துள்ளேன். பெரிய வெள்ளிக்கிழமை, இயேசு உயிர்த்தெழுந்த (ஈஸ்டர்) நாட்களில் டில்லியில் தங்கியிருந்தோம். அங்குத் திருமதி. விண்டர் அவர்கள் ஆற்றிய அருட்பணியைப் பார்த்து மகிழ்வுற்றோம். பம்பாயில் உள்ள தமிழ்ச்சபையில் ஞாயிறு வழிபாட்டை நடத்தும் வாய்ப்புக் கிடைத்தது. அறிவர். ஸ்ட்ராச்சர் பம்பாயிலிருந்து சென்னைக்குச்

செல்ல வேண்டியதிருந்தது. நான் சில நாட்கள் பம்பாயில் தங்கியிருந்து புனே, எலிஃபன்டா ஆகிய இடங்களைப் பார்த்தேன். B. and. I என்ற கப்பலில் தூத்துக்குடிக்குப் பயணம் செய்தேன்.

1887 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் தூத்துக்குடி வந்தடைந்தேன். ஏராளமான ஐரோப்பியர்களும் இந்தியர்களும் என்னை வரவேற்கக் குழுமியிருந்தனர். பல ஆண்டுகள் இறைப்பணியாளராக அறிந்திருந்த என்னை, இப்போது அவர்களுடைய பேராயராகக் காண்பதில் அவர்களுக்கு அதிக மகிழ்ச்சி. தமிழில் பேசும் முதல் பேராயர் என்பதை அறிந்து இரட்டிப்பான மகிழ்ச்சி.

1877இல் நான் திருநெல்வேலிக்கு வரும்போது, இங்குக் கடும் பஞ்சம் நிலவியது. பஞ்ச நிவாரணப் பணிக்கான பணிகளை முடுக்கிவிட்டேன்; பலருடைய உதவியை நாடினேன்; குறிப்பாக இங்கிலாந்து நாட்டிலிருந்து அதிவேக உதவியை நாடினேன். பிறரிடமிருந்து பெறப்பட்ட பணத்தை உரியவர்களுக்குக் கொடுக்க ஏற்படுத்தப்பட்ட செயற்குழுக்களில் நானும் சேர்ந்து கொண்டேன்.

1883ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் இந்தியா–இலங்கை நாடுகளின் பேராயர்கள் மாநாட்டில் கலந்து கொள்ள மீண்டும் கல்கத்தா சென்றேன். ஒன்பது பேராயர்கள் அம்மாநாட்டில் கலந்து கொண்டனர். தலைமை இடப்பேராயர் தலைமை தாங்கினார். மூன்று பேராயர்கள் அண்மையில்தான் அருட்பொழிவு பெற்றவர்கள்.

1. அருள்பெருந்திரு. பிரெஞ்ச், பேராயர், இலாகூர்.
2. அருள்பெருந்திரு. ஸ்பீச்லி, பேராயர், திருவாங்கூர் & கொச்சி.
3. அருள்பெருந்திரு. ஸ்ட்ராச்சன், பேராயர், இரங்கூன்.

இந்தியாவில் உள்ள அனைத்து கிறிஸ்தவர்களுக்கும் கிறிஸ்தவரல்லாதோருக்கும் எழுதப்பட்ட மடல்கள் உட்பட எல்லா செயல் திட்டங்களும் அச்சிடப்பட்டிருந்தன. இம்மாநாடு முடிந்த சிறிது காலத்தில் திருநெல்வேலிக்கு அதிக உரிமை பெற வேண்டும் என்ற நோக்குடன் இங்கிலாந்து நாட்டுக்குச் சென்றேன்.

அதன்பின் திருநெல்வேலியில் நான் ஆற்றிய பணிகள் திடப்படுத்தலும் ஆயர் அருட்பொழிவுமே. அவை பற்றிய செய்திகளைச் சென்னைப் பேராயருக்கு நான் எழுதியுள்ள ஆண்டு மடல்களில் காணலாம்.

1877 முதல் 1890 வரை S.P.G இயக்கத்தைச் சேர்ந்தவர்களில் என்னால் திடப்படுத்துதல் பெற்றவர்கள் 8336 பேர். 31 உதவி ஆயர்களும், 23 ஆயர்களும் அருட்பொழிவு பெற்றனர்: அவர்களில் 3 பேர் ஐரோப்பியர். அவர்களில் ஒருவர் C.M. இயக்கத்தைச் சேர்ந்தவர். அருட்பொழிவு பெற்ற இந்தியர்களில் 3 பேர் C.M. இயக்கத்தைச் சேர்ந்தவர்கள்.

1890ஆம் ஆண்டில் C.M. இயக்கத்தைச் சேர்ந்த 1681 பேருக்குத் திடப்படுத்தல் கொடுத்துள்ளேன்.

மொத்தத்தில் 10017 பேருக்கு நான் திடப்படுத்தல் கொடுத்துள்ளேன்.

## இயல் : 16

# உடல்நலமும் உடல்நல வாழிடங்களும்

இந்தியாவில் உள்ள மிகவெப்பமான மாவட்டங்களுள் திருநெல்வேலியும் ஒன்று. இங்குக் குளிர்காலமே கிடையாது. மூன்று மாதங்கள் வெப்பமாக இருக்கும். ஒன்பது மாதங்கள் மிக வெப்பமாக இருக்கும். ஐரோப்பியர்களுக்குத் திருநெல்வேலி ஓர் உலையே. ஒரு நாள் கூட நல்ல உடல்நிலையில் நான் இல்லை. எனினும் இவ்வளவு நீண்ட காலம் இங்குத் தங்கி ஊழியம் செய்யவும், பல துறைகளில் சிறிதளவு ஆக்கச் செயல்கள் செய்யவும், எனக்குப் பெலன் கொடுத்த என் தேவாதி தேவனுக்கு நன்றி! நன்றி!! தொடர்ந்து வெப்பம் இருப்பினும் செயல்பட ஏற்ற சூழ்நிலை.

இப்பகுதியில் இருக்கும் வெப்பம் வறண்ட வெப்பம். மற்ற இடங்களில் குறிப்பாக மேற்குக் கடற்கரைப் பகுதிகளில் ஈரப்பதம் உள்ள வெப்பச்சூழ்நிலை. வறண்ட வெப்பத்தை ஓரளவு தாங்கிக் கொள்ளலாம். ஆனால் ஈரப்பதம் உள்ள வெப்பத்தைத் தாங்கிக் கொள்வது அரிது. வடஇந்தியாவில் சில இடங்களில் கடும் வெயில்; சில இடங்களில் கடும் குளிர்; திருநெல்வேலியில் அவ்வாறான தட்பவெட்பம் இல்லை. ஆண்டு முழுவதும் வெயில் ....... வெயில் ......... கோடைக்காலங்களில் குளிரான இடங்களுக்குச் சென்றுவிடுவேன். வெப்ப நாட்களில் உழைத்ததினால் இழந்த ஆற்றலை மீண்டும் பெற நல்ல வாய்ப்பு.

குற்றாலத்திற்கு நான் அடிக்கடி செல்வேன். அது பாளையங்கோட்டைக்கு மேற்கே உள்ள மலையடிவாரத்தில் உள்ளது. கண்ணுக்கு இனிய காட்சிகள் அங்கு ஏராளம். மலை உச்சியிலிருந்து வரும் குளிர்ந்த நீரைக் கொட்டும் எழில்மிகு அருவி. உலகத்தில் உள்ள நன்னீர் அருவிகளுள் சிறந்தது குற்றாலம் என்று நினைக்கிறேன். எனினும் ஒரேயொரு குறை. தென்மேற்குப் பருவக்காலத்திலும் வடகிழக்குப் பருவக்காற்று வீசும் காலத்திலுமே இதமான காலநிலை அங்கு உண்டு. மற்ற காலங்களில் உள்ள காலநிலை விரும்பத்தகுந்த அளவுக்கு இருக்காது. பலவீனமான உடம்புக்கு பயன் அளிக்காது.

தொடக்க நாட்களில் கோடையில் நான் இடையன்குடிக்கு அருகில் உள்ள 'இளஞ்சுனை' என்ற கடற்கரை வாழிடத்திற்குச் செல்வது வழக்கம். இது இடையன்குடிக்கு மிக அருகில் இருப்பதால் பணித்தளப் பணிகள் எதுவும் பாதிக்காதபடி அங்கிருந்தே எல்லாவற்றையும் கண்காணித்துக் கொள்வேன். கோடையில் இதமான வானிலை உள்ள நாட்களில் எல்லா S.P.G. மற்றும் C.M.S. இறைப்பணியாளர்களும் அங்கு வந்துவிடுவார்கள். தங்களுடன் உறைவிடப் பள்ளி மாணவர்களையும் அழைத்து வருவார்கள். எனவே அந்த ஊர் விரைவில் நல்ல வளர்ச்சி கண்டது. ஆனால் இன்று? பரிதாபம்!. நான் கட்டின வீட்டைத் தவிர மற்ற வீடுகள் அனைத்தும் மறைந்து விட்டன.

உடல்நலத்திற்கு ஏற்ற தட்பவெப்பநிலை அங்கு இல்லாததால் அந்த இடம் மக்கள் மனத்தை விட்டு மிக விரைவில் நீங்கிவிட்டது. இவ்விடத்திற்குப் பதிலாக மேற்குமலைத்தொடரில் திருவாங்கூர்ப் பக்கமுள்ள ஆஷம்பு குன்றுகளைத் தெரிந்தெடுத்தோம். கடல் மட்டத்தை விட 3000 அடி உயரத்தில் உள்ள இடம். குளிர்ச்சியாக இருந்தது. இந்தக் கோடை வாழிடமும் கைவிடப்பட்டுவிட்டது. காரணம், அங்குப் பரவிய மலேரியா காய்ச்சல் அங்குச் சென்ற அனைவரையும் கடுமையாகப் பாதித்ததுதான். திருமதி. கால்டுவெல் பிறந்த ஊரான நாகர்கோவிலுக்குக் குளிர்காலத்தில் சில சமயங்களில் சென்று வந்தோம். மட்டுமல்ல அருகில் உள்ள சில இடங்களுக்கும், சிறப்பாக இரண்டு மலைவாழிடங்களுக்கும் சென்றோம். அவ்விடங்களுக்குச் சென்றும் எவ்வகைப் பயனும் இல்லை. வயிறும் ஈரலும் பாதிக்கப்பட்டதால் நீலகிரிக்குச் செல்லுமாறு பரிந்துரைக்கப்பட்டது.

1851இல் நீலகிரிக்குச் சென்று, ஏறத்தாழ ஓராண்டு அங்குத் தங்கியிருந்தோம். இங்கிலாந்து செல்லவிருந்த பயணத்தைத் தள்ளிவைக்க நினைத்தேன். நீலகிரிக்குச் செல்வதால் இங்கிலாந்துக்குச் செல்ல வேண்டிய அவசியம் இருக்காது என நினைத்தேன். ஆனால் நீலகிரிக்கு வந்தபிறகு உடல்நிலையில் ஓரளவு முன்னேற்றம் இருந்தாலும் அது சிறிது காலமே நிலைத்திருந்தது. சுமார் ஒன்றரை ஆண்டுகளில் உடல்நிலை பாதிக்கப்படவே, நான் அதிகம் அன்பு செலுத்திய இடையன்குடியையும் அங்கு செய்த பணியையும் விட்டுவிட்டு சொந்த நாட்டுக்கு அடிக்கடி போக வேண்டிய கட்டயாத்திற்கு

உள்ளானேன். இங்கிலாந்திலும் எனது உடல்நிலை நான் நினைத்தபடி தேறவில்லை. மூன்று ஆண்டுகள் தங்கவேண்டிய நிலை ஏற்பட்டது. இறைப்பணி இயக்கத்தின் சார்பாகச் சில பணிகளை நிறைவேற்ற வேண்டியநிலை. அந்நாட்களில் இங்கிலாந்து நாட்டில் உள்ள ஒவ்வொரு இடத்தையும் பார்வையிட்டேன்.

சன்–ஸ்ட்ரோக் (Sun Stroke) தாக்கியதால் மீண்டும் ஓராண்டு இங்கிலாந்தில் தங்கவேண்டியநிலை. என்ன புதுமை! இந்த ஓராண்டும் பக்கிங்ஹாம் ஷியரில் உள்ள அடிங்டன் என்ற இடத்தில் ஆயர் பணி செய்தேன். இப்போது அடிங்டன் பிரபு என்று அழைக்கப்படும் திரு. J.G.ஹப்பர்டின் இடமே அது.

1837ஆம் ஆண்டு முதலில் இங்கிலாந்தை விட்டுக் கிளம்பினேன். அதற்குப்பின் மூன்று முறைகள் இங்கிலாந்துக்கு சென்றிருக்கிறேன். 1837 முதல் 1854 வரையுள்ள 17 ஆண்டு இடைவெளிக்குப் பிறகு மீண்டும் 1854இல் இங்கிலாந்துக்குச் சென்று 1857ஆம் ஆண்டு அதாவது சிப்பாய்க்கலகம் ஏற்பட்ட ஆண்டு இந்தியாவிற்குத் திரும்பி வந்தேன். அச்சமயம் இந்தியாவிற்கு வருவது கேடுபயக்கும் என்று கருதப்பட்டாலும் சதம்டனில் கப்பலுக்குள் ஏறியதும், பிரிட்டிஷ் வீரர்களுக்குக் கிடைத்த முதல் வெற்றி எங்களது காதில் ஒலித்தது. பிரிட்டிஷ் வீரர்கள் டில்லியிலுள்ள காஷ்மீர் கோட்டையைத் தங்கள் வசப்படுத்தியுள்ளனர். கலக முடிவுக்கு அதுவே தொடக்கம் என எண்ணினோம். அடுத்து நான் 15 ஆண்டுகள் (1857 முதல் 1873) வரை இந்தியாவில் தங்கியிருந்தேன். இந்தியாவில் 8 ஆண்டுகள் இருந்து விட்டு (1875 முதல் 1883 வரை) மூன்றாவது முறை இங்கிலாந்திற்குச் சென்றுவிட்டு 1884இல் இந்தியா திரும்பினேன்.

இங்கிலாந்தில் நான் இல்லாத 17 ஆண்டுகளில் இங்கிலாந்துச் திருச்சபையிலும் நாட்டிலும் பெரிய இயக்கங்கள் தொடங்கி ஓரளவு வளர்ச்சி கண்டிருந்தன. பெருந்திருச்சபை இயக்கம், கல்வி இயக்கம், கலைநுகர்வு இயக்கம் ஆகியவை இதில் அடங்கும். இக்காலத்தில்தான் இரயில்கள், தந்திமுறை ஆகியவை அறிமுகப்படுத்தப்பட்டன. இவ்வாறு சமயம், நீதிநெறி, பொருளாதாரம் ஆகிய பல துறைகளில் முன்னேற்றம் ஏற்பட்டதினால் விக்டோரியா பேரரசியின் காலம், வளர்ச்சி மற்றும் முன்னேற்றத்தின் காலம் என்று அழைக்கப்படுகிறது.

1864ஆம் ஆண்டு மூளை பாதிக்கப்பட்டது. மூளையில் இரத்தம் அளவுக்கு அதிகமாக இருந்ததினால் ஓராண்டுக் காலமாக படிக்க, எழுத, அருளுரையாற்ற முடியவில்லை. இங்கிலாந்தில் இருக்கும் போது என்னைத் தாக்கிய 'சன்–ஸ்ட்ரோக்'கின் விளைவு தான் மூளையில் இப்பாதிப்பு. தென் திருவாங்கூரைச் சேர்ந்த நெய்யூரில் உள்ள L.M.S. மருத்துவ இறைபணியாளர் Dr. லோவ் அவர்களிடம் சென்றேன். அவரது கனிவான, திறமையான மருத்துவத்தால் ஓரளவு குணமடைந்து சிலமாதங்கள் ஆஷம்பு குன்றுகளில் உள்ள ஒரு வீட்டில் தங்கினேன். பின்பு குற்றாலத்திற்கும் சென்றேன். குற்றாலத்தில் முழுமையான உடல்நலம் அடைந்தேன். இனிமேல் மூளை தொடர்பான எவ்வகை வேலையும் என்னால் செய்ய முடியாது என்று பலர் அஞ்சினர். ஆனால் முன்பு நான் செய்துவந்த எல்லாப் பணிகளையும் தொடர்ந்து செய்திட, சிறந்த நூல்களை எழுதிட இறைவன் எனக்கு இரக்கம் பாராட்டினார். இப்போது அடிக்கடி எனக்கு இருக்கும் தலைச்சுற்றுக்கும் அந்த மூளைப் பாதிப்பே காரணம்.

இங்கிலாந்தில் இருந்து கடைசி முறையாக இந்தியாவுக்கு வந்த போது பழனி மலைகள் மீதுள்ள கொடைக்கானலைப் பற்றி அறியலானேன். அது ஏறத்தாழ உதகமண்டலம் உயரமுள்ளது. உடல் நலத்தை மேம்படுத்த உதவும் அருமையான கோடை வாழிடம். அதை அடைவதற்கு வசதியான வழி இல்லாததே ஒரு குறை. கோவில் இல்லாத குறையும் இருந்தது. எனினும் அக்குறை விரைவில் நீக்கப்பட்டு விட்டது. எனது மருமகன் அருட்திரு. J.L. வயட் அவர்களின் உதவியினால் அழகிய கோவில் ஒன்று கட்டப்பட்டு, 1885ஆம் ஆண்டு உயிர்த்தெழுந்த திருநாளுக்குப் பின்வரும் நான்காவது ஞாயிற்றுக்கிழமை மங்கலப்படைப்பு செய்யப்பட்டது. குற்றாலத்தைப் போலன்றி, ஆண்டு முழுவதும் உடல்நலத்திற்கு ஏற்ற அருமையான வாழிடம் கொடைக்கானல்.

## கொடைக்கானல் திருக்கோவில்

## கொடைக்கானல் தூய பேதுருவின் திருக்கோவில் மங்கலப்படைப்பு விழா

மதுரை மாவட்டம், பழனி மலைகளில் உள்ள இதமான காலநிலை கொண்ட கொடைக்கானலில் ஒரு ஆங்கிலக் கோவில்

**1886**ஆம் ஆண்டு உயிர்தெழுந்த திருநாளுக்குப் பின்வரும் நான்காவது ஞாயிற்றுக்கிழமை மங்கலப்படைப்பு செய்யப்பட்டது என்ற செய்தியால் கொடைக்கானலைப் பற்றி அறிந்த அனைவரும் மகிழ்ச்சி அடைந்திருப்பார்கள் என எண்ணுகிறேன். 'நெபொ மலை' என்றழைக்கப்படும் மலை உச்சியில் எழுச்சிமிக்க தோற்றமுள்ள இடத்தில் கட்டப்பட்டுள்ள அந்தக் கோவில் நாலாத்திசைகளிலிருந்தும் பல கற்கள் (மைல்கள்) தொலை விலிருந்து பார்த்தாலும் தெரியும். நாளடைவில் கோபுரம் கட்டப்படும் போது அதன் வெளிப்புற அழகு மேலும் அதிகரிக்கும். கோவில் வடிவம் எளிமையாக இருந்தாலும் நன்றாக இருந்தது. மங்கலப்படைப்பு வழிபாட்டில் அருளுரையாற்றி முடித்து காணிக்கை எடுக்கும் முன் பேராயர் கால்டுவெல் கீழ்கண்டவாறு கூறினார்.

"நமது கோவிலின் நிதி உதவிக்காக நாம் காணிக்கை பெற விருக்கிறோம். அதற்கு முன் இந்தக் கோவில் நிதிநிலை வரலாற்றைப் பற்றி சில கருத்துக்களை உங்கள் முன் வைக்க விரும்புகிறேன். முதலாவது, இந்தக் கோவில் கட்டுவதற்கான இடத்தை அளித்த அரசுக்கு நாம் நமது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். இந்த இடத்தைத் தெரிவு செய்து, தனது செல்வாக்கினால் அதைப் பெற்றுத்தர உதவிய சர். வீர் வெவின்ஞ் அவர்களுக்கு நாம் பெரிதும் கடமைப்பட்டுள்ளோம். கட்டிட நிதிக்காக முதன் முதலில் ரூ. 250/– நன்கொடையாகவும் அவர் கொடுத்துள்ளார். அதே அளவுத் தொகையைச் சென்னை பேராயர் அவர்களும் கொடுத்து கோவில் கட்டிடத்தின் மீதுள்ள தனது அக்கறையைக் காட்டியிருக்கிறார்கள். அவ்வப்போது இங்கு வரும் அனைவரும் மனமுவந்து உதவி செய்திருக்கின்றனர். கடந்த மூன்றாண்டுகளாக இங்குள்ள அழகிய கோடை வாழிடத்தைக் காண வந்தவர்கள் கோவில் கட்டுமானப் பணிக்கு மனமுவந்து உதவியுள்ளார்கள். இப்பணி சிறப்பாகவும் விரைவாகவும் நடைபெற உதவியவர்களுள் மிக முதன்மையானவர் திரு. வயட். அவரது விடாமுயற்சி விவரிக்க இயலாதது. தொடக்கக் காலத்தில் இருந்தே நிதிக்காவலராக இருந்து நிதி நிலைமையை உயர்த்த அயராது பாடுபட்டவர் அவர்.

நாங்கள் S.P.C.K. வுக்கும் அதிகம் கடமைப்பட்டுள்ளோம். அது திருமறைத் தனித்தாள் அருட்பணிகளுடன், உலகெங்கும் கோவில்கள், பள்ளிகள், கல்லூரிகள் கட்டவும் உதவி செய்து

வருகிறது. இந்தக் கோவில் கட்டுமானத்திற்கு 50 பவுண்டுகள் கொடுத்திருக்கிறது. அடுத்து திரு. மக்நேர் அவர்களுக்கு அதிக நன்றியுடையவனாக இருக்கிறேன். அவர் இந்த ஊரைச் சேர்ந்தவர். தொடக்கம் முதல் முடிவு வரை கட்டும் பணியை மேற்பார்வை செய்தவர். கட்டிடத்தின் ஒவ்வொரு பகுதியும் சிறப்பாக இருக்க வேண்டுமென்பதில் மிக அக்கறையுடன் தனது திறமையைக் காட்டினார். அவரது பணி முற்றிலும் தன்னார்வப்பணி. கோவில் கட்டுமானப்பணியில் அவர் பங்குக்கு ஈடுஇணை இல்லை. இத்தனை பேருக்கு நன்றி சொன்னதினால் நமது நிதி நிலைமை நன்றாக உள்ளது என்று நண்பர்கள் நினைக்க இடமுண்டு. உண்மை நிலை அதுவல்ல. இன்னும் ரூ. 4000/– கடன் இருக்கிறது.

பணப்பற்றாக் குறைவினால் செய்ய வேண்டிய பல செயல்கள் செய்யப்படாமல் இருக்கின்றன. அவைகளில் இரண்டு இன்றியமையாதவை. ஒன்று: கோவிலுக்கான மணி. நீண்ட தூரம் கேட்கக்கூடிய நல்ல மணியாக இருந்தால் அந்த ஓசையைக் கேட்டதும் கோவிலுக்குச் செல்ல வேண்டும் என்ற எண்ணம் மக்களுக்கு மனத்தில் தோன்றி உடனே செயல்பட ஏதுவாக இருக்கும். இரண்டு: ஆர்மோனியம். இறைவனைத் துதிபாட இது பேருதவியாக இருக்கும். மனத்தில் ஏவப்பட்டவர்கள் இவைகளைக் கொடுக்க முன்வரலாம். மற்ற தேவைகளை இன்று நாம் கொடுக்கவிருக்கும் மனமுவந்த காணிக்கை மூலம் ஈடுகட்ட முடியும் என நம்புகிறேன். துன்பத்திலிருந்து நம்மைக் காத்த இறைவனுக்கு நன்றி தெரிவிக்கும் வண்ணமாக நாம் நமது காணிக்கையைத் திருமேசையில் வைக்கப்பட்டிருக்கும் காணிக்கைத் தட்டில் படைக்கப் போகிறோம்".

காணிக்கையாக நாம் பெற்றது ரூ. 137. மதுரையைச் சேர்ந்த திரு. ஸ்காட் அவர்கள் பளிங்காலான திருமுழுக்குத் தொட்டியைக் கொடுப்பதாக வாக்குறுதி அளித்திருக்கிறார்கள்.

1887ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் வெளிவந்த 'சென்னைப் பேராயத்தின் ஆவணம்' என்ற இதழில் கொடைக்கானல் தூய பேதுரு கோவிலின் மங்கலப்படைப்புச் செய்திகள் கொடுக்கப்பட்டுள்ளன. எழில்மிகு சூழலில் கட்டப்பட்ட இந்த அழகிய கோவில் கொடைக்கானலில் வாழும் மேனாட்டு மக்களுக்கு ஒரு வரப்பிரசாதம் என்று அவ்விதழின் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். பேராயர் குறிப்பிட்டுள்ள கடன்கள் யாவும்

விரைவில் தீர்க்கப்படும் என்று நம்புவதாகவும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

மேற்குறிப்பிட்ட இதழின் ஆசிரியரின் நம்பிக்கைக்காக நன்றி தெரிவிக்கிறேன். ஆனால் கடன் இன்னும் தீர்ந்தபாடில்லை. இன்னும் ரூ. 3000/– கடன் இருப்பதாகக் கோவில் கணக்கு தெரிவிக்கிறது. நன்கொடை காணிக்கை மூலம் பெற்ற வருமானம் மனநிறைவை அளித்தாலும், செய்ய வேண்டிய செயல்கள் அதிகம். அதற்குப் பிறகுதான் பணி முடிவுற்றது எனக் கூறலாம். அவ்வப்போது பெறப்படும் நன்கொடைகள், தளவாடப் பொருட்களுக்கும் ஹார்மோனியம் மற்றும் இதரச் செலவுகளுக்கே போதுமானதாக இருப்பதால் கடன் அப்படியே இருக்கிறது.

திரு. ஸ்காட் அவர்களால் வாக்குக் கொடுக்கப்பட்ட பளிங்காலான திருமுழுக்குத் தொட்டி இங்கிலாந்திலிருந்து வந்து சேர்ந்தது. உரிய இடத்தில் வைக்கப்பட்டுள்ளது. பாடம் வாசிக்கும் நிலை, திருவறையில் வைக்க பித்தளைக் கம்பிகள், குறிப்பாக ஒரு நல்ல மணி ஆகியவை உடனடியாகத் தேவைப்படுகின்றன. சமவெளியில் அடித்த வெயிலில் காய்ந்து, இந்த மலைவாழிடத்திற்கு வரும் ஒவ்வொருவரும் மற்றவர்கள் கோவிலுக்கு வழங்கிய நன்கொடையால் தாங்கள் அடையவிருக்கும் நன்மைகளையும் வசதிகளையும் திட்டமாகப் பாராட்டுவார்கள் என நம்புகிறேன்.....

இதை எழுதி முடிக்கும் வேளையில் கோவிலுக்குத் தேவையான பொருட்கள் வாங்கப்பட்டு கோவிலில் வைக்கப்பட்டுள்ளன என்ற இனிய செய்தி வந்துள்ளது.

## இயல் : 17

# பணித்தளச் சிக்கல்கள்

மனிதர்களுக்கிடையே கருத்து வேறுபாடு இருப்பது இயற்கை. அதிலும் எந்தெந்த முறைகளில் நற்செய்திப் பணிகளைச் செய்ய வேண்டும் என்பதில் இறைப்பணியாளர்களிடையே எப்போதுமே கருத்து வேறுபாடு காணப்படும். இந்தக் கருத்து வேறுபாடுகள் சில சமயங்களில் பெரு வடிவம் எடுத்துப் போட்டி அமைப்புகளாக வளர்ச்சி அடைகின்றன. இவ்வமைப்புகளை எதிரான அமைப்புகள் என்று கூற முற்படவில்லை. எனினும் இவ்வகை எதிர் அமைப்புகள் அவ்வப்போது உருவாகின்றன. அவைகளைத் தூண்டிவிடுவதற்கும் ஆட்கள் இருக்கின்றனர். நான் அவைகளைச் சிக்கல்கள் என்றே அழைக்க விரும்புகிறேன்; மாறுபட்ட செயல்கள் என்று அழைக்க விரும்பவில்லை. ஏனெனில் ஒரு நடுநிலையாளர் பார்வையில், இருவர் கூற்றுகளிலும் நேர்மை இருக்கும்.

1838இல் நான் சென்னைக்கு வந்தபோது, இங்கு இரண்டு போட்டிக்குழுக்கள் இருந்தன. ஒரு குழு தாய்மொழியில் தான் நற்செய்தியை அறிவிக்க வேண்டும். தாய்மொழிப்பள்ளிகள் இருந்தாலும், இல்லாவிட்டாலும் அவர்களுக்கு ஒன்றுதான் என்றது. அடுத்தக் குழு ஆங்கிலக்கல்வி மூலம் நற்செய்திப்பணி செய்வதே சிறந்தது என்று சொல்லாடியது. அதின்படி சென்னையில் புகழ்பெற்ற அறிவர் டஃப் ஆங்கிலக் கல்விமுறையை அறிமுகப்படுத்தினார். அவரைத் தொடர்ந்து அறிவர் டஃபுக்கு இணையாகப் புகழ்பெற்ற திரு. ஆண்டர்சன் இந்து இளைஞர்களுக்கென ஓர் ஆங்கிலப்பள்ளியை நிறுவினார். உயர்குல, இன மக்களுக்கு அப்பள்ளி மூலமே நற்செய்தியைப் பரப்பமுடியும் என்பதே அவர் கருத்து. அன்று ஆண்டர்சன் தொடங்கிய பள்ளியே இன்று ஆல்போல் தழைத்து கிறிஸ்தவக் கல்லூரியாக வளர்ச்சி பெற்றுள்ளது. ஆங்கிலக் கல்வி பற்றிய சூடான பேச்சுவார்த்தை நடந்து கொண்டிருந்தது.

ஆங்கிலக் கல்வி ஒன்றே நற்செய்திப் பணிக்கு உதவும் என்று உறுதியாக நம்பினர். தாய்மொழிக்கல்வி பின்னுக்குத்

தள்ளப்பட்டது. அதை அவர்கள் வெகுவாகக் குறை கூறினர். ஆனால் இன்று நிலைமை தலைகீழாக உள்ளது. தாய்மொழி மூலம் நற்செய்திப் பணியைச் செய்ய வேண்டும் என்று எண்ணுவோர் இப்போது அதிகம். இவர்கள் ஆங்கிலப் பள்ளிகளில் நடைபெறும் செயல்களைக் குறை கூறுகின்றனர். என்னைப் பொறுத்த வரை இரண்டுமே தேவை என்று எண்ணுகிறேன். பாமர மக்களுக்குத் தாய்மொழி மூலம் நற்செய்தி அளிப்பதே சிறந்தது என்பதைப் பட்டறிவின் மூலம் கண்டுள்ளேன். ஆனால் உயர்குல மக்களுக்கு ஆங்கிலக் கல்வி மூலமே நற்செய்தியைச் சிறந்த முறையில் அளிக்க முடியும் என்பது எனது கருத்து. ஆங்கிலக் கல்வியே ஒரே வழி என்று நான் சொல்லவில்லை. அது ஒரு சிறந்த வழி என்றே நான் சொல்லுகிறேன்.

இறைப்பணிக்குரிய பணத்தைக் கல்விக்காக, குறிப்பாக, உயர்கல்விக்காகச் செலவு செய்வது தவறு. மக்கள் கொடுக்கும் நிதி நற்செய்திப் பணிக்கே. அப்பணத்தைக் கல்விக்காகச் செலவழித்தால் அவர்கள் மனநிறைவு அடையார் என்பது ஆங்கிலக்கல்வியை எதிர்ப்போர் கூறும் காரணங்களுள் ஒன்று. ஆனால் இந்தக் குற்றச்சாட்டுக்கு எவ்வகை சான்றும் இல்லை. அண்மையில் நான் இங்கிலாந்துக்குச் சென்றபோது பல கூட்டங்களில் கலந்து கொண்டேன். ஆனால் இப்படிப்பட்ட எதிர்ப்பை எவரும் தெரிவிக்கவில்லை; கேள்விப்படவுமில்லை.

பல S.P.G. மற்றும் C.M.S. செயற்குழு கூட்டங்களில் பங்கு கொண்டேன். இந்தக் கருத்தை எவரும் கூறவில்லை. சிறப்பாக S.P.C.K. யின் பல கூட்டங்களில் கலந்து கொண்டேன். இறைப்பணிக்கான பணத்தில் ஒரு பகுதியைத் திருநெல்வேலியில் கல்விப்பணிக்காக ஒதுக்க வேண்டுமென்ற கருத்தை வலியுறுத்த வேண்டும் என்ற நோக்கத்தோடுதான் இக்கூட்டங்களில் கலந்து கொண்டேன். ஒருவரும் இதை எதிர்க்கவில்லை. கல்வி உதவித்தொகையைச் சில ஆண்டுகளுக்கு மட்டுமே வழங்க முன் வந்தனர். அதற்குப்பின் என்ன செய்வது என்பதே அவர்களுடைய வினா. ஏற்புடைய நேர்மையான வினா.

முன்பு நான் குறிப்பிட்ட எதிர்ப்பு முற்றிலும் உள்ளூர் சிக்கலே. இந்தியாவுக்கு, சிறப்பாக சென்னைக்கு மட்டுமே உரிய சிக்கல் என நினைத்தேன். மீண்டும் இந்தியாவுக்குத் திரும்பி வந்தபின் நிலைமை சற்று வேறுபட்டதாக உள்ளது என்பதை

அறிந்தேன். S.P.G. யின் சென்னை செயற்குழுவுக்கும், கால்டுவெல் கல்லூரி முதல்வருக்கும் நிதி தொடர்பான சிக்கல் இருப்பதை அறிந்தேன். நற்செய்திப்பணிக்காக அளிக்கப்பட்ட சபையின் பணத்தை நற்செய்திப் பணிக்கு மட்டும் செலவு செய்யவேண்டும் என்ற கருத்தை முதன் முதலாவது கேள்விப்பட்டேன். அப்படிக் கல்விப்பணிக்கு எதுவும் செலவிடவேண்டுமென்றால் அது சிறிய தொகையாகவே இருக்க வேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் அந்தப் பணம் இந்தியர்களின் உயர்கல்விக்காகச் செலவிடப்படக்கூடாது என்பது அவர்களது முடிவு. இதற்கு முன்பு, வடஇந்தியாவிலுள்ள 'பாப்டிஸ்ட் இறைப்பணி இயக்க'த்தைச் சேர்ந்த இறைப்பணியாளர்கள் மட்டுமே இக்கருத்தை வலியுறுத்தினர். நற்செய்திக்கானப் பணத்தைக் கல்விக்காகச் செலவிடுவதை அவர்கள் எதிர்த்தனர்.

சென்னையில் இக்கருத்தை உடையவர்கள், திருநெல்வேலியில் உள்ள இந்தியக் கிறிஸ்தவர்களின் கல்விக்காக நான் S.P.C.K. யிடமிருந்து உதவித்தொகை பெறுவதை ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை. இவ்வகையான கல்வி உதவித்தொகை மக்களுடைய நம்பிக்கையைப் பாதிக்கும்; அவர்கள் செய்யக் கூடியவற்றைக் கூடச் செய்ய முடியாத நிலைக்குத் தள்ளிவிடும். என்னைப் பற்றிக் கூறும் அவர்கள் ஒரு போட்டிப்பள்ளியை தொடங்கி அங்குப் படிக்கும் மாணவர்களுக்கு முற்றிலும் இலவசக் கல்வி அளிக்கிறார்கள். புதுமையான ஆட்கள் அவர்கள்.

கல்வி உதவித்தொகை அளிப்பதற்கான எனது நோக்கம் நிறைவேறிவிட்டது. பெரிய நிறுவனமாக S.P.C.K. எனக்கு உதவியதைப் பற்றி நான் சிறிதும் வெட்கப்படவில்லை.

உயர்கல்வி அளிப்பதில் உள்ள ஒரு நன்மையை அதை எதிர்ப்போர் கண்டுகொள்ளுவதில்லை. இங்குள்ள மக்களுக்கு நாம் உயர்கல்வி அளிக்கும்போது நாளடைவில் அருட்பணிக்கு நன்கு கல்வி கற்ற ஆயர் கிடைப்பார்கள். அவர்களது திறமை சபைகளுக்கும் பள்ளிகளுக்கும் பயன்படுவது மட்டுமன்றி, உயர்வகுப்புகளில் படிக்கும் கிறிஸ்தவரல்லாத மாணவர்களும் ஆசிரியர்களாகப் பணிபுரியும் வாய்ப்புக் கிடைக்கும்.

உள்ளூர்க் கிறிஸ்தவர்கள் மிகவும் ஏழைகள் என்றும், உயர்கல்வியினால் ஏற்படும் நன்மைகளை அடைய, இவர்களைப்

போல வேறு எந்த இன மக்களும் ஆசைப்படவில்லை என்றும், பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் அவர்கள் ஆற்றும் பணி மிகவும் பாராட்டத்தகுந்தது என்றும் கூறினால், அதற்கு எதிர்ப்பாளர்கள் அளிக்கும் பதில் வருமாறு: அப்படியானால், கல்விக்கான செலவை அவர்களே கொடுக்க வேண்டும். இறைப்பணி இயக்கங்களிடமிருந்து உதவியை எதிர்பார்க்கக் கூடாது. படிக்கமுடியாத அளவுக்கு ஏழைகளாக இருந்தால், அவர்கள் படிக்காமல் இருப்பதிலே மனநிறைவு கொள்ள வேண்டும். இப்படிப்பட்ட மனப்பான்மை உள்ளவர்களும் இருக்கிறார்களே என்று கேள்விப்படும் போது வியப்பாக இருக்கிறது. இங்கிலாந்தில் உயர்தர, நடுத்தர மக்களிடையே மட்டுமின்றி பின்தங்கிய மக்களிடையேயும் உயர்கல்வி முன்னேற்றத்திற்காக ஒவ்வொரு கிராமத்திலும் நகரத்திலும் ஒரு திட்டம் வைத்திருக்கின்றனர்.

அதன்படி எவ்வளவு ஏழைக்குடும்பத்தைச் சேர்ந்திருந்தாலும் நன்கு படிக்கக் கூடிய மாணவனுக்கு உயர்கல்வி பெற வாய்ப்பு அளிக்கப்படுகிறது. இந்த நன்மை எல்லா மக்களுக்கும் கிடைக்க வேண்டும் என்பதற்காக எடுக்கப்படும் முயற்சியை யாரும் தவறு என்று கூறுவதில்லை. இவ்வளவு பொதுப்பள்ளிகள், கல்வி உதவித்தொகை போன்ற வசதிகள் இருந்தும் சில மக்களின் கல்வித்தரம் முன்னேற்றமடையாமல் இருந்தால், இதைவிட நல்ல காலம் வரும் என்று நம்பிக்கையோடு இருப்பதைத் தவிர வேறு வழியில்லை.

இதைவிட இன்னும் நன்றாகச் செய்யவில்லை என்றால் அதற்கு முட்டுக்கட்டையாக இருப்பது போதுமான நிதி வசதி இல்லாததே ஒழிய, மற்ற மக்களுடைய மனப்பான்மை அல்ல. ஆனால் இந்தப் பேராலயத்தில் கல்வி முன்னேற்றப் பணிகளுக்குத் தடையாக இருப்பதற்கு சிறப்பான காரணம் கொள்கை பற்றாக்குறையே; பொருளாதாரப் பற்றாக்குறை முக்கிய காரணம் அன்று. இவ்வகை எதிர்ப்புகளும், பற்றாக்குறைகளும் விரைவில் மறையும் என்றும், அப்போது திருநெல்வேலியிலுள்ள எளிய மக்கள் உயர்கல்வி பெறவேண்டும் என்ற ஆசையை அவர்களே ஊக்குவிப்பார்கள்; தடுக்க மாட்டார்கள் என்றும் நம்புகிறேன்.

இறைப்பணி இயக்க நிதியில் எவ்வளவு கல்விமுன்னேற்றத்திற்கும் எவ்வளவு நற்செய்திப்பணிக்கும், எவ்வளவு சபை மன்றம் போன்ற நிர்வாக அமைப்புகளுக்கும்

செலவு செய்ய வேண்டும் என்ற சிக்கல்கள் எழும் காலங்களில் அவைகளைத் திறமையாக ஆராய்ந்து முடிவு எடுக்க வேண்டும். திருச்சபை அமைப்புகளில் மக்கள் சார்பாளர்களை ஈடுபடுத்தும் திட்டம் அறிமுகப்படுத்தப்படும் போது இவ்வகைச் சிக்கல்கள் எளிதில் தீர்க்கப்பட்டு விடும்.

தூத்துக்குடியில் உள்ள கால்டுவெல் கல்லூரியின் கிறிஸ்தவப் பண்பைப் பேணிக்காக்க வேண்டும் என்ற அக்கறை எனக்குண்டு. கிறிஸ்தவத்தை இந்தியாவில் பரப்புவதில் நமது சிறந்த பள்ளிகள் கல்லூரிகள் எந்த அளவுக்கு உதவமுடியும் என்பது இறைப்பணி இயக்கத்திற்கு ஏற்பட்ட சிக்கல்களுள் ஒன்று. கல்லூரியின் நோக்கங்கங்களையும் பண்புகளையும் மாற்றாமல் இருந்தால் கால்டுவெல் கல்லூரியே இச்சிக்கல்களுக்குத் தகுந்த பதிலாக அமையும். திருநெல்வேலிச் சபையை நன்றாகப் புரிந்து கொள்ள வேண்டுமென்றால் இருசெயல்களை நாம் நினைவில் கொள்ள வேண்டும். ஒன்று: இங்குள்ள கிறிஸ்தவர்கள் இந்தியாவின் மற்ற எந்தப்பகுதியில் உள்ள கிறிஸ்தவர்களைக் காட்டிலும் மிக மிக ஏழ்மையானவர்கள்: இரண்டு: ஏழ்மையில் இவ்வளவு உழன்று தவித்தாலும், உயர்கல்வி பெற வேண்டும் என்ற ஆசை சென்னை மாநிலத்திலுள்ள வேறு எந்த மாவட்டத்து மக்களையும் விட இவர்களுக்கே அதிகம். தங்களது கல்வியறிவை மேம்படுத்திய சமுதாய ஏணியில் உயர்வை அடையவேண்டும் என்பது அவர்களது விருப்பம். பாராட்டுக்குரிய இந்த இலக்கை அடைய ஒரே வழி கல்வியே.

எங்கெல்லாம் மக்களுக்குக் கல்வியைப் பெற வாய்ப்பு அளிக்கப்படுகிறதோ, அங்கு இறைப்பணியாளர் அறுவடை நிறைவாக இருப்பதைக் காண்கிறோம். கிறிஸ்தவ அறிவுக்கழகம் கிறிஸ்தவ அறிவு பெருக உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் இருக்கும் வாய்ப்புகளை – சிறப்பாக பள்ளிகளையும், கல்லூரிகளையும் நன்கு பயன்படுத்தி வருகிறது. திருநெல்வேலியில் உயர்கல்வியை மேம்படுத்த கால்டுவெல் கல்லூரி மூலம் மாணவர்களுக்கும் பேராசிரியர்களுக்கும் உதவித்தொகை வழங்கும் திட்டத்தை வழங்கியது. நன்கு ஆராய்ந்த பின்பு அத்திட்டத்தை இயக்கத்தின் நிலைவர செயற்குழுவுக்கு நான் 1864ஆம் ஆண்டு ஜூலை மாதம் அனுப்பினேன். அடுத்த மாதமே அத்திட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்டு நடைமுறைப் படுத்தப்பட்டது.

கால்டுவெல் கல்லூரிக்கு ஒரு நல்ல தொடக்கம் கொடுக்க வேண்டியது எனது எண்ணம். அதை நிறைவேற்றவே மாணவர்களுக்கும் பேராசிரியர்களுக்கும் கிறிஸ்தவ அறிவுக் கழகத்திடமிருந்து கல்வி உதவி பெற்றேன். அந்த உதவி ஆறு ஆண்டுகளுக்கு மட்டுமே. மூன்று ஆண்டுகள் கடந்து விட்டன.

இத்திட்டம் பெரிய வெற்றியடைந்துள்ளது. கல்வியில் அதிவேக முன்னேற்றம் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. இப்பகுதியில் கிறிஸ்தவப் பட்டதாரிகள் இருக்கின்றனர் என்று அறிவிக்கும் காலம் விரைவில் வரும். சில இடர்ப்பாடுகளும் உண்டு. அப்படிப்பட்ட செயல்களை நாம் ஏற்கக் கூடாது. சான்றாக, எனது எதிர்ப்பைக் கண்டு கொள்ளாமலும், பேராயத்தின் அல்லது அரசின் ஆதரவு இல்லாமலும், நாசரேத்தில் ஒரு போட்டிப் பள்ளியை தொடங்க சென்னைப் பேராய செயற்குழு இசைவு அளித்தது.

கால்டுவெல் கல்லூரியின் சிறப்பான கிறிஸ்தவ, இறைப்பணியாளர் பண்புகளை மனத்தில் வைத்துக்கொண்டு, இவற்றைப் பேணிக்காக்க நாம் ஊக்குவிக்க வேண்டும். இக்கல்லூரியில் உள்ள மாணவர்களில் 82 நூற்றியத்தினர் (சதவீதத்தினர்) கிறிஸ்தவர்கள். ஆனால் சென்னை, தஞ்சாவூர், திருச்சினாப்பள்ளி போன்ற இடங்களில் உள்ள கல்லூரிகளில் 5 நூற்றியத்திற்கும் குறைந்த மாணவர்களே கிறிஸ்தவர்கள். அரசுப்பணிகளில் அந்தணர்கள் பணி பெறப் பயிற்சி அளிக்க மட்டுமே இக்கல்லூரிகள் பயன்படுகின்றன. இது போன்ற நிறுவனத்தை (கால்டுவெல் கல்லூரியை) வளரவிடாமல் தடுப்பதிலும் மட்டம் தட்டுவதிலும் தனது ஆற்றலை வீணாக்கும் இறைப்பணியாளர் இயக்கத்தின் செயல்கள் தற்கொலைக்கு ஒப்பானதேயன்றி, வேறல்ல.

கிறிஸ்தவ அறிவுக் கழக உதவியின் நோக்கங்கள் பற்றி விளக்கம் அளிப்பது நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது. 1884இல் இக்கழகத்திற்கு எழுதியதைக் கீழே தருகிறேன்: "நான் கொடுக்கிற இத்திட்டம் திருநெல்வேலியில் உள்ள இந்தியக் கிறிஸ்தவர்களுக்கு உயர்கல்வி அளிப்பதற்கே. இத்திட்டத்தின்படி ஒரு கணிசமான தொகையைக் கொடுக்கும் போது, அத்தொகையிலிருந்து நன்றாகப் படிக்கக் கூடிய கிறிஸ்தவ இளைஞர்களுக்கு ஆறு ஆண்டுகள் கல்வி உதவி அளிக்க வேண்டும். அதாவது உயர்நிலைப்பள்ளியில் இரண்டு

ஆண்டுகளும் கல்லூரியில் நான்கு ஆண்டுகளும் படிப்பதற்கான செலவை ஏற்றுக்கொள்ளுவதாகும். கிறிஸ்தவப் பெண்களுக்கும் இவ்வுதவி உண்டு. சற்றுக்கீழ் வகுப்புகளில் படிக்கும் பிள்ளைகளுக்கே உரியது இத்திட்டம். கழகமே இத்திட்டத்தை ஏற்றுக் கொள்ளுவது சாலச்சிறந்தது. அப்படிச்செய்யின், கைமேல் பலன் கிடைக்கும்.

இந்தியக் கிராமங்களில் உள்ள கிறிஸ்தவர்களும், திருநெல்வேலியில் உள்ள பெரும்பாலனான கிறிஸ்தவர்களும் பரம ஏழைகள். உயர் இன மக்களும் அரசு அலுவலர்களும் தங்களுடைய பிள்ளைகளின் உயர்கல்விக்குச் செலவழிப்பது போல, இவர்களால் தங்களுடைய பிள்கைகளுக்குச் செலவு செய்ய முடியாது. இவ்வளவு எதிரான சூழ்நிலை இருந்தாலும், சரியான வாய்ப்பு இந்த ஏழைக் கிறிஸ்தவ மாணவர்களுக்குக் கொடுக்கப்பட்டால் அவர்கள் நல்ல நிலைக்கு வந்து விடுவார்கள் என்பது பட்டறிவு மூலம் நாமறிந்த உண்மை. சென்னைப் பல்கலைக்கழகத்தில் பட்டம் பெற்ற திருநெல்வேலி கிறிஸ்தவர்கள், கல்லூரிகளில் உதவியாளர்களாகச் சிறந்த முறையில் பணியாற்றி வருகின்றனர். இந்த எண்ணிக்கை பெருகியதால் திருநெல்வேலி நமது சபை பள்ளிகளுக்கும் கல்லூரிகளுக்கும் தேவையான ஆசிரியர்களைத் தந்து உதவும். மட்டுமல்ல, அரசுப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பணி வாய்ப்பினை அவர்கள் பெறுவர். இவர்களால் அக்கல்வி நிறுவனங்களுக்கு அதிகப் பலன் கிடைக்கும். சிலர் பொதுத்துறை நிறுவனங்களிலும் பணிபுரியலாம்.

"அப்படிப்பட்டவர்களில் பலர் திருச்சபை அருட்பணிக்கு வருவார்கள் என நம்புகிறேன். அப்படிப்பட்டவர்களுக்குச் சென்னை இறையியல் கல்லூரியில் சிறப்புப் பயிற்சி அளிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்த உதவித்தொகையைப் பெறுவோர் இறைவனால் வழிநடத்தப்படுவோர்கள். அவர்களுடைய மாணவர்கள் இறைப்பற்றிலும் அருட்பணி வாஞ்சையிலும் சிறந்து விளங்கவேண்டு மென்பதே அவர்களுடைய ஆவலாயிருக்கும்.

சிறிது காலத்திற்கு முன்பு தலைமைப் பேராயர் திருநெல்வேலிக்கு வந்த போது தூத்துக்குடியில் உள்ள கல்லூரியின் முன்னேற்றத்தைக் கண்டு மிகவும் மனநிறைவு அடைந்தார். இக்கல்லூரி நமது நாட்டுக்கு மிகுந்த நன்மையாக இருக்கும் என நம்பிக்கை தெரிவித்தார். மேலும் "இது போன்று

வேறு எதுவும் இந்தியாவில் இல்லை'' என்றும், ''இதின் முன்னேற்றத்தில் முழு மாநிலமும் அக்கறையுடன் இருக்கிறது'' என்றும் தெரிவித்தார்.

சுமார் 40 ஆண்டுகளுக்கு முன்பு நான் திருநெல்வேலிக்கு வந்தபோது அடிப்படைக்கல்வி, தமிழ்வழிக்கல்வி, உயர்கல்வி ஆகிய எதுவுமே இங்குக் கிடையாது. ஆனால் அதற்குப்பின்பு, ஒவ்வொரு சந்ததியும் அதற்கு முந்தின சந்ததியை விட முன்னேற்றம் அடைந்துள்ளது. இப்போது வளர்ந்து வரும் மூன்றாம் பரம்பரை, முதல் பரம்பரையினருக்குக் கிடைக்காத உயர்கல்வியைப் பெறவேண்டும் என்ற ஆவலுடன் இருக்கின்றனர். அறிவு வளர்ச்சியில் பரம்பரைகளுக்கிடையே அதிக வேறுபாடு! புதிய பரம்பரை புதிய இனத்தைச் சேர்ந்ததோ என்று நினைக்கத் தோன்றலாம்.

'குறிப்பு:– இப்பக்கங்கள் அச்சடிக்கப்படுமுன் சென்னைப் பேராய செயற்குழுவின் பரிந்துரையின் பேரில் S.P.G. யின் நிலைவரச் செயற்குழு கால்டுவெல் கல்லூரியை மூடவும், அதை ஒரு உயர் நிலைப்பள்ளியாக வைத்துக் கொள்ளவும் தீர்மானித்துள்ளது என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.



## இயல் : 18

# எனது திருமணமும் திருமண வாழ்க்கையும்

இந்தியாவுக்கு நான் வந்து ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. 1844ஆம் ஆண்டு மார்ச் மாதம் 20ஆம் நாள், நானும் எலைசாவும் தென்திருவாங்கூரிலுள்ள நாகர்கோவிலில் கணவனும் மனைவியுமாக இணைக்கப்பட்டோம். எனக்கு வயது 29; என் மனைவிக்கு 21. இலண்டன் இறைப்பணியாளர் இயக்கத்தைச் சார்ந்த இறைப்பணியாளர் அருள்திரு. சார்ல்ஸ் மால்ட்டின் மூத்த மகள்தான் எலைசா. மால்ட் கடுமையான உழைப்பாளி; வெற்றியுள்ள இறைப்பணியாளர். அவர் பேராயர் ஹீபரின் சபையான ஷ்ராப்ஷியரில் பிறந்தார். அவர் மனைவி ஆலிவர் கிராம்வெல்லின் குடும்ப வழியில் தோன்றியவர். அவரது குடும்பத்தினர் ஹன்டிங்டன்ஷியரில் உள்ள நியோட்ஸ் என்ற இடத்தில் வாழ்ந்து வந்தனர். 1818இல் இந்தியாவுக்கு வந்த அவர்கள், அவர்களுடைய பணித்தளமான நாகர்கோவிலுக்கு 1819ஆம் ஆண்டு வந்தடைந்தனர். திரு. மால்ட் பல செயல்களைச் செய்துள்ளார். அவைகளுள் ஒன்று நாகர்கோவிலில் அவர் அமைத்த அச்சகம். பல தமிழ் நூல்களும் தனித்தாள்களும் அங்கு அச்சடிக்கப்பட்டன. பாளையங்கோட்டையைச் சேர்ந்த இரேனியஸ் அவர்கள் எழுதிய பல நூல்களும் இங்குதான் அச்சடிக்கப்பட்டன.

மால்ட்டும் இரேனியஸூம் ஒருவரை ஒருவர் நன்கு அறிவர். இரேனியஸ்ஸின் பாணியையே மால்ட் பின்பற்றினார். அவருக்கு ஜான் பால்மர் என்ற இந்திய உதவியாளர் உண்டு. தமிழ்க் கீர்த்தனை எழுதுவதில் வல்லவர். அத்துறையில் தஞ்சாவூர் வேதநாயகம் சாஸ்திரியார் மட்டும் அவருக்கு மேலானவர். ரிங்கிள்டோபேயினால் மனமாற்றமடைந்த ஒருவரின் வாரிசுதான் பால்மர். அவரைப்பற்றிய செய்திகளை 1881இல் வெளியிடப்பட்ட 'திருநெல்வேலி மிஷன் சரித்திர'த்தில் காணலாம். அவரால் மனமாற்றமடைந்தவர்களில் பலர், மைலாடி என்ற இடத்தில் இன்னும் இருக்கிறார்கள். அவர் உருவாக்கிய சபைகளுக்கு மையமே அவர்கள்தான். திரு. மால்ட் தன் தாய்நாட்டுக்குத் திரும்பாமல் 37 ஆண்டுகள் தொடர்ந்து சிறந்த

பணியாற்றியுள்ளார். ஒரு விபத்தின் காரணமாக பக்கவாதம் வரவே 1856இல் இங்கிலாந்திற்குத் திரும்பினார். திருமதி. மால்ட் அதிக அறிவும் இறைப்பற்றும் உள்ள பெண்மணி. தனது கணவனுக்குப் பலவகையில் உதவியுள்ளார். குறிப்பாக பெண் கல்வியில் அவர்கள் ஆற்றிய பணியை மறக்க முடியாது. அவர் தொடங்கிய பெண் விடுதிப் பள்ளியே தென்னிந்தியாவில் பெண்களுக்காக தொடங்கப்பட்ட முதல் பள்ளி ஆகும். லேஸ் (Lace) பின்னலை முதலில் இங்கு அறிமுகப்படுத்தியதும் அவர்கள்தான்.

இந்த இரு தொடக்கக் காலத்திய இறைப்பணியாளர்களுக்கும் தென் திருவிதாங்கூர் என்றும் கடமைப்பட்டுள்ளது. திருமதி. கால்டுவெல் நாகர்கோவிலில் பெற்ற பட்டறிவே திருநெல்வேலி மக்களுக்குப் பயனுள்ள அரும்பணியாற்றப் பேருதவியாக இருந்தது. பேச்சுத்தமிழில் அவர் வல்லவர். நாகர்கோவிலைத் தவிர வேறு எங்கு அவர் இதைக் கற்றிருக்க முடியும்? சற்று வயதான பின்பே அவர் கல்வி கற்க இங்கிலாந்து சென்றார். விரைவினிலே இந்தியாவுக்குத் திரும்பி விட்டதால், குழந்தைப் பருவத்தில் கற்ற தமிழை முற்றும் மறந்து விடவில்லை. நாகர்கோவிலில் நடைபெற்ற எங்கள் திருமண வழிபாட்டை நடத்தியவர் மெய்ஞ்ஞானபுரத்தில் C.M.S. இறைப்பணியாளராகப் பணிபுரிந்த அருட்திரு. ஜாண் தாமஸ் அவர்கள்.

இடையன்குடிக்கு வந்ததும், நான் தொடங்கியிருந்த எல்லாப் பணிகளிலும் எனக்குத் திருமதி. கால்டுவெல் உதவி செய்தார். மட்டுமல்ல, எனது பணிகளில் இருந்த குறைவுகளை நீக்க எனக்கு உதவினார். பேச்சுத் தமிழையும் அன்றாடம் நாம் பயன்படுத்தும் தமிழையும்—அம்மையாரிடமிருந்தே கற்றேன். இடையன்குடியில் அவர்கள் தொடங்கிய பெண்கள் உறைவிடப்பள்ளி, தென்னிந்தியாவில் S.P.G. இறைப்பணி இயக்கப் பணித்தளங்களுள் தொடங்கப்பட்ட முதல் பள்ளி ஆகும். அதைத் தொடர்ந்து பல இடங்களில் இது போன்ற பள்ளிகள் தொடங்கப்பட்டன. ரேந்தாத் தையலை திருநெல்வேலியில் முதன் முதலில் அறிமுகப்படுத்தியவர் அம்மையாரே.

பெண்கல்வி முன்னேற்றத்திற்காக எனது மாமியார் திருமதி. மால்ட் அவர்கள் தொடங்கிய முயற்சியை அவர்களது

மகள் (எனது மனைவி எலைசா) இடையன்குடியில் தொடர்ந்து செய்து கொண்டிருக்கிறார். அப்பணி அத்துடன் நின்று விடவில்லை. எனது மகளும் S.P.G. இறைப்பணியாளராகத் திருச்சிராப்பள்ளியில் பணிபுரியும் அருட்திரு. J.L. வயட் அவர்களின் மனைவியுமான திருமதி. இஸபெல்லாவும் இக்கல்விப் பணியைத் தொடர்ந்து செய்து கொண்டு வருகிறார். இப்பணி தொடர்ந்து நடைபெற உதவி செய்துவரும் எம்பெருமான் இயேசுவுக்கு நன்றி.

இந்தியாவில் 50 ஆண்டுகள் நான் செய்த இறைப் பணியை நினைவுபடுத்திப் பார்க்கிறேன். C.M.S. ஐச் சேர்ந்த திருமதி. தாமஸ், திருமதி. சார்ஜன்ட் ஆகியோரும் S.P.G. யைச் சேர்ந்த திருமதி. கார்டுவெல், திருமதி. வயட் ஆகியோரும் இலண்டன் இறைப்பணியாளர் இயக்கத்தைச் சேர்ந்த திருமதி. மால்ட் அம்மையாரும் ஆற்றிய பணியைப் போல இந்தியாவில் வேறு எந்தப் பெண்ணும் இவ்வளவு சிறந்த முறையில் பணியாற்ற வில்லை என்பதை உறுதியுடனும் நம்பிக்கையுடனும் என்னால் கூறமுடியும். பெண்களுக்காக இடையன்குடியில் தொடங்கப்பட்ட சாதாரண பள்ளி எதிர்ப்பையும் பொருட்படுத்தாது தூத்துக்குடிக்கு மாற்றப்படுகிறது. அம்மாற்றத்தை எதிர்ப்போர் அதை எதிர்க்காமல் நன்றியோடு அதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதே எனது விருப்பம். அம்மையாரது இப்பணியே அவர்களது இறுதிப்பணியாகவும் மிகச்சிறந்த வெற்றிப்பணியாகவும் இருக்கும் என்று கூறி எனது நினைவலைகளை நிறைவு செய்கிறேன்.

பிண்ணிணைப்பு : 1

## பேராயர் கால்டுவெல் அவர்களின் பணிநிறைவும் பரம அழைப்பும்

பேராயர் அவர்களின் இளமைப்பருவத்தைப் பற்றியும், இறைப்பணியாளராகவும், நூலாசிரியராகவும் பேராயராகவும் 53 ஆண்டுகள் பணித்தளத்தில் கடந்து சென்ற வாழ்க்கை பற்றியும் கடந்த பக்கங்களில் பேராயர் கொடுத்த செய்திகள் மூலம் அறிந்து கொண்டோம். இப்பொழுது அவர் பணி நிறைவு பற்றியும், மறைவு பற்றியும் சுருக்கமாகக் காண்போம்.

பழுத்த வயது. பலவீனம் காரணமாக அவரது குடும்பத்தினர் கேட்டுக் கொண்டதற்கு இணங்கி பேராயர் கால்டுவெல் தனது பணிவிலகல் மடலை 1891ஆம் ஆண்டு

ஜனவரி மாதம் 31ஆம் நாள் சென்னைப் பேராயரிடம் கொடுத்துவிட்டு, தன் வாழ்வின் எஞ்சிய காலத்தைக் கொடைக்கானலில் செலவு பண்ண வேண்டுமென்று அங்குச் சென்றார். அவரது பணிவிலகல் மடல் சென்னைப் பேராயச் செயற்குழுவுக்கு டயோசிசன் கமிட்டிக்கு அனுப்பப்பட்டது. செயற்குழு கீழ்கண்டவாறு தீர்மானம் இயற்றியிருந்தது.

## தீர்மானம் 3

50 ஆண்டுகளுக்கு மேலாக உதவி ஆயராகவும், ஆயராகவும், பேராயராகவும் பேராயர் கால்டுவெல் அவர்களைக் கிறிஸ்துவின் திருச்சபையில் பணி செய்ய இசைவு அளித்ததற்காக M.D.C. தனது நன்றியைத் தெரிவிக்க விரும்புகிறது.

பேராயர் கால்டுவெல் தென்னிந்தியாவில் நற்செய்திப் பணி செய்ய தன்னுடைய திறமைகளையும் வரங்களையும் பல வகைகளில் பயன்படுத்தியுள்ளார். அவைகளை விளக்கமாகக் குறிப்பிடுவது செயற்குழுவின் பணிகளுக்கு அப்பாற்பட்டது. எனினும் அவர் ஆற்றிய பணி மிகவும் ஆசீர்வாதமாக உள்ளது என்பதை இச்செயற்குழு உணர்கிறது. சிறப்பாக அவரது புலமை தமிழ்நாட்டிலுள்ள கிறிஸ்தவ சபைகளுக்கு எவ்வளவு பயனுள்ளதாக இருக்கிறது என்பதை அறிந்து அவரது வலுவான உழைப்புகளையும் சேவைகளையும் மிகுதியாகப் பாராட்டக் கடமைப்பட்டுள்ளது. இச்சிறந்த பணியைச் செய்ய இறைவன் பேராயர் கால்டுவெல்லுக்கும் அவரது துணைவியாருக்கும் நீடிய ஆயுளைக் கொடுத்துள்ளார். அவர்கள் ஆற்றிய பணியின் பயன்களைத் தங்களின் கண்கள் காண அவர்களது ஆயுள் நாட்களை நீட்டித்துக் கொடுப்பார் என்று மீண்டும் நம்புகிறோம்.

ஆனால் பேராயருக்குக் கிடைத்த ஓய்வு நாட்களோ மிகக்குறைவு. நிரந்தர இளைப்பாறுதலுக்காகவும், இங்கு ஆற்றிய பணியை விட இன்னும் உயரிய பணியை மேலுலகில் ஆற்றும் நோக்குடன் இறைவன் அவரை அழைத்துக் கொண்டார். செய்தித் தாட்களுக்கு அளிக்கப்பட்ட விவரத்தைக் கீழே தருகிறோம்.

''ஆகஸ்ட் 19ஆம் நாள் பேராயருக்குச் சளி பிடித்திருக்கிறது என்று அவரது குடும்பத்தினர் அறிந்தனர். எனினும் வழக்கமாகச் செய்கிற பயிற்சிகளை முடித்துவிட்டு

மற்றவர்களோடு உணவு அருந்த அமர்ந்தார். ஆனால் வெள்ளி இரவு இருமல் அதிகரிக்கவே, மருத்துவரை அழைத்து வந்தனர். மறுநாள் காலை சற்று பரவாயில்லை. அறையை விட்டு வெளியே வரவில்லை. ஆனால் படுக்காமல் அறையினுள் அங்குமிங்கும் நடந்து கொண்டிருந்தார். திங்கட்கிழமை காலை காலநிலையில் சற்று முன்னேற்றம். மனைவியுடன் சிறிது நேரம் தோட்டத்தில் உலாவினார். மாலை காய்ச்சல். செவ்வாய், புதன் ஆகிய நாட்களில் காலையில் காய்ச்சல் இல்லை. பிற்பகலில் மீண்டும் காய்ச்சல், விடியும் வரை விடவில்லை. வியாழக்கிழமை கொஞ்சம் பரவாயில்லை. ஆனால் மருத்துவரும் ஆஸ்திரேலியாவிலிருந்து வந்திருந்த பேராயரின் மகனும், மருத்துவருமான அறிவர். ஆடிங்டனும், காய்ச்சல் வராதபடி மருந்து கொடுத்தால் எல்லாம் சரியாகிவிடும் என்று எண்ணினார். ஆனால் காய்ச்சல் மீண்டும் வந்துவிட்டது. அன்று மாலை 9:00 மணிக்கு நிலைமை மோசமாயிற்று என்பதை நாங்கள் உணர்ந்தோம். உடனே ஓய்வெடுக்கச் சென்றார்.

இதுவரை நாற்காலியில் உட்காரவும் அறைக்குள்ளே ஓரளவு நடமாடவும் இருந்த பெலன் திடீரென குன்றியது. மருத்துவரும் அவரது மகனும் குடும்பத்திலுள்ள மற்ற உறுப்பினர்களும் இரவு முழுவதும் கூடவே இருந்தனர். அரைமணி நேரத்திற்கு ஒரு முறை சத்துணவு ஊட்டப்பட்டது. ஆனால் பயனேதும் இல்லை. இழந்த பெலனை மீண்டும் பெறமுடியவில்லை. கண்களைத் திறக்கமுடியவில்லை. கேட்கப்படும் வினாக்களுக்குச் சரியானபடி பதிலும் அளிக்கமுடியவில்லை. ஓரசைச் சொற்கள் மட்டுமே வாயிலிருந்து வெளியே வந்தன. வெள்ளி (28.8.1891) மாலை 9:00 மணிக்கு எல்லாரும் அவரைச் சுற்றி முழங்கால்படியிட்டு துதியின் வேண்டுதலை ஏறெடுத்துக் கொண்டிருக்கும் போது அவரது ஆவி அமைதியாக உடலை விட்டுப் பிரிந்து தன்னை உண்டாக்கிய தேவனிடம் சென்றது. திருச்சிராப்பள்ளியில் இறைப்பணியாளராகப் பணியாற்றி வருபவரும் பேராயரின் மருமகனுமான அருட்திரு. J.L.வயட் அவர்களுக்குத் தந்தி மூலம் செய்தி அனுப்பப்பட்டது. பேராயர் அவர்கள் தனது வாழ்நாளில் பெரும்பகுதியைச் செலவிட்ட திருநெல்வேலியில் உள்ள இடையன்குடியில் அடக்கத்திற்கு ஏற்பாடு செய்யவும், அவருடைய தூய உடலுடன் அங்குவரை செல்லவேண்டும் என்றும் அச்செய்தியில் கூறப்பட்டிருந்தது. எந்த மக்களுக்காக அரை நூற்றாண்டுக் காலத்தை அர்ப்பணித்தாரோ

அந்த மக்கள் நடுவில், தானே கட்டி முடித்து, மங்கலப்படைப்பு செய்த அந்த இடையன்குடி கோவிலின் திருவறைக்குள்ளேயே அடியேனுடைய உடல் அமைதியாகத் துயில் கொள்ள வேண்டும் என்ற தனது விருப்பத்தை ஏற்கனவே மறைந்த பேராயர் அவர்கள் தெரிவித்திருந்தார்.

அவரை அருமையாக நேசித்தும் மதித்தும் வந்த அம்மகானின் உறவினர்கள் அவரது விருப்பத்தை நிறைவேற்றத் தயங்கவில்லை. பேராயரது அங்கி அணிவிக்கப்பட்ட அவரது உடல் பெட்டியில் வைக்கப்பட்டது. தாம் அருமையாக நேசித்த மக்கள் அமைதியாகவும் ஒழுங்காகவும் அந்நாள் முழுவதும் அஞ்சலி செலுத்தினர். அவரை அறிந்த அனைவரும் அவருடைய அழகிய தோற்றத்தை நினைவில் வைத்திருப்பர். அதை விட மேலான சொற்களால் விவரிக்க இயலாத மகிழ்ச்சியுள்ள அமைதியான, அழகான தோற்றம் மறைவுக்குப் பின் அவரது முகத்தில் காணப்பட்டது.

எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்தியப் பின்பு, குடும்பத்தினருக்காக நியுஜன்ட் அவர்கள் தூய திருவிருந்து வழிபாடு நடத்தினார். நிருபங்களிலிருந்தும், நற்செய்தி நூல்களிலிருந்தும் பாடங்கள் படிக்கப்பட்டன. சிறப்பான வேண்டுதல்களும் ஏறெடுக்கப்பட்டன. அன்னாரது உடல் வைக்கப்பட்டுள்ள பெட்டியை அன்புக்கரங்கள் மலர்களால் அழகுப்படுத்தின. அப்பெட்டி இன்னொரு பெட்டிக்குள் வைக்கப்பட்டது. பெட்டி துணியால் மூடப்பட்டது. சிலுவை போன்ற அமைப்பில் அப்பெட்டி மலர்களால் அழகுபடுத்தப்பட்டு மலைப்பாதை வழியே செல்லும் நீண்ட பயணத்திற்கு ஆயத்தமானது.

செங்குத்தாக உள்ள அம்மலைப் பாதை மட்டும் 12 மைல் நீளமுள்ளது. பெட்டியைச் சுமந்து செல்லும் மனிதர்கள் அதிகத் தொல்லை கொடுப்பார்கள் என்ற அச்சத்தை தெரிவித்தனர் சிலர். ஆனால் சுமந்து செல்லத் தெரிந்தெடுக்கப்பட்ட 24 பேரும் மிகவும் கண்ணியமாக நடந்து கொண்டனர். அவர்கள் அனைவரும் மதுரை அமெரிக்கன் இறைப்பணி இயக்கத்தைச் சேர்ந்த உள்ளூர் கிறிஸ்தவர்கள். வேண்டுதலை திரு. நியுஜன்ட் ஏறெடுக்கும் போது தங்கள் தலைப்பாகையை கையில் எடுத்துக்கொண்டு, ஒரு தூயவரின் உடலைச் சுமந்து செல்லத் தங்களுக்கு அளிக்கப்பட்ட இந்த வாய்ப்புக்காகக் இறைவனுக்கு

தங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொண்டு, மதிப்பிற்குரிய அச்சுமையைத் தங்கள் தோள்களில் ஏந்திக் கொண்டனர். அவரது மகன் உடன் சென்றார். இரண்டு மைல்கள் கடந்தன. நீண்ட பயணத்திற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்துவிட்டு அருட்திரு. வயட்டும் அக்குழுவுடன் சேர்ந்து கொண்டார். அம்மைநாயக்கனூர் வரை எல்லாரும் பாதுகாப்பாகப் போய்ச் சேர்ந்துவிட்டனர் என்ற செய்தி குடும்பத்தினருக்குக் கிடைத்தது. மதியம் செல்லவிருக்கும் இரயில் வண்டியுடன் இணைப்பதற்காகப் போகிகள் (Coach) நின்று கொண்டிருந்தன.

வண்டி ஞாயிறு இரவு 8 மணிக்கு பாளையங்கோட்டை சென்றது. அன்னாரது உடலைக் காண C.M.S., மற்றும் S.P.G. ஆயர்களும் மக்களும் ஏராளமாகக் கூடியிருந்தனர். அவர்களில் முக்கியமானோர் வாக்கர், டக்ளஸ், ஸ்டோர்ஸ் ஆவர். உள்ளூர் ஆயர்கள் பெட்டியைப் பாதுகாப்பாக இறக்கி ஒரு வண்டியில் வைத்தனர். அங்கிருந்து வண்டி பேராலயம் நோக்கிச் சென்றது. நேரம் தாமதமாக இருந்தாலும், கோவிலில் பலர் குழுமியிருந்தனர். தூய மேசையின் முன்பாக உயிரற்ற கால்டுவெல்லின் உடலைத் தாங்கிய பெட்டி வைக்கப்பட்டுக் கொண்டிருக்கையில் திரு. டக்ளஸ் “Dead March in Saul” என்ற பாடலின் இசையை இசைத்தார். பொறுப்பு ஆயராகப் பணியாற்றிய இந்திய அருட்பணியாளர் ஐசக் அடக்க வழிபாட்டிற்கான தொடக்க வாக்கியங்கள், 96ஆம் சங்கீதம், இரண்டு இறுதி வேண்டுதல்கள் ஆகியவற்றைப் படித்தார். எல்லா இடமும் பயபக்தியினால் நிறைந்து, உணர்ச்சி ததும்பக் காட்சியளித்தது. தனது சகோதரப் பேராயர் சார்ஜண்ட் அவர்கள் பல ஆண்டுகளாப் பணிபுரிந்து, வேண்டுதல் செய்த, அருளுரை வழங்கிய இடம் இது. பேராயர் சார்ஜண்ட் அவர்களின் இறுதிச்சடங்குக்கு முன் அவரது உயிரற்ற உடலும் இதே இடத்தில்தான் வைக்கப்பட்டிருந்தது. என்னே ஒற்றுமை!

திங்கட்கிழமை பிற்பகல் உயிரற்ற கால்டுவெல்லின் உடலைத் தாங்கிய பெட்டி பாளையங்கோட்டை பேராலயத்திலிருந்து எடுக்கப்பட்டு, கம்பிச்சுருள் உள்ள வண்டியில் வைக்கப்பட்டு 40 மைல் தூரத்தில் உள்ள இடையன்குடிக்கு எடுத்துச் செல்லப்பட்டது. செவ்வாய்க்கிழமை காலை 7:00 மணிக்கு வண்டி இடையன்குடிக்குப் போய்ச் சேர்ந்தது. வண்டி பாளையங் கோட்டையைக் கடந்து செல்லும் முன்பு உள்ளத்தைத் தொடும்

ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. சிறியோரையும் பெரியோரையும் பேராயர் கால்டுவெல் அவர்களது அருட்பணி எவ்வளவாய் கவர்ந்திருக்கிறது என்பதை அந்நிகழ்ச்சி காட்டுகிறது.

'இரயில்வே கேட்' அருகே வண்டி வந்துகொண்டிருந்த போது சாராள் தக்கர் பள்ளியின் மாணவியர் பெருவீதியின் (சாலை) இருபக்கங்களிலும் வரிசையாக நின்று கொண்டு துயரப்பாடல்களைப் பாடிக்கொண்டிருந்தனர். செல்வி ஆஸ்க்வித் அம்மையாரும் அவர்களோடு நின்று கொண்டிருந்தார். மாணவியர் அஞ்சலி செலுத்த வந்திருக்கிறார்களே என்ன காரணம்? என்று அம்மையாரிடம் கேட்டபோது "மறைந்த பேராயர் கடைசியாக இங்கு வந்தபோது சிலர் அவர்களிடம் திடப்படுத்துதல் பெற்றதாகவும், அவர்களது உடல் இந்த வழியாக எடுத்துச் செல்லப்படுகிறது என்று கேள்விப்பட்டதும் அவர்கள் தாங்களும் தங்களது இறுதி மரியாதையைச் செலுத்த வேண்டுமெனக் கேட்டார்கள். நான் மறுக்கவில்லை" என்றார்.

பேராயர் கால்டுவெல் அவர்களது உடல் வரும் நேரத்தை அறிந்து கிராம மக்களுக்கு அறிவிக்கும் நோக்கத்துடன் இடையன்குடிக்குச் செல்லும் வழியில் 3 மைல்களுக்கு முன்னர் உள்ள ஓர் இடத்தில் சிலர் குழுமியிருந்தனர். ஊரிலிருந்து சுமார் ஒரு மைலுக்கு முன்னால், திருநெல்வேலியின் பல பகுதிகளிலும் இருந்து வந்த இந்திய ஆயர்கள், பல்வேறு பணித்தளங்களில் உள்ள அருட்பணியாளர்கள், சபையார், பள்ளிக்குழந்தைகள், மாவட்டத்தின் பல பகுதிகளிலிருந்தும் வந்திருந்த முகமதியர்கள், இந்துக்கள் ஆகிய திரளான மக்கள் தங்கள் நண்பரும் அன்புப் பேராயருமான கால்டுவெல் அவர்களின் உடலை இறுதியாக வரவேற்கக் காத்துக் கொண்டிருந்தனர். இரண்டு கொடிகளை ஏந்திச் சென்றனர். முதற்கொடியில் பொன்வண்ணத்திலான சிலுவை பின்னப்பட்டிருந்தது. இரண்டாவது கொடி கறுப்பு. அதில் வெள்ளைச் சிலுவையும் "நானே உயிர்த்தெழுதலும் ஜீவனுமாயிருக்கிறேன்". என்ற திருவாக்கியமும் பொறிக்கப்பட்டிருந்தன. இக்கொடிகள் முன்செல்ல, அதைத்தொடர்ந்து ஆயர்களும், பாடகர்களும் ஊர்வலமாகச் சென்றனர். அவர்கள் பாடிய "என்றும் கர்த்தாவுடன் ......" என்ற பாடல் அமைதியான அக்காலை வேளையில் பக்திப்பரவசத்தைக் கூட்டியது. ஊர்வலம் கிராமத்தை நெருங்கியதும், கூட்டம் அதிகரித்தது. மக்களின் அழுகையின் குரலும், புலம்பலும்

நெஞ்சைப் பிளந்தன. பேராயரின் மறைவுச்செய்தி பற்றி 28ஆம் நாள் இடையன்குடி மக்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. அவரது இனிய முகத்தை இனிமேல் காணமுடியாதே என்பதை இப்பொழுது உணர்ந்தனர்.

அவர் பல ஆண்டுகளாக வாழ்ந்த மாளிகையை நெருங்கியதும், வண்டியிலிருந்து பெட்டி இறக்கப்பட்டு, மக்கள் அவரது திருமுகத்தைக் காண வசதியாகப் பழைய கோவிலின் முன்பு பெஞ்சியின் மேல் வைக்கப்பட்டது. பின்பு, அவர் நாற்பது ஆண்டுகளாக மக்களுக்கு அருளுரை ஆற்றிய கோவிலுக்குள் வைக்கப்பட்டது. அன்னாரது உடல் இறுதி ஓய்விடத்திற்கு எடுத்துச் செல்லப்படும் வரை பழைய கோவிலிலேயே இருந்தது. சுற்றுப்புறக் கிராமங்களிலிருந்து மக்கள் திரள் திரளாக வந்து அவரது முகத்தை இறுதியாகப் பார்த்து விட்டு, தங்கள் பாசத்திற்கு அறிகுறியாக மாலைகளை பெட்டிமீது வைத்து மறைந்த மனுமைந்தனின் உண்மை இறைப்பணியாளருக்கு இறுதி அஞ்சலி செலுத்தினர்.

அன்று மாலை வழிபாட்டில் அருட்திரு. ஞான ஒளிவு அவர்கள் பேராயரின் வாழ்க்கை, பண்புநலன்கள் பற்றிச் சுருக்கமாக உரையாற்றினார். அவரது கூர்மையான ஆய்வுநோக்கு, தான் செய்யும் செயல்களைப் பற்றியத் துல்லியமான அறிவு, அவரது பெருந்தன்மை, மற்றவர்களின் தவறுகளைத் திருத்தும் போது அவரிடம் காணப்பட்ட பொறுமை, திட்டங்களைச் செயலாற்றுவதிலும் தடைகளை மேற்கொள்ளுவதிலும் அவர் காட்டிய தளராத விடாமுயற்சி ஆகிய குணநலன்களைக் கோடிட்டுக் காட்டினார்.

தான் இறந்தபின் தனது உடல் இடையன்குடி மக்கள் நடுவிலேயே அடக்கம் செய்யப்பட வேண்டும் என்பதே பேராயர் அவர்களின் நெடுநாளைய விருப்பம். 1883ஆம் ஆண்டு அவர் இங்கிலாந்தில் இருந்தபோது அவரது பலவீனம் காரணமாக அவரை அங்கேயே தங்கும்படி கேட்டுக்கொண்டனர். "நான் யாருக்காக வாழ்ந்தேனோ, அந்த மக்கள் நடுவிலேயே இறக்க விரும்புகிறேன்" என்று பதிலளித்தார். 1847இல் தன்னால் கால்கோல் (அஸ்திபாரம்) இடப்பட்டு, 1880இல் அவராலே மங்கலப்படைப்புச் செய்யப்பட்ட அந்த அழகிய கோவிலில் அவரது உடல் நிரந்தர இளைப்பாறுதலுக்காக வைக்கப்படுவது முற்றிலும் பொருத்தமே. அவரே திட்டமிட்டு, களிமண்ணால் படிவத்தை

உருவாக்கி, பின் கல் மற்றும் மர வினைஞர்களால் செய்யப்பட்ட அழகிய கலை நுட்பங்கள் நிறைந்த பலகணிகள் அவரது வாழ்க்கைக்கும், பணிகளுக்கும் நினைவுச் சின்னங்களாக ஆண்டாண்டு காலமாக விளங்குகிறது.

திருவறைக்குள் கிழக்கு மேற்காகத் தோண்டப்பட்டு செங்கற்களால் கல்லறை கட்டப்பட்டது. மறுநாள் காலை 6:30 மணிக்குத் தூய திருவிருந்து வழிபாடு நடைபெற்றது. அனைத்து தூயவர்களின் திருநாளுக்குரிய சுருக்க ஜெபம், நற்செய்தி வாக்கியங்கள் யாவும் படிக்கப்பட்டன. ஆயர் பலரும் சபை மக்களும் திருவிருந்தில் பங்கு பெற்றனர். வழிபாடு முடிந்ததும், அப்பகுதியில் புகழ்பெற்ற ஒரு முகமதியர் நிறைய பூக்களையும் வெற்றிலைப்பாக்கையும் கொண்டு வந்தார். அவர்களுடைய அன்புக்கும் நன்மதிப்பிற்கும் அறிகுறியாய் அப்பூக்களைப் பேராயரது உடல் அடங்கிய பெட்டியில் வைக்க மிகவும் பணிவுடன் ஒப்புதல் கேட்டார்.

நேரம் சரியாகக் காலை 9:00மணி. நிறைவு வழிபாடு நடக்கும் என்று பல இடங்களிலும் அறிவிக்கப்பட்ட நேரம் அது. அஞ்சலி ஊர்வலம் தொடங்கியது. அன்னாரின் பொன்னான உடல் வைக்கப்பட்டுள்ள பேழைக்கு முன் பாடகர்களும் பல்வேறு இடங்களிலிருந்து வந்துள்ள ஆயர்களும் நின்றனர். ஆயர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் பேராயரின் மருமகன் அருட்திரு. J.L.வயட், அருட்திரு. A.மர்காஷிஸ், அருட்திரு. T.கெம்பர், அருட்திரு. A.சாப்டர், அருட்திரு. T.வாக்கர் மற்றும் C.M.S. சார்பாளர்கள் ஆகியோராவர். குடும்பத்தின் சார்பாகப் பேராயரின் மகன் மருத்துவர் அடிங்க்டன் கால்டுவெல்லும் மற்றும் திரளான கிறிஸ்தவ மக்களும் பின் சென்றனர்.

வந்திருந்த ஆயர்களில் ஒருவர் மறைந்த பேராயரின் மூத்த ஐரோப்பிய நண்பர் அருட்திரு. T.கெம்பர் அவர்கள். C.M.S. ஐச் சேர்ந்த அவர் இவ்வழிபாட்டில் கலந்து கொள்ள குற்றாலத்திலிருந்து வந்துள்ளார். அவர் தொடக்க வாக்கியங்களைப் படிக்க ஊர்வலம் மெதுவாகப் பழைய கோவிலிருந்து புதிய கோவில் நோக்கிப் புறப்பட்டது. புதிய கோவிலின் நுழைவுப்பகுதியிலிருந்து நடுப்பகுதி வரை மெதுவாகச் சென்றது. பாடகர்கள் மீண்டும் 'என்றும் கர்த்தாவுன் .....' என்ற பாடலைப் பாடினார். பின்பு 96ஆம் சங்கீதம் பாடப்பட்டது. அருட்திரு. G.ஞானமுத்து அவர்கள் பாடம் வாசித்ததும் பேராயரது

உடல் கல்லறைக்கு அருகே எடுத்துச் செல்லப்பட்டது. அருட்திரு. J.L.வயட் அவர்கள் உடலை நிரந்தர இளைப்பாறுதலுக்காக கல்லறைக்குள் இறக்கினார். இடையன்குடிக்கு வந்த நாள் முதல் பேராயர் அவர்களை நன்கு அறிந்தவரும், C.M.S. ஐச் சேர்ந்த மூத்த ஆயருமான அருட்திரு. M.சவரிராயன் இறுதி வேண்டுதல்கள் இரண்டையும் படித்தார்கள். Now the Labourer's task is o'er' என்ற பாடல் பாடப்பட்டது. வயட் அவர்கள் ஆசீர்வாதம் கூற அன்புப் பேராயரின் இறுதிச்சடங்குகள் நிறைவுற்றன. பேராயர் அவர்களின் பெருமுயற்சியினால் கட்டப்பட்ட கொடைக்கானல் கோவிலிலும் திருச்சினாப்பள்ளியிலும் இந்தியாவில் தனது முதல் மூன்றாண்டு காலத்தைக் கழித்த வேப்பேரியிலும், பேராயரின் தலைமையிடமும் அவர் பெயரைத் தாங்கி நிற்கும் கல்லூரி இருக்கும் இடமுமாகிய தூத்துக்குடியிலும் நாகப்பட்டணத்திலும் நினைவு வழிபாடுகள் நடத்தப்பட்டன.

குடும்பத்தினருக்கும் திருச்சபைக்கும் அவரது மறைவு ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாக இருப்பினும், அன்னாரது எடுத்துக்காட்டான வாழ்க்கைக்காக நாம் இறைவனுக்கு நன்றியுடையவர்களாய் இருக்க வேண்டும். அவர் பரந்த அறிவுடையவர்; உலக அளவில் புலமை மிக்க அறிஞர்; தத்துவக் கொள்கைகளில் மட்டுமல்ல, செயல்திறத்திலும் சிறந்த ஞானி. இவ்வளவு பெரிய மகான் திருநெல்வேலி மாவட்டத்தின் ஒரு மூலையில் உள்ள சிறிதும் வசதியற்ற இடையன்குடி என்ற சிறிய கிராம மக்களின் நல்வாழ்வுக்காக ஐம்பது ஆண்டுகள் தன் வாழ்க்கையை அர்ப்பணித்தார் என்றால் நம்ப முடிகிறதா? ......

திருநெல்வேலித் திருச்சபை அவருக்கு என்றும் கடமைப்பட்டுள்ளது. சின்னவனை ஆயிரமாக்கிய பெருமை அவருக்கு உண்டு. அவர் காலத்திலேயே இங்குள்ள கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை ஆறாயிரத்திலிருந்து ஏறத்தாழ ஒரு இலட்சமாக அதிகரித்தது. திருநெல்வேலித் திருச்சபையின் நிலையான தன்மைக்கும் பணித் திட்டங்களுக்கும் நிறுவனங்களுக்கும் என்றும் நல்ல பெயரும் நன்மதிப்பும் உண்டு. அதற்குச் சிறப்பான காரணங்கள், பேராயரின் சிறந்த அறிவும், நிர்வாகத் திறமையுமே. அவரது மறைவால் திருச்சபை சிறந்த இறைப்பணியாளர்களுள் ஒருவரையும், இந்தியா ஆழ்ந்த புலமையுள்ள அறிஞர் மற்றும் நற்பணியாளர் ஒருவரையும் இழந்து தவிக்கின்றது. இஸ்ரவேலில் ஒரு மகான், ஏன் ஓர் இளவரசன்

மறைந்து விட்டார். அவர் இடத்திற்கு வருபவர்களுக்கு இரட்டிப்பான ஆவியின் பெலனை அருளவேண்டுமென்பதே திருச்சபையின் வேண்டுதலாய் இருக்க வேண்டும்.

பிண்ணிணைப்பு : 2

## பேராயர் கால்டுவெல் அவர்களின் மறைவு, பணிகள் பற்றிய அறிவிப்புகளும் அறிக்கைகளும்

பேராயர் கால்டுவெல் அவர்களின் மறைவு தனிப்பட்ட மனிதர்களையும் நிறுவனங்களையும் துயரத்தில் மூழ்கச் செய்தது. கற்றவர்கள், சமய இயக்கங்கள், மாநில அரசு, சென்னைப் பல்கலைக்கழகம், திருநெல்வேலி தஞ்சாவூர் சபை மன்றங்கள், சென்னையிலுள்ள கிறிஸ்தவர்கள், இந்தியாவிலும் இங்கிலாந்திலும் உள்ள நண்பர் ஆகிய பலரிடமிருந்து இரங்கற் செய்திகள் வந்து குவிந்தன. அவைகளில் சில கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

## இலண்டன் C.M.S. பொதுச்செயற்குழுவில் பேராயர் அவர்களைப் பாராட்டி நிறைவேற்றப்பட்ட தீர்மானம்

“பேராயர் கால்டுவெல் அவர்களின் மறைவுச் செய்தி கேட்டு இக்குழு துயருற்றது. அவர் பேராயர் சார்ஜன்ட் அவர்களுடைய நண்பர்; அவருடன் பல ஆண்டுகள் பணியாற்றியவர். இருவரும் ஒரே நாளில் அருட்பொழிவு பெற்றவர்கள். 14 ஆண்டுகள் திருநெல்வேலி உதவிப் பேராயராக இருந்தவர். இலண்டன் இறைப்பணி இயக்கத்துடன் இணைந்து தனது இறைப்பணியை 1838ஆம் ஆண்டு திருவாங்கூரில் தொடங்கினார். 1941இல் இங்கிலாந்து திருச்சபையில் சேர்ந்தார். பேராயர் ஸ்பென்ஸர் அவர்களால் அருட்பொழிவு பெற்று, S.P.G. இறைப்பணியாளராகப் பணியாற்றினார். ஒரு இறைப்பணியாளராகவும் 1877 வரை இடையன்குடியிலும் பேராயராகத் தூத்துக்குடியிலும் பணியாற்றினார்.

அவரது காலத்தில் திருநெல்வேலி S.P.G. சபையாரின் எண்ணிக்கை பத்துமடங்கு அதாவது 1841இல் நாலாயிரமாக இருந்த கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை 1891இல் நாற்பதினாயிரத்திற்கும் மேலாக அதிகரித்தது. அவரே பொறுப்பாக

இருந்த இடையன்குடி பணித்தளப் பகுதியில் கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை நானூறிலிருந்து ஏழாயிரமாக அதிகரித்தது. அவரது பணிக்காலம் முழுவதும் C.M.S. உடனும் அதன் இறைப்பணியாளர்களுடனும் நல்ல உறவு வைத்திருந்தார். பேராயர் சார்ஜண்ட் அவர்களின் மறைவுக்குப்பின், தனது பலவீனத்தின் நடுவிலும் கிறிஸ்தவர் பலருக்கு திடப்படுத்தல் கொடுத்தார். அவர் ஒரு சிறந்த இறைப்பணியாளர் மட்டுமல்லர்; சிறந்த அறிஞரும் கூட. அவர் எழுதிய 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' கீழை நாட்டு மொழித்துறையில் நிலையான இடத்தை அவருக்குப் பெற்றுத் தந்தது. தவிர, இறைப்பணி மற்றும் இறையியல் துறையில் பல சிறு நூல்களையும் எழுதியுள்ளார். இறுதி ஆண்டுகளில் மிகவும் பயனுள்ள இரண்டு வரலாற்று நூல்கள் எழுதியுள்ளார். அவைகளில், ஒன்று 'திருநெல்வேலியின் அரசியல் வரலாறு.' மற்றொன்று, 'பணித்தளங்கள் பற்றிய வரலாறு.' அம்மையாருக்கும், பிள்ளைகளுக்கும் இக்குழு தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவிக்கிறது".

## S.P.G. செயலாளரிடமிருந்து வந்த இரங்கற்செய்தி.

"பேராயர் கால்டுவெல் அவர்கள் நிரந்தர இளைப்பாறுதல் அடைந்து விட்டார்கள். இனி நாம் அவரது நினைவை சொந்தமாக்கி அவரது சிறந்த எடுத்துக்காட்டான வாழ்க்கையைப் பின்பற்ற வேண்டும். அவரை அறிந்த அனைவரும் அவர்களுடைய உணர்வுகளை எப்படி வெளியிடுவது என்று அறியாதிருக்கிறார்கள். இன்று நடந்த கூட்டத்தில், எங்களது நன்மதிப்பையும் தெரிவிக்கும் வண்ணம் நிறைவேற்றப்பட்டத் தீர்மானத்தை இத்துடன் அனுப்புகிறேன். என்ன சொல்ல நினைத்தோமோ அதை எங்களால் சொல்ல முடியவில்லை".

## சென்னைப் பேராயத்தின் குருத்துவத்துறையிலிருந்து வெளியிடப்பட்ட நிர்வாக அறிக்கையின் கடைசிப்பகுதி.

"பேராயர் கால்டுவெல் ஓர் அரசுப் பணியாளராக இல்லாவிடினும் 50 ஆண்டுகளாக ஒரே பேராயத்தில் ஒரு இறைப்பணியாளராக மட்டுமல்ல. ஒரு மொழியியல் மேதையாகவும் வரலாற்று ஆசிரியராகவும் கல்வியாளராகவும் பொதுநலத் தொண்டராகவும் தனது அயராத உழைப்பாலும் எழுத்தாலும் மக்களுக்கு ஆற்றிய தொண்டை மதித்து, 28.8.1891ஆம் நாள்

ஏற்பட்ட அவரது மறைவு மாநிலத்திற்கு ஒரு பேரிழப்பாகக் கருதிப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது.

மாநில அரசும் கீழ்கண்ட ஆணையைப் பிறப்பித்தது.

"மாநில அரசும் மறைந்தப் பேராயர் கால்டுவெல் தொடர்பாக மேன்மை தாங்கிய சென்னைப் பேராயர் வெளியிட்டுள்ள குறிப்புகளை அப்படியே ஏற்றுக் கொள்ளுகிறது".

## செப்டம்பர் மாதம் 4ஆம் நாள் சென்னைப் பல்கலைக்கழகத்தின் பெருமன்றம் (Senate) நிறைவேற்றிய தீர்மானம்.

"ஆகஸ்டு மாதம் 31ஆம் நாள் நடைபெற்ற சென்னைப் பல்கலைக்கழகப் பெருமன்ற ஆண்டுக் கூட்டத்தின் போது பல்கலைக்கழகத்தின் மூத்த உறுப்பினர் பேராயர் கால்டுவெல்லின் மறைவு பற்றிக் கேள்விப்பட்டு துயரமடைந்தது. பல்கலைக் கழகத்திற்கும் மாநிலத்திற்கும் ஆற்றிய கல்விப் பணியைப் பாராட்டி தீர்மானம் இயற்றியிருக்கிறது".

## சென்னை வேதாகமச் கழகத்தின் கிளைச் கழகத் தீர்மானம்

"இக்கிளைக் .கழகத்தின் துணைத்தலைவர் பேராயர் கால்டுவெல் அவர்களின் இழப்புச்செய்தி கேட்டு துயருற்றது. விவிலியத்தில் திருப்புதல் பணிக்காகவும், மாநிலத்தில் கிறிஸ்தவத்திற்கு அவர் ஆற்றிய மாபெரும் சேவையைப் பாராட்டி தனது பதிவேட்டில் பதிவு செய்து கொள்ளுகிறது. 50 ஆண்டுக் காலம் இங்குப் பணியாற்றக் கிடைத்த வாய்ப்புக்காக மகிழ்ச்சி அடைகிறது. திருமதி. கால்டுவெல்லுக்கும் அவரது குடும்ப உறுப்பினர்களுக்கும் இக்கழகம் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறது.

இந்திய மக்களுக்கு அவர் ஆற்றிய பணிகளுக்காக திரு. கிளாஸ்டன்னின் பரிந்துரையின் பேரில் மன்னர் குடும்பத்து நிதியிலிருந்து 150 பவுண்டுகள் திருமதி. கால்டுவெல் அம்மையாருக்கு மானியமாகக் கொடுக்கப்பட்டது.

அவரது மறைவு பற்றி பல செய்தித்தாட்களில் செய்திகளும், அறிவிப்புகளும் வெளியிடப்பட்டன. **19.10.1891** நாளிட்ட London Times இதழில் வெளியிடப்பட்ட Sir WW ஹண்டரின் கட்டுரை.

"திருநெல்வேலிப் பேராயர் அருட்பெருந்திரு. அறிவர் கால்டுவெல் அவர்கள் மறைவினால் இந்தியக் கிறிஸ்தவம் பெருமதிப்பிற்குரிய தந்தையையும், இந்தியப்புலமை, தனித்திறமை கொண்ட சிறந்த அறிஞரையும் இழந்து விட்டது. அவரது மறைவு பற்றி அவரது நண்பர்கள் அதிர்ச்சி அடையவில்லை. ஏனெனில் ஆங்கிலேயர் ஒருவர் வெப்பப் பிரதேசத்தில் உள்ள நாட்டில் **78** வருடங்கள் வாழ்வது மிகவும் அரிது.

அரை நூற்றாண்டுக்கும் மேலாக தனது பலவீனத்தின் நடுவிலும் அறிவர் கால்டுவெல் திருச்சபையின் இறைப்பணியாளராகவும் தலைவராகவும் அனலூட்டும் ஆவியாகவும் கல்விப் புலமையில் ஈடு இணையற்றவராகவும் இந்தியாவில் வாழ்ந்த மேலை நாட்டு மக்களுள் முதல்வராகவும் திகழ்ந்தார். இவரது **53** ஆண்டு கால நற்செய்தி அருட்பணியின் விளைவாக இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் அரசின் அமைப்பு முழுவதுமாக மாறிவிட்டது; இந்தியக் கிறிஸ்தவர்களின் எதிர்கால நம்பிக்கையிலும் பெரிய மாற்றம் ஏற்பட்டது. ஆனால் அந்த அளவுக்கு அவருடைய சமயக் கொள்கையில் மாற்றமில்லை. **1838**இல் இந்தியாவுக்கு வந்தபோது திருச்சபையின் கொள்கைகளை முழுவதுமாக ஏற்றுக் கொள்ளாதவர்.

பின்னர் S.P.G. யின் சிறந்த சார்பாளர் என்ற பெயரைப் பெற்றார். ஆங்கிலக்கன் பேராயராக உயிர் நீத்தார். அவர் இந்தியாவுக்கு வந்த போது இங்குள்ள கிறிஸ்தவர்கள் மிகவும் ஏழைகளாகவும் பின்தங்கிய நிலையிலும் நாளுக்கு நாள் அவர்களது எண்ணிக்கை குறைந்து கொண்டே போகிற நிலைமையிலும் இருந்தனர். ஆனால் அவர் இறப்பதற்கு முன்னாலான ஒன்பது ஆண்டுகளின் வளர்ச்சி பற்றிய புள்ளி விவரங்களைப் பார்த்தால், **1881**ஆம் ஆண்டு மக்கட்தொகை கணக்கின் படி பிரிட்டிஷ் இந்தியாவின் மக்கள் தொகை வளர்ச்சியை விட, இங்குள்ள கிறிஸ்தவர்களின் வளர்ச்சி **4**மடங்கு அதிகம். **1838**இல் ஆளும் வர்க்கத்தினர் புதிதாக மனமாற்றம் அடைந்தவர்களைக் கிண்டலாகச் 'சோற்றுக் கிறிஸ்தவர்கள்' என்று அழைத்தனர். அந்தணர்களும், படித்த இந்துக்களும் அவர்களை

அறியாமைக்கும் பசிக்கும் பிறந்த புது கீழ்ச்சாதி மக்கள் என்று வெறுத்தனர். அவர் மறைவுக்குச் சற்று முன்னர், அவர் உழைத்து வரும் மாநிலமாகிய சென்னை மாநிலப் பொதுக் கல்வி இயக்குநர், "இந்தியக் கிறிஸ்தவர்களின் கல்வி முன்னேற்றம் இதே அளவில் தொடர்ந்தால், தென்னிந்தியாவில் உள்ள தொழில்துறைகளில் முக்கிய இடங்களை அவர்கள் பிடித்து விடுவார்கள்" என்று கூறினார்.

அறிவர் கால்டுவெல் 50 ஆண்டுகளாக அயராது உழைத்துப் பின்பு பேராயராகப் பணியாற்றிய மாவட்டத்தில் இம்மாற்றத்தை மிகத் தெளிவாகக் காணலாம். திருநெல்வேலியில் உள்ள கிறிஸ்தவர்களின் முன்னேற்றத்திற்கு ஒருவரே காரணம் என்று சொல்லுவது தவறு. கால்டுவெல்தான் இம்முன்னேற்றத்திற்கு முதன்மையான காரணம் என்று கூறினால் அவரே அதை ஏற்றுக் கொள்ள மாட்டார். ஆனால் திருநெல்வேலியில் உருவாகிய பல இயக்கங்களில் அறிவர் கால்டுவெல் அவர்களின் தாக்கம் மிகச் சிறப்பானது என்பதை இங்கிலாந்து நாட்டு மக்கள் மட்டுமல்லர், இந்தியர்களும் ஏற்றுக் கொள்ளுவர். இவை அனைத்தும் சேர்ந்தே பெரிய மாற்றத்தை உண்டு பண்ணியது.

இந்தியாவில் இறைப்பணி ஆதிகாலத்திலிருந்தே செயல்பட்டு வருகிறது. அப்படிப்பட்ட இடங்களில் திருநெல்வேலிப்பகுதியும் ஒன்று. இறைப்பணியில் முன்னேற்றமும் தொய்வும் இயற்கை. அதற்கு இப்பகுதி நல்ல எடுத்துக்காட்டு ஆகும். எனினும் கடந்த 350 ஆண்டுகளாக திருநெல்வேலித் திருச்சபையின் வரலாற்றில் தொடர்ச்சி இருப்பதைக் காண்கிறோம். கோவாவில் சிறிது கால இடைவெளிக்குப் பிறகு 1542இல் தூய பிரான்சிஸ் சேவியர் இந்தியத் தீபகற்பத்தின் தென்கிழக்கில் உள்ள திருநெல்வேலி கடற்கரைப் பகுதிகளில் இறைப்பணியைத் தொடங்கினார். ஆதிவாசிகளில் ஒரு பகுதியினரான கீழ்ச்சாதி மக்கள் மிகவும் கீழான நிலையிலும் அடிமைகளாகவும் இருப்பதைக் கண்டார். மீன்பிடிக்கும் பரவர்கள் முகமதியர்களால் மிகவும் ஒடுக்கப்பட்டனர். அவர்களிடமிருந்து தங்களைப் பாதுகாக்க அம்மீனவர்கள் போர்த்துக்கீசியர்களின் உதவியை நாடினர். ஆதியில் பெருநிலக்கிழார்களாக இருந்த சாணார்கள் நாளடைவில் அவர்களுடைய பண்ணைகளிலிருந்து துரத்தப்பட்டனர். அவர்களுடைய நிலங்கள் மற்றவர்களால்

சுருட்டப்பட்டு விட்டன. நிலத்தில் பயிரிட்டு வந்த அம்மக்கள் பனைத்தொழிலைச் செய்யும் நிலைக்குத் தள்ளப்பட்டனர். தீபகற்ப இந்தியாவின் இப்பகுதியில் இந்து சமயம் அவ்வளவாக வளர்ச்சியடையவில்லை. இயற்கைச் சக்திகளை வணங்கினர்; பேய் வணக்கத்தையும் மக்கள் கடைபிடித்து வந்தனர்.

"நிலைமையை நன்கு புரிந்து கொண்ட தூய பிரான்சிஸ் சேவியர் போர்த்துக்கீசியர்களால் முகமதியர்களின் பிடியிலிருந்து பாதுகாக்கப்பட்ட அனைத்து மீனவகுலமக்களையும் மன்னவனின் மந்தைக்குள் அழைத்துச் சென்றார். கடந்த 3½ நூற்றாண்டுகளாக மீன்பரவர்கள் அனைவரும் 'நாங்கள் அவர்களின் பிள்ளைகள்' என்றே தங்களை அழைத்து வருகின்றனர். இதுவரை கடற்கரையோரமாக மட்டும் இருந்து வந்த கிறிஸ்தவம், அர்ப்பணிக்கப்பட்டுள்ள இயேசுவின் இயக்கத்தைச் சேர்ந்த இறைப் பணியாளர்களால் உட்பகுதிக்கும் எடுத்துச் செல்லப்பட்டது.

தீபகற்ப இந்தியாவின் தெற்குப் பகுதியில் உள்ள இடங்களின் 16ஆம் நூற்றாண்டின் தொடக்க முதல் 18ஆம் நூற்றாண்டு வரை உள்ள வரலாற்றை திருநெல்வேலி, மதுரை இடங்களில் உள்ள இயேசு இயக்கத்தைச் சேர்ந்த தந்தைகள் எழுதிய மடல்கள் மூலம் நன்கறியலாம். 1693இல் இரத்தச் சாட்சியாய் மரித்த புகழ் பெற்ற ஜான் டி பிரிட்டோவும், 1746 ஆம் ஆண்டு மறைந்த பெரும்புலவர், கவிஞர் தந்தை பெஸ்கியும் அதே காலத்தைச் சேர்ந்தவர்களே.

சிறிது காலத்துக்குப் பின் தென்னிந்தியாவில் உள்ள உரோமன் கத்தோலிக்கத் திருச்சபைக்குக் கெட்ட நேரம். ஏறத்தாழ நூறு ஆண்டுகள் தொய்வு ஏற்பட்டது. 1750ஆம் ஆண்டில் போர்த்துக்கீசிய அரசு இயேசு இயக்கத்தை நசுக்கியது. திருநெல்வேலி, மதுரை ஆகிய இடங்களில் பணி செய்த அவ்வியகத்தைச் சேர்ந்த பலர் கோவாவில் உள்ள சிறையில் அடைக்கப்பட்டனர்; மற்றவர்கள் அந்தந்த மாவட்டங்களில் இருந்து வெளியேற்றப்பட்டனர். எஞ்சியோர் விலக்கி வைக்கப்பட்டனர். எவரும் அவர்களுடன் தொடர்பு வைத்துக் கொள்ளக் கூடாது. ஆயர்கள் இங்கு வருவது முழுவதுமாகத் தடை செய்யப்பட்டுள்ளது.

இயேசு இயக்கத்தினருக்கு எதிராக 1773இல் நடந்த அடக்கு முறையும், பிரெஞ்சுப் புரட்சிக்கு பின்னால் ஐரோப்பாவில் நடந்த குழப்பங்களும் தென்னிந்தியாவில் இறைப்பணியை அதிகம் பாதித்தது. 1837இல் திருநெல்வேலியில் உள்ள கத்தோலிக்கத் திருச்சபையில் கோவாவில் உள்ள ஒன்றுக்கும் உதவாத ஆயர்கள் சிலரே இருந்தனர். அதனால் கிறிஸ்தவர்களின் எண்ணிக்கையும் வெகுவாகக் குறைந்து விட்டது. உயிர்மீட்சி பெற்ற பிரெஞ்சு அமைப்பின் கீழ் திருநெல்வேலி கத்தோலிக்கர்கள் கொண்டு வரப்படவே எண்ணிக்கையில் ஏற்பட்ட சரிவு ஓரளவு சரிசெய்யப்பட்டது".

"இதற்கிடையில் 'புராட்டஸ்டான்டுகள்' களத்தில் இறங்கினர். லூத்தரனான ஸ்வார்ட்ஸ் இம்மாவட்டத்திற்கு 1770 ஆம் ஆண்டு வந்தார். 1816இல் 'புராட்டஸ்டன்ட் சபை'யினரின் எண்ணிக்கை 3000 மட்டுமே. அவர்களுக்கு உதவி புரிய பத்து ஆண்டுகளாக எந்த ஐரோப்பிய இறைப்பணியாளரும் வரவில்லை.

1820இல் C.M.S இரண்டு லூத்தரன் அருட்பணியாளர்களை திருநெல்வேலிக்கு அனுப்பி வைத்தது. 1826இல் S.P.G. களத்தில் இறங்கியது. இரண்டு இயக்கங்களும், பணித்தளங்களைத் தங்களுக்குள் பகிர்ந்து கொண்டன. கீழ்ச்சாதி, ஆதிவாசி மக்களிடையே அவர்கள் ஆற்றிய பணி, சமயத்துறையில் மட்டுமன்றி, சமூகப் பொருளாதாரத் துறைகளிலும் புரட்சி உண்டு பண்ணியது. அறிவர் கால்டுவெல் 50 ஆண்டுகளாக அப்படிப்பட்ட மக்களோடு தன்னை இணைத்துப் பணியாற்றினார். சென்ற மாதம் நடைபெற்ற அவரது அடக்க வழிபாட்டுச் செய்தியில், அவர் காலத்தில் திருநெல்வேலியில் உள்ள கிறிஸ்தவர்களின் எண்ணிக்கை ஆறாயிரத்திலிருந்து ஏறத்தாழ ஒரு இலட்சமாக அதிகரித்தது என்று கூறப்பட்டது.

எனினும், 'தென்னிந்திய மொழிகளின் குடும்பம்' என்ற தலைப்பில் ஆய்வு செய்தவர் என்ற முறையில் உலகம் பேராயர் கால்டுவெல் அவர்களை இதைவிட நன்கு அறியும். 1856ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட அவரது 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' மேனாட்டு மொழியிலாருக்கு ஒரு புதிய வெளிப்பாடு. அதின் இரண்டாம் பதிப்பு 1875இல் வெளியிடப்பட்டது. இத்துறையில் இந்நூல் மிகச்சிறந்த நூலே. இதற்கு இணையான நூல் வேறு எதுவுமில்லை. அவர் மக்களோடு ஒன்றிப் பழகி அவர்கள் பேசும் மொழியை நன்கு

கற்று அவர்களுடைய கடந்த காலத்தை பொறுமையுடன் அறிந்தார். அதின் விளைவாகவே இந்த ஒப்பிலா ஒப்பிலக்கண நூலையும் 'திருநெல்வேலி வரலாறு', 'திருநெல்வேலி சாணார்கள்' போன்ற நூல்களையும் அவரால் எழுத முடிந்தது. இவைகளை எழுதுமுன் தேவையான புள்ளி விவரங்களையும், மூல ஆவணங்களையும் சேர்த்து, மிகவும் விழிப்புடன் ஆராய்ந்தார். இவ்வளவு அரிய பணிகளை வேறு எந்த ஐரோப்பிய அறிஞரும் செய்ததில்லை.

மற்றவர்கள் எளிதாக எடுத்துக் கொள்ளும் இச்செயல்களிலும் கால்டுவெல் அதிக ஈடுபாடும், அக்கறையும் காட்டினார். சில கருத்துக்கள், சான்றாக மூலச்சொற்களின் தொடர்பான அவரது முடிவுகள், பின்னால் ஆய்வு மேற்கொண்டவர்களால் சற்று திருத்தியமைக்கப்பட்டது. ஆனால் அவரது 'ஒப்பிலக்கணம்' காலத்தால் அழியாச் சொத்தாக நிலைத்திருக்கும். இந்தியப் பழங்காலத்துச் சின்னங்கள், நாணயங்கள் போன்றவற்றையும் இவர் விட்டு வைக்கவில்லை. இத்துறையில் ஆர்வமுள்ளோருக்கு இவர் இப்பொருள் பற்றி எழுதிய நூல் மிகவும் பயனளிக்கும். பல சமஸ்கிருதச் சுவடுகளைக் கண்டெடுத்து தென்னிந்தியர் பலரும் நன்கறியும் படி செய்தார். மேனாட்டவருக்கும் அவை கிடைக்க வழி செய்தார். தாம் செய்த எல்லாவற்றையும் அவர் உண்மையான இறைப்பணி போன்றே செய்தார். எல்லாவற்றிற்கும் மேலாக, பதினொரு ஆண்டுக் காலமாகச் செய்த தமிழ் விவிலிய மற்றும் ஜெப புத்தகத்தின் திருப்புதல் பணியே அவருக்கு மிகுந்த மனநிறைவு அளித்தது.

"1877இல் பேராயராகப் பணி உயர்வு பெற்றார். திருச்சபைக்கும் இலக்கியத் துறைக்கும் அவர் ஆற்றிய அரும்பணி அப்பணிக்கு ஏற்புடைத்தே. இப்பணி உயர்விற்கு அவரது சொந்த வாழ்வில் எவ்வகை மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை. ஆயராக, தலைவராக, அருட்பணியாளராக, கிறிஸ்தவக் குழுக்களின் அமைப்பாளராக, மிகச்சிறந்த அறிவும் கனிவும் உள்ள தந்தையாக, இந்திய ஐரோப்பிய ஆயர்களுக்கு அறிவுரையாளராக, சிறுவயது முதல் சிலரைத் தமது பொறுப்பில் வைத்து ஆளாக்கி விடுபவராகக் கடந்த 40 ஆண்டுகளாகச் செய்து வந்த பணிகளையே பேராயராக இருக்கும் போதும் தொடர்ந்து செய்தார். அவைகளை விட்டு விடவில்லை. தாம்

வாழ்ந்த இடத்தில் உள்ள மக்களோடு ஒன்றியிருந்ததால் இந்தியா அவருக்கு வெளிநாடு போன்று தோன்றவில்லை. அவர் மறைந்த சில நாட்களில், அவர் கட்டி முடித்துப் மங்கலப்படைப்பு செய்த அதே கோவிலில் அவரது பெயர்த்தியின் திருமுழுக்கு நடைபெற்றது. அவரால் திருமுழுக்கு, திடப்படுத்தல் பெற்ற திரளான மக்கள் குளமாகிய கண்களுடன் அவ்வழிபாட்டில் கலந்து கொண்டனர்.

## இந்தியச் செய்தித்தாள்களில் வெளியான கட்டுரையின் சுருக்கம்

பேராயர் கால்டுவெல் அவர்களின் இழப்புச்செய்தி 50 ஆண்டுகளாக அவர் தென்னிந்தியாவில் திருச்சபைக்கு ஆற்றிய பணிகளை நினைவுபடுத்துகிறது. அவரோடு தொடர்புடைய அனைவருடைய வாழ்விலும் வெற்றிடத்தை உருவாக்கி விட்டது. அவர் இரக்கமே உருவானவர். மக்களிடம் அதிகம் ஒன்றி வாழ்ந்ததால் அவர்களது அன்றாட நடைமுறைச் சிக்கல்கள் அவருக்கு நன்றாகத் தெரியும். பல நற்குணங்களின் மொத்த உருவம் அவர். அந்த நற்குணங்களே அவரை ஒரு சிறந்த மனிதராக உருவாக்கியது. இந்த ஆளுமைப் பண்பே அவருக்கு உயர்ந்த, பொறுப்பான இடங்களைக் கொடுத்தது. அவர் சிறந்த இறைப்பணியாளர் மட்டுமல்ல, படித்த மேதையும் கூட. இறைப்பணிக்கு இறைவனின் அருளே முதன்மையானதாக விளங்கினாலும் பேராயரின் அறிவாற்றல் இறைப்பணியை இன்னும் திறம்படச் செய்ய உதவும் என்ற உண்மையை நாம் மறந்துவிடக் கூடாது.

இறைவனுக்கு எதிராக நடத்தும் போரில் எந்த அளவு சாத்தான் புதுமையான வழிமுறைகளைப் பயன்படுத்துகிறானோ அந்த அளவு அவனை மேற்கொள்ள கிறிஸ்துவின் சேனையையும் இறைவன் நமக்கு அளித்திருக்கும் அறிவுத்திறனையும் பயன்படுத்த வேண்டும். அவற்றைப் புறக்கணிக்கக் கூடாது.

கிறிஸ்தவ வாழ்வின் சிறப்பும் அழகுமே கிறிஸ்தவ உறுதிப்பாட்டிற்கு அடிப்படை என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது. எனினும் அவர் வாழ்ந்த காலத்தில் அவரது அறிவுத்திறனும், கற்றலுக்கும் ஆர்வத்திற்கும் நினைவுச் சின்னங்களாக விளங்கும் அவரது நூல்களும் பணித்தளங்களில் அவர் எடுத்த முயற்சிகளுக்குப் பெரிதும் உதவின. இப்போது அவர் நம்மிடையே இல்லை என்றாலும் அவரது மறைவால்

திருச்சபைக்கு ஏற்பட்டுள்ள வெற்றிடத்தை நிரப்பத் தகுதியுள்ள ஒருவரை இறைவன் தருவார் என்று நம்புவோமாக. ஒரு மாமனிதரை இழந்து தவிக்கிறோம். எனினும் சலிப்பில்லாமலும் களைப்பில்லாமலும் அவருக்காக உழைக்கும் வீரர்களுக்கு நீதியுள்ள நியாயாதிபதியான கர்த்தர் வாக்குத்தத்தம் பண்ணின வாடாத கிரீடம், நீண்ட காலம் உத்தமமாக உழைத்த சிலுவை வீரர் கால்டுவெல் தலையை அழகுபடுத்துகிறது என்ற நம்பிக்கை நமக்கு ஆறுதலாக உள்ளது.

## நீண்ட காலம் திருச்சபையில் இறைப் பணியாற்றிய ஐரோப்பிய ஆசிய ஆயர் எழுதிய மடலின் சுருக்கம்.

அவரது உடம்பு வாட்டசாட்டமாக இல்லையெனினும் உறுதியான உள்ளம் படைத்தவர். நாசரேத்தில் தோட்டக்காரர் கிணற்றில் விழுந்து மூழ்கிவிட்டார். பல S.P.G. இறைப்பணியாளர்களும் உள்ளூர் மக்களும் அருகில் நின்றனர். ஆனால் யாரும் கிணற்றுக்குள் குதித்து அம்மனிதனைக் காப்பாற்றத் துணியவில்லை. தனது நண்பர்களின் எதிர்ப்பையும் மீறி, ஆழமான கிணற்றுக்குள் பேராயர் குதித்தார். அவரைத் தொடர்ந்து நானும் குதித்து அவரை மீட்பதில் இருவரும் வெற்றி கண்டோம்.

## பேராயரைப் பற்றி நன்கு அறிந்தவரும் அவர் வீட்டிலே பல நாட்கள் தங்கிய இளைஞனின் புகழாரத்தின் ஒரு பகுதி

அவர் கிளாஸ்கோ பல்கலைக்கழகத்தில் கல்வி கற்றார். அங்கு அவர் வாழ்வின் தன்மைகள், உண்மை அறிவு போன்ற தத்துவப் பாடங்களை நன்கு கற்றிருக்க வேண்டும். பேரறிஞர்களையும் பாமர மக்களையும் குழப்பிக் கொண்டிருந்த, அவ்வப்போது மாறுகின்ற சமய மற்றும் தத்தவ தொடர்பான செயல்களை அறிவுக் கூர்மையுடன் ஆராய்ந்து அறிய அந்த அறிவு மிகவும் பயன்பட்டது.

உடன்பயின்ற மாணவர்களிடம் இல்லாத சிறப்புத் தன்மை அவரிடம் இருந்தது. பழம்பெரு இலக்கியங்கள், கலை அழகுள்ள பொருட்கள், படங்கள் ஆகியவற்றை சுவைக்கும் நாட்டமே அது. அவர் எங்கெங்குச் சென்றாலும் என் போன்ற இளைஞர்களைப் பண்படுத்தும் உயரிய பண்பு அவரிடம் காணப்பட்டது. சாதாரண உரையாடல்களிலும் கண்ணியத்தைக் காணலாம். அவர் முன்னிலையில் முரட்டுத்தனமாக நடந்து கொள்வதும் உரக்கப்

பேசுவதும் தரங்குறைந்த சொற்களை பயன்படுத்துவதும் நடக்காத செயல். அவரது பேச்சிலும், எழுத்திலும் உயரிய பண்பின் மணம் வீசுவதை உணரலாம். எண்ணத்தை வடிவமைத்து எழுதும் அவரது நடையே தனி.

இங்கிலாந்திலும் இந்தியாவிலும் உள்ள எண்ணிலடங்கா இதயத்தில் அவர் நீங்காத இடம் பெற்றுள்ளார். அவரைத் தங்களது உள்ளத்தில் ஏற்றுக் கொண்டவர்கள் எவரும் திருடக்கூடாததும், காலத்தால் அழியாததுமான ஒன்றை தாங்கள் பெற்றிருப்பதாக அறிவார்கள். எந்த மக்கள் ஒரு அழகிய ஆன்மாவின் நினைவை காத்து வைத்திருக்கின்றனரோ, அம்மக்களுக்கு அவர் ஒரு குறைவற்ற மனிதனின் சிறப்பியல்புகளைப் பற்றி குறிப்பிடும் சொற்கள் மிகவும் பொருத்தமானவையாக இருக்கும். அவர் ஒரு குறைவற்ற மனிதனின் சிறப்பியல்புகளைப் பற்றிக் குறிப்பிடும் வார்த்தைகள் அம்மக்களுக்கு மிகவும் பொருத்தமானவையாக இருக்கும். "இவ்வுலக வாழ்க்கையைக் கடந்து செல்லும் போது மாசற்றவர்களாகச் செல்லும் மக்களைக் காணும் பேறு எவருக்குக் கிடைத்திருக்கிறதோ, மற்றவர்களைச் சிறந்தவர்களாகவும் அறிவிற்சிறந்தவர்களாகவும் மாற்றி மற்றவர்களின் மகிழ்ச்சியை மேம்படுத்த தனது திறமைகளையும் வரங்களையும் யார் பயன்படுத்துகிறாரோ, தனது செயலிலும் உணர்விலும் பொறுக்கும் தன்மையிலும் மனித சமுதாயத்திற்கு உகந்த அளவுக்கு உயர்ந்த நிலையை அடையும் போது தெய்வீக ஒளியும் ஒழுங்கும் இணைந்து ஒன்றாகி விடுவதால், எவன் ஒருவன் அப்படிப்பட்ட வாழ்க்கையையும் நல்லியல்புகளையும் கவனித்திருக்கிறானோ அவனே தூய்மையின் அழகை புரிந்து கொள்ளக் கூடியவன்".

பேராயர் நினைவாக சென்னை தூய ஜார்ஜ் பேராலயத்தில் வைக்கப்பட்டுள்ள நினைவுக்கல்லில் ஆங்கிலத்தில் உள்ள தமிழ் வாக்கியம் இடையன்குடி கோவிலில் வைக்கப்பட்டுள்ளது. இதோ அந்த வாக்கியம் .....

வேத சாஸ்திரி நியாய சாஸ்திரி என்னும் பட்டங்கள் பெற்ற மகாகனம்: கால்டுவெல் பிஷப் அவர்களின் சரீரம் இப்பீடஸ்தானத்தின் கீழ் ஷேமிக்கப்பட்டிருக்கின்றது.

திருநெல்வேலி நாட்டிலுள்ள தமிழ் ஜனங்களுக்குள் சுவிசேஷ பிரபலஞ் செய்யும் விஷயமாய் தமது சிறந்த மனோ தத்துவங்களை 53 வருஷ காலமாய்ப் பிரயோகித்து வந்த இவர் பெல்பாஸ்ட் நகருக்கு சமீபத்தில் 1814ம் வரு மே மீ 7 உ பிறந்தார்.

முதலில் லண்டன் மிஷன் சங்கத்து மிஷனெரியாக 1838ம் வருடம் இந்து தேசத்திற்கு வந்தார். அப்பால் 1841ம் ஞூடத்தில் இங்கிலாந்து சபையைச் சேர்ந்து, சுவிசேஷ பிரபல சங்கத்தாரின் மிஷனெரியானார். 1877ம் ஞூ பிஷப் ஆக அபிஷேகம் பெற்று மாககனம் சென்வின் பிஷப் அவர்கட்கு 14 வருஷம் உதவி பிஷப்பாகஆக விருந்து, திருநெல்வேலி நாட்டிலும் இராமநாத புரஞ்சீமையிலும் ஷெ சங்கத்தைச் சேர்ந்த மிஷன் ஸ்தாபனங்களைக் கண்காணித்து வந்தார். சுமார் 40 வருஷம் இடையன்குடியே தமக்கு அகமாகக் கொண்டார். பிஷப் ஆன சில காலத்துக்குப் பின் தூற்றுக்குடியில் வசித்தார்.

தமிழ் ஜனங்களுக்குப் பிதாவாக விளங்கின இத்துரை *மகன் அவர்கள் மத்தியில் வாசஞ்செய்து, அவர்களின் சரித்திரம்,* பாஷை மதம் ஆசாரம், கொள்கையும் தெளிவுற ஆராய்ந்தறிந்து சர்வ ஜனங்களாலும் அன்பும் மதிப்பும் பெற்றார். தமிழ் நூல்களை ஐயம் தரிபறக் கற்றுப் பாண்டித்தியமடைந்தது மன்றி குணதிசை சாஸ்திரங்களிலும் சமாக இலக்கணத்திலும், நிபுணரென்று லோகப் பிரசித்தமாய் விளங்கினதால்,

மிஷனெரித் தொழிலுக்கு இவரால் கண்ணிய முண்டானதுமன்றி, பலவிடங்களில் மிஷன் வேலையைக் குறித்து அக்கறையுமுண்டாயிற்று.

அவர் ஜீவந்தராக விருக்கையிற்றாறே விசேஷமாய் அவரது அப்போஸ்தல உழைப்பினாலும் நிதர்சனத்தினாலும் இடையன்குடி மிஷனில் நானூறு ஜனமாக விருந்த சபை ஏழாயிரமாகப் பெருகினதைக் கண்ணுறும் பாக்கியம் பெற்றார். அவர் பிஷப் ஆன பின்னர் அவர் மேல் விசாரணை செய்து வந்த மிஷன்களில் அநேகர் பாஸ்டர்களாக பட்டம் பெற்றனர்.

பாடசாவிலைகள் பெருகின: சபைகள் ஸ்திரமடைந்தன.

ஷெ மிஷன்களிலுள்ள கிறிஸ்தவரும் புற சமயிகளுங்கூட சற்குணத்திலும் அந்தஸ்திலும் விர்த்தியடைந்தனர்.

இவ்வாறு இங்கிலாந்து சபையின் மிஷன் தருமங்கள் நடந்து வரும் தேசங்கள் தோறும் அருமை பெருமையாய்க் கொண்டாடும் பெரும் பெயரை நாட்டி,

1891 ஞூ ஆகஸ்ட் மீ 28ம் உ தேதி கொடைக்கானல் மலையின் மீது பரம பதமடைந்தார்.

# மலரும் நினைவலைகள்...



கோவிலின் திருவறை.




கால்டுவெல் கல்லறை

# மலரும் நினைவலைகள்...




**புதுப்பிக்கப்பட்ட பழைய கோவில்.**

குறிப்பு: இறந்த கால்டுவெல்லின் உடல் மக்கள் பார்வைக்கு இந்த கோவிலில் தான் வைக்கப்பட்டுள்ளது.



**கால்டுவெல்லால் கட்டப்பட்ட மாளிகை.**

# மலரும் நினைவலைகள்...



குருமனை சிற்றாலயம்.



கால்டுவெல் பயன்படுத்திய நீச்சல் தொட்டி.

# மலரும் நினைவலைகள்...



இன்னிசை மணிகள்: கால்டுவெல் சகோதரர்கள் அன்பளிப்பு



கோவிலின்
ஆண்கள்
நுழைவாயில்

# மலரும் நினைவலைகள்...



கால்டுவெல்லின்
கலைத்திறனில்
உருவாக்கப்பட்ட
ஜன்னல்களில்
ஒன்று.



அருள்வாக்கு
உறைப்பிடம்

# மலரும் நினைவலைகள்...

SACRED
TO THE MEMORY
OF
ELIZA CALDWELL,
WIFE OF
THE RIGHT REVEREND
BISHOP CALDWELL.

BORN AUGUST 13TH 1822.
DEPARTED JUNE 18TH 1899.

" A MOTHER IN ISRAEL".

எலைசா
கால்டுவெல்
கல்லறை



கோவிலின் கீழ்புற உட்பகுதி

# மலரும் நினைவலைகள்...



கோவிலின் மேற்புற உட்பகுதி




ஞானஸ்நான தொட்டி.

# மலரும் நினைவலைகள்...



'பக்கி' மரம் - வரலாற்று மிக்கது.



அன்றைய பெண்கள் பள்ளி

[இன்றைய T.D.T.A நடுநிலைப்பள்ளி.]

# மலரும் நினைவலைகள்...



அன்றைய பெண்கள் பள்ளி வளாகம்
[இன்றைய T.D.T.A. நடுநிலைப்பள்ளி வளாகம்]



எசபெல்லா விடுதி.

# மலரும் நினைவலைகள்...



கால்டுவெல் நூற்றாண்டு நினைவு மேல்நிலைப்பள்ளியின்
தலைமை ஆசிரியர் வீடு.



டார்லிங் செல்லத்துரை அரங்கம்.

# மலரும் நினைவலைகள்...



இன்றைய கோவில் பணியாளர்
ஜோசப்



கல்லறைத் தோட்டம்-இடையன்குடி

# மலரும் நினைவலைகள்...




**C.S.I. எலைசா கால்டுவெல் முதியோர் பராமரிப்பு மையம்**
**இடையன்குடி.**



**டாக்டர் A.C. மதுரம்**
**நினைவு வார்டு**

# மலரும் நினைவலைகள்...



கால்டுவெல் நூற்றாண்டு நினைவு மேல்நிலைப்பள்ளியின்
எழில்மிகு தோற்றம்.



தானியேல் விடுதி
கால்டுவெல் நூற்றாண்டு நினைவு மேல்நிலைப்பள்ளி
இடையன்குடி.

# மலரும் நினைவலைகள்...




C.S.I. இம்மானுவேல் மிஷன் மருத்துவமனை
இடையன்குடி.



மருத்துவரின் இல்லம் - இம்மானுவேல் மருத்துவமனை
இடையன்குடி.

# மலரும் நினைவலைகள்...



செவிலியர் வீடு

CLINICAL LABORATORY OPENED BY
REV FR. PETER ROYAN
PRESICLED BY
DR.D.SHANTHAKUMARI, M.B.B.S.,
DR. J.I.P. RAJAN, M.B.B.S.,
MEDICAL EVANGELIST.
6 - 11 - 1973.

சோதனைக்கூடம் திறப்பு கல்வெட்டு.
இம்மானுவேல் மருத்துவமனை
இடையன்குடி.

# மலரும் நினைவலைகள்...



கால்டுவெல்
கட்டிய குட்டம்
கோவில்



குட்டம் கோவிலின்
திருவறை.

